இந்த நாவல் 1949-ஆம் வருஷம்
'நாராயணசாமி ஐயர் பரிசைப்'
பெற்ற நாவல்களில் ஒன்று.

# நிழலும் ஒளியும்

கி. சரஸ்வதி அம்மாள்



கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் :: சென்னை-4.

# முகவுரை

கதை எழுதியவர் தம் கதையின் கதையைச் சொல்லிக்கொள்ள முகவுரைதான் இடம் தருகிறது. தம் மனத்திலே தோன்றின எண்ணங்கள், அவை உருவான விதம், பிறகு அவர் அதை எழுத்தின் மூலம் வெளியிட்டது இவ்வளவையும் தம் கதையைப் படிப்போருக்குச் சொல்ல ஆசிரியருக்கு ஆசை இருக்குமல்லவா? புத்தகத்தைப் படிப்பவர்கள் அதைக் குறித்து அபிப்பிராயம் கொள்வதற்கும் ஆசிரியரின் முன்னுரை ஓரளவுக்கு உதவியாக இருக்கலாம். அவர் எவ்வாறு கதை புனைந்தார்; அவர் அந்தக் கதாபாத்திரங்களையெல்லாம் எவ்விதம், எதற்காகத் தேர்ந்தெடுத்தார் என்பவற்றைத் தெரிந்துகொண்டால் அவர் கருத்தைத் தெரிந்து ஆதரவோடு அவர் கதையை ஊன்றிப் படிக்கத் தோன்றலாம். இவ்விதம் வாசகர்களின் மனத்தை ஆசிரியருக்கு ஆதரவாக நிற்கச் செய்ய முகவுரை உதவலாம்.

என்னுடைய நாவலைக் குறித்து நான் என்ன சொல்லுகிறது? ஒரு கொள்கையை வைத்துக் கொண்டோ, ஒரு சீர்திருத்தத்தை வற்புறுத்தியோ, ஒரு நீதியைப் போதித்தோ இது உருவாகவில்லை: நாவல் என்பதற்குத் தகுந்தபடி பல உணர்ச்சிகளை எழுப்பிக் கொண்டு, பல தனிப்பட்ட குணங்களை வருணித்துப் பல சம்பவங்கள் கொண்டதாகவும் இது இருக்கவில்லை. ஆகையால் நான் இன்ன எண்ணத்தை முக்கியமாக மனத்தில் கொண்டு இப்படி இப்படி எழுதினேன் என்று சொல்லிக்கொள்வது சரி அன்று.

ஒன்று மட்டும் சொல்லலாம்: நம்முடைய சாதாரண வாழ்க்கையில் எவ்வளவோ அநுபவங்கள் இருக்க

வில்லையா? ஆறிடும் மேடும் மடுவும்போல எவ்வளவோ இன்ப துன்பங்களை நம்மைச் சுற்றி யிருப்பவர்கள் மூலமாகவும் நாமே கூடவும் வலிய வருவித்துக்கொண்டு கஷ்டமும் சுகமும் படவில்லையா? குழந்தைகளுடைய மன எழுச்சிகள் நமக்கு அற்பமாகத் தோன்றினாலும் அவர்களுக்கு அவை மலையத்தனை பெரிதாக இருக்கின்றன; அவ்வாறே நம்முடைய மன எழுச்சிகளும் பிறருக்கு ஒரு பொருட்டாக இல்லாதிருக்கலாம்; ஆனால் நமக்கு அவைகளே உலகம்: அவற்றில் உழன்றுகொண்டுதான் நாம் சுக துக்கங்களைப் பிரித்தெடுத்து அநுபவிக்கப் பார்க்கிறோம். ராமனுடையதையும் சீதையுடையதையும் போலவே நமக்கும் நம் அநுபவம் பெரிதாகவும் முக்கியமாகவும் இருக்கிறது: இந்த அநுபவச் செய்திகளை நம் போக்கில் நாம் ஏன் சொல்லக்கூடாது? இவற்றிலும் ஒரு சுவாரசியம் இருக்கலாமல்லவா? இதுதான் இந்தக் கதை தோன்றியதற்குக் காரணம். இதில் நான் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றிருக்கிறேன் என்பதை வாசகர்களே மதிப்பிடத் தகுதியானவர்கள்: அவர்களுக்கு இந்தக் கதை, சுவாரசியம் கொடுத்து இன்பம் ஊட்டினால் நான் பெரிதும் சந்தோஷம் அடைவேன்.

கதையின் போக்குக்கு ஆசிரியர் பொறுப்பாளியாக முடியுமா? நதிகளுக்கும் அருவிகளுக்கும் ஏன் சின்னஞ் சிறிய ஊற்றுக்களுக்குங்கூட மலைகள் உற்பத்தி ஸ்தானமாக இருக்கின்றன; ஆனால் அவைகள் கீழ்நோக்கி வழி செய்துகொண்டு தம் போக்கில் செல்வதற்கு மலை பொறுப்பாளி ஆகிறதா? மகா கவியோ, வெறும் எழுத்தாளனோ இருவரும் அத்தகையவர்களே: கவியினுடைய பெரும் காவியத்துக்கும் எழுத்தாளனுடைய சாதாரண எழுத்துக்கும் முழுவதும் அவர்களே பொறுப்பாளியாகிறார்கள் என்று நிச்சயமாகச் சொல்லிவிடமுடியாது என்பதே என் கதையின் அநுபவத்திலிருந்து நான் தெரிந்துகொண்டது.

இந்த நாவலில் முதல் இரண்டு மூன்று அத்தியாயங்கள் முடிந்தவுடன், கோபாலையர் மனைவி காமாட்சி பிரசவித்து இறந்துபோனதாக எழுதியபோது, 'அவள் எதற்காகச் சாக வேண்டும்?' என்று எனக்கு மனசே வரவில்லை. 'நாம்தானே அவளை அவ்விதம் அல்பாயுசில் சகல போகங்களையும் விட்டுப் போகும்படி செய்கிறோம்?' என்று மனம் துடித்தது. 'நம் மனிதர்கள் இறந்து போனால் அவரவர் விதிப்பயன் என்பதை மறந்து ஈசுவரனைக் குறைகூறுகிறோம். இப்போது நாமே அது மாதிரி ஒன்றைச் செய்கிறோமே' என்ற வருத்தம் தோன்றிற்று. வீட்டில் எல்லாரும், குழந்தைகள்கூட, என்னைப் பரிகசித்தார்கள். கதையில் ஒருவரைக் கொன்றுவிட்டுப் பச்சாத்தாபப்படுகிறேன் என்றார்கள். இவ்வளவு இருந்தும் அதை மாற்றி அமைக்க ஏனோ என்னால் முடியவில்லை. 'நம் சிருஷ்டிதானே காமாட்சி? அவள் சாகவில்லையென்றுதான் சொல்லுவோமே' என்றால் முடியவில்லை. அவள் இறந்து, கோபாலையர் துறவியாவதுதான் அதற்குப் பாந்தமாக ஏற்பட்டிருந்த மாதிரி இருந்தது. அப்போதுதான், ஜீவராசிகளின் வாழ்க்கைக்கு எவ்விதம் கடவுள் பொறுப்பாளியாக மாட்டாரோ, அவ்விதமே நாமும் நம் கதாபாத்திரங்களின் போக்குக்கும், கதையின் அமைப்புக்கும் பொறுப்பாளி அல்ல என்று தோன்றிற்று.

ஸ்ரீமத் ராமாயணத்தை மகா நதி என்று சொல்லுகிறார்கள். நதி எவ்விதம் தனக்கு இருபுறமும் கரையை ஏற்படுத்தி மார்க்கத்தைச் செய்துகொண்டு, பள்ளங்களை நிரப்பி மேடுகளை மறைத்து, தன்னுடைய இரு மருங்கிலும் பயிர்களையும் சோலைகளையும் வளர்த்து ஜீவன்களுக்கு உயிரை ஊட்டி மகிழ்வித்துக்கொண்டு செல்லுகிறதோ, அவ்விதமே ராமாயண மகா காவியமும் எல்லா ரசங்களும் நிரம்பியதாய் உலக ரஞ்சகமாகத் தானாகவே அமைந்திருக்கிறது. நமது ஆதி கவியுடன் என்னைச்

சேர்த்துக்கொண்டு விட்டதாக யாரும் தவருக எடுத்துக்கொள்ள மாட்டார்களென்று நம்புகிறேன். ரிஷிகளின் வம்சத்தில் பிறந்திருக்கிரும் என்பதற்காக ரிஷியாகி விடுகிரேமா? இல்லையே!

கதையின் போக்குக்கு எழுத்தாளர் முழுதும் பொறுப்பாளி யாகமாட்டார் என்பது ஒன்றுக்காகத் தான் ராமாயணத்தைக் குறிப்பிடுகிறேன். அவ்வளவு தான். கவிதையும், எழுத்தும் தங்கள் போக்குக்குத் தாங்களே காரணம் என்று எனக்குப் பட்டதைச் சொல்லி நிறுத்திக்கொள்கிறேன்.

இந்த நாவல் 'கலைமகள்' காரியாலயத்தார் வழங்கும் 'நாராயணசாமி ஐயர் பரிசு'க்கு உரியதெனத் தேர்ந்தெடுக்கப் பெற்றுக் கலைமகளில் வெளியாயிற்று. இப்போது புத்தக உருவிலும் இதைக் 'கலைமகள்' காரியாலயத்தார் வெளியிடுகிருர்கள். அவர்கள்பால் மிக்க நன்றி பாராட்டுகிறேன்.

கி. சரஸ்வதி அம்மாள்.

## பொருளடக்கம்

# நிழலும் ஒளியும்

## 1

## மகாலக்ஷ்மி உதயம்

'நான் பிறந்த கதை சொல்லவோ வளர்ந்த கதை சொல்லவோ பூந்தமல்லிச் செட்டியிடம் புகுந்த கதை சொல்லவோ!' என்று ஒருத்தி கணவனைக் கேட்டாளாம். அவள் தன் மனைவி என்பதை அறியாத அந்தக் கணவனும், பூந்தமல்லிச் செட்டியிடம் புகுந்த கதை சொல்லும்படி கேட்டான். அவள் அவனுக்கு வாழ்க்கைப்பட்ட வரலாற்றையும் மாமியும் நாத்தியும் சேர்ந்து அவள் மேல் வீண்பழி சுமத்தி அவளை வீட்டைவிட்டுத் துரத்தினதையும், பிறகு அவள் எவ்வளவோ கஷ்டங்கள் பட்டுத் தன் வீட்டிலேயே மாறு வேடத்தில் வேலைக்காரியாக வந்திருப்பதையும் சாமர்த்தியமாகச் சொல்லக் கேட்டு, மனம் இளகிப் பச்சாத் தாபப்பட்டு அவளை உடனே ஏற்றுக்கொண்டு தாயையும் தங்கையையும் வீட்டை விட்டு வெளிப்படுத்திச் சௌக்கியமாக வாழ்ந்தானும். இப்படி நாடோடிக் கதையொன்று கூறுகிறது. அவள் பிறந்த கதையையும் வளர்ந்த கதையையும் அவன் கேட்கவில்லை. அவளும் சொல்லவில்லை; 'ஏன் அப்படி? அதையும் அவள் சொல்லியிருக்கக் கூடாதா? நாம் சுவாரசியமாகக் கேட்டிருக்கலாமே!' என்றுதான் நமக்குத் தோன்றுகிறது. அந்த வரலாறுகளில் விசேஷம் எதுவும் இருந்திராது; அதாவது கதை கட்டின ஆசாமிக்குக் கற்பனை தோன்றியிராது. அதுதான் காரணம், பூந்தமல்லிச் செட்டி அதைப்பற்றிக் கேளாததற்கு. ஆனால் நமது மகாலக்ஷ்மியின் வரலாறு அப்படியல்லவே.

அவள் பிறந்தது, வளர்ந்தது, எல்லாமே விசேஷம் பொருந்தியவை. கேட்பவருக்குச் சுவை அளிக்கக்கூடியவை. அவளுக்கு மகாலக்ஷ்மி என்று பெயர் வந்ததற்கே தக்க காரணம் இருந்தது. பாட்டி, கொள்ளுப்பாட்டி என்று வம்ச பரம்பரைப் பெயராகவோ, இஷ்டதெய்வங்களின் பொருள்

பொதிந்த நாமதேயமாகவோ அது வரவில்லை; கதைகளில் வரும் கதாநாயகிகளின் அழகிய காரணப் பெயர்களில் பெற்றோருக்கு இருந்த மோகத்தினாலும் அமையவில்லை. அந்தப் பெயர் ஏற்பட்ட வரலாறே அவள் வாழ்க்கையின் போக்கை ஒருவாறு சுட்டிக் காண்பிப்பதாக அமைந்துவிட்டது என்றுகூடச் சொல்லலாம். ஓர் ஐப்பசி மாதப் பௌர்ணமியன்று அவள் பிறந்தாள். சந்தியா காலம், மலைவாயில் சூரியன் மறைந்து முழுமதி தன் முழுச் சோபையுடன் தோன்றும் நேரம். எல்லா ஜீவராசிகளையும் மகிழ்விக்கும் ஆற்றலுள்ளவன் அல்லவா சந்திரன்? அவன் வருகையை எதிர்பார்த்துக் காத்திருக்கவேண்டும் அல்லவா சகலப் பிராணிகளும்? அப்படி இருக்கும்போது ஐப்பசி மாதத்து அடைமழை பொழியக்கூடிய நீருண்ட கறுத்த மேகக் கூட்டங்கள் ஆகாயம் முழுதும் இடைவெளியில்லாமல் பரந்து சந்திரனின் சிறந்த உதயத்தைச் சிறிதும் உலகறியாவண்ணம் மறைத்துவிட்டனவென்றால் அப்போது உலகம் எவ்விதம் இருக்கும்? மகிழ்ச்சியற்று இருள் சூழ்ந்துவிடும் அல்லவா? அவ்விதமே நமது மகாலக்ஷ்மியின் ஜனனமும் ஆயிற்று. சந்திரன் உதிக்கும் அதே நேரத்தில் முழுமதியின் அதே சோபையுடன் அவளும் புவியில் பிறந்தாள். கார்மேகங்கள் சந்திரனின் ஒளியை அப்படியே விழுங்கி, அவன் வரவை ஆவலுடன் நோக்கி நிற்கும் கண்களுக்கு ஏமாற்றத்தையே கொடுப்பதுபோல, ஓர் ஆண் குழந்தையை எதிர்பார்த்து ஆவலுடன் காத்திருந்த பெற்றோருக்கும் மற்றோருக்கும் பெண்ணாகப் பிறந்த மகாலக்ஷ்மியின் வரவு சந்தோஷத்தைக் கொடுக்கவில்லை. இரண்டு பெண்களுக்குப் பிறகு மூன்றாவது பெண்ணாகப் பிறந்த அவளைச் சந்திரனை மறைத்த மேகம்போலவே அடுக்குப்பெண் என்கிற மேகம் மறைத்துவிட்டது; அவள் பிறந்ததற்காக ஏற்படக்கூடிய மகிழ்ச்சியைப் போக்கடித்துவிட்டது. வெகு நேரம் பிரசவ வேதனையைப் பொறுமையாக அநுபவித்துவந்த தாய், சேயின் அழுகுரல் கேட்டவுடன், 'என்ன குழந்தை?' என்றாள். அதை அறிய அவளுக்கு இருந்த ஆவலில் குரலெடுத்துக் கேட்கவும் தான் சக்தியற்றிருப்பதை அவள் அறியவில்லை. "பெண்" என்றாள் மருத்துவச்சி. "ஐயேடி! பெண்ணா?" இது தாயின் வாயினின்றும் வந்த சொல்; அதில் தொனித்த அயர்வு சொல்லி முடியாது. 'இதற்கா இவ்வளவு பாடும் பட்டேன்?' என்பதுபோல் இருந்தது அது.

''ஏண்டி அலுத்துக்கொள்கிறாய்? அசடே! வெள்ளிக்கிழமை சந்தியாகாலத்தில் மகாலக்ஷ்மியே வந்து பிறந்திருக்கா; நன்னாருக்கு!'' என்று கடிந்துகொண்டாள், அறையில் கூடஇருந்த அத்தை.

பெண் என்கிற சொல் அறைக்கு வெளியில் ஆவலாகக் காத்திருந்த தந்தையின் காதுக்கும் எட்டிற்று. அவரும் வெறுப்புடன் சாய்மான நாற்காலியில் அப்படியே ஆயாசத்துடன் சாய்ந்துகொண்டார். 'இதாவது பிள்ளையாகப் பிறக்கப் படாதோ?' என்றுதான் அவரைச் சந்தோஷம் விசாரித்தார்கள். பிள்ளையைக் குறித்துத்தான் கோபாலையரும் அவர் மனைவியும் தவமிருந்தார்கள் என்பதைச் சொல்லவேண்டியதில்லை. முதல் பிரசவத்திலிருந்து அவர்கள் வேண்டி விரும்பியது ஓர் ஆண் மகவையே. இகத்துக்கும் பரத்துக்கும் நன்மை பயக்கக் கூடியவன் மகனே அல்லவா? ஆனால் ஒவ்வொரு தடவையும் அவர்கள் ஏமாந்தே வந்தார்கள். இரண்டாவது பெண் பிறந்த போதே மறுபடியும் பெண் பிறப்பதாக இருந்தால், தான் இனி மேல் கர்ப்பமே தரிக்கக்கூடாது என்றுகூடத் தாய் திடமாக எண்ணினாள். அந்த எண்ணத்தைக் கைவிட்டு அவள் கர்ப்பவதியானபோது, 'ஏன் இந்தத் தடவை மகனாகப் பிறக்கக்கூடாது?' என்கிற நம்பிக்கைதான் கணவன் மனைவி இருவர் உள்ளத்திலும் ஆழமாகப் பதிந்துகிடந்தது. கோவிலுக்கும் குளத்துக்கும் சென்று அவர்கள் பல விரதம் இருந்தார்கள். பிள்ளையையே சதா மனத்தில் நினைத்துவந்ததோடல்லாமல் பேச்சிலும் பிறக்கப் போவது பிள்ளையாகவே பாவித்துப் பேசிவந்தார்கள்.

ஒரு நாள் அவர்கள் வீட்டில் மாடுகளுக்குப் பருத்திக் கொட்டை ஆட்டிவைக்க மாட்டுக்காரன் வரவில்லை. அப்போது கோபாலையர் ஊறவைத்திருந்த பருத்திக்கொட்டையை ஆட்டுக் கல்லில் போட்டு விளையாட்டாக, ''வீட்டில் எல்லோரும் ஆளுக்கு ஒரு கை சுற்றுவோம். எப்படித் தானே மசிந்துவிடுகிறது, பாருங்கள்'' என்றார்.

அந்தச் சொல்லுக்கு இணங்க, தாம் முதலில் சுற்றினார். அவர் மூத்த மகள் எட்டு வயதுள்ளவள்; அவளையும் கூப்பிட்டு, ''வாடி நீயும் ஒரு கை சுற்று பார்க்கலாம்'' என்றார் அவர். அவளும் தன் இரண்டு சிறு கைகளாலும் குழவியைப் பிடித்துச் சிரமப்பட்டுச் சுழற்றிக்கொண்டே, ''ஏம்பா, எல்லாரும் சுத்தணுமா? அங்கச்சி, மீனுகூடச் சுத்துவாளா?'' என்றாள்.

''ஆமாம், ஆமாம்; எல்லாருந்தான் சுத்தணும்'' என்ருர் அவர், வேடிக்கையாகத் தலையை ஆட்டிக்கொண்டே.

''அப்படியாணு, அம்மா வயித்திலிருக்கிற அம்பிப் பாப்பா கூடச் சுத்துவாணு, அப்பா?'' என்றது அந்தக் குழந்தை. உடனே அவர் ஒரு வேட்டுச் சிரிப்புச் சிரித்தார். பிறக்கப் போகும் குழந்தையைத் தம் மகள் அம்பி என்று சொன்னது, அவள் ஏதோ தெரிந்து சொன்னமாதிரி இருந்தது அவருக்கு. இவர்கள் சதா பேசுவதைக் கேட்டுத்தான் அவள் அவ்விதம் சொல்லுகிருள் என்பது அவர் கவனத்துக்கு வரவில்லை. சந்தோஷத்தில் பெண்ணைத் தட்டிக்கொடுத்தார்.

இது மாதிரியான பேச்சுக்களும் காரியங்களும் நடந்து, குழந்தை பிறக்கும் முன்பே எல்லோர் மனத்திலும் பிறக்கப் போவது பிள்ளைதான் என்ற தீர்மானம் வரும்படி செய்தன. விதைத்தானம் செய்வதற்கென்று ஒரு மணி நெல்லுக்கூட வெளிவிடாமல் நெல்லைக் களஞ்சியத்தில் அப்படியே சேகரித்து வைத்தார். கால் ரூபாய்க்கு அரை ரூபாயாகத் தட்சிணை கொடுத்துப் பக்கத்து ஊர் வைதிகப்பிராம்மணர்களையும் வர வழைத்து (ஏனெனில் உள்ளூரில் இரண்டொரு வைதிகர்கள் குடும்பமே இருந்தன) அவர்கள் அவ்வளவு பேர்களுடைய ஆசீர்வாதத்தையும் ஒருங்கே சம்பாதித்துப் பிள்ளைக்குக் கொடுக்க நினைத்துத் தயாராகச் சில்லறை மாற்றி வைத்திருந் தார். சமயத்தில் நெல்லுக்கோ பணத்துக்கோ திண்டாடக் கூடாதல்லவா? இவ்வளவும் செய்து நிச்சயமாக மகனை எதிர் பார்த்துக் காத்திருந்தபோது, பிறந்தது பெண் என்ருல் யாரால் தான் அதைச் சலிப்பில்லாமல் ஏற்றுக்கொள்ள முடியும்.

'குழந்தை வெகு அழகாக இருக்கிறது; தலையில்தான் வண்டுபோல் எவ்வளவு மயிர்!' என்று எல்லோரும் அதிசயித்து வர்ணித்துச் சொல்லும்போதுகூடத் தந்தைக்குக் குழந்தையைப் பார்க்க ஆசை ஏற்படவில்லை. ஸ்நானம் செய்து மடி உடுத்து மங்களமாக இரண்டொரு பிராம்மணர்களுக்கு விதைத் தானம் செய்யக்கூட அவருக்கு மனம் வரவில்லை. குழந்தை பிறந்த மகோத்ஸவத்துக்குப் பதிலாகக் குழந்தையைச் சாகக் கொடுத்தவர்போல் காட்சியளித்தார் கோபாலையர்.

அத்தைதான் இப்போதும், ''நன்ருருக்கடா! நன்ணுக் கல்லாச் சமஞ்சு இருந்தே. பெண்ணு பிறந்திருக்கு? பொன்னுன்ணு அது? நமக்கென்ன பணமில்லையா, காசில்லையா?

நாமென்ன ஆண்டியா? எத்தனை பெண் பிறந்தா என்ன? தாயிட்ட பேரு ஊரிடும்னு, நாமே மட்டம் செய்யலாமா? எழுந்திரு. ஸ்நானத்தைப் பண்ணிச் சாஸ்திரிகளுக்கு விரை தானம் செய்!'' என்று சமாதானம் செய்தாள்.

இவ்வளவு அலுப்பில் பிறந்த குழந்தைக்குப் புண்ணியாக வாசனத்தைப்பற்றியோ அருமையாகத் தொட்டிலிட்டுப் பேர் வைப்பதைப்பற்றியோ யார் சிரத்தை எடுத்துக்கொண்டு விசேஷமாகச் செய்திருப்பார்கள்? 'தொட்டிலிட்ட அம்மானே' என்று தாலாட்டுப் பாட்டுக் குறிப்பிடுவதுபோல் அருமையாகத் தொட்டிலிட்டுப் பேர்வைக்க அம்மான் யாரும் இல்லை. கோபாலையரின் மனைவிக்குக் கூடப்பிறந்த தம்பியோ தமையனோ இல்லை. சிறுவயதிலேயே விதவையாகிவிட்ட அத்தையை (அதாவது அவர் சகோதரியை) விட்டால் நெருங்கின பந்துக்கள் கூட விசேஷமாக அவர்களுக்கு யாருமில்லை என்றுதான் சொல்ல வேண்டும். குழந்தைக்கு என்ன பேர் வைப்பது என்பதுபற்றி யாருமே சிந்தித்ததாகத் தெரியவில்லை. மூத்த பெண் சாரதாவுக்குத் தலைவாரிப் பின்னிப் பட்டுப்பாவாடை உடுத்து நகைகள் அணிவித்துத் தெருவில் நாலு வீடுகளுக்குப் போய் அழைத்துவரச் செய்து அத்தைதான் தொட்டிலிடச் செய்தாள். குழந்தை பிறந்ததும் அலுத்துக்கொண்ட தாயைக் கடிந்து கொண்டு, 'மகாலக்ஷ்மின்னு வந்து பிறந்திருக்கா' என்று அவள் சொன்னாளே, அந்தப்படியே மகாலக்ஷ்மி என்கிற பேரையே குழந்தைக்கு வைக்கவும் வைத்தார்கள். வேறு பேர்களைப் பற்றிச் சிந்திக்கவும் பேசவும் யாருக்கு ஆசையும் அருமையும் பொங்குகின்றன? ஏதோ பிறந்த குழந்தையை ஒரு பேர் சொல்லிக் கூப்பிடவேண்டும் அல்லவா? 'எதுவானால் என்ன?' என்கிற மனோபாவந்தான் தாய்க்கும் தந்தைக்கும் இருந்தது.

அவர்கள் அவ்வளவு அலட்சியமாக வைத்த பேரானாலும் அது என்னவோ நமது மகாலக்ஷ்மிக்கு மிகவும் பொருத்த மாகவே அமைந்துவிட்டது. ஏன்? சாக்ஷாத் பாற்கடலில் உதித்த லக்ஷ்மியைப்போலவே அவளும் சந்திரனோடு கூடவே பிறந்திருக்கிறாள் அல்லவா? ரூபத்திலும் அந்த லக்ஷ்மிக்குச் சமானமாகத்தான் இருந்தாள் என்று சொல்லவேண்டும். அழகு பொருந்திய அந்தக் குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வெறுப்புடன் வரவேற்ற

தாய் தந்தையரின் உள்ளத்தையும் ஒருவாறு கவர்ந்தது என்று தான் சொல்லவேண்டும்.

தொட்டிலிட்டுப் பேர் வைக்கச் சிரத்தையற்றிருந்த அவர்கள், குழந்தையின் ஆண்டுநிறைவைச் சிறப்பாகச் செய்தார்கள் என்ருல், பிறகு அவர்கள் அன்பைக் குறித்து என்ன சொல்லக் கிடக்கிறது? முன் இரண்டு குழந்தைகளின் ஆண்டு நிறைவின்போது குழந்தையை மடியில் வைத்துக்கொண்டு அந்தணர்களின் ஆசியைப் பெற்றுக்கொள்ளாத தந்தை இப்போது அப்படிச் செய்தது தாய்க்கு மிகுந்த சந்தோஷத்தைக் கொடுத்தது.

அவள் வெறுப்பெல்லாம் குழந்தை பிறந்த சில மணி நேரமே இருந்தது. தடைப்பட்ட நீரோட்டம் தடை விலகும் போது அலைமோதிப் பெருக்கெடுத்து ஒடுவதுபோல், பெண் என்கிற வெறுப்பினுல் தடைப்பட்ட தாயின் அன்பு பிறகு விசேஷமாகப் பெருகி யிருந்தது. பெண் பிறந்த ஏமாற்றத்தில் தந்தையின் மனம் குழந்தையினிடம் வெறுப்புற்றிருக்கிறது என்று வருந்திக்கொண் டிருந்த தாய்க்குக் கணவருடைய இந்தச் செய்கை அவ்விதம் இல்லை என்பதைக் காண்பித்தது. பிறகு அவள் சந்தோஷத்துக்குக் கேட்கவேண்டுமா? அந்தக் குழந்தை மகனுக இல்லையே என்பதை அவள் மறந்தே போனுள்.

## 2

## பெரிய மனுஷ்யர்

ராமநாதபுரம் ஜில்லாவைச் சேர்ந்த சாத்தூருக்கு அருகில் தானப்பாளையம் என்பது ஒரு சிறு கிராமம். பாளையம் பாளையம் என்கிற பெயரில் அநேக சிறு கிராமங்கள் அந்தச் சுற்றுவட்டாரத்தில் உண்டு. ஒவ்வொன்றும் நானூறு ஐந்நூறு ஏகரா விஸ்தீர்ணம் உள்ளதுதான். எல்லாப் பாளையங்களும் அநேகமாக வேளாளர்களைச் சேர்ந்தனவாகத்தான் இருந்தன. இரண்டொரு கிராமங்கள் மதுரையை ஆண்ட திருமலைநாயக்கர் வம்சத்தைச் சேர்ந்தவர்களுக்குச் சொந்தமாக இருந்தன. அவர்கள், தாங்கள் அரசவம்சத்தினர் ஆகையால் தங்களை க்ஷத்திரியர்கள் என்று சொல்லிக்கொண்டார்கள். அதற்குத் தக்கபடி அவர்கள் தோற்றத்தில் கம்பீரமும் அழகும் இருந்தன.

மற்றப்படி மீதமுள்ள கிராமங்களில் இருப்பவர்கள் தேவர் மார்கள்; அதாவது அவ்விடத்துக் கள்ளர் மறவர் ஜாதியைச் சேர்ந்தவர்கள். இவர்கள் மத்தியில் தானப்பாளையம் மட்டும் சில பிராம்மணர்களுக்குச் சொந்தமாக இருந்தது. அதை மதுரையை ஆண்ட ராணி மங்கம்மாள் எதற்கோ பிராயச் சித்தமாக நான்கு பிராம்மணர்களுக்குத் தானம் செய்ததாக ஒரு பழங்கதை வழங்கி வந்தது. அது தானமாகக் கொடுக்கப் பட்டது என்பதற்கு இணங்கச் சமீபகாலம் வரையிலும் சர்க்கார் கிஸ்தி இல்லாமலே இருந்து வந்தது. 'பசித்தவன் பழங்கணக்குப் பார்த்த' சங்கதியாக இப்போது வரும்படியைத் தேடி அலையும் சர்க்கார் அதற்குப் புதிதாகக் கிஸ்தி போட்டுவிட்டார்கள். அதை ஆட்சேபித்துக் கூக்குரல் செய்து முறையிட்டும் பலனில் லாமல் தவித்தார்கள், அவ்வூர் வாசிகள். வரும்படி முழு வதையும் தாங்களே அநுபவித்துப் பழக்கமான அவர்களுக்குத் திடீரென்று பாதியைச் சர்க்கார் அடித்துக்கொண்டு போவ தென்றால் எவ்விதம் நியாயமாகத் தோன்றும்? மீதிப் பாதியில் தான் அவர்கள் எவ்விதம் காலம் தள்ளுவார்கள்?

இது இப்போதைய நிலைமை; நாம் இதைப்பற்றிப் பிறகு பார்ப்போம். நமது கதை ஆரம்பித்தபோது இதுமாதிரி ஒன்றும் இல்லை. கோபாலையரும் அவரைப்போல இன்னும் சில பிராம்மண குடும்பத்தாரும் அந்தக் கிராமத்துக்குச் சொந்தக் காரராக இருந்தனர். அந்த ஊரில் உள்ள நிலம் அவர்களால் சர்வமான்யமாக அநுபவிக்கப்பட்டு வந்தது. சர்க்கார்ச் சேவகர் யாரும் அந்தப் பக்கம் வருவதே இல்லை. அதுமாதிரி ஒரு கிராமம் இருப்பதாகவே அவர்கள் சர்வேப் பேரேட்டில் கிடையாதென்று நினைக்கிறேன். ஒரே ஒரு தெருமட்டும் பிராம்மணர்கள் வசிக்கும் தெரு. மற்ற இரண்டு தெருக்களும் நிலம் சாகுபடி செய்யும் குடியானவர்களுடையவை. அந்தக் குடியானவர்களுக்கும் அங்கே வசித்த பிராம்மணர்களுக்கும் கல்வி கேள்விகளில் அதிக வித்தியாசத்தைக் காணமுடியாது. ஆங்கிலப் படிப்பு இல்லாவிட்டாலும் நமது சாத்திரங்களைப் படித்து, அந்தணர்கள் வேதவித்துக்களாக இருக்கலாம் அல்லவா? அவ்விதம் எவ்வளவோ கிராமங்கள் நமது புராதனக் கல்விக்கு இருப்பிடமாக இருந்திருக்கின்றன. இளைஞர்கள் புது நாகரிகத்தை ஒட்டி உத்தியோகம் ஏற்க ஆங்கிலம் படித்தால், பெரியவர்கள் அத்தியயனம் செய்து சாஸ்திர விற்பன்னர்களாகச்

சகலமும் தெரிந்தவர்களாக இருக்கிறார்கள். இந்த இருவகைக் கல்வியினுள் ஒன்றாவது குறிப்பிடக்கூடியவாறு இல்லாத தானப் பாளையத்துப் பிராம்மணர்கள் அங்கிருந்த குடியானவர்களுக்குக் கிட்டத்தட்டச் சரிநிகராகவே இருந்தார்கள். ஆனால் கல்வி விஷயத்தில்தான் இந்த ஒற்றுமை. மற்றப்படி சாதி வித்தியாசத்தைத் தீவிரமாகவே பாராட்டி வந்தார்கள். அந்தக் கிராமத்து நிலம் முழுவதும் பிராம்மணர்களுக்கே சொந்தம். அவற்றில் வேலை செய்து வயிறு வளர்க்கவே குடியானவர்கள் அங்கே குடியேறினார்கள். ஆகையால் எஜமானன் வேலையாள் என்கிற ஏற்றத் தாழ்வு இருந்தது. கூடவே பிராம்மணன் வேளாளன் என்கிற வேறுபாடும் வேரூன்றி நிலைபெற்றிருந்தது.

பழைய ஆசாரத்தை அப்படியே குருட்டு நம்பிக்கையுடன் அவர்கள் தீவிரமாக அநுஷ்டித்து வந்தார்கள். அதற்கு இடைஞ்சலாக இதுவரையிலும் ஒரு காரியமும் அங்கே நடந்து விடவில்லை. குடியானவர்கள் உழுது பயிரிட்டுத் தங்களுக்கான மாமூல் கூலியைப் பெற்றுத் திருப்தியாக இருந்தார்கள்; மீத வருமானம் நிலச் சொந்தக்காரருடைய சௌக்கியத்துக்குப் போதுமானதாக இருந்தது.

ஆனால், இப்போது சிறிது காலமாக, கோபாலையர் குடும்பம் தவிர மற்ற மூன்று குடும்பங்களில் இரண்டொரு பிள்ளைகளுக்கு அதிகம் இருந்தார்களாகையால் பாகப் பிரிவினை ஏற்பட்டு ஒன்றுக்கு நாலாகத் தனிக் குடித்தனங்கள் பெருகி விட்டன; அதன் விளைவாகச் சொத்திலிருந்து வரும் வருவாயும் சம்சாரம் நடத்தப் போதுமானதாக இல்லை. தங்கள் பிள்ளைகளுக்குப் பிரித்துக் கொடுக்கும்போது பின்னும் குறைந்து, காலக்ஷேபமே செய்ய முடியாமல் போய்விடுமே என்பதை நினைத்து, பிள்ளைகளை ஆங்கிலம் கற்கவைத்து உத்தியோகத்தில் விட நினைத்தார்கள் பெற்றோர். அந்த யோசனையின்படி உள்ளூர்த் திண்ணைப் பள்ளிக்கூடத்தோடு நிறுத்திக்கொள்ளாமல் சாத்தூர்ப் பெரியபள்ளிக்கும், அதற்குப் பின் மதுரைக் கல்லூரிக்குமே அனுப்பிவந்தார்கள்.

இந்தக் கவலைகளில் ஒன்றும் கோபாலையருக்கு இல்லை. அவர் ஒரே மகனானதால் சொத்து முழுவதுக்கும் சொந்தக்காரர் ஆனார். சம அந்தஸ்தில் வாழ்ந்த அவ்வூர்ப் பிராம்மணர்களுக்கிடையே இப்போது ஏற்றத் தாழ்வு ஏற்பட்டுவிட்டது. கோபாலையர் பணக்காரராக விளங்கினார். மற்றவர்கள்

அவருக்குத் தாழ்ந்த நிலையை அடைந்தார்கள். இரண்டொருவருக்கு அவருடைய அதிருஷ்டத்தைக் கண்டு பொருமை ஏற்பட்டாலும் அவர் அதற்காகச் செய்யக்கூடியது ஒன்றும் இல்லை.

கோபாலையருக்குப் பெருமை உண்டாகாமல் என்ன செய்யும்? நாம் மேல் அந்தஸ்துள்ளவர் என்கிற எண்ணப் போக்கில் பிறரிடம் சிறிது அலட்சிய பாவம் தானுகவே அவருக்கு உண்டாயிற்று. எல்லோரிடமும் சமமாகப் பழகுவதைவிட்டுச் சற்று விலகியே நடக்கத் தொடங்கினுர். அதனுல் அவருக்குச் சிநேகிதர்கள் குறைந்தாலும், கண்ணியம் என்னவோ அதிகரித்துக்கொண்டுதான் வந்தது. அந்தக் கிராமம் சம்பந்தப்பட்ட மட்டில் அவர் பெரிய மனுஷ்யரானுர். அவர் சுகதுக்கங்களில் பங்கெடுத்துக்கொண்டு பேச அவ்வூராருக்கும் ஓர் ஆசை ஏற்பட்டுவிட்டது.

மூன்றும் பெண்ணுகப் போய்விட்டனவே என்பதில் அவரைப்போலவே கிராமத்தாரும் வருந்திஞர்கள். அதற்காக அவர்கள் செய்யக்கூடியது என்ன? 'வயசாகி விட்டதா என்ன? அடுத்தது பிள்ளையாகப் பிறக்கட்டுமே' என்கிற ஆசீர்வாதந்தான் செய்தார்கள். பொருமை கொண்ட சிலருக்கு, 'இதிலாவது இஷ்டசித்தி யாகாமல் வருந்தட்டுமே' என்ற எண்ணம் ஏற்பட்டது.

இவ்விதம் நாலு பேர் வெளிப்படையாக வலுவில் சிநேகம் பாராட்டவும், சிலர் ரகசியத்தில் பொருமைப்படவும் அவர் ஒருவாறு கிராமத்துப் பெரியமனுஷ்ய ராகிவிட்டார்.

# 3
# பெண் பார்த்தல்

"ஏன், மன்னி, சுப்பு குளத்துக்கு வல்லியோ? நீங்க மட்டும் வந்திருக்கேளே." - இது குளத்தில் குளித்துக்கொண்டிருந்த பெண் கூட்டத்திலிருந்த ஒருத்தி கேட்ட கேள்வி. அப்போதுதான் குடமெடுத்து வந்த நாணம்மாள் சற்று வயசு சென்ற சுமங்கலி. அவள் கணவர், ஊரில் பாக்கிப் பேர்களை விடப் பெரியவராகையால் உறவுமுறை எதுவானுலும் அவளை 'மன்னி' என்றுதான் எல்லோரும் அழைப்பார்கள். அவளைப் பார்த்துக் கேட்ட இந்தக் கேள்விக்கு அவள் என்ன பதில்

சொல்லுகிறுள் என்பதை மற்றவர்கள் ஆவலோடு கவனித்தார்கள்.

''சுப்பு அகத்துக்குள் நுழைஞ்சுட்டுத்தான் வறேன். அவ ஏதோ காரியமா இருக்கா. இன்னிக்கிக் குளத்துக்கே வர மாட்டா போலே இருக்கு. அவளுக்காகக் காத்துண் டிருந்தா நாழி ஆயிடும்னு நான் வந்துட்டேன்.''

''அதென்ன, அவளுக்கு வரமுடியாமே காரியம்? உங்களோடே குளத்துக்கு வரத்தானே அவளுக்குப் பிடிக்கும்?''

''அதென்ன, அப்படி ஒரு போடு போடறே? எனக்கும் அவளுக்கும் தனியா என்ன வந்தது?''

''நானுச் சொல்லல்லே; இங்கே யாரை வேணுலும் கேட்டுப் பாருங்கோ; சொல்லுவா, சுப்புவுக்கும் மன்னிக்கும் சிநேகம் அதிகம்னு.''

''இதுலே அதிசயம் என்ன? ரெண்டு பேரும் பக்கத்துப் பக்கத்து வீட்டிலே பொறந்து, ஒண்ணு வளர்ந்து, வாக்கப்பட்டுக் கூட வெளியூர் போகாமே இங்கேயே இருந்தூட்டோம். சின்ன வயசுலேருந்து பழகினது; வேறென்ன பெரிசாச் சொல்ல?''

''ஐயோ, மன்னி! நானும் தப்பாச் சொல்லல்லே; கோவிச்சுக்காதிங்கோ. காலேயிலே என்ன காரியம் அவளுக்கு, வர முடியாமேன்னுதான் கேட்டேன்.''

''ஆரோ பெண் பார்க்க வராளாம்.''

''ஆராம், எவாளாம்? நம்ம சாரதாவையா?''-இது எல்லா ஸ்திரீகளும் ஏககாலத்தில் கேட்டது.

''நானெண்ணும் தூண்டித் துருவிக் கேட்கல்லே. எல்லாம் தெரியறது, என்ன அவசரம்னு வந்துட்டேன்.''

''அதுதான் பாத்தேன். நான் வரும்போதே வீடு பரபரப்பாயிருந்தது. செம்மண்ணும் கோலமும் அமக்களமா இட்டுண் டிருந்தா. என்ன விசேஷமோன்னு நெனச்சுண்டே வந்தேன்'' என்ருள் ஒருத்தி.

''முந்தாநாள்கூடக் காமாட்சியைக் கேட்டேன், வரன் ஏதாவது நிச்சயமாச்சான்னு; இல்லேன்னுளே. வரன் தேடப் போன ஆத்துக்காரர் இருக்கிற இடங்கூடன்னு தெரியல்லேன்னு. பெண்பார்க்க வரது அவ்வளவு ரகசியமா? தாலிகூட ரகசியமாகவே கட்டிடுவாளா என்ன?'' என்ருள் கோபாலேயர் வீட்டுக்கு எதிர் வீட்டில் இருக்கும் லக்ஷ்மி.

''இருக்கும். நம்மையெல்லாம் போலேயா? அவா அந்தஸ்து வேறே. காரியமும் வேறேயாத்தான் இருக்கும்.''

''ஏண்டி அவசரப்படறேள்? வாஸ்தவமா முந்தாநாள் வரையும் ஒண்ணுந்தான் தெரியலேயாம். நேத்துத்தான் திடீர்னு கடிதாசு வந்தது, கோபாலன் கிட்டேயிருந்து; 'பிள்ளையாத்துவாளை அழைச்சுண்டு வறேன். எல்லாம் தயாராயிருங்கோ'ன்னு. சுப்பு இப்பத்தான் எங்கிட்டேச் சொன்னா. 'முன்னே பின்னே சொல்லாமே ஒருவன் இப்படித்தான் கடிதாசு போடுவானோ? தான் முன்னாடி புறப்பட்டு வந்து, யாரு, என்ன மனுஷ்யா, என்ன என்ன செய்யணும், இதுகளைப் பார்க்க மாட்டானோ! அவன் காரியமே இப்படித்தான். என்னவோ அவளுக்குத் தோணினத்தைக் காமா சோமான்னு பண்ணிவைக்கணும்னுதான் தவிச்சுண்டிருக்கா'' என்றாள் நாணம்மாள்.

''தவிப்பானேன்? சுப்புவுக்குத் தெரியாததா? அவதான் காரியத்துலே கப்பலாச்சே!''

''இதுலே காரியமா பெரிசு? வரவா அந்தஸ்துத் தெரிஞ்சு அதுக்குத் தகுந்தபடி செய்யவேண்டாமா? அதுவும் இப்பத்தான் ஆத்துலே முதல் கல்யாணம். சுப்புவுக்குப் பழக்கம் இல்லே. கோபாலன் ஆம்படையா காமாட்சி சிறிசு. அவளுக்கு என்ன தெரியும்? இரண்டு பேருமாத் தவிச்சுண்டிருந்தா. நான் என்னாலானது 'காபி பலகாரம் செஞ்சு, வெத்திலே பாக்கு பழம் எல்லாம் வாங்கிக் கொழந்தைக்கும் அலங்கரிச்சு வச்சுத் தயாராயிருங்கோ'ன்னு சொல்லிவிட்டு வந்தேன். வேறே என்ன பண்றது?''

''அறிஞ்சவா தெரிஞ்சவாளானா இந்தத் தவிப்பு வேண்டாம்.''

''அதெல்லாம் வேண்டாம்னுட்டுத்தானே, நம்ம ஊரிலேயே பிள்ளை கிடையாது போலே, சீமைச் சரக்காப் பிடிச்சுண்டுவரப் போயிருக்கார், காமாட்சி ஆத்துக்காரர்!'' என்றாள் எதிர்வீட்டு லக்ஷ்மி. அவளுக்கு இரண்டு பிள்ளைகள் கல்யாண வயசில் இருந்தார்கள். அவர்களை வரனாகப் பாராமல் விட்டதில் அவளுக்கு மனத்தாங்கல்.

''ஆமாம், உன் பிள்ளை கோபுவுக்குக் கொடுக்கலாமே. அவனை ஏன் பார்க்கலே?'' என்றாள் ஒருத்தி, அப்போதுதான் நினைவு வந்தவள்போல. லக்ஷ்மியின் ஏமாற்றத்தில் அவளுக்குச் சந்தோஷம்.

"அவா அந்தஸ்துக்கு நாங்க சரியா? நன்னுச் சொன்னே! என் பிள்ளைக்காக நான் சொல்லல்லே. அவனுக்கு யாராவது பொண்ணைக் குடுத்தூட்டுப் போரு, அவன் பிரமசாரியாவே இருந்தூடப் போறதில்லே. அடுத்தாத்து ராமு இருக்கான். பரீக்ஷை பாஸ்பண்ணி இருக்கான். உத்தியோகங்கூட ஆகப் போறதாம்."

"ராமுவுக்குத்தான் பாத்தாளாம்; சுப்பு சொன்னு. ஜாதகம் சேரலையாம். பொண் கண்ணுக்கு நன்னு இருக்கு. பிள்ளையைக் காணம். நன்னுச் சீர் செஞ்சு கொடுப்பான். கோபாலன் அந்தஸ்துக்குச் சரியாக் காசும் பணமுமா நம்மூரிலே பிள்ளை எங்கே இருக்கு? அதுதான் வெளியிலே தேடரு."

"காமாட்சி ஸ்நானம் செய்யலேன்னுளே; பிள்ளையாப் பொறந்தா!"

"பொறக்கட்டுமே; அப்பக்கூடத்தான் அவாளுக்கு நெறையக் கெடக்கு; செய்யருன்!"

"நம்ம நாலு வீட்டுக்காராளும் ஒண்ணுக்குள்ளே ஒண்ணு பண்ணிண்டு வேண சிக்கலாப் போச்சு. வெளிச் சம்பந்தந்தான் பண்ணட்டுமே" என்ருள் அந்தக் கூட்டத்தில் சிறியவளாக இருந்த ஒருத்தி. அவளுக்குப் புது மனிதர்களும் புது இடமும் பார்க்க ஆசை.

இதற்குள் நாணம்மாள் ஸ்நானம் முடிந்து புறப்படத் தயாராகிவிட்டதைக் கண்ட ஒருத்தி, "எங்களுக்கெல்லாம் அப்புறம் வந்தேள்; ஆனுல் உங்களுக்கு அதுக்குள்ளே எல்லாம் ஆயிடுத்தே!" என்ருள் அதிசயத்துடன்.

"சுப்பு சுருக்க வரச்சொன்னு. 'காமாட்சிக்கு ஒண்ணும் தெரியாது. நீ பெரியவளா வந்து பார்த்துக்கோ'ன்னுருக்கா. ஏதோ நம்மாலானது, தெரிஞ்ச ஒத்தாசை செய்யறது. சுப்பு எட்டூருக்குச் செய்வ. அவளைத் தெய்வம் உள்ளே அடைச்சு வச்சிருக்கு." - இப்படிச் சொல்லிக்கொண்டு நாணம்மாள் குடத்துடன் சென்றுவிட்டாள்.

"ஆமாம், எல்லாருக்கும் ஒத்தாசை செய்வாளாக்கும்! பணக்காரான்னுப் பண்ணுவள்" என்று அவள் போன பிறகு சொன்னுள், எதிர்வீட்டு லக்ஷ்மி.

"இருந்தாலும் சுப்புகிட்ட மன்னிக்குச் சிநேகம் ஜாஸ்தி தான். இதுவே வேருெருவர் ஆத்துக் காரியம்னு எவ்வளவோ

தூஷிக்கக் கிடைக்கும். சுப்புவாத்துக்குன்னுப் பங்கடைச்சிண்டு வரா'' என்றுள் மற்றெருத்தி.

இப்படிப் பேசினுலும் அவர்களும் வழக்கத்தைவிடச் சீக்கிரமே ஸ்நானத்தை முடித்துக்கொண்டு அவரவர் வீட்டுக்குப் புறப்பட்டுவிட்டார்கள். ஏனெனில் கோபாலையர் வீட்டுக்கு வரப்போகிறவர்களைத் தங்கள் தங்கள் வீட்டில் இருந்தாவது பார்க்க அவர்களுக்கு ஆவல் அதிகம் இருந்தது.

வீடு சென்ற நாணம்மாள் வேகமாகச் சற்று நல்ல புடைவை உடுத்துக் கோபாலையர் வீட்டுக்குப் புறப்படத் தயாராளுள். நாட்டுப்பெண்ணைச் சமையல் அடுப்பைப் பார்த்துக்கொள்ளச் சொல்லிவிட்டு அவள் கிளம்பின சமயம், வயல்கரைக்குச் சென்றிருந்த அவள் கணவர் வந்து சேர்ந்தார்.

''என்ன விசேஷம், எங்கே தடபுடலா நல்ல புடைவை உடுத்துக் கிளம்பறே?'' என்று அவர் கேட்டதற்கு, ''எல்லாம் வந்து சொல்லுகிறேன்; இருங்கோ, உள்ளே பொன்னம்மா இருக்கா; தாகத்துக்கு ஏதாவது வேணுமானு வாங்கிச் சாப்பிடுங்கோ'' என்று சொல்லிக்கொண்டே அவள் போய் விட்டாள்.

'நின்று பதில் சொல்ல முடியாத அவசரமாக்கும், உம்!' என்று தாமே முணுமுணுத்துக்கொள்வது தவிர அவர் செய்யக் கூடியது ஒன்றும் இல்லை. சின்ன வயசுபோல அவள் அவர் உத்தரவுக்குப் பயந்து காத்திருப்பாளா, என்ன? அவர்தாம் அதை எதிர்பார்ப்பாரா? இவ்வளவு நாள் சுகதுக்கங்களில் பங்கெடுத்துக்கொண்டு வாழ்க்கை நடத்தின பிறகு, அவளுக்குத் தன் இஷ்டம்போல் நடக்கச் சுதந்தரம் அவர் கொடுக்கா விட்டாலும் தானுகவே வந்துவிடவில்லையா? எல்லாவற்றையும் திரும்பி வந்த பிறகு தம்மிடம் சொல்லாமல் எங்கே போகிறுள் என்கிற நினைப்பில் அவரும் திருப்திகொண்டு சும்மா இருந்தார்.

நாணம்மாள் கோபாலையர் வீட்டுக்குள் நுழைந்தபோது வீடு முழுவதும் செம்மண் கோலத்தால் நிறைந்து, மாவிலை கட்டிச் சோபையுடன் விளங்கிற்று. குழந்தைகள் மூவரும் புதிசு உடுத்து அலங்காரமாகக் காட்சி அளித்தார்கள். பன்னிரண்டு வயசு நிரம்பிக் கல்யாணத்துக்கு இருந்த சாரதா பட்டுச் சிற்றுடை உடுத்தி விசேஷப் பொலிவுடன் விளங்கினுள். தன்னைப் பார்க்க வருகிறுர்கள் என்கிற எண்ணம், லஜ்ஜையோடு கூடச் சந்தோஷத்தையும் அவளுக்குக் கொடுத்து முகத்திற்குத்

தனிக்களையை அளித்திருந்தது. நான்கு வயசுக் குழந்தை மகாலக்ஷ்மி புதுப்பாவாடை கட்டியிருந்த சந்தோஷம் தாங்காமல் குனிந்து பாவாடையைப் பார்த்த வண்ணம் இங்கும் அங்கும் ஓடிக்கொண் டிருந்தாள். ''பட்டுப் பாவாடை கட்டிண் டிருக்கேண்டா, தொட்டுப் பாருடா'' என்று வேலைக்காரன் கிருஷ்ணனிடம் தொட்டுத் தொட்டுக் காண்பித்தாள். தன் சந்தோஷத்தை அவனிடம் சொல்லிக்கொள்வதில் அவளுக்கு ஓர் ஆசை.

''சரி, சரி. நல்லாருக்கு. வரவங்க உன்னைத்தான் பாக்க வராங்க இங்கே!'' என்று சொல்லிக்கொண்டே அவனும் வேலையாகக் குறுக்கும் நெடுக்கும் போய்க்கொண் டிருந்தான்.

''வா, வா மன்னி; ஏன் இத்தனை நாழி? அவா வர நேரமாச்சு. எல்லாம் சரியாகப் பண்ணியிருக்கேனு பாரு'' என்று கோபாலையரின் தமக்கை சுப்பு நாணம்மாளை வரவேற்றாள்.

''உனக்கென்ன தெரியாதா? காமாட்சி எங்கே? அவள்னு தயாராக இருக்கணும்? அவா வரச்சே குளிச்சிண்டு இருக்கப்போறு!''

''இல்லே, தயாராயிட்டா, வருவ. இந்தத் தடவை பாரு, அவளுக்கு அசாத்திய மசக்கை. வாயிலெடுப்புத் தலை தூக்க முடியல்லே. கல்யாணம் நேந்தாக்கூட அவளாலே சபையிலே நின்னு தாரை வாத்துக்கொடுக்க முடியுமோ என்னவோ! சதா சோந்து சோந்து படுத்துக்கிறு; தள்ளவே இல்லை.''

''ஏன் அப்படி? வழக்கமா அவளுக்கு அவ்வளவு கிடையாதே?''

''என்னவோ எல்லாம் இந்தத் தடவை விபரீதமாக இருக்கு.''

''வித்தியாசமா இருந்தாப் பிள்ளை பொறக்கும்.''

''உன் ஆசீர்வாதம் பலிக்கட்டும்.''

''வண்டிச்சத்தம் கேட்கிறதே அக்கா; வாங்கோ மன்னி, சரியான சமயத்துலே வந்தேள்'' என்று சொல்லிக்கொண்டு அந்தச் சமயத்தில் அவ்விடம் வந்து சேர்ந்தாள் காமாட்சி; பொன்போன்ற சிவந்த மேனியுடன் நல்ல அழகி என்று சொல்லும்படி இருந்தாள் அவள். அவளைக்கொண்டுதான் குழந்தைகள் அவ்வளவு நன்ருக இருக்கவேண்டும் என்று தெரிந்தது.

"சாரதாவைப் பார்க்க வரான்னு சுப்பு சொன்னு. உனக்கு ஒத்தாசையா இருப்போம்னுட்டுத்தான் வந்தேன்" என்று நாணம்மாள் பதில் சொல்லிக்கொண்டிருக்கும்போதே, வாசலில் இரட்டைமாடுகள் பூட்டின அவர்கள் வண்டி வந்து நின்றது. கோபாலையர் முதலில் இறங்கினுர். பிறகு பதினெட்டு வயசு மதிக்கக்கூடிய வாலிபனும் அவன் தாயும் அவர்களுடன் ஒரு வேலையாளும் இறங்கினுர்கள்.

அவர்களை வரவேற்று உபசரித்து நாணம்மாள் உதவியில் காமாட்சி எல்லாம் செய்தாள். சுப்புவும் உள்ளிருந்தவாறே கவனிக்கவேண்டுவது முழுவதையும் கவனித்துக்கொண்டான். வந்தவர்களை உபசரிப்பதில் ஒன்றும் விட்டுப்போய்விடக் கூடாது என்கிற பயம் அவளுக்கு.

பிள்ளையும் பெண்ணும் பார்த்துக்கொள்வதற்கும், வந்தவர்களுடன் பேசி ஒருவரை ஒருவர் தெரிந்துகொள்வதற்கும் நிறையப் பொழுது இருந்தது. சாயங்காலந்தான் வந்தவர்களுக்கு ஊர் திரும்ப ரெயில்; ஆகையால் வேண்டியது பேசிக்கொள்ள முடிந்தது. ஊராருக்கும் தங்கள் தங்கள் வீட்டிலிருந்து, கோபாலையர் வீட்டு வாசலில் வண்டியினின்றும் இறங்குபவர்களை அரைகுறையாகப் பார்த்ததோடு நின்று போகாமல் அவர் வீட்டிற்கே சென்று நேரில் பார்க்கவும் சமயம் வாய்த்தது. அவர்களை யார் அழைத்தார்கள் என்றுல், இதற்கெல்லாம் அழைக்கவேண்டுமா என்ன? அவரவர்களுக்கு இருந்த ஆவலில் ஏதாவது காரணம் கிடைக்காமலா போய்விடும்? கோபாலையர் வீட்டுக்கு வலுவிலே ஒவ்வொருவரும் ஏதேதோ காரணம் சொல்லிக்கொண்டு வந்து போனுர்கள். பிள்ளையைப் பார்க்கவும் பார்த்தார்கள். பிள்ளை, தோற்றத்திலும் வயசிலும் சாரதாவுக்குச் சரியானவன் என்றும் தீர்மானித்துக் கொண்டார்கள்.

கோபாலையர், வந்த பிள்ளையாண்டானேடு கூடவே இருந்து எல்லா உபசாரங்களும் செய்தார். சாயங்கால ரெயிலில் அவர்கள் ஊர் திரும்பினபோது, போனதும் சம்மதம் தெரிவித்துக் கடிதம் போடுவதாகச் சொல்லிச் சென்றுர்கள். அவர்களைச் சாத்தூர்வரைக்கும் ரெயிலடிக்குக் கொண்டுபோய் விட்டுவிட்டு வந்த பிறகுதான் கோபாலையரால் அவர்களைப் பற்றின முழு வரலாற்றையும் சாவகாசமாக மனைவியிடமும் தமக்கையிடமும் சொல்ல முடிந்தது. பிள்ளை வீட்டாருக்குத்

திருநெல்வேலிப் பக்கம். பெருத்த பணக்காரக் குடும்பம். எவ்வளவோ கோட்டை விதைப்பாடு அவர்களுக்கு. மூன்று பிள்ளைகளில் இவன்தான் மூத்தவன். பத்து வகுப்பு வரைக்கும் படித்திருக்கிறான். அதற்கு மேலும் படித்து அவனுக்கு ஆக வேண்டியது என்ன; பணம் நிறையக் கிடக்கும்போது? ஆகையால் நிறுத்துவிட்டான்.

''மதுரையில் அம்மாஞ்சிவீட்டுக்குப் போனபோது இந்த வரனைப்பற்றிக் கேள்விப்பட்டேன். இங்கே வந்து சமாசாரம் சொல்லிவிட்டுப் போவது முடியாதுபோல் இருந்தது. கடிதாசு எழுதக்கூட நேரம் இல்லை. யாரோ மதுரை வக்கீலாம்; மும்மரமாகப் பார்த்துண்டிருக்கார்ன்னு கேள்விப்பட்டேன். உடனே அம்மாஞ்சியும் நானும் ஒரு நிமிஷங்கூட வீணாக்கப் படாதுன்னு புறப்பட்டுவிட்டோம். பையனைப் பார்த்தோம்; ரொம்பப் பிடிச்சுடுத்து. மதுரைக்காரருக்கு மேலாகவே கொடுக்கிறதாகச் சொல்லி முடிவு பண்ணிவிட்டோம். பொண் பார்க்கிறதைப் பாக்கி வச்சுண்டு கையோடு அழைச்சுண்டு வந்தூட்டேன். கல்யாண மாசம் ஆயிடறது பாரு. மெதுவாச் செஞ்சுண்டு இருக்க முடியாது. அவா சம்மதம் தெரிவிச்சா முகூர்த்தம் வைக்க வேண்டியதுதான்'' என்றார்.

''புதுச் சம்பந்தம், முன்னே பின்னே தெரியாதே'' என்று அவர் தமக்கைக்கும் மனைவிக்கும் தோன்றிற்று. ஆனால் அதையெல்லாம் கோபாலையர் நினைக்கவில்லை. பணக்காரப் பிள்ளை, பெரிய குடும்பம், ஜாதகம் பொருந்துகிறது, வேறு என்ன வேண்டும்? மதுரையிலேயே அம்மாஞ்சியிடம் பித்தளை வெள்ளிச் சாமான்களுக்கு ஏற்பாடு செய்யச்சொல்லிப் பணமும் கொடுத்து வந்துவிட்டார். அவர்கள் பெண்ணைப் பார்த்தபிறகு வேண்டாம் என்று சொல்லுவார்களா என்கிற தைரியம் அவருக்கு. கல்யாணம் நிச்சயமாகி விட்டதாகவே தீர்மானித்துக் கொண்டு விட்டார்.

அவர் நினைத்தது சரியாகவே இருந்தது. சம்மதம் தெரிவித்துத்தான் பிள்ளை வீட்டாரிடமிருந்து கடிதம் வந்தது. கோபாலையரின் செல்வாக்கையும் பெண்ணின் அழகையும் பார்த்தபிறகு வேறே சொல்லுவார்களா?

''என்னவோ அம்மா, இப்படிப் புதுசா வரன் பிடிச்சிருக்காளே?'' என்று சுப்பு, நாணம்மாளிடம் கவலையோடு சொன்னதற்கு, ''புதுசென்ன, பழசென்ன? நல்ல மனுஷாளா இருக்கா.

வேறே என்ன வேணும்? பிள்ளையின் தாயார் கலகலப்பா நல்ல மாதிரியாப் பேசினு. வீணுக்குக் கவலைப்படாதே. சாரதா அதிருஷ்டசாலிதான்; கண்நிறைஞ்ச கணவன் வரான்'' என்று அவள் கவலையைப் போக்கடித்துவிட்டாள் நாணம்மாள்.

நாணம்மாளை மதித்துப் பேசினுள் வந்தவள்; அந்தத் திருப்தி அவளுக்கு. நாணம்மாள் ஆமோதித்துச் சொல்லி விட்டதில் சுப்புவுக்குச் சந்தேகம் நீங்கி மனத்துக்கு நிம்மதி பிறந்துவிட்டது. பிறகு அவள் கல்யாண வேலையில் முழுமனத்துடன் ஈடுபட்டாள் என்பதற்குச் சொல்ல வேண்டுமா என்ன? கணவன், நாத்தனுர் இவர்களுக்குச் சம்மதமானுல் காமாட்சிக்கு மட்டும் ஆக்ஷேபம் இருக்குமா? அவர்கள் எண்ணத்தோடு சேர்ந்ததுதானே அவள் எண்ணமும்?

## 4
# கல்யாணக் கோலாகலம்

கல்யாணம் விமரிசையாக நடந்தது என்று சொல்லத் தேவையில்லை. அதுவரையிலும் சுற்றுவட்டக் கிராமங்களைத் தவிர மற்ற இடங்களில் கேள்விப்படாத தானப்பாளையம் என்கிற பெயர் அந்தக் கல்யாணத்துக்குப் பிறகு மதுரை வரைக்கும். பிரசித்தமாகிவிட்டது. மதுரையிலிருந்தே, பந்தல் காரன், மேளகாரன், பூக்காரன், சமையல்காரன் முதல் எல்லோரையும் வரவழைத்துத் தனிச் சிறப்பாக நடத்தினுர்கள். சிறு கிராமமானதால் புது நாகரிகம் தெரிந்த ஆட்கள் இல்லை என்று அம்மாஞ்சி வெங்கிட்டு மூலம் எல்லாவற்றையும் மதுரையிலிருந்தே ஏற்பாடு செய்துவிட்டார் கோபாலையர். அம்மாஞ்சி அவ்விடத்துப் போலீஸ் இன்ஸ்பெக்டர். பிறகு கேட்பானேன், விசேஷமாய் நடப்பதற்கு? அவர் அதிகாரத்துக்கும் தோரணைகளுக்கும் கணக்குக் கிடையாது.

தெருவடைத்துப் பந்தல் போட்டார்கள்; வித விதமான விசித்திர வேலைப்பாட்டுடன் போட்டார்கள். கல்யாணத்தில் நாலு நாளும், சதிர்க்கச்சேரி, பாட்டுக் கச்சேரி, மேளக்கச்சேரி என்று பலவிதக் கச்சேரிகள்; இடையே விகடக் கச்சேரிகூட. ஊர்வலத்துக்குப் பூக்களால் ஜோடித்த இரட்டைக் குதிரை சாரட்டு; இவ்வளவுதானு? கல்யாணத்தில் பூரிதக்ஷிணையின் செலவோ அசாத்தியம். பக்கத்து ஊர்களில் இருந்தெல்லாம்

வைதிகர்கள் வந்து நிறைந்தார்கள்: சாப்பாடு போட்டுப் பரிசாரகர்கள் அயர்ந்துபோனார்கள். இவ்விதம் எல்லா வகையிலும் செலவைத் துளியும் லட்சியம் செய்யாமல் பெரிய மகோற்சவமாக நடந்தது விவாகம். 'இதற்கு மிஞ்சின கல்யாணம் முன்னும் நடக்கவில்லை, பின்னும் நடக்காது என்று கிராமமே சொல்லும்படி நடத்த வேணும் என்கிற ஆசையா என்ன கோபாலையருக்கு?' என்று எல்லோரும் திகைத்தார்கள்.

ஊருக்கென்ன? மிகவும் கொண்டாட்டம். நாலு நாளும் வேளைவேளையாகச் சாப்பிட்டுக்கொண்டு நலங்கென்றும் ஊஞ்சலென்றும் பார்த்துக் களித்தார்கள். சாரதாவையும் மாப்பிள்ளை ஸ்ரீநிவாசனையும் உண்டான பரிகாசம் செய்து வேடிக்கை பண்ணுவதில் சிறியோர் பெரியோர் என்கிற வித்தியாசம் இல்லாமல் யாவரும் ஈடுபட்டு ஆனந்தம் அடைந்தார்கள். கிராமங்களில் கல்யாணங்களை விட்டால் வேறு விநோதப் பொழுதுபோக்கு ஏது? வயசு சென்றவர்களுக்குத் தங்கள் இளமைத் தாம்பத்திய வாழ்க்கையை நினைத்துக்கொள்ள இது சந்தர்ப்பம் அளித்ததில் இன்பம். வாலிபர்களுக்குத் தங்களுக்கு ஏற்பட இருக்கும் இன்ப வாழ்க்கையை நினைவூட்டுவதனால் குதூகலம். சிறுவர்களுக்குப் பெரியவர்களின் கண்டிப்பில்லாமல் இஷ்டம்போல விளையாடித் திரியச் சந்தர்ப்பம் கிடைத்ததால் பரமானந்தம். இப்படிக் கிராமமே உத்ஸாகத்தில் அமிழ்ந்திருந்தது.

புதுத் தம்பதிகளைப் பற்றியோ சொல்லவேண்டியதே இல்லை: ஏதோ ஒரு மகிழ்ச்சி அவர்களைச் சுவர்க்கத்துக்கே கொண்டுபோயிற்று. ஒருவரை ஒருவர் கடைக்கண் பார்வையிலேயே பார்த்து அவ்வளவு பேர் மத்தியிலும் தாங்கள் தனித்திருப்பதுபோன்ற உணர்ச்சியில் மிதந்தார்கள்.

மாப்பிள்ளையைச் சேர்ந்தவர்களுக்கும் பரம திருப்தி. இதென்ன ஆச்சரியம்! சிறு மனஸ்தாபங்கூட இல்லாமலா என்றால் அது ஏதாவது சில்லறையில் இருந்திருக்கலாம். நாலுபேர் மத்தியஸ்தத்துக்கு வரும்படியான பெரிய தகராறு ஒன்றும் உண்டாகவில்லை. நாணம்மாள், அவ்வளவுக்கும் தான் தான் காரணம் என்பதாகச் சொல்லிக்கொண்டாள். ஒரு குற்றம் குறை வராமல் சம்பந்திகளைத் தான் விசாரித்துக் கொண்டதாக எல்லாரிடமும் பெருமை பேசினாள். 'என்ன இருந்தாலும் காமாட்சிக்கு அவ்வளவு போராது; நாம் எல்லாம்

சரியாய்ச் செய்து வச்சிருந்தோமானு மட்டும் போருமா? ஒரு தடவைக்கு நாலு தடவையாச் சம்பந்திகளை உபசரித்துச் சாப்பாடோ, இன்னொன்றோ பண்ணிவைக்க வேண்டாமா? நான் எங்காத்துக்கே போகாமல் அவர் வீட்டோடு இருந்து எல்லாம் பாத்துண்டேன். ஆத்துலே பொன்னம்மா சிறிசு; என்ன பண்ணுவள் இன்னுட்டு அவரையும் பிள்ளைகளையும் இங்கேயே எல்லாம் வச்சுக்கச் சொன்னேன். சுப்பு வேறே, நீ போகவே படாதுன்னுட்டா. அவ உள்ளே இருந்துண்டு என்ன பண்ணுவ?'

இது நாணம்மாளுடைய பிரதாபம். தான் நாலு நாளும் வீட்டோடு இருந்து தன் குடும்பத்தையும் அங்கேயே எல்லா வேளை ஆகாரத்தையும் செய்துகொள்ளும்படி ஏற்பாடு செய்து கொண்டதற்கு முக்கிய காரணமாக ஊராரிடம் அவள் சொல்லிக் கொண்டது இது.

'ஆமாம், இவ பரோபகாரம் தெரியாதாக்கும்! பிறத்தியாரண்டே பெத்துக்கறத்திலே இதொரு சாமர்த்தியம். நாலு நாளும் ஆத்துலே அடுப்பு மூட்டாமலே இருந்திருக்கா; சாமியெக்கூடன்னு வெட்டிக் கெணத்துலே போட்டுட்டா. எங்காத்துலேயுந்தான் போதுபோதாக் கூப்பிட்டா. அதுக்காகச் சாமி நைவேத்தியங்கூடப் பண்ணுமலா இருந்தேன்? ஆழாக்கு அரிசி மகா நைவேத்தியம் மட்டும் செஞ்சுதான் வச்சேன். காமாட்சிக்குத் தெரியாதாக்கும்! கொஞ்சம் அடக்கம்; பரபரன்னு கடந்து அலையமாட்டா. வேறென்ன?' - இது எதிர் வீட்டு லக்ஷ்மியின் அபிப்பிராயம்.

'நாணம்மாளுக்கே வெளியிலே பகட்டாக் காண்பிச்சுப் பேர் பெத்துக்கறத்திலே ஆசை. அதுக்கு ஏத்தாப்பலே சுப்பு ஒத்தி தொட்டதுக்கெல்லாம் இவ யோசனையைக் கேட்க வந்தூடரு. என்னவோ இவளாலே சம்பந்திக்கும் சம்பந்திக்கும் சண்டை வராமல் போச்சே. அந்த நல்ல காலத்தைச் சொல்லு' என்றுள் இன்னொருத்தி.

'அதுகூட என்னமோ பருப்புத் தேங்காய்த் தட்டுலே ரவிக்கைத்துண்டு இல்லேன்னு கௌம்பித்தாம். நாணம்மா நம்மூரிலே வழக்கமில்லேன்னு ஆரம்பிச்சாளாம். காமாட்சி தான் நம்மூரிலே இல்லாட்டா என்ன, அவா ஊர்ப்படி செஞ்சுட்டாப் போறதுன்னு அதை அப்படியே அடக்கி விட்டாளாம். காமாட்சி வாயை மூடிண்டிருந்தாலும்,

வம்புக்குப் போகாமே காரியம் நடத்துவள்; அதுதான் அவாத்துக் காரியம் எதுவும் சத்தமில்லாமே நடக்கிறது. ஆம்படையானும் பொண்டாட்டியும் நன்னு அமைஞ்சிருக்கா. அவரும் ஒத்த ரண்டையும் ஒண்ணும் சொல்லிக்கறதில்லே; அவளும் சத்த மில்லாமே எல்லாம் செய்யறு. மணையிலேதான் நின்னுளே; வைச்சு வாக்கப்படுகிறமாதிரி குனிஞ்ச தலை நிமிராமே, ஆம்படையானும் பொண்டாட்டியும்! பக்கத்திலே பொண்ணும் மாப்பிள்ளையும் திருஷ்டியாப் போற மாதிரின்னு இருந்துது!'

'கோபாலனுவது ராங்கிக்காரன்; அவள் அதுகூட இல்லே. மரியாதையும் மட்டும், ரொம்ப நல்ல பொண்.' - இது எதிர் வீட்டு லக்ஷ்மியின் மாமியாருடைய சிலாகிப்பு. மொத்தத்துலே அவ அதிருஷ்டசாலி. அருமையும் பெருமையுமா ஆம்படையான்; தங்கந் தங்கமா குழந்தைகள். பணத்துக்கோ கேட்க வேண்டாம். இப்போ எல்லாம் பொருந்தி நல்ல மாப்பிள்ளை வேறு கெடைச்சுட்டான். அக்கா அறுத்து ஆத்துக்கு வந்தது கூட நல்லதாப் போச்சு. வீட்டுக் காரியத்தெ அத்தனை நன்னுப் பாத்துக்கரா. உடன் பிறந்தான் ஆம்படையாளோடே தொட்டத்துக்கெல்லாம் சண்டைக்கு நிக்காமே எல்லாம் தன்னுதாச் செய்யறு. பிள்ளையும் இப்போப் பொறந்துட்டா அப்பறம் அவளுக்கு மிஞ்சி அதிருஷ்டக்காரா ஆரு?' என்றுள் எதிர்வீட்டு லக்ஷ்மி. அவளுக்குத் தன்னையும் எதிர்வீட்டுக் காமாட்சியையும் ஒப்பிட்டுப் பார்த்து மனத்தாங்கலோடு தோன்றிய எண்ணம் அது.

அவள் கணவர் தம் தமையனுடன் பாகம் செய்து கொண்டதில், கோபாலையரின் சொத்தில் பாதிதான் அவருக்கு ஏற்பட்டது. அதிக சம்சாரம் இல்லை என்றுலும் இரண்டு பெண் களுக்குக் கல்யாணம் செய்து இரண்டு பிள்ளைகளுக்கு ஆஸ்தி வைக்கவேண்டும் என்றுல் சொத்துக் குறைந்துவிடாதா? பிள்ளை களைப் படிக்க வைத்தும் ஒன்றும் முன்னுக்கு வருவதாக இல்லை. ஒவ்வொரு வகுப்பிலும் இரண்டிரண்டு வருஷத்துக்குக் குறை யாமல் இருந்துவந்தால் மேல்படிப்பு எங்கிருந்து படிக்கிறது? அவள் விசாரங்கள் இப்படி எத்தனையோ. மாமியார்க் கிழவி வேறு ஒருத்தி சதா வீட்டில் இரண்டு பிள்ளைகளிடத்திலும் மாறி மாறி இருந்துகொண்டு இங்கே நடப்பதை அங்கும் அங்கே நடப்பதை இங்குமாகச் சொல்லி, ஓர்ப்படிக்கும் ஓர்ப்படிக்கும் சண்டை மூட்டியவண்ணம் இருந்தாள். இந்தச் சண்டையைத்

தவிர அவளால் வேறு உபகாரம் ஒன்றும் இல்லை. இப்படி இருக்கும்போது லக்ஷ்மிக்குக் காமாட்சியின் அதிருஷ்டம் பெரிதாகத் தோன்றாமல் என்ன செய்யும்?

கிராமத்துப் பெண்கள் இப்படி நினைத்தார்கள் என்றால், புருஷர்களும் கோபாலையரை அதிருஷ்டக்காரர் என்றுதான் நினைத்திருக்க வேண்டும். எல்லாம் பொருந்தின மாப்பிள்ளை, மரியாதை தெரிந்து நடந்துகொள்ளும் சம்பந்தி. கல்யாணத்தில் சொல்லவேண்டுமென்று முனைந்தால்கூட ஒரு குறையும் கிடைக்கவில்லை. இப்படி நினைத்துத்தான் அவர்கள் சும்மாயிருந் திருக்கவேண்டும். ஏனென்றால் வேறு விதமாக நினைத்திருந்தால் பேசிக்கொள்ள மாட்டார்களா?

நாணம்மாள் கணவர் கணபதி சாஸ்திரிகள் மட்டும் ஒவ்வொன்றையும் தனித் தனியாகச் சிலாகித்துக்கொண்டார். அவருடைய மனைவி முழுதும் கல்யாணத்தில் ஈடுபட்டிருந்ததால் தமக்கு அதன் பெருமைகளில் அதிக பாத்தியம் இருப்பதாக அவருக்கு எண்ணம்.

இப்படி ஊரார் நினைத்தபோது இவ்வளவுக்கும் வாஸ்தவ மாகச் சொந்தக்காரரான கோபாலையர் எவ்விதம் எண்ணித் திருப்தியும் பெருமையும் கொண்டிருப்பார்? சம்பந்திகளை ஊருக்கு வழி அனுப்பிவிட்டு மிகுந்த சந்தோஷத்தோடு கூடத்து விசிப்பலகையில் உட்கார்ந்து அம்மாஞ்சி வெங்கிட்டுவிடம், "என்ன எல்லாம் ஜமாய்ச்சுட்டே!" என்றார் பெருமையாக.

"நான் என்ன ஜமாய்க்கிறது? நீ பணத்தை ஓடாச் செலவு செய்தேன்னு சொல்லு."

"பணத்தைச் செலவழிச்சுட்டா நடந்துடுமாக்கும்? எல்லாம் உன் போலீசு அதிகாரத்தின் மகாத்மியம். நீ வாயை அசைக்கிறதுக்குள்ளே சாமான்கள் வந்து குமிஞ்சுடுத்து."

"என்னவோ அப்பா, இந்தக் கல்யாணம் நன்னா நடந் துடுத்து. நீ குடும்பத்தோடே வந்திருந்து பொறுப்பா நடத்திப் பிட்டே. பாக்கிப் பெண்கள் கல்யாணம் எப்படியோ?" என்றாள் அங்கிருந்த சுப்பு.

"ஏன் சந்தேகப் படறே? இதுக்கு மேலாக நடக்கும்" என்றார் அம்மாஞ்சி.

"மாப்பிள்ளையும் சம்பந்திகளும் இப்படியே கிடைக்கணும். அப்புறம் நமக்கு ஒடம்புலே தெம்பும் கையிலே பணமும் இருக் கணும் செய்ய" என்றாள் சுப்பு விடாமல்.

''இல்லாமே எங்கே போறது? பணமும் இருக்கும், தெம்பும் இருக்கும். பிள்ளை கிடைக்கணுமே, அதை வேணு மானுச் சொல்லு'' என்றார் அம்மாஞ்சி.

''மகாலக்ஷ்மியை உன் பிள்ளை நாராயணனுக்குப் பண்ணிண்டுடு. மீனுவுக்குத்தான் வெளியே தேடணும்.''

''ஆமாம் அப்பா. உன் பிள்ளைக்குத்தான் நம்ம மகாலக்ஷ்மி: அதைப்பத்திச் சந்தேகம் இல்லே. மீனு நடுவிலே இல்லாட்டா, குழந்தைகளாக இருந்தாலும் பாதகம் இல்லேன்னு இந்தக் கல்யாணத்தோடேயே செய்திருப்பேன்'' என்றார் கோபாலையர்.

''ஏண்டி மகாலக்ஷ்மி, நம்ம நாராயணனைக் கல்யாணம் பண்ணிக்கறயா? சொல்லு'' என்றார் அம்மாஞ்சி. அவர்கள் நடுவில் உட்கார்ந்திருக்கும் குழந்தை மகாலக்ஷ்மியை வேடிக்கை யாக முதுகில் தட்டிக்கொண்டே.

கல்யாணம் நாலு நாளும் அக்காவும் அத்திம்பேரும் சேர்ந்து சேர்ந்து நலங்கென்றும் ஊஞ்சலென்றும் உட்கார்ந் திருந்ததையும், அ க மு டை யா ன் பெண்டாட்டி என்கிற வேடிக்கைப் பேச்சாகவே சகலமும் நடந்துகொண் டிருந்த தையும் முழுதும் கவனித்துக்கொண் டிருந்த மகாலக்ஷ்மியின் மனத்திலும் அகமுடையான் என்கிற சொல்லுக்குப் பொருள் கொஞ்சம் தெரிந்திருந்ததுபோல் தோன்றிற்று. உடனே அவள், ''உம்'' என்று தலையை ஆட்டிவிட்டு, ''எங்கே ஆம்படையான்?'' என்று கேட்டுக்கொண்டே அங்கே கீழே உட்கார்ந்திருந்த சிறு பையன் நாராயணன் பக்கத்தில் போய் இடித்து உட்கார்ந்து கொண்டாள். இதைக் கண்டு எல்லோரும் 'கொல்'லென்று சிரித்துவிட்டார்கள். ப ன் னி ர ண் டு வயசுப் பையனான நாராயணனுக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. அவன் சற்று விலகி உட்கார்ந்துகொண்டான். அதைக் கண்ட மகாலக்ஷ்மி தானும் நகர்ந்து பின்னும் இடித்து உட்கார்ந்துகொண்டாள். ''நல்ல கெட்டிக்காரப் பொண்ணுடீ நீ! அப்படித்தான்; பயலை விடாதே!'' என்றார் அம்மாஞ்சி சிரித்துக்கொண்டே.

எல்லோருக்கும் நாராயணன் வெட்கமும் மகாலக்ஷ்மியின் துணிச்சலும் பெரிதும் வேடிக்கையும் விநோதமுமாக இருந்தன. நினைவு தெரிந்துவிட்டால் நிலைமை ஒரேயடியில் மாறியல்லவா விடும்? இப்போது அவர்கள் குழந்தைகள். மகாலக்ஷ்மி 'அக முடையானை' விட்டு நகரமாட்டாள்போல் ஆகிவிட்டது. நாராயணனுக்கு உள்ளுக்குள் அந்த அழகிய குழந்தை தன்னை

அவ்விதம் உறவுகொண்டாடினதில் சந்தோஷந்தான்; என்ருலும் எல்லோரும் தன்னைப் பார்த்துச் சிரிக்க நேர்ந்ததில் வெட்கம் மேலிட்டுவிட்டது. மெதுவாக நகர்ந்து அவ்விடத்தை விட்டு வாசலுக்கு ஓட்டம் பிடித்தான்.

''போடீ, போ; அவனைப்போய் இழுத்துண்டு வா, விடாதே'' என்று இன்னும் தூண்டிவிட்டார் அம்மாஞ்சி.

'அகமுடையானை'த் தேடிச்சென்ற மகாலக்ஷ்மி அங்கே வேலையாக இருந்த வேலைக்காரன் கிருஷ்ணனைப் பார்க்கவும், தான் வந்த வேலையை மறந்தவளாக அவனிடம் போய் 'ஆம்படையானை'ப்பற்றிச் சொல்லத் தொடங்கிவிட்டாள்: ''அதெல்லாம் சரிதான். உனக்கு எப்போ ஆம்படையான் வந்தான்? அதைச் சொல்லு. எனக்குப் புதுவேட்டி இல்லாமே உனக்கு எப்படிக் கல்யாணம் ஆவும்?'' என்று அவன் கேட்கவே, அவளுக்குச் சந்தேகம் வந்துவிட்டது. அப்பாவிடம் கேட்டு வருவதாக அவள் திரும்பி வரவும், அவள் அக்கா மீனு அழுது கொண்டே உள்ளே ஓடுவதைப் பார்த்து ஒன்றும் தோன்ருமல் கேட்க வந்ததை மறந்து நின்ருள். சில விநாடிக்குள் அவ்விடத்தில் நிலைமை மாறி இருந்தது. அதற்கும் அம்மாஞ்சிதான் காரணம். அவர் சுபாவத்தில உத்ஸாக புருஷர். இந்தக் குழந்தைகளின் செய்கை பின்னும் உத்ஸாகத்தை உண்டு பண்ணிற்று அவருக்கு. ''ஏண்டீ மீனு!'' என்று அவளைப் பார்த்து ஆரம்பித்தார். அவள்தான் கோபாலையரின் இரண்டாவது மகள்; பெயர் மீனுட்சி. அவளுக்கு வயசு எட்டு. அங்கே தங்கையின் துணிச்சலைக் கண்டு வெட்கத்தோடு புன் சிரிப்புடன் நின்றிருந்தாள்; ''உனக்கு யாரும் இங்கே அகமுடையான் இல்லையா?'' என்ருர் அம்மாஞ்சி, சுற்றிலும் ஒரு பார்வை பார்த்துக்கொண்டே. வாஸ்தவத்தில் அவளோடு ஜோடி சேர்க்க அங்கே எந்தப் பையனும் இல்லை.

''வாடி, நானே பண்ணிண்டுடறேன். என்ன சொல்றே கோபாலா? நானே மீனுவைக் கல்யாணம் பண்ணிண்டுடட்டுமா?'' என்ருர் வேடிக்கையாக. அவள் ஆசையாகப் பார்த்துக்கொண்டு நின்றது அவரைக் கொஞ்சம் விளையாடத் தூண்டிற்று.

''ஆகா, எனக்கொன்றும் ஆட்சேபம் இல்லை. உன் ஆம்படையாளைக் கேட்டுக்கோ'' என்ருர் கோபாலையர், அந்த விளையாட்டில் தாமும் சிறிது பங்கெடுத்துக்கொண்டு.

"அவளுக்கு என்ன, நல்லதாச்சுன்னு இருப்ப. நம்மைப் பத்தி அக்கறை விட்டுட்டுது பாரு. மீனுதான் என்ன சொல் ருளோ? ஏண்டி, என்னைப் பண்ணிக்கறையா? பண்ணிக்கறதா யிருந்தாச் சொல்லு. இப்பவே செஞ்சிடுவோம். எழுந்திரு கோபாலா. நானும் மீனுவும் ஊஞ்சலாடறோம்" என்று சொல்லிக்கொண்டே மீனு கையைப் பிடித்து அழைத்துவர எழுந்தார். பாவம்! நிஜமாகவே அவர் தன் கையைப் பிடிக்க வந்ததும் அவள் அழுதே விட்டாள். அந்தச் சின்ன உள்ளத் துக்கு அது விளையாட்டுக்குமேல் போய்விட்டது. விவாகத்தின் முழுத் தத்துவமும் தெரியாவிட்டாலும் வயசு சென்ற அவருக்கு வாழ்க்கைப்படுவது அவமானம் என்பதாக மாத்திரம் அவளுக்குப் பட்டுவிட்டது. விளையாட்டு நிஜமாகத் தோன்றி உண்மையில் துக்கம் தாங்காமல் அவளை அழச் செய்தது. அவள் விசித்துக் கொண்டே உள்ளே இருந்த தாயிடம் ஓடினுள்.

"போருமே உங்க விளையாட்டு! குழந்தையை அழவிட்டுட் டேளே" என்று கணவரைக் கடிந்துகொண்டாள், அவர் மனைவி தர்மாம்பாள்.

"உன் ஆம்படையானைப் பண்ணிக்க அவ அழுவது, உனக்குப் பிடிக்கல்லையாக்கும். என்னைப்பத்தி மட்டமாத் தோணறதா?" என்று மனைவியைப் பரிகசிக்கத் தொடங்கினுர் அம்மாஞ்சி.

"போருமே! சந்தோஷமாயிருந்த குழந்தையை அழ விட்டுட்டேளே. நாராயணனை வாசல்லே துரத்தியாச்சு. மீனுவை உள்ளே ஓட வச்சாச்சு. இன்னும் யாரையாவது ஏதாவது செய்யவேண்டாமா? நாம் ஊருக்குப் போகவேண்டிய ஏற்பாட்டைப் பாருங்கோ. விளையாட்டுப் போரும்" என்று சொல்லி அவள் உள்ளே சென்றுவிட்டாள்.

சின்னஞ் சிறிய மேகந்தான் என்றுலும், பரந்த சூரியனை மறைக்கச் சக்தியுள்ளதாக ஆகிவிடுகிறது. ஏதோ குழந்தைகள் விளையாட்டில் அழுதாலும் அது அவர்கள் சந்தோஷமாகப் பேசியிருந்ததைத் தடை செய்துவிட்டது. வாழ்க்கையும் இது மாதிரி விளையாட்டுக்களில் ஒன்றுதானே? அதிலும் எதிர்பாராத சிறு நிகழ்ச்சிகள் சில, சந்தோஷத்தை ஒரு நொடியில் சிதைத்து விடுகின்றன அல்லவா?

# 5
# இடி இடித்தது

தீபாவளிக்கு இன்னும் சில தினங்களே இருந்தன. தலை தீபாவளி அல்லவா? கோபாலையரகத்து ஏற்பாடுகளுக்குக் கேட்க வேண்டுமா? முதல் நாள் ஆரும் மாதமும் மறுநாள் தீபாவளியுமாகக் கொண்டாட எண்ணி அதன்படி சம்பந்திகளுக்குக் கடிதம் எழுதி அழைத்திருந்தார் கோபாலையர். ஆரும் மாதத்துச் சீர், தீபாவளிக்குச் சீர் - இரண்டு விசேஷங்களுக்கும் செய்ய வேண்டிய சீர்வகைகளைத் திட்டம் போட்டு வாங்கித் தயாரித்து வைத்தார்கள்.

''ஆரும் மாதம் அரைக்கல்யாணம் இல்லையா! எல்லாம் பாதி செய்ய வேண்டாமா?'' என்று நாணம்மாள் சுப்புவுக்கு யோசனை சொன்னாள்.

''அதற்குள் காமாக்ஷி பிரசவிச்சு ஒரு சொம்பு தண்ணி விட்டுட்டாத் தேவலை. கவலை இல்லாமல் போயிடும். எந்த நிமிஷம் எப்படி இருக்கோன்னு ஒண்ணும் ஓடலை'' என்றாள் சுப்பு.

''அதுக்குள்ளே பெருமே என்ன; நிச்சயம் பெத்துடுவ. ஒருவேளை அறையிலே இருப்பாளோ என்னவோ?''

''எதுவோ, வயித்தை விட்டு நல்லபடியாக் கழிஞ்சுட்டா விசாரம் இல்லாமே எல்லாம் செய்ய ஓடும். அதுவரையும் எது செய்தாலும் செய்யற மாதிரி இல்லே.''

''இதுதானா முதல் பிரசவம்? இப்படி விசாரப் படறையே!'' என்றாள் நாணம்மாள்.

''என்னமோ அவ தள்ளாமையைப் பார்த்தால் கவலையாக இருக்கு. மழை நாளுக்குச் சரியாத்தான் எப்பவும் காமாக்ஷி பிரசவிக்கறா. நாந்தலும் ஈரமும் வெத்து உடம்புக்காராளுக்கே ஆகாமே படுத்தும். பிள்ளை பெத்தாக் கேக்கணுமா?'' - இதுதான் சுப்புவின் கவலை. வீட்டில் எல்லாரும் காமாக்ஷியின் பிரசவத்தை எதிர்பார்த்தார்கள். வாஸ்தவம். ஆனால் ஐந்து வருடத்துக்கு முன் மகாலக்ஷ்மி பிறந்தபோதுபோல இப்போது பிள்ளையை எதிர்பார்த்து யாரும் காத்திருக்கவில்லை. கோபாலையருக்குக் கூடப் 'பிள்ளையானல் என்ன, பெண்ணானல் என்ன? எல்லாம் சௌகரியமாகட்டும்' என்றுதான் இருந்தது. மூன்று முறை

எதிர்பார்த்து ஏமாந்துபோன அவருக்கு நான்காம் முறையும் எதிர்பார்த்து ஏமாற மனம் இல்லை போலும். சுப்புவைப் போலவே அவரும் பண்டிகைக்குள் மனைவி பிரசவித்துக் கவலை நீங்கினால் சரி என்கிற நினைவில்தான் இருந்தார்.

இப்படி எல்லாரும் நினைத்திருந்தபோது இந்தத் தடவை காமாக்ஷிக்குப் பிறந்தது ஓர் ஆண் மகன் என்றால் அப்போது எல்லோருக்கும் எப்படி இருக்கும்! எதிர்பாராத ஆனந்தம் தாங்கக் கூடியதா? கோபாலையர் ஒரு நிமிஷம் செயலற்றுத்தான் போனார். முன் பெண் பிறந்த ஏமாற்றத்தில் சாய்வு நாற்காலியில் சாய்ந்ததுபோலவே இப்போது பிள்ளை பிறந்த சந்தோஷப் பெருக்கிலும் நாற்காலியில் சாய்ந்தே விட்டார். நிது நேரம் கழித்துத்தான் சுய நினைவு வந்தது. முன்பு நடக்காமல் நிறுத்தின விதைதானத்தை இப்போது செய்யவேண்டும் என்கிற எண்ணம் அவருக்கு உண்டாயிற்று. வீடே களிப்பும் கொண்டாட்டமுமாக ஆயிற்று. 'இத்தனை நாளும் கோரின வரம் இன்று கன்னிகாதான பலனாகக் கிடைச்சுது' என்று எல்லோரும் கோபாலையரைச் சந்தோஷம் விசாரித்தார்கள். 'அம்பி'ப் பாப்பா பிறந்த சந்தோஷம் சாரதாவுக்கும் மீனாவுக்கும் சொல்லி முடியாது.

தாயின் பிரசவ வேதனையின் முனகலை அரைகுறையாகக் கேட்டு விஷயம் புரியாமல் தவித்துக்கொண்டிருந்த மகாலக்ஷ்மிக்கு மட்டும் முதலில் அம்பிப் பாப்பாவிடம் கோபந்தான் வந்தது. அவன் தன் தாயைத் துன்புறுத்தியிருக்கிறான் அல்லவா? குழந்தையை அறைப்படியண்டை எல்லாருக்கும் எடுத்துக் காண்பித்தபோதுகூட அவள் போய்ப் பார்க்கவில்லை. ஒதுங்கி நிற்கும் அவளை, ''அம்பிப் பாப்பா பாரு வாடீ'' என்று கூப்பிட்ட பிறகுதான் மெதுவாகக் கிட்டப் போனாள். கண்களை மூடி நிம்மதியாகப் படுத்திருந்த தாயைப் பார்த்த பின்பே அவள் மனம் சமாதானம் அடைந்தது. சின்னக் காலையும் கையையும் ஆட்டிக் கண்களை மூடிமூடித் திறக்கும் அம்பிப் பாப்பாவிடம் அப்போது அவளையும் அறியாமல் ஆசை புகுந்துகொண்டது. மெதுவாகத் தொட்டுப் பார்க்கக் கையை நீட்டினாள்.

''தொடப்படாது; பத்து நாள் கழித்து அப்பறம் நீயே வச்சுக்கலாம்'' என்று சொல்லி அத்தை குழந்தையை உள்ளே கொண்டுபோய் விட்டாள். ''மாப்பிள்ளை வந்த முகூர்த்தம்

ஆத்துக்குப் பிள்ளை பிறந்துட்டான்'' என்று நாணம்மாள் சுப்புவை விசாரித்ததற்கு, ''குறை நாளும் போய்த் தலைக்கு ஜலம் விட்டு ஆகணும். காமாக்ஷி தெம்பில்லாமல் கிடப்பதைப் பார்த்தால் எனக்குப் பயமாயிருக்கு'' என்றாள் சுப்பு.

''வீணுக்குப் பயப்படாதே. ஒண்ணும் இல்லே. மாப்பிள்ளை வந்த சுருக்கிலே பிள்ளை பிறந்துட்டுதுன்னு யார் கண்ணுனும் படப்போறது. அதுக்கு வேணுமான ஏதாவது செய்யச் சொல்லு. நானும் மஞ்சநீர் கரைச்சு வைக்கறேன்'' என்று சொல்லிவிட்டு நாணம்மாள் அப்படியே செய்தும் வைத்தாள். முச்சந்தியில் பூசணிக்காய் உடைத்து இன்னும் திருஷ்டி கழிய ஏதேதோ செய்தார்கள்.

என்னவானாலும் சுப்பு மனத்தில் தோன்றின பயம் காரண மற்றதாகப் போய்விடவில்லை. அந்த மழையிலும் குளிரிலும் காமாக்ஷியின் பலவீன நிலைமையில் அவளுக்கு ஜுரம் கண்டது. அது அதிகமாகி ஜன்னியில் கொண்டுபோய் விட்டது. உள்ளூர் வைத்தியர்கள் பிரயோசனப்பட மாட்டார்களென்று மதுரை யிலிருந்து டாக்டரை வரவழைத்தார் கோபாலையர். பிரசவித்த உடம்பில் ஜன்னி கண்டுவிட்டது என்றால் பிறகு டாக்டர்கள் என்ன செய்ய முடியும்? அதிலிருந்து பிழைப்பு மூட்டுவது மிகவும் கஷ்டசாத்திய மாயிற்று.

காமாக்ஷி நாலு நாள் பிதற்றலும் பிடுங்கலுமாக இருந்து, அருமையான குழந்தைகளையும், அன்பான கணவனையும், தன்னிடம் உயிராக இருந்த நாத்தனாரையும்கூடப் பரிதவித்துப் புலம்ப விட்டுவிட்டு மறு உலகம் சென்றுவிட்டாள். கடைசி வரையிலும் அவள் வாய் திறந்து ஒரு வார்த்தையும் சொல்லாமல் தான் போனாள். தன் நினைவு அவளுக்கு இருந்தால் அல்லவா போகிறோம் என்பது தெரிந்து அவள் ஏதாவது சொல்ல?

இன்பச் சிகரத்தை எட்டிப் பிடித்துக்கொண் டிருந்த கோபாலையரின் இல்வாழ்க்கையில் பேரிடி இடித்தே விட்டது. மகன் பிறந்த ஆனந்தத்தை அவர் முழுதும் உணர்ந்து அநுபவிக்குமுன், மனைவியை இழந்த ஆறாத் துயரத்துக்கு ஆளானார். ஒன்றன் பின் ஒன்றாக வேகமாக நிகழ்ந்த நிகழ்ச்சிகள் ஒருகால் கனவோ என்று அவருக்குப் பிரமை தட்டிற்று. மனைவி கர்ப்பம் தரிப்பதும் அவர் மகனை எதிர்பார்த்துக் காத்திருப்பதும் அது பெண்ணாகப் பிறந்து அவரை ஏமாற்றத்தில் வீழ்த்துவதுமே இதுகாறும் அவர் அடைந்த சகஜமான அநுபவங்கள். இம்முறை

அதற்கு மாறாக அவர் மகனை எதிர்பார்க்கவும் இல்லை; அதனால் ஏமாற்றத்துக்கும் இலக்காகவில்லை. அந்தோ! அவர் வழக்கம் போல் எதிர்பார்த்து ஏமாந்திருந்தாலும் பன்மடங்கு நன்மையாக இருந்திருக்குமே! இப்போது உயிருக்கு உயிரான மனைவியையன்றோ ஒரு நொடியில் பறிகொடுத்து விட்டார்? இனி அவருக்கு உலகில் என்னதான் இருக்கிறது?

அவருடைய இந்தத் துக்கத்தில் பங்கெடுத்துக்கொண்டு அவரைச் சமாதானம் செய்ய யாராலும் முடியும்போல் தோன்றவில்லை. தம் துக்கத்தை அவர் வாய்விட்டுச் சொல்லிக் கொண்டால் அல்லவா அது ஏதாவது சாத்தியமாகலாம்? சொத்தைப் பங்கிடுவதில் நமது பாகம் குறைந்துவிடுகிறது. அது நமக்கு நஷ்டம். அப்படி அல்லவே துக்கத்தைப் பகிர்ந்து கொள்ளுவது? நம் நண்பர்கள், வேண்டிய பந்துக்கள் இவர்களுடன் துக்கத்தைப் பகிர்ந்துகொள்ளும்போது அது நமக்குத் தனியே சொந்தமென்றாலும் அதன் கடுமை குறைந்து மனத்தை இடிந்து போகாவண்ணம் காப்பாற்றுகிறது. முன்பு தாய் தந்தையரை இழந்தபோது அவருக்கும் அவர் தமக்கை சுப்புவுக்கும் அதில் பங்கு இருந்தது. பெண்பாலும், அதிலும் கைம்பெண்ணுமான அவள் பாகம் அவரைக்காட்டிலும் அதிகம். கணவனை இழந்ததுடன் ஆதரவான பெற்றோரையும் இழப்பது எவ்வளவு மகத்தான கஷ்டம்! இவைகளை நினைத்து அப்போது அவர் அவளுக்குத் தெம்பு கொடுத்துத் தேற்றத் தம் வருத்தத்தைக் குறைத்துக்கொண்டார். இப்போது துக்கம் முழுவதும் அவருடையது; அவர் அதைத் தனிமையில் ஏற்று இஷ்டம்போல் வருந்துவதைத் தவிர வேறு என்ன செய்வது என்கிற எண்ணத்தில் இருந்தார்.

குழந்தைகள் பிரமை கொண்டு அழுதுகொண்டே நின்றார்கள். தங்களுக்கு நேர்ந்த துக்கத்தின் ஆழத்தை அளவிட்டு அறியவும் அவர்களுக்குச் சக்தி இல்லை. 'தாயின் அன்பு எவ்வளவு மகத்தானது! அது வாழ்வுக்கு எவ்வளவு அவசியம்!' என்பதை அவர்கள் போகப் போகத்தான் உணர்வார்களன்றோ?

சுப்பு, துடியாகத் துடித்தாள். காமாட்சிகூட இம்மாதிரி தாங்கள் தவிக்கும்படியான காரியம் செய்வாளா என்று இருந்தது அவளுக்கு. அவ்வளவு இங்கிதம் அறிந்து நடந்து கொள்ளும் அவள் இப்படிக் கொடூரமாகத் தங்களைத் தவிக்க

விட்டுப் போனது, அவள் குணத்துக்கே மாறுன செய்கையாக அவளுக்குப் பட்டது. 'ஒருவர் மனம் நோக ஒரு கடும் வார்த்தை சொல்ல மாட்டாளே காமாட்சி. இப்படித் தன் சொந்தக் குடும்பத்தையே தவிக்கவிட்டுச் சென்றுவிட்டாளே! எந்தக் கொடும் தெய்வத்தின் செய்கை இது?' இனி மனைவியை இழந்த தம்பியையும் தாயற்ற குழந்தைகளையும் அவள் எவ்விதம் தேற்றிப் பார்த்துக்கொள்வாள்! அவள் தலையில்தான் எத்தனை சுமைகள்! அவள் கஷ்டங்களுக்கு எல்லை இல்லையா? காமாட்சிக்கு பதில் அவள் இறந்திருந்தாலும் நன்மையாக இருந்திருக்குமே!— அவள் நெஞ்சம் வெடித்துவிடும்போல் இருந்தது. கிராமம் முழுதுமே காமாக்ஷியின் சாவைத் தாங்காது வருந்திற்றென்றால் கோபாலையரையோ அவர் வீட்டாரையோ பற்றிச் சொல்லு வானேன்?

எதிரகத்து லக்ஷ்மிக்குத் தன் கண்தான் பட்டுவிட்டதா என்ன என்றுகூடச் சந்தேகம் தோன்றிற்று. காமாக்ஷியின் அதிருஷ்டத்தை எதிரில் பார்த்துப் பார்த்து அவள் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தாள் அல்லவா? எல்லோருக்குமே ஒரு வகையில், திருஷ்டியினுல்தான் இது மாதிரி நேர்ந்துவிட்டது என்று பட்டது. சகல பாக்கியங்களும் பொருந்திக் கோபாலையரைப் போலக் கிராமத்தில் வேறு யாரும் இல்லையல்லவா? பட்டண வாசங்களில் ஒருவருடைய வாழ்வும் தாழ்வும் இன்னெரு வருக்குச் சம்பந்தம் இல்லை. கிராமத்தில் அப்படி அல்ல. அவர் களுக்குள் ஒன்றுக ஓர் எண்ணம்; அதை ஒட்டி ஒருவருடைய உயர்வில் மற்றவருக்குப் பொறுமை; அது போலவே கஷ்டத்தில் தயவும் துக்கமும். இது கிராமத்தின் ஒன்று சேர்ந்த மனப் போக்கு. ஒருவர் வாழ்விலும் தாழ்விலும் தாளுகவே பங்கெடுத் துக்கொள்ளும் இயற்கை கிராமத்தைச் சேர்ந்தது.

காமாக்ஷியின் சாவைக் குறித்து எல்லோரும் ஒருமிக்க வருந்திஞர்கள். இளவயசும், எல்லாப் பாக்கியமும் இருந்தும் அவற்றை அநுபவியாமல் விட்டுச் செல்வதும் எல்லோருக்கும் மிகவும் பரிதாபமாக இருந்தது. "லக்ஷ்மிபோல அம்மா போயிட் டாங்களே! ஐயா தவிக்கிருங்களே!" என்றுதான் வேலைக்காரர் முதல் யாவரும் அங்கலாய்த்தார்கள். வேலைக்காரக் கிருஷ்ணன் பயந்து ஒதுங்கி நிற்கும் மகாலக்ஷ்மியை வாரி எடுத்துத் தோளில் சாய்த்துக்கொண்டு, "என் தாயீ, உனக்கு அம்மா இல்லாமே போயிட்டாங்களே" என்று கத்திக் கதறினபோது யாருக்குமே

தாங்காதுபோல் இருந்தது. குழந்தை மகாலக்ஷ்மி அவன் தோளில் அப்படியே விசித்துக்கொண்டு கிடந்தாள். கணவன், குழந்தை, நாத்தனர், ஊரார் எல்லாரும் அழுது புலம்ப, காமாக்ஷியின் காரியம் முடிந்தது.

அம்மாஞ்சி வெங்கிட்டு வந்தபோது அவரைக் கட்டிக் கொண்டு கதற நினைத்தார் கோபாலையர். ஆனால் அவர் வரும் போதே அலறிப் புடைத்துக்கொண்டு கோபாலையரைப் பார்த்துப் புலம்பிவிடவே அவர் வாயிலிருந்த சொற்கள் வெளிவராமலே போயின. அம்மாஞ்சியிடமே இது மாதிரி ஆகிவிட்டதென்றால் அப்புறம் வேறு யாரிடம் அவர் தம் துக்கத்தை வெளியிட்டு ஆறுதல் பெறுவார்? கிராமத்தார் யாரிடமும் அவருக்குச் சிநேகம் இல்லை. அப்படி யாராவது இருந்தால் அல்லவா இது மாதிரி சமயத்தில் மனம் விட்டுச் சொல்லிக்கொள்ளலாம்?

கோபாலையரின் துக்கத்தின் வேகம் சிறிதும் தணிவதற்கு வழியில்லாமல் அவர் இருதயத்திலேயே கொந்தளித்து நின்றது.

## ௬
## மறுமணப் பேச்சு

நமது சந்தோஷத்துக்காகவும் துக்கத்துக்காகவும் நாட்கள் என்னவோ செல்லாமல் ஒரு நிலையில் நிற்பதில்லை. அவைகள் சென்றுகொண்டே இருக்கின்றன. நமது ஆயுளிலும் நாட்கள் குறைந்துகொண்டே வருகின்றன. இதை உணர்ந்தே பக்தர்கள் பகவானை நினையாமல் ஒரு விநாடி இருக்கவும் பயப்படுகிறார்கள். 'சென்ற தினங்கள் சென்றனவே அல்லவா? அவைகளை ஈசுவர தியானத்தில் கழிக்காமல் வீணாக்கிவிட்டோமானால் அவைகள் திரும்ப எங்கிருந்து வரும்?' என்கிற எண்ணம் அவர்களுக்கு. உலகப் பெரியோர்களே கருமிகள். பணத்தை எண்ணி எண்ணிப் பார்த்துச் செலவு செய்வதுபோல, நினைத்து நினைத்துப் பார்த்து நாட்களை நல்ல காரியங்களில் செலவிடுகிறார்கள். நம்மைப் போன்ற சாதாரண மனிதர்களுக்கும் புவியில் பிறப்பு எடுத்த வுடனேயே எவ்வளவோ கடமைகளும் காரியங்களும் இருக்கத் தான் இருக்கின்றன. நாம் அவைகளைச் செய்யாது விடுவது சரி யல்ல சுகமோ துக்கமோ அதில் மனத்தைப் பறிகொடுத்துச் சும்மா இருப்பதென்பது ஒருவருக்கும் உகந்த உரிமையாகாது.

உலக விதி இவ்விதம் இருக்கும்போது கோபாலையர்மட்டும் அந்த விதிக்கு விலக்காக எவ்விதம் ஆவார்? மனைவியை இழந்த அவர் செய்ய வேண்டியவைகளும், நடந்துகொள்ள வேண்டியவைகளும் எவ்வளவோ ஏற்படத்தான் ஏற்பட்டன. ஆனால் அவைகளில் ஒன்றையும் அவர் பொருட்படுத்தாமல் தனித்திருந்ததுதான் அவரை வேறு மனிதன் ஆக்கிற்று. துக்கம் விசாரிக்க வந்தவர்களிடம், 'நமது துக்கத்தில் இவர்களுக்கு என்ன?' என்று எண்ணுபவர்போலக் கலந்து ஏற்றுக்கொள்ளாமல் விலகியிருந்தார். தாங்கக்கூடாத சோகமென்றாலும் சமூகத்தாரிடம் நடந்துகொள்ள வேண்டிய முறைகள் உண்டல்லவா? வந்தவர்களிடம் வாய் வார்த்தைப் பேசி மரியாதை செய்துதானே ஆகவேண்டும்? அதொன்றையும் அவர் செய்யவில்லை. அவருக்காக உண்மையில் வருந்தினவர்களைக் கூடக் கிட்ட நெருங்கவிடாமல் அடித்துவிட்டார். தங்கள் வருத்தத்தை நன்றாக எடுத்துச்சொல்ல அவர்கள் நினைத்து வைத்திருந்த சொற்களில் ஒன்றையும் சொல்ல இடமில்லாமல் போயிற்றென்றால் அவர்கள் ஏமாறாமல் என்ன செய்வார்கள்? அதில் அவர்களுக்கு மனஸ்தாபம் ஏற்பட்டது அதிசயம் அல்லவே?

மனைவியை இழந்த புதிதில்தான் இப்படி என்றால், பிறகும் வீட்டில் அவர் அவ்விதமே இருந்தார். குழந்தைகள் விஷயங்களை அறியச் சக்தியற்றவர்கள். அவர்களிடம் பெரியவர்களிடம் போல மனத்தில் உள்ள கஷ்ட நஷ்டங்களை வெளியிட்டு ஆறுதலோ யோசனையோ பெற முடியாது. அதனால் அவர்களிடம் தம் துக்கத்தை வெளிப்படுத்தாமல் இருக்க நியாயம் உண்டு. தம் தமக்கை சுப்புவிடமும் அவர் ஒன்றும் கலந்துகொள்ளாமல் தனித்திருந்ததுதான் பெரிதும் சிரமமாக இருந்தது. சுப்பு அவர் வருத்தத்தின் அளவையோ, எண்ணங்களின் போக்கையோ அறிய முடியாமல் தவித்தாள். வீட்டில் சகலமும் அவள் தலையில் சுமந்து கிடந்தபோது யோசனை சொல்லிக் காரியம் செய்யாவிட்டால் எப்படி நடக்கும்? 'அவன் துக்கம் பெரிது' என்று அவள் அதை நியாயமாக ஏற்க நினைத்தாலும் காரியங்கள் செய்யும்போது மிகவும் கஷ்டப்பட்டுப் போனாள். காமாக்ஷியின் சாவுக்குச் செய்ய வேண்டியவைகளை, 'அவனை எப்படிக் கேட்பது?' என்று எண்ணி, ஏதோ வெளிக்காரியங்களுக்கு அம்மாஞ்சியையும், உள் காரியங்களுக்கு

நாணம்மாளையும் துணைகொண்டு செய்து முடித்தாள். பிற்பாடும் வீட்டுக் காரியங்களிலும் குழந்தைகள் விஷயத்திலும் கோபாலையர் ஒன்றுமே மேற்போட்டுக் கொள்ளாமல் இருக்கவே, செய்வது இன்னதென்று அவளுக்குத் தெரியவில்லை. மதுரையில் இருந்துகொண்டு இவர்களுக்கு ஆறுதல் அளிக்க அடிக்கடி வந்துபோன அம்மாஞ்சியிடம் ஒரு சமயம், ''இதென்ன, கோபாலன் இப்படி இருக்கிறானே, எனக்கு ஒன்றும் புரியவில்லையே!'' என்றாள் சுப்பு. அவள் தன் தம்பி இவ்விதம் குடும்பத்தில் சிரத்தைகொள்ளாமல் இருக்கிறானே, என்ன செய்வது என்றுதான் கேட்டாள்.

''என்னவோ, நானுந்தான் பேசிப் பார்க்கிறேன். அவன் மனம் விட்டு ஏதாவது சொன்னால் அல்லவா? யாராரோ வயசு வந்த பெண்களை வைத்துக்கொண் டிருப்பவர்கள், 'மறு விவாகம் செய்துகொள்கிறானா?' என்று என்னை நச்சரிக்கிறார்கள். அதற்கு என்ன சொல்கிறது என்று தெரியாமல் தவிக்கிறேன்'' என்று அம்மாஞ்சி சொன்னபோது இது மாதிரி நிலைமையை எதிர்பாராத சுப்புவுக்கு அது வெகு பொல்லாத்தனமாகப் பட்டது.

''நன்னாருக்கே அவர்கள் கேட்பது!'' என்றாள்.

''அதில் தவறு என்ன? குழந்தைகள் இருந்தாலும் அவனுக்கு வயசாகிவிடவில்லை பார். விவாகம் செய்துகொள்வதாக இருந்தால் சீக்கிரம் செய்துகொள்வது நல்லதுதானே? ஒருகால் இப்போதுபோல ஒன்றிலும் சிரத்தையில்லாமல் இருப்பதை விட்டு மாறுவானோ என்னவோ! அவன் மனசுதான் தெரியவில்லையே. வெளிப்படையாகக் கேட்கவும் முடியாது போல் இருக்கிறதே.''

அம்மாஞ்சி இப்படிப் பேசியது சுப்புவுக்கு ஆச்சரியமாக இருந்தது. 'பிள்ளை இல்லை என்றாலாவது யோசிக்கவேண்டும். அதுவும் இல்லை. காமாக்ஷியின் ஸ்தானத்தில் இன்னொருத்தியா?' – அவளால் நினைக்கவே முடியாதுபோல் இருந்தது. 'அம்மாஞ்சி இதை நியாயமாக எண்ணிப் பேசுகிறானே!' என்று ஆச்சரியமும் கோபமும் கொண்டாள். ''அதென்னமாடா அவன் இன்னொரு கல்யாணம் பண்ணிக்குவான்? நன்னாருக்கு!'' என்றாள். சிறு வயசிலேயே வாழ்க்கை இன்பத்தைத் துறந்த அவள் அதுமாதிரி நினைத்தது நியாயந்தானே? கணவனின்றி அவள் இருக்கவில்லையா? நான்கு குழந்தைகளுக்குத் தந்தையாகி மருமகன்

வேறு வந்த பிறகு அவன் ஏன் மனைவியில்லாமல் இருக்கக் கூடாது?' என்றே அவளுக்குப்பட்டிருக்கும்.

''ஐம்பது வயசுக் கிழங்களெல்லாம் செய்துகொள்ளும் போது இவனுக்கு என்ன? பண்ணிக்கொள்ளலாம். ஆனால் இவன் என்ன நினைக்கிறான் என்பதுதான் தெரியவில்லை. இவனிடம் பேசவும் பயமாக இருக்கிறது!''

''அவன் பண்ணிக்குவான்னு எனக்குத் தோணல்லே. நீ ஒண்ணும் அவனிடம் கேட்கவேண்டாம்.'' - இது மாதிரி சுப்பு தீர்மானமாகச் சொன்னாலும் அவள் சொல்லுகிறாள் என்பதற்காக அம்மாஞ்சி கேட்காமல் விடவில்லை. 'சுப்பு பெண்பிள்ளை; ஆண்பிள்ளைகளின் மனம் அவளுக்கு என்ன தெரியும்?' என்று எண்ணி அவள் சொன்னதைத் தள்ளியேவிட்டார். இருந்தாலும் கோபாலையரிடம் இது விஷயமாக லகுவில் பேசித் தெரிந்து கொள்ளமுடியும் என்று அவருக்குத் தோன்றவில்லை. தம்மைப் பற்றி ஒருபோதும் ஒருவிதமாகவும் சொல்லிக்கொள்ளாத அவரிடம் இதுபற்றி எவ்விதம் பேச்செடுப்பது? 'அவருக்கு மறு மணம் செய்துவைப்பது நல்லதா அல்லவா?' என்பது அம்மாஞ்சிக்கே நிச்சயப்படவில்லை. 'ஒருகால் மனைவி ஒருத்தி வந்தால் அவன் கலகலப்பாக ஆவானோ?' என்று ஒரு சமயம் நினைப்பார். பின்னோடு, 'இளையாளும், மூத்தாள் குழந்தைகளுமாகக் குடும்பம் நடத்த அவனுக்குச் சாமர்த்தியம் போதாது. கஷ்டப்படுவான்' என்று நிச்சயிப்பார். 'சுப்புவுக்கும் உலக அநுபவம் போதாது, நிலைமையைச் சமாளிக்க. தமக்கையும் தம்பியும் தனி மனிதர்கள். அவர்கள் விஷயத்தில் வலுவில் தலையிடுவது சரியல்ல. நாம் ஒன்றிலும் அவனைப் புகுத்தவேண்டாம். அவனாக எது வேணுமோ செய்துகொள்ளட்டும். இல்லை, அதுவாக எது நடப்பதாக இருக்கிறதோ நடக்கட்டும். நாம் ஒன்றுக்கும் பொறுப்பாளி ஆகவேண்டாம்' என்று அம்மாஞ்சி தாமே சிந்தித்துத் தீர்மானத்துக்கு வந்துவிட்டார்.

அம்மாஞ்சி இவ்விதம் நினைப்பதை நாணம்மாளிடம் சொல்லாமல் இருக்கச் சுப்புவால் முடியவில்லை. தன்னைத் தூக்கிப்போட்டது போல, இந்த விஷயம் நாணம்மாளைத் திடுக்கிடச் செய்யவில்லை என்பதைக் காணச் சுப்புவுக்கு ஆச்சரியமாகவே இருந்தது.

''குழந்தைகள் இருந்தாலும் அவருக்குப் பெண்ணைக் கொடுக்க எவ்வளவோ பேர் தயாராகத்தான் இருப்பார்கள்'' என்றாள் நாணம்மாள்.

"குழந்தைகள் என்றால் ஒன்று, இரண்டா? பெண்ணைப் பெற்றவர்கள், மனம்ஒப்பிக் கொடுத்தாலும் அதெப்படிச் சரியாக வரும்? நம்மைத் தெரியாதவர்கள் வேறாக நினைக்கலாம். தெரிஞ்சவா யாரும் ஒத்துக்குவான்னு தோணல்லே" என்றாள் சுப்பு, சிறிது ஏமாற்றத்துடன்.

"உனக்கு அப்படித் தோன்றுகிறது. அதை நான் ஒப்புக் கல்லே. எதிராத்து லக்ஷ்மி என்னைக் கேட்டா, கோபாலன் கல்யாணம் பண்ணிக்கிறதாயிருக்காரா ன்னுட்டு. அவளுக் கென்ன, நம்மைத் தெரியாதா?"

"லக்ஷ்மி எதுக்குக் கேக்கறா? அவ பொண் மங்களத்துக் காகவா?"

"அதென்னவோம்மா நேக்குத் தெரியாது; கேட்டா."

"நன்னாருக்கே அவ கேள்வி. அந்தப் பெண் நம்ம சாரதாவுக்கு ஒரு வயசு பெரிசு. அதையா கோபாலனுக்குக் கொடுக்கலாம்னு நெனைக்கறா? எதிராத்துலே இருந்துண்டு இவ யோசனை தேவலேயே!"

"நீ ஒண்ணும் அப்படி எடுத்துக்காதே. தன் பெண்ணுக் குன்னுட்டு அவ கேக்கல்லே. அவ காதிலே பட்டா என்னை வையப்போறா."

"பின்னே எதுக்குக் கேக்கறா? பிறத்தியாராத்து வம்புலே சுவாரசியமா? நன்னாருக்கு, நம்ம ஊர்க்காராளே இப்படித்தான். பிறத்தியாருடைய வம்பும் வீணும்" என்றாள் சுப்பு. எல்லா வற்றுக்கும் மேலாக 'லக்ஷ்மி கேட்டாள்' என்கிற விஷயம் அவளுக்குத் தாங்காதுபோல் இருந்தது.

"ஒரு காரியம் நடந்துட்டா நாலுபேர் நாலுதான் பேசுவா. அதையெல்லாம் நாம் பெரிசா எடுத்துக்கொள்ளப்படாது. லக்ஷ்மி கேட்டாங்கிறது ஒண்ணும் பெரிசில்லே. தெரிஞ்சவா கேட்க மாட்டான்னையே, அதுக்காகச் சொன்னேன். பண்ணிக்கிறதும் பண்ணிக்காமே இருக்கிறதும் நம்ம கையிலே இருக்கு. அதுக்கு இன்னொருத்தர் என்ன பண்ண முடியும்? நீ லக்ஷ்மியைக் கேட்டு வைக்காதே."

"ஆமாம், இதைப் போயி யாரோ கேட்கப்போறா?" என்று சுப்பு வாயால் சொன்னாலும் லக்ஷ்மியைப்பற்றி அவளுக்குச் சந்தேகம் பலமாக ஏற்பட்டுவிட்டது. காமாக்ஷி இறந்த பிறகு அவள் அடிக்கடி தன்னை வந்து விசாரித்துக்கொள்வதை, இவ்வளவு நாளும் தன்னிடம் அநுதாபத்தின் பேரில் என்று

நல்லதனமாக நினைத்திருந்தாள். இப்போது அதற்கு வேறு பொருள் இருக்கிறதோ என்று அவளுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. அவள் பெண் எப்போதும் சாரதாவுடன் இருப்பதைக் கூடத் தவருக நினைக்கத் தொடங்கினுள். தாயை இழந்த துக்கத்தை எப்போதும் நினைத்து வருந்தாமல் இருக்க ஒத்த வயசுடைய அந்தப் பெண் சாரதாவுக்குப் போது போக்காக இருப்பது பெரிதும் நன்மை என்று இதுவரை நினைத்துத் திருப்தி பட்டவள் இப்போது வேறு காரணத்தை முன்னிட்டு வருவதாக எண்ணி வெறுப்புக்கொண்டாள். தன்னைத் தாயும் சாரதாவைப் பெண்ணும் சரிப்படுத்தி வைத்துக்கொள்ளவே முன்ஜாக்கிரதையாக இந்த ஏற்பாடு என்று அவர்கள் நடத்தைக்கு வேறு பொருள் கொடுத்தாள். 'கோபாலனைக் கேட்டு அவள் சம்மதித்து விட்டால் இவர்கள் இருவர்தாமே அதற்கு முட்டுக்கட்டை போடக்கூடியவர்கள்? மீனுவும் மகாலக்ஷ்மியும் குழந்தைகள்; மற்றென்றே சிசு; சாரதாதான் சற்று வயசு வந்தவள், ஏதாவது தெரிந்து தந்தைக்குச் சொல்லக் கூடியவள். மற்றும் தன்னைக் கேளாமல் கோபாலன் மறுமணம் செய்துகொள்வானு? மாட்டான். இவைகளைச் சிந்தித்தே லக்ஷ்மி சாமர்த்தியமாகத் தன்னையும் பெண் சாரதாவையும் சரிப்படுத்திக் கைக்குள் போட்டுக்கொள்ள இது மாதிரி தங்களிடம் இவ்வளவு நாளும் இல்லாத பிரியம் காட்டி நடக்கிறுர்கள்.'

இவ்விதம் நினைக்கத் தொடங்கின பிறகு மங்களம் அடிக்கடி அகத்துக்கு வருவது அவளுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. ''ஏண்டி, உனக்கு உங்காத்தில் காரியம் ஒன்றும் இல்லையா? எப்போது பாத்தாலும் இங்கே வந்துடறையே?'' என்று அந்தப் பெண்ணைச் சில சமயமும், ''எப்போ பாத்தாலும் அந்தப் பெண்ணேடே என்னடீ உறவு?'' என்று சில சமயம் சாரதாவையும் கடிந்துகொண்டு அந்தப் பெண் வருவதைக் குறைக்க முயன்ருள். லக்ஷ்மியிடமும் சரியாக முகம் கொடுத்துப் பேசாமல் நடந்து காண்பித்தாள்.

லக்ஷ்மி கெட்டிக்காரி அல்லவா? அவள் மனத்தில் சந்தேகம் உதித்தது. தான் அடிக்கடி வருவதைக் குறைத்துக்கொண்டதுடன், ''என்னவோ அக்கா, உங்களுக்கு அதை இதைப் பேசி மனசு வருத்தப்படாமல் போது போக்குவோம் இன்னுட்டுத்தான் வறேன். மங்களத்துக்குக் கல்யாணம் நிச்சயமாகும் போலே இருக்கு. அதற்கப்புறம் எனக்குக் காரியம் நிறைய

இருக்கும். வரக்கூட முடியாது'' என்றாள், இனிமேல் அவள் அடிக்கடி வரமாட்டாள் என்பதைத் தெரிவித்துக்கொண்டு.

''மனுஷா யாரு? இடம் எங்கே?'' என்று கேட்டதோடு நில்லாமல் தொடர்ந்து, ''என்னவோ, மங்களத்தை இளையாளாகக் குடுத்திடலாம்னு இருக்கேன்னு யாரோ சொன்னா. எனக்குத்தான் ரொம்ப மனசாகாதுபோல இருந்தது. நல்ல வேளை. அப்படி இல்லாமே நல்ல இடமாப் பாக்கறையே, முடியட்டும்'' என்றாள் சுப்பு.

இதைக் கேட்கவும் லக்ஷ்மிக்கு விஷயம் விளங்கிவிட்டது. ''நன்னாருக்கு. அது மாதிரி யார் சொன்னா? அப்படி நினைக்கவே இல்லை'' என்று சற்றுப் படபடப்பாகப் பதில் சொல்லிவிட்டு வீட்டுக்கு வந்து கணவரிடம், ''சுப்புவோடே நினைப்பு நன்னாத் தான் இருக்கு. அவளாத்தான் அது மாதிரி நெனைச்சுண்டாளோ, நாணம்மாதான் எதானும் கொளுத்திக் கொடுத்தாளோ? இவள் தம்பி இவளுக்கு ஒசத்தியானா அதற்காக என் பெண்ணை அவருக்கு இளையாளாக நான் கொடுப்பேனா? அவள் வயசுப் பெண் அவருக்கு இருக்கச்சே! போரும், நாம் பிறத்தியாருக்கு மனம் இரங்கி ஒத்தாசை செய்ய நினைக்கிற அழகு! என்னமோ திடீர்னு இடி இடிச்சாப்பலே நேந்து, கஷ்டப்படறாளேன்னு பார்த்ததுக்குப் பலனா? இந்த நாளிலே நல்லது செய்யப் படாது!'' என்று ஆத்திரத்தைக் கொட்டிப் பேசினாள்.

''நீ என்னடாப்பா அதிகமாப் போறயேன்னு நான்கூடத் தான் பார்த்தேன். ஏதாவது அதுமாதிரி எண்ணம் மனசுலே வச்சிருந்தா, சரியா வராதுன்னு சொல்லணும்னு நினைச்சேன்'' என்றார் அவள் கணவர்.

''போருமே உங்க சமத்து. இளையாளாக் கொடுக்கறத்துலேயும், ஊமைக் கோட்டானாட்டமா எதிராத்தவருக்கா? என்னிக்குமே தன்னைப்பத்தி மஹாமேரு மாதிரி எண்ணம் அந்தப் பிராமணனுக்கு. அதுலே பெண்டாட்டி செத்து, இன்னம் ஒருத்தரும் லட்சியமாயில்லாமே ஆயிடுத்து. தான் துக்கப்பட்டவன்; எப்படி வேணா இருக்கலாம்னு ஒருத்தரைப் பொருட்டா நெனைக்காமே இருக்கார். அவருக்கு ஒருத்தர் பெண்ணைக் குடுக்க நினைப்பாளோ! சுப்பு என்னமா நினைப்பான்னு நெனைச்சேன். அவ தம்பி அவளுக்கு ஒசத்தியாயிருக்கு. எல்லாரும் காத்துண்டிருப்பான்னு நெனைக்கறா. உங்களுக்குத் தோணித்தே அதுதான் அதிசயமாயிருக்கு!'' என்றாள் லக்ஷ்மி.

அவள் கோபமெல்லாம் கணவர்பேரில் திரும்பிற்று. ''என்ன சமத்துப் புருஷன், ஐயேடி!'' என்று வெறுத்துக்கொண்டாள்.

சுப்புவுக்கும், 'லக்ஷ்மியை நன்ருகத் தெரிந்துகொள்ளாமல் அவசரப்பட்டு விட்டோமோ?' என்று சந்தேகம் வரத் தொடங்கிற்று. தப்பாக ஒன்றும் நினைக்கவில்லை என்று காண்பித்துச் சரிசெய்துகொள்ள நினைத்தாள். தம்பியின் மறு விவாகத்தில் அவளுக்கு இருந்த கவலையில் அவள் அது மாதிரி சடுதியில் சந்தேகித்துவிட்டாள். இல்லாவிட்டால் ஒருபோதும் நொடியில் பிறரிடம் தப்புக்காணுவது அவள் சுபாவம் அல்ல.

லக்ஷ்மியிடம் அவள் மனஸ்தாபப்பட்டிருக்கவே வேண்டாம். கோபாலையர் மறு விவாகத்தைப்பற்றி நினைத்ததாகவே தெரியவில்லை. 'நான்கு குழந்தைகளை வைத்துக்கொண்டு, மறுமணமா?' சாதாரணமாகவே குடும்பக் காரியங்கள் தொல்லைகளாகத் தோன்றும் அவருக்கு, இளையாள், மூத்தாள் குழந்தைகள்; இவர்கள் நடுவில் தமக்கை; இவர்களுக்குள் ஏற்படக்கூடும் தகராறுகளைச் சமாளிக்க வேண்டியிருக்குமே! இவ்விதம் நினைத்துக்கொள்ளவே பயமாக இருந்தது. சமூகக் கட்டுப்பாடுகளையே தொல்லைகளாகக் கருதும் அவர் இத்தனை இடுக்கண்களில் தம்மைப் புகுத்திக்கொள்வாரா? மனைவியிடம் அவர் வைத்திருந்த அன்போடுகூட இதுமாதிரியான தொல்லைகளும் அவரை இன்னொரு கல்யாணத்தைப்பற்றிச் சிந்திக்க இடம் கொடுக்கவில்லை.

ஊரில் உள்ளவர்கள் அவரைச் சும்மா விட்டார்களா என்ருல், லக்ஷ்மி சொன்னதுபோல் அவர்தாம் மகாமேருத்தனமாக இருந்துகொண்டு யாரையும் அருகில் நெருங்கவிடவில்லையே! நாட்கள் செல்லச் செல்ல அரைகுறையாகக் கிளம்பின மறுமணப் பேச்சு, தாளுகவே ஓய்ந்தது. தமக்கையும் தம்பியும் அதுபற்றிப் பேசி முடிவு செய்யாமலே அந்தப் பிரச்னை ஒருவாறு தீர்ந்துவிட்டது எனலாம். 'இனி, எல்லாக் காரியங்களும் - அதாவது குழந்தைகளுக்கு மேல் நடக்கவேண்டியுவைகளும் - அதுவாகவே நல்லதாக நடந்துவிட்டால்' என்கிற நினைப்பு, சுப்புவுக்கு. அதுமாதிரி எதிர்பார்க்க முடியுமா?

'எதுவோ அந்தமட்டும் குழந்தைகள் தாயை இழந்தாலும் மாற்ருந்தாயின் கொடுமைக்கும் சிறுமைக்கும் ஆளாகாமல் தப்பினுர்களே, அது போதும்' என்கிற நினைப்பில் குடும்ப பாரம் முழுவதையும் தனிமையில் ஏற்கத் தயாராளுள் சுப்பு.

# 7
# கூட்டத்தில் கலாட்டா

"இன்னும் காபி தயாராகலையா? எனக்கு நாழியாச்சு. ராத்திரியே சொல்லியிருக்கும்போது இப்படிச் செய்தா என்ன பண்றது?"

"உங்க அலங்காரம் முடியறத்துக்குள்ளே தயாராயிடும்; பயப்படாதீங்கோ."

"இந்த அலங்காரம் இல்லாதே என்னிக்குத்தான் இருக்கப் போறேனே? 'ஷூ ஹார்னை' எங்கோ வச்சுட்டுப் போயிட்டான். அவசரத்துக்கு எல்லாம் திண்டாட்டந்தான்."

"ஏண்டா, என்னடா பண்றே, நாராயணா? அப்பாவுக்குச் சித்தே ஒத்தாசை பண்ணேன்."

"அவன் ஒன்னும் வேண்டாம்; இன்னம் சித்தேக் கந்தர கூளம் பண்ணுவன். நீ காபியைக் கொண்டுவா முதல்லே."

"இதோ!" இவ்விதம் சொல்லிக்கொண்டு கையில் காபித் தம்ளருடன் காட்சியளித்தாள், இன்ஸ்பெக்டர் வேங்கடராமையரின் மனைவி; அதாவது அம்மாஞ்சி வெங்கிட்டுவின் சம்சாரம் தர்மாம்பாள். அவர் போலீஸ் உடையில் - தலைப்பாகைமுதல் எல்லாம் - வெளியில் புறப்படத் தயாராக இருந்தார். கால்களைத்தான் ஜோட்டுக்குள் திணிக்க முடியாமல் சிரமப்பட்டுக் கொண்டிருந்தார். அது அவருடன் சத்தியாக்கிரகம் செய்து கொண்டிருந்தது. வீட்டுவேலை பார்க்கும் வேலைக்காரன் 'ஷூ ஹார்னை' எங்கோ வைத்துவிட்டுப் போய்விட்டான். அவனை அவர் அவசரமாகப் போலீஸ் ஸ்டேஷன் வரைக்கும், 'எல்லாரும் தயாரா?' என்று பார்த்து வர அனுப்பியிருந்தார். வேர்வை வழிய அவர் தவிப்பதைக் காண, அவர் மனைவிக்குச் சிரிப்புத் தான் வந்தது. "இத்தனை நாளாப் போட்டுக்கறேளே? இன்னுமா இந்தத் திண்டாட்டம்?" என்றாள். அந்தப் பரிகாசத்தைக் கவனிக்க, பதில் சொல்ல, நேரம், மனம், இரண்டும் அவருக்கு இல்லை.

"அந்தப் பயல் 'ஷூ ஹார்னை' எங்கோ வைத்துவிட்டுப் போயிருக்கான். சமயத்துக்கு அகப்படவில்லை."

"இதோ இருக்கே" என்று எடுத்தாள் தர்மாம்பாள். அவள் மேஜையின் பேரில் தம்ளரை வைப்பதற்காக இடம்

பண்ணவும், அங்கிருந்த பேப்பருக்கு அடியில் இருந்து அது வெளிப்பட்டது. "நீங்கதான் பேபரை அதன்மேல் போட்டுட்டுத் தேடறேள்" என்று அவள் அவரைச் சொல்வதை யும் கவனியாமல், அவள் கையிலிருந்து அவசரமாக அதை வாங்கி அதன் உதவியால் ஜோட்டை மாட்டிக்கொண்டார். காபியையும் இரண்டே வாயில் அவர் குடிப்பதைப் பார்த்து அவர் சம்சாரம், "எங்காவது புரை ஏறிக்கப்போறது; சாப்பிடச்சே என்ன அவசரம்? மெதுவாச் சாப்பிடுங்கோ" என்ருள்.

"ஒன்பது மணிக்கெல்லாம் புது மண்டபத்திலே 'மீட்டிங்'. வெடியறத்துக்குள்ளே அங்கே போய் நின்னு தொலைய வேண்டாமா?"

"ஏதாவது அடி தடி அமர்க்களம் நடக்குமோ?"

"என்னவோ, யார் கண்டா? கலாட்டா இல்லாமே அந்த மீனுட்சிதான் காப்பாத்தணும். வர வர இந்தப் போலீசு உத்தியோகத்தை விட்டூட்டாக்கூடத் தேவலைபோல் இருக்கு. ஜனங்கள் போலீசுக்குப் பயந்தது போக, போலீசுன்னு ஜனங் களுக்கு நடுங்கணும்போலே இருக்கு! இந்தக் காங்கிரஸ் ஒண்ணு கிளம்பினதுலேயிருந்து உசிருக்குன்னு துணிஞ்சு கிடக் கிருள்கள் எல்லாரும்?" என்று அவர் சொல்லிக்கொண் டிருந்த போதே, அவரைத் தேடிக்கொண்டு ஒரு ஹெட் கான்ஸ்டேபிளும் இரண்டு போலீஸ் சேவகர்களும் வந்து 'ஸலூட்' செய்து நின்ருர்கள். "என்ன ஹேட்! எல்லாரும் தயாரா? டிப்டி ஐயா வராரா? அவர் உத்தரவு என்ன?" என்று ஏதேதோ வேலை விஷயமாகக் கேட்டுக்கொண்டே, சைக்கிளை ஒருவன் பிடித்துவர அவர்களுடன் சென்றுவிட்டார்.

வாஸ்தவத்தில் கொஞ்சகாலமாகப் போலீசாரின் நிலைமை மிகவும் சிரமமானதாகத்தான் இருந்தது. காந்தி மகான் உப்புச் சத்தியாக்கிரகம் செய்யத் தொடங்கினது முதல் நெடுகிலும் அமளி கொஞ்சம் அதிகமாகத்தான் இருந்தது. அரசாங்கத்துக்கு விரோதமாக ஜனங்கள் அங்கங்கே கூட்டம் போடுவதும், மறியல் செய்வதும், அதற்காகப் போலீஸ் தடியடிப் பிரயோகங்களும், ஜெயிலுக்குக் கொண்டுபோவதும் சகஜமான நிகழ்ச்சிகள் ஆகிவிட்டன. நம் சொந்த ஜனங்களை அவர்கள் கொலை களவு ஒன்றும் செய்யாதிருக்கும்போது அடித்துத் துன்புறுத்துவ தென்ருல் எந்த இந்தியனுக்குத்தான் மனம் வரும்?

அதிலும் அற்பப் புழுவை ஹிம்சிப்பதையும் மகா பாவம் என்று நினைத்துப் பழகியிருக்கும் ஒரு ஜாதியினர் இவ்விதக் கொடுமைகளைச் செய்யவேண்டுமென்றால் அது அவர்களால் சாத்தியமா? அவர்கள் வகித்த அரசாங்க உத்தியோகம் அவர்களை அப்படிச் செய்யும்படி கட்டளையிட்டது; அவர்களது அந்தராத்மா அதை மறுத்தது. இரண்டின் மத்தியிலும் அவர்கள் திண்டாடிக்கொண் டிருந்தார்கள். போலீஸ்காரனுக்கு மனம் என்று ஒன்று இருப்பதாகவே யாருக்கும் தெரியாது. அவனை யந்திர உலகத்தைச் சேர்ந்தவனாகவே இதுகாறும் எல்லோரும் கருதியிருந்தார்கள். அவனும் மாதம் இரண்டு 'கேசுகள்' பாதி உண்மையும், பாதி பொய்யுமாகத் தயார் செய்து தாக்கல் செய்துவிட்டு, அதிகார தோரணையில் உடுப்பு அணிந்து திரிந்துகொண் டிருந்தான். அந்த நிலைமை மாறி இப்போது ஒன்றுக்கு ஒன்று விரோதமான நிலையில் - மனச் சாட்சிக்கும் கடமைக்கும் நடுவில் - திண்டாடும் படியான காலம் அவனுக்கு ஏற்பட்டிருந்தது.

போலீஸ் வாய் அசைத்தால் நாடு அசையும் என்பது போய், போலீஸ்காரன் வாய் திறக்கவே பயப்படும்படியான காலமாக அது இருந்தது. அன்று காங்கிரஸ் தலைவர் ஒருவர் மதுரைக்கு விஜயம் செய்திருந்தார். அங்கங்கே பொதுக் கூட்டங்கள் நடப்பதாக இருந்தது. ஒன்றும் விபரீதம் நேராமல் கண்காணிக்க வேண்டியது போலீசாரின் முக்கியப் பொறுப்பு. அந்தக் கவலையில்தான் அம்மாஞ்சி திணறிக்கொண் டிருந்தார். ஏதோ இதுகாறும் சாமர்த்தியமாகவே நல்ல பேர் வாங்கி வேலை பார்த்து வந்தவருக்கு இது மாதிரி நிலைமை பெருத்த சங்கடத்தைக் கொடுத்தது. ஐந்தாறு வருஷமாக மாற்றல் இல்லாமல் சமாளித்துக்கொண்டு வந்திருக்கிறார். குழந்தைகளின் படிப்பு விஷயத்தில் அது பெருத்த சௌகரியமாக இருந்து வந்தது. இப்போது இது சம்பந்தமாக ஏதாவது வெறுப்புத் தோன்றி மேலதிகாரிகள் எங்காவது மூலையில் கொண்டுபோய்த் தள்ளிவிட்டால்? அது வேறு பயம். வந்திருக்கும் தலைவர் ஊர் போகும் வரையில் ஓர் அமர்க்களமும் நேராமல் இருக்க வேண்டுமே என்பது அவர் பிரார்த்தனை.

அவர் வெளியே அலுவலாகச் சென்ற பிறகு பல் தேய்த்து முகம் கழுவிக் காபி சாப்பிடத் தயாராக உள்ளே வந்து நின்ற பெண்ணைப் பார்த்து, "எங்கேடீ உன் அண்ணன்?

அவனையும் காபி சாப்பிடக் கூட்டிண்டு வாயேன்'' என்றாள் தர்மாம்பாள்.

''அவன் இன்னும் எழுந்திருக்கல்லேம்மா.''

''இன்னுமா எழுந்திருக்கல்லே? நன்னாருக்கு! அதென்ன, கும்பகர்ணன் தூக்கமா? எழுப்புடீ அவனை'' என்றாள் தாய்.

''அடே கும்பகர்ணா, அம்மா எழுந்திருக்கச் சொன்னா'' என்று ஞானம் சமையலறையில் இருந்தவாறே கத்திக்கொண்டு வந்தாள்.

''யாருடீ கும்பகர்ணன்? அதிகப்பிரசங்கி!'' என்றான் நாராயணன், படுக்கையில் சோம்பல் முறித்துக்கொண்டே.

''யாரு எட்டு மணி வரைக்கும் படுக்கையிலே சோம்பல் முறிச்சுண்டு கிடக்கறாளோ அவாதான்.''

''இது மாதிரி துடுக்குப் பேச்சுக்கு, கிட்ட வா சொல்றேன்; நாலு மொத்து மொத்தறேன்.''

''பாரு அம்மா, அண்ணா அடிப்பேங்கறான்'' என்றாள் ஞானம்.

''என்னடா, எழுந்திருக்கச்சே அவளோடே சண்டே?''

''அவள்தான் அம்மா போது விடிஞ்சு சண்டைக்கு இழுக்கறா.''

''உனக்கு இருந்தாலும், எப்பப் பார்த்தாலும் அவளோடே மல்லுக்கு நிக்காட்டாப் போது போகாது. அவ கல்யாணமாகிப் புக்ககம் போயிட்டா, என்ன பண்ணப் போறயோ?''

''அப்போப் பெண்டாட்டியோட சண்டை போடுவன். ஆனா மகாலக்ஷ்மி என்னைப் போல இல்லே. அவளோடே சண்டை போட முடியாது. ஒரே அமுக்காக அமுக்கிப்புடுவ.''

''உனக்கு ரொம்பத் தெரியும். உன்னைக் காட்டிலும் பிடாரியா யாரும் இருக்கமாட்டா.''

''கல்யாணம் ஆகல்லே; இப்பவே பரிஞ்சிண்டு வரத்தைப் பாரு. ஆனா எங்கிட்டே சண்டை போடற மாதிரி அவகிட்டச் சண்டை போடுவையா? கண்ணே, முத்தேன்னு கொஞ்சுவே'' என்றாள் ஞானம்.

''இல்லாட்டாக் கல்யாணம் பண்ணிண்டு கட்டையை எடுத்து அடிப்பாளாக்கும்? உன் ஆம்படையான் அப்படிச் செய்யப் போறான். இல்லே?''

''யாருக்குடா கல்யாணமும் கட்டையெடுத்து அடியும்?'' என்று கேட்டுக்கொண்டே அவன் பள்ளிச் சிநேகிதன் தர்ம

ராஜு உள்ளே வந்தான். "இன்னுமாடா எழுந்திருக்கல்லே? மீட்டிங் போகலாம்னேயே. அதுக்குன்னு வந்தேன்?"

"அவன் மகாலக்ஷ்மியைப் பத்தியே சொப்பனம் கண்டுண்டிருக்கான். அவனுக்கு எழுந்திருக்க மனசில்லே." - இது ஞானத்தின் பதில்.

"யாருடா மகாலக்ஷ்மி?"

"எங்க அத்தான் பொண்ணுதான்" என்றாள் ஞானம், நாராயணன் பதில் சொல்லுமுன்.

"எங்க பக்கத்து ஊர்க் கோபாலையர் பெண்ணு? உனக்கும் அவளுக்கும் கல்யாணமாடா?" என்றான் தர்மராஜு.

"அவளுக்கு என்னடா வேலை? எதையாவது சொல்லிண்டிருப்பாள். அவ வாயைப் பாத்துண்டு நிக்காதே. இதோ நான் பல் தேய்த்துக் காபி சாப்பிட்டுட்டு வரேன்" என்று சொல்லிக் கொண்டே எழுந்து சென்றான் நாராயணன்.

தர்மராஜு தானப்பாளையத்துக்கு அடுத்த மேலப் பாளையத்தைச் சேர்ந்தவன். திருமலைநாயக்கர் வம்சத்தைச் சேர்ந்தவர்கள் என்று சொல்லிக்கொள்ளும் ராஜுக்கள் குடும்பத்தில் பிறந்தவன். அவனும் நாராயணனோடு பத்தாவது படித்துக்கொண் டிருந்தான். இருவரும் நெருங்கிய நண்பர்கள். ஒவ்வொரு வகுப்பிலும் நாராயணன் முதலும், அவன் இரண்டாவதுமாகவே தேர்ச்சிபெற்று வருவார்கள். அதனால் வேறு அவர்களுக்குள் ஒற்றுமை அதிகம்.

"தானப்பாளையம் எங்க ஊருக்கு அடுத்த ஊருதானே? அது வழியாத்தானே எங்க ஊருக்குப் போகணும்? நான் அடிக்கடி பார்த்திருக்கேன். கோபாலையர் சின்ன மகள் மகாலக்ஷ்மி ரொம்ப நன்னு இருப்பா" என்றான் தர்மராஜு ஞானத்தினிடம்.

"அதுதான் நாராயணனுக்கு இப்பவே அவகிட்ட மோகம்" என்றாள் ஞானம் விடாமல். இதற்குள் வெளியில் செல்லத் தயாராக நாராயணன் வந்துசேர்ந்தான்.

"போரும்டா பேச்சு. போவோம் வா" என்று அவன் அழைக்க மகாலக்ஷ்மியின் பேச்சை அதோடு நிறுத்திக்கொண்டு அவர்கள் புறப்பட்டார்கள். வழியில் இன்னும் இரண்டொரு நண்பர்கள் அவர்களுடன் சேர்ந்துகொள்ளவே, எல்லோருமாகப் புதுமண்டபம் வந்தபோது அங்கே எள்ளுப்போட்டால் எள்ளு விழாது. அவ்வளவு கூட்டம் கூடியிருந்தது.

''என்ன சமுத்திரமாட்டமாக் கூட்டம்டா!'' என்றான் நாராயணனின் நண்பர்களில் ஒருவன்.

''இதிலே, ஏதாவது கலாட்டான்னுத் தலை கால் புரியாது. சமுத்திரம் பொங்கி வந்த மாதிரிதான். அணைபோட்டுத் தடுக்க முடியாது'' என்றான் இன்னொருவன்.

''போலீஸ்காரா பாடு திண்டாட்டந்தான். உங்கப்பாவுக்கு ரொம்பக் கஷ்டம்டா'' என்றான் ஒருவன் நாராயணனைப் பார்த்து.

''எங்கப்பாவுக்கு மட்டும் தனியா என்ன? எல்லோருக்குந் தான்.''

''மழை பேயறதுக்குள்ளே ஒரேயடியாப் புல்லு மொளைக் கிறாப்போலேன்னு, காங்கிரஸ் தலைவர் என்கறதுக்குள்ளே ஒரே தலையா முளைச்சுக் கிடக்கு? வேறே கூட்டம்னு இந்தக் கூட்டம் கூடுமாடா?'' என்றான் தர்மராஜு, கூட்டத்தை வியந்து கொண்டே.

''அவா ஜனங்களுக்காக உசிரை விட்டுப் பாடு படறுளா இல்லையா?''

''உத்தியோகஸ்தர் மட்டும் ஊருக்கு உழைக்கலையாக்கும்?'' என்றான் அவர்கள் நடுவிலிருந்த சப் ஜட்ஜியின் மகன்.

''போருமே, உன் பிரதாபம்! மாசம் பொறந்தாச் சம்ப ளத்தை வாங்கிப் பையிலே போட்டுக்கறு; வேறென்ன?'' என்றான் உத்தியோகஸ்தர்களைத் தூஷித்த ஆசாமி.

''அந்தச் சம்பளத்துக்கு ஓடா உழைச்சுத்தானே வாங்கிக் கறுளாக்கும்!'' என்றான் சப் ஜட்ஜியின் மகன் மறுபடியும்.

''நமக்குள் என்னடா சண்டை? போரும். கூட்டம் ஆரம் பிச்சுட்டுது; கேட்போம்'' என்றான் தர்மராஜு.

கூட்டம் ஆரம்பமாகிக்கொண்டுதான் இருந்தது. தலைவரை வரவேற்றுச் சொற்பொழிவு நிகழ்த்தினர் ஒருவர். ''இவர் யார் தெரியுமாடா? எங்களூர் ரங்கராஜா. வக்கீல் தொழிலில் நல்ல சம்பாத்தியத்தை யெல்லாம் விட்டுவிட்டுக் காங்கிரசிலே சேர்ந்து தேசத்தொண்டு செய்யறார்'' என்றான் தர்மராஜு, நாராயணனிடம். அதைச் சொன்னபோது அவன் குரலில் தனிப் பெருமை தொனித்தது.

மகாத்மாவைப் பற்றியும், வந்திருக்கும் தலைவர், அவர் கொள்கைகளைப் பின்பற்றித் தேசத்துக்காகச் செய்திருக்கும் தியாகத்தைப்பற்றியும் விரிவாகப் பேசி வரவேற்றார்கள்;

வரவேற்புக்குப் பிறகு தலைவர் எழுந்து சில வார்த்தைகள் சொன்னார். நாம் அந்நிய ஆட்சிக்கு அடிமைப்பட்டுச் சுதந்தரம் இழந்து இருப்பதையும் ஏற்கனவே நமது ஏழைமக்கள் படும் கஷ்டங்களையும், அதோடு உப்புக்கு வரி போட்டிருப்பது எவ்வளவு கொடும் செய்கை என்பதையும் தெளிவாகக் கூறி, அதை நாம் சும்மா சகித்து ஏற்கக் கூடாது, எப்படியாவது அதை எதிர்த்துப் போராட வேண்டும் என்பதையும் உருக்கமாக எடுத்துச் சொன்னார். அந்தப் பிரசங்கத்தில் மனத்தைப் பறி கொடுத்த ஒருவர், "அதற்காகத் தலைவர் எது செய்யச் சொல்லுகிறாரோ அதைச் செய்யத் தயார்" என்று நடுவில் எழுந்து கத்தினார். அவர் பக்கத்தில் நின்றிருந்த ஒரு போலீஸ் சேவகன் அவரை உட்காரும்படி கையமர்த்தினான். அதைப் பார்த்த இன்னொர் ஆசாமி, "உனக்கென்ன ஐயா?" என்று போலீஸ்காரனுடன் சண்டைக்குப் போனான். கூட்டத்தில் குழப்பம் உண்டாக என்ன வேண்டும்? சிறு பரபரப்புப் போதாதா? போலீஸ்காரன் ஏதோ கண்டிப்பதாக நினைத்துக் கொண்டு அவனை எதிர்த்துப் பத்துப் பேர் கிளம்பினார்கள். அவர்களிடமிருந்து அவனை விடுவிக்கச் சில போலீஸ்காரர்கள் ஒன்றுசேர வேண்டி யிருந்தது. கண் மூடிக் கண் திறப்பதற்குள் காரணம் தெரியாத கை கலப்பு ஏற்பட்டுவிட்டது. ஆகா யத்தைப் பார்த்துத் துப்பாக்கி வெடி வெடித்த பிறகே கூட்டத்தைக் கலைத்து நிலைமையைச் சமாளிக்க முடிந்தது. கூட்டத்தின் தலைவர் கலவரத்தை அடக்க எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் முடியாமல் தம் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்.

நாராயணனும் அவன் சிநேகிதர்களும் கூட்டத்தில் மாட்டிக்கொள்ளாமல் மெதுவாக நகர்ந்து வீடு திரும்பினார்கள். "நம்மவர்களுக்குக் கூட்டத்தில் ஒழுங்காக நடந்துகொள்ளவே தெரிகிறதில்லை" என்றான் ஸப் ஜட்ஜியின் மகன்.

"போலீஸ்காரரும் அநாவசியத்துக்கெல்லாம் அமர்க்களப் படுத்துகிறார்கள். யாரோ கூட்டத்தில் எழுந்து கத்தினால் என்ன வந்தது? உடனே அதை அடக்கப் போலீஸ் எதற்குக் கிளம்ப வேண்டும்? ஆவேசத்தில் கிளம்பின ஆசாமி தானே ஓய்ந்து விட்டுப் போகிறான்" என்றான் தர்மராஜு.

"அப்படி அடங்குமா? பெரிசாக அன்றோ போகும்?"

"இப்போது பெரிதாகப் போகாமல் என்ன ஆயிற்றாம்? யாருக்கெல்லாம் அடியோ, யாரெல்லாம் ஜெயிலுக்குப்

போகிறார்களோ? கலாட்டா இல்லாமல் போலீசுக்குச் சமாளிக்கத் தெரியாது.''

''என்னடா, நாராயணன் இருக்கிறதை மறந்து பேசுகிறீர்கள்? அவனுக்கு வருத்தமாக இராதா?'' என்றான் குறும்புக்கார ஆசாமி ஒருவன்.

''போலீசென்றால் இவன் அப்பா ஒருவர்தானா?'' என்றான் இன்னொருவன் அதை மழுப்பி.

''நான் ஒன்றும் நினைத்துக்கொள்ளவில்லை. நீங்கள் கவலைப் படாதீர்கள். அவர் தனியாக என்ன பண்ணுவார்?'' என்றான் நாராயணன்.

''இருந்தாலும் அவர்தானே இன்ஸ்பெக்டர்?'' என்றான் அந்தக் குறும்புக்கார ஆசாமி. வகுப்பில் முதலில் இருக்கும் நாராயணனிடம் அவனுக்கு எப்போதுமே பொறாமை.

''இங்கே டிப்டி சூபரின்டெண்ட், ஜில்லா சூப்பரின்டெண்ட் எல்லாரும் இருக்கிறார்கள். எங்கப்பாதான் தலைவர் என்கிறது இல்லை'' என்றான் நாராயணன் அதற்குப் பதில். ''அது போகட்டும், தலைவர் பேசினது எவ்வளவு உண்மை! ஏழைகள் குடிக்கிற கஞ்சிக்குப் போடும் உப்புக்கு வரி விதிக்கலாமா? என்ன நமது சர்க்கார் பண்ணுகிற அநியாயம்! அதை எதிர்த்து ஏதாவது செய்யத்தான் வேண்டும்'' என்று மேலும் கூறினான்.

''அடே, நீ இதுமாதிரி எல்லாம் பேசப்படாது. உங்கள் அப்பா உத்தியோகஸ்தர். நினைவு இருக்கட்டும்'' என்றான் அந்தக் குறும்புக்கார ஆசாமி மறுபடியும்.

''எங்கள் அப்பா உத்தியோகஸ்தரானால் நான் பேசக்கூடாதென்று எங்கேயடா சொல்லியிருக்கிறது? நியாயமாகப் படுகிறதைப் பேச எல்லாருக்கும் பாத்தியதை உண்டாக்கும், ஆமாம்!'' என்றான் நாராயணன்.

இப்படி இவர்கள் பேசிக்கொண்டே அவரவர் வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

நாராயணனைப் பார்த்தவுடன் அவன் தாய், ''ஏண்டா, மீட்டிங்கிலேருந்தா வறே? என்னவோ அமக்களமாமே?'' என்றாள் கவலையுடன்.

''ஆமாம் அம்மா; ஒண்ணும் இல்லாமேதான் இருந்தது. ஒரு நிமிஷத்தில் பிரமாதம் ஆய்விட்டது.''

''என்ன நடந்தது?''

''யார் கண்டார்கள்? அப்பாவுக்கு ஒருவேளை தெரியுமோ என்னவோ? எங்களுக்கு ஒண்ணும் தெரியவில்லை.''

''எதுவோ இன்னிக்குச் சோற்று வாயிலே மண்தான். வீட்டுக்குத்தான் வராரோ இல்லையோ?'' என்று பெருமூச்சு விட்டாள். போலீஸ்காரன் மனைவியான அவளுக்கு இது மாதிரி அவர் வேளைக்குச் சாப்பாட்டுக்கு வராததும் வீட்டுக்கேகூடச் சில நாள் அவரால் வர முடியாமல் இருப்பதும் சர்வ சகஜந் தான். 'கூட்டத்தில் ஏதோ கலகம் என்கிறுர்களே' என்று தான், அவள் இன்று கவலைப்பட்டாள்.

# 8

# மாற்றலும் கல்யாணப் பேச்சும்

சில சமயம் முன் கூட்டியே பின் வரப் போவதற்கு அறி குறியாகக் கவலையோ மற்றென்றே நமது மனத்தில் புகுந்து கொண்டு விடுகிறது. பிறகு அது அப்படியே நடந்தும் விடுகிறது. அம்மாஞ்சி வெங்கிட்டு, கலவரம் இல்லாமல் காங்கிரஸ் தலைவர் வந்து போகவேண்டுமே என்று கவலைப்பட்டார். கலவரம் பெரிதாக நடந்தது. தமக்கு அதனுல் ஒன்றும் மாறுதல் ஏற் படாமல் இருக்கவேண்டுமே என்றும் பயந்துகொண் டிருந்தார். அதுவும் அப்படியே நடந்தது. கலவரத்துக்கு யாரையும் பொறுப்பாளி யாக்கமுடியாத மேலதிகாரிகள் ஏதாவது அது விஷயமாகச் செய்யவேண்டாமா என்பதற்காகச் செய்வது போல நம் அம்மாஞ்சிக்கு மாற்றல் போட்டார்கள். ஆறு வருஷம் ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தர் ஒரே ஊரில் இருப்ப தென்றுல் சரியா? அதுவே அவரை வேறு இடத்துக்கு மாற்றப் போதுமான காரணமாயிற்று. எங்கோ தெலுங்கு தேசத்தில் போட்டார்கள். தனித் தமிழிலிருந்து தனித் தெலுங்குக்குப் போகவேண்டிய தாயிற்று. பேய்க்குப் வாழ்க்கைப்பட்டால் புளியமரம் ஏறவேண்டியதுதானே? சர்க்கார் சேவகம் என்றுல் அதன் உத்தரவு எதுவானுலும் அதற்குக் கீழ்ப்படிய வேண்டியது தவிர வேறு என்ன செய்யக் கிடக்கிறது? உத்தரவு பிறக்குமுன் சாமர்த்தியமாக அதை மாற்றி அமைத்துக்கொள்ள அம்மாஞ்சி எத்தனிப்பாரே தவிர, பிறகு மன்றுடிக்கொண் டிருக்கும் குணம் அவருடைய தல்ல. அது பலிக்காதென்பது அவருக்கு நன்றுகத் தெரியும்.

முன்கூட்டி முனைந்து பார்க்க இடமின்றிச் சடுதியில் பிறந்த உத்தரவாக அது ஆகிவிட்டது. ஊருக்குப் புறப்பட வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினார். நாராயணன் ஹோட்டலில் சாப்பிட்டுக்கொண்டு அவன் நண்பன் தர்மராஜுவோடு அவன் அறையில் ஜாகை வைத்துக்கொள்வது என்று ஏற்பாடாயிற்று. தர்மராஜு கிராமத்திலிருந்து வந்திருப்பவன். அவன், தான் இருக்க அறை வாடகைக்கு எடுத்துக்கொண்டு வசித்துவந்தான். இருவரும் ஒரே இடத்தில் ஒன்றாக இருக்கிறோமென்று அவர்களே சொன்னது அம்மாஞ்சிக்குச் சரியென்று பட்டது. ஒரே பள்ளியில் ஒரே வகுப்பில் ஒன்றாகப் படித்துக்கொண் டிருக்கும் சிநேகிதர்கள் அல்லவா? அது நல்ல ஏற்பாடு என்று நிச்சயித்துக்கொண்டார். அவர் பெண் ஞானத்தின் படிப்புக்காக வேண்டி அவளை எங்கும் விட்டுச் செல்வதென்பது முடியாது. 'போகும் இடத்தில் ஏதாவது பார்த்துக்கொள்ளுகிறது. பெண் குழந்தைதானே? அவள் படிப்பு அப்படி என்ன முக்கியம்?' இதுமாதிரி அது பற்றியும் எளிதில் தீர்மானித்துக்கொண்டு விட்டார். அவருக்கு இருந்ததெல்லாம் ஒரு பெண்ணும் பிள்ளையுமே. ஆகையால் மேலும் இதுமாதிரி சிந்திக்க ஒன்றும் இல்லை. அங்கங்கே பிரிவுபசாரங்களைப் பெற்றுக்கொண்டு புறப்படத் தயாரானார்.

அவர் மனைவிக்குத்தான் இந்த மாற்றல் மிகவும் கஷ்டமாக இருந்தது. ஆறு வருஷமாகப் பழகின ஊர். சுற்று வட்டக் கிராமங்களில் எல்லாம் உறவினர்கள்; அவர்கள் அடிக்கடி வந்து போய்க்கொண் டிருந்தார்கள். தெரிந்தவர்களுக்கும் சிநேகிதர்களுக்கும் கணக்கே இல்லை. பொழுது விடிந்தால் பொழுது போனால் மீனாக்ஷியம்மனின் திவ்விய தரிசனம். ஒரு திருநாளோ வேறு விசேஷமோ சேவகன் பின்தொடர அவள் கோவில் சென்று விட்டால், எத்தனை நெருக்கடியிலும் அவளுக்குத் தனிச் சேவை தான். போலீஸ் தலையைக் கண்டால் எவ்வளவு கூட்டமானாலும் விலகி இடம் கொடுத்துவிடாதா? அந்த மகிமை அந்தச் சிவப்புத் தலைப்பாகைக்கு இன்னும் இருக்கத்தானே இருக்கிறது? இவ்வளவையும் விட்டுவிட்டுப் புதுமுகங்களின் நடுவில் சொந்தப் பாஷையும் பேச முடியாமல், நமது கோவிலோ குளமோ இல்லாத தெலுங்கு தேசமென்றால் யாருக்குத்தான் பிடிக்கும்? பெருத்த மனக்குறையோடு அவள் மூட்டை கட்டினாள்.

ஒவ்வொருவரிடமும், போய்விட்டு வருகிறேன் என்று சொல்லிக்கொள்ளக்கூட அவளுக்கு நேரம் போதாதுபோல் இருந்தது. ஸப் ஜட்ஜ் சம்சாரம், ''என்னவோ தர்மாம்பா, நீ இல்லாமே பிடிக்கவே பிடிக்காதுபோல் இருக்கு'' என்று சொன்னபோது அவளுக்குச் சந்தோஷமும் வருத்தமும் கலந்து வந்தன. ஒரு விதத்தில் இப்படித் தன்னை முக்கியமாக நினைக்கிறார்களே என்று சந்தோஷம்; ஆனால் இப்படிப்பட்டவர்களையெல்லாம் விட்டுப் போகிறோமே என்று வருத்தம்.

''ஆமாம், அப்படி என்ன நான் பிரமாதம்?'' என்று அவள் மேலுக்குத்தான் சொன்னாள்.

''அப்படிச் சொல்லாதே. உன்னைப்போலே யாரு? ஓர் உத்தியோகஸ்தன் பொண்டாட்டியையும் எனக்குப் பிடிக்கல்லே. யாருக்கு என்ன தெரிகிறது? ராங்கியும், பெருமையும்; பிறத்தியாரிடம் மதிப்பே கிடையாது. எல்லாரும் ஒண்ணாப் போகவேண்டி யிருக்கு, விஷயம் தெரிஞ்சவா தெரியாதவா, அந்தஸ்து இருக்கிறவா இல்லாதவா; எல்லாரும் சகிட்டு மேனிக்கு ஒண்ணுன்னா, ஆருக்குப் பிடிக்கிறது?''

ஸப்ஜட்ஜ் மனைவிக்கு, தான் எல்லாரையும்விட உயர்வு என்று அபிப்பிராயம். பணத்திலும் அந்தஸ்திலும் தாங்கள் மேல். தங்கள் வீட்டுக் காரியம் எல்லாமே வேறே என்று அவள் நினைத்திருந்தாள். அவள் பேசும்போதெல்லாம் அதன்படி சொல்லத் தவறமாட்டாள். 'அதில் உண்மை இருக்கிறது' என்று தர்மாம்பாள் அந்தப் பெருமைகளைப் பொறுமையாகக் கேட்டு வந்தாள். மற்றவர்கள் தெரிந்தோ தெரியாமலோ அவ் விஷயத்தில் அதிகக் கவனம் செலுத்துவதில்லை. பிறருடைய உயர்வைத் தெரிந்துகொள்வதற்கும், தெரிந்தாலும் அதற்குத் தகுந்தபடி மதிப்புக் கொடுப்பதற்கும் எல்லாருக்கும் தெரியுமா? முடியத்தான் முடியுமா?

ஸப்ஜட்ஜ் அகமுடையாள் பெருமை அடித்துக்கொள்ளுகிறாள் என்றால் அடித்துக்கொள்ளாமல் என்ன செய்வாள்? அவள்தான் வீட்டுக்கு ராணியாக இருக்கிறாள். 'தம்முடைய உத்தியோகமும் பணமும் அவள் அதிருஷ்டம்' என்று கணவர் தலையாலே தாங்கிண் டிருக்கார். சாமான்யராக இருந்த அவருக்குப் பணக்காரப் பொண்ணாக அவள் வாழ்க்கைப்பட்ட அப்புறந்தான் சகலமும் வந்ததாம். அதை நன்றாக உரையேத்தி வைத்திருக்கிறாள். அவர் அப்படியே நம்பி, 'அவ உண்டானு

உண்டு. இல்லாவிட்டால் உலகம் அஸ்தமனம்' என்கிறார். 'கொண்ட கணவன் சொன்னதைக் கேட்டு நடந்தா அப்புறம் என்ன வேணும்? கை கட்டிச் சேவகம் செய்ய ஆள்களும், தோணினதை வாங்கி அநுபவிக்கப் பணமும் இஷ்டப்பட்ட அளவு இருந்தால் கேட்கவேண்டுமா? அதிகாரம் தூள் பறக்கிறது. சேர்ந்தவர்கள் கௌரவப்படுத்தறா. முத்தாட்டமா ஒரே பிள்ளை. பெண் இல்லை. அவனும் படிப்பில்லாமே இருக்கானா? இல்லை.' என்று வாய்க்கு வாய் சொல்லுவதோடு நிறுத்திக்கொள்ளாமல், அந்தப்படி மரியாதையும் செய்தாள். உள்ளூற அவளுக்கு ஸப் ஜட்ஜ் மகனுக்கு ஞானத்தை மணம் செய்து கொடுத்துவிட வேண்டும் என்கிற ஆசையும் பலமாக இருந்தது. ஸப் ஜட்ஜ் வீட்டுப் போக போக்கியத்தைப் பார்க்கப் பார்க்க, அவள் தன் மகன் அந்த வீட்டு மருமகளாகி அவற்றை எல்லாம் அநுபவிக்கவேண்டும் என்று பெரிதும் விரும்பினாள்.

இதுமாதிரியான எண்ணங்கள் மனத்தில் ஓடிக்கொண்டிருந்தபோது ஸப் ஜட்ஜ் சம்சாரத்தை மரியாதை செய்து அவள் தற்பெருமைகளைச் சகித்துக்கொள்ளாமல் இருக்கத் தோன்றுமா? இதுமாதிரி தர்மாம்பாள் நடந்துகொள்வதிலிருந்து ஸப் ஜட்ஜ் சம்சாரத்துக்கும் அவளிடம் கொஞ்சம் பிரியந்தான் என்று தோன்றிற்று. தர்மாம்பாள் ஊரை விட்டுப் போவதற்கு அவள் உண்மையில் வருந்தினாள். தன் பெருமைகளைப் பொறுமையாகக் கேட்க ஓர் ஆள் போய்விடுகிறதே என்றாவது இருக்கத்தானே இருக்கும்? ''ஊருக்குப் போயிட்டு வறேன்; மறந்துடாதீங்கோ'' என்று தர்மாம்பாள் சொன்னதற்கு, ''நன்னாச் சொன்னே. அப்படிப்பட்டவ இல்லே நான்'' என்று கொஞ்சம் உண்மையாகவே சொல்லி, ''அவர்கூடக் கேட்டிருக்கார்: இன்ஸ்பெக்டர் அகமுடையாளிடம் உனக்குத் தனியா என்ன சிநேகம்னு. அவளுக்கு மரியாதை தெரியறது, கௌரவம் தெரிஞ்சு பழகறான்னு சொல்லியிருக்கேன். குழந்தைகள் பள்ளிக்கூடத்துக்கு என்ன பண்ணப் போறே?'' என்று அது பற்றி வேறு பரிவோடு கேட்டாள். அதுமாதிரி கேட்பதே தன்னுடைய நல்லதனம் என்பது அவள் நினைப்பு.

''நாராயணன் ஹோட்டலில் சாப்பிட்டுக்கொண்டு இருக்கப் போறான். ஞானத்துக்கு என்ன? போகிற இடத்துலே பார்த்துக்கொள்ளுகிறது.''

"ஞானத்தை எங்காத்தில் விட்டுட்டுப் போயேன். நான் பாத்துக்கறேன். ஒரு சின்னப் பொண் கூட இருந்தா எனக்குந் தான் சித்தேக் கலகலப்பா இருக்கும்" என்றாள் ஸப் ஜட்ஜ் சம்சாரம். உண்மையில் உபகாரம் செய்ய நினைத்தால் நாராயணனைத்தான் தங்களிடம் விடும்படி சொல்லவேண்டும். அவன் படிப்புக்காக இருந்தாக வேண்டும். இவர்கள் பிள்ளையும் அவனும் ஒரு வகுப்பில் படிப்பவர்கள். நண்பர்கள் சேர்ந் திருப்பது நடக்கக்கூடியது. அதை விட்டு ஞானத்தை வைத்துக் கொள்வதாகச் சொல்வதன் பொருள் என்ன? அது வெறும் மேலுக்குச் சொன்ன சொல் என்பது தவிர வேறு அதில் என்ன இருக்கக்கூடும்? ஆனால் தர்மாம்பாள் அதை மிகுந்த நல்ல மனசாகவே எடுத்துக்கொண்டாள். அதற்குத் தகுந்தபடி என்ன பதில் கூறுவது என்றுகூட ஒரு நிமிஷம் திகைத்துப் போனாள்.

"நீங்க இப்படிச் சொல்றேளே, அதுவே போரும்" என்றாள். "இது மாதிரி யார் சொல்லப் போறா? உங்காத்துப் பெண்ணாத் தான் அவ ஆகப்போறாளோ என்னவோ! அதுதான் உங்க வாயிலே அது மாதிரி வரது. உங்க அந்தஸ்துக்கு நாங்கள் சரியில்லேதான். இருந்தாலும் நீங்க மனசு வெச்சா உங்க கோவிந்தராஜனுக்குப் பண்ணிக்கலாம். இப்பவே காதுலே போட்டு வெக்கறேன். பெரிய பெரிய இடத்துலே இருந் தெல்லாம் பெண்கள் வரும். இருந்தாலும் நம்ப சிநேகத்தை நினைச்சு நீங்க பண்ணிக்கணும்." - இவ்விதம் சொல்லி ஏதோ பெரிதாகக் காரியம் சாதித்துக்கொண்டவள்போலத் தர்மாம் பாள் நினைத்தாள்.

"அதற்குள் அவர்களுக்குக் கல்யாணத்துக்கு வயசு ஆச்சா?" என்று ஸப் ஜட்ஜ் மனைவி அதை ஏற்றும் ஏற்காமலும் பதில் சொன்னாள்.

"இன்னும் ரெண்டு வருஷம் போனால் ஆயிடறது. நாள் ஓடுகிற ஓட்டம். உங்களிடம் கேட்டு ஜாதகம் வாங்கிண்டு போகணும் என்கிறதுதான் எனக்கு. என்னவோ இன்னிக்குப் பேச்சுவாக்கிலே அதுவாகவே வார்த்தை வந்துவிட்டது; சொன் னேன். ஊருக்குப் போகிறதுக்குள்ளே ஒரு நாள் அவரை வந்து வாங்கிண்டு வரச் சொல்றேன். கட்டாயம் கொடுக்கணும். ஜாதகப் பொருத்தம் பார்த்து வைக்கலாம்" என்றாள்.

"அதுக்கென்ன?" என்று ஸப் ஜட்ஜ் மனைவி ஏற்றுக் கொண்டது போலச் சொல்லவும், பாதிக் கல்யாணத்தை நிச்சயம்

செய்துகொண்டுவிட்ட திருப்தியுடன் வீடு வந்தாள் தர்மாம்பாள். அவளுக்கு மாற்றலில் ஏற்பட்ட வருத்தங்கூடக் குறைவாகத் தோன்றிற்று. அதனுல்தானே, நினைக்காமலே வார்த்தை வந்து கல்யாண விஷயமாகப் பேச முடிந்தது? என்ன ஆசை இருந்தாலும் அவர்கள் அந்தஸ்தையும் தன்னுடையதையும் எண்ணி அவளுக்கு அதுபற்றி வாய் திறக்கவே யோசனையாகத்தான் இருந்தது. கணவரிடம் ஏதோ பெரிதாகச் சாதித்துக்கொண்டுவிட்டவளைப் போலச் சொல்லி, ஜாதகம் வாங்கிவரச் சொன்னபோது, "என்னமோ நீ பெரிசா நெனைக்கறே. அவா சம்பந்தம் நமக்குச் சரி வருமா? எனக்குச் சந்தேகந்தான்.. தங்களைப் பெரிதாக நினைத்துக்கொண்டு பிறரிடம் அவர்களுக்கு மதிப்பே இல்லை. அப்படி இருப்பவர்களிடம் பெண்ணைக் கொடுத்துவிட்டு ஸதா அவர்கள் காட்டும் அலட்சியத்தைச் சகிக்க வேண்டுமென்றால் கஷ்டம் பாரு" என்று அம்மாஞ்சி ஆட்சேபங்களைக் கிளப்பினர். அவளுக்கு அப்போது எப்படி இருக்கும்?

"ஆமாம், ஜாதகம் வாங்கிவிட்டால் கல்யாணம் ஆயிடுத்தாக்கும்! நான், நீ என்று அவாளுக்கு ஆயிரம் பேர் காத்துண்டு கிடப்பா. அப்படித்தான் பிள்ளை யாத்துவா யார்தான் சல்லிசா இருக்காளாம்? 'மாப்பிள்ளை என்று துரும்பைக் கிள்ளிப் போட்டாக்கூட விரைச்சுக்கும்' என்று வசனம் இல்லையா? குட்டுப்பட்டாலும் மோதிரக்கையாலே குட்டுப்படணும். நம்மைவிட இன்னும் பணக்காரரா மதிக்காவிட்டாலும் பாதகம் இல்லை; நாம் என்ன, அவாத்துலே போய்க் கையேந்திண்டு உக்காந்திருக்கப் போறேமா? பெண் சௌக்கியமாக இருப்பா; அது போராதா? நீங்க ஜாதகம் வாங்க வருவேள்னு நான் சொல்லியாச்சு, நீங்க போய் வந்துடுங்கோ; பிறகு பாத்துக்கலாம்" என்று பெரிய பிரசங்கம் செய்து நிறுத்தினுள்.

"ஆஹா, எஜமானியம்மா உத்தரவு! அப்படியே செய்யறது. இருந்தாலும் ஊருக்குப் புறப்படுகிற நெருக்கடியிலே அதுக்கு அவசரமா என்றுதான் பார்க்கிறேன்" என்று அவர் மேலும் ஆட்சேபித்ததற்கு, "ஊருக்குப் போகிற நெருக்கடி என்ன? ஸப் ஜட்ஜ் பிள்ளையைச் சும்மா விட்டு வைப்பாளா? ஊரெல்லாம், வந்து மொச்சுக்க மாட்டாளா? பெரிய பெரிய இடமெல்லாம் வந்தால், நம்மைப்பற்றி அவாளுக்கு நினைவு இருக்குமா?" என்றுள்.

"அதற்காக இல்லை. நாம்தான் மாற்றலாகி ஊருக்குப் போகிறோமே; விவாகம் எங்கே பண்ணப் போகிறோம்? அது தான்" என்று அம்மாஞ்சி மறுபடியும் ஏதோ சொன்னார்.

"வீண் தர்க்கம் பண்ணாதீங்கோ. கல்யாணம் பண்ணிட்டா என்ன? ஜாதகம் வாங்கினால்தானே நாம் நம்ப பொண்ணுக்கு அக்கறையாகப் பார்க்கிறோம்னு அவாளுக்குத் தெரியும்? அவாளும் அதைப்பத்தி ஏதாவது நினைப்பா. அதுவும் இல்லாமே தெலுங்குச் சீமையிலே நல்ல நல்ல ஜோசியாள் உண்டுன்னு கேட்டிருக்கேன். நன்னா ஜாதகப் பொருத்தம் வேறே பார்த்து வைக்கலாம். அவாளுக்கும் சொல்லலாம்" என்று அவரைச் சமாதானப்படுத்திக் காரியம் செய்யத் தூண்டும் முறையில் பேசினாள்.

"சரி, சரி. உனக்கு ஸப் ஜட்ஜ் பிள்ளையின் மாமியாராக வேண்டும் என்கிற ஆசை இருக்கு. அதை நான் கெடுக்கல்லே. ஜாதகம் வாங்கிக்கொண்டே ஊருக்குப் போவோம். ஒரு வாரம் முந்தித் தானப்பாளையம் போய், சுப்பு, கோபாலன் இவர்களைப் பார்த்துச் சொல்லிக்கொண்டு போகவேண்டும். அதற்குள் இந்த வேலையை முடித்துவிடுகிறது" என்று அம்மாஞ்சி முடிவாகச் சொன்னபிறகு, தர்மாம்பாளுக்குச் சந்தோஷம் ஏற்பட்டது. முதலில் அவர் சம்மதம் முக்கியமல்லவா? மகளின் வாழ்க்கையில் சிரத்தை கொண்ட தந்தை முழு மனத்துடன் முனைந்தால் அல்லவா காரியம் இனிது நிறைவேறும்?

மாற்றலுக்காகச் செய்யவேண்டிய வேலைகளில் இப்போது சோர்வுக்குப் பதில் அவளுக்கு உத்ஸாகமே உண்டாயிற்று. சுறுசுறுப்பாக மூட்டை முடிச்சுகளைக் கட்டினாள். தன்னைவிட மேல் அந்தஸ்தில் பெண் வாழ்க்கைப்படுவதில் எந்தத் தாய்க்குத்தான் திருப்தி இராது?

## ୭
## கலகலப்பு மனிதர்

ஒரு வாரம் கோபாலையர் அகத்தில் முகாம் போட்டுவிட்டு ஊர் புறப்படுவது என்கிற எண்ணத்தில் அம்மாஞ்சி தம் மனைவியுடனும் பெண் ஞானத்துடனும் தானப்பாளையம் போய்ச் சேர்ந்தார். நாராயணனுக்குப் பள்ளிக்கூடமாகையால் அவன் வர முடியவில்லை. மீனுவுக்கும் மகாலக்ஷ்மிக்கும் ஞானத்தைக்

கண்டதுமுதல் தலைகால் தெரியாத உத்ஸாகம். அவர்கள் இருவருக்கும் நடுவில் அவளை விடாமல் வைத்துக்கொண்டு அவர்கள் ஒரே விளையாட்டில் ஈடுபட்டார்கள். வயசிலும் உருவத்திலும் அவர்களுக்கு மத்தியில் இருந்த ஞானமும் பட்டிக்காட்டுப் புளியம்விதை ஆட்டத்திலும் கழற்கோடி ஆட்டத்திலும் அதிசயித்து லயித்திருந்தாள். பட்டண வாசத்துப் பெண் அல்லவா? அவளுக்கு அவை புதிதாக இருந்தன. பொழுது போவதே தெரியாமல் போய்க்கொண் டிருந்தது அவர்களுக்கு.

அத்தை சுப்புவுக்கும், அம்மாஞ்சியும் அம்மாஞ்சி மன்னியும் வந்திருந்தது அப்படித்தான் இருந்தது. அவர்களை உபசரிப்பதிலும் அவர்களுடன் பேசுவதிலும் பொழுது போவதே தெரியவில்லை. குழந்தை பாலு, (அவர்கள் குலதெய்வத்தின் பெயராகிய சுப்பிரமணியன் என்கிற பெயரில் குழந்தை என்பதைக் குறித்த 'பால' என்பதைச் சேர்த்து 'பாலசுப்பிரமணியன்' என்று பெயரிட்டிருந்தார்கள்.) கலகலப்பு மனுஷ்யரான அம்மாஞ்சியிடம் நிமிஷத்தில் பழகிக்கொண்டுவிட்டான். அவனது மழலைச் சொற்களால் அவரையும் தன்னையுமேகூட மகிழ்வித்துக்கொண் டிருந்தான் அவன். ஒவ்வொரு புது வார்த்தை வரும்போதும் அவனுக்குத் தன்னிடத்திலேயே அவ்வளவு சந்தோஷம். சாரதா சிறுவர் கோஷ்டியில் சில சமயமும் பெரியவர்கள் மத்தியில் சில சமயமுமாகப் பொழுதைப் போக்கினுள். அவள் நிலைமை இப்பொழுது இரண்டுங்கெட்டான் நிலைமைதானே? கோபாலையர்கூடப் பேசாமல் இருக்கும் சுபாவத்தைவிட்டுச் சற்றுக் கலகலப்பாக மாறிஞர். இந்த ஒரு வாரம் போலவே என்றும் இருக்கப்படாதா என்றுதான் அவர்கள் எல்லோருக்கும் இருந்தது. ஆனால் அது எப்படி முடியும்?

அம்மாஞ்சி புறப்பட வேண்டிய நாள் நெருங்கிற்று. எல்லோருக்கும் மேல் சுப்புவுக்குத்தான் அதிக வருத்தமாக இருந்தது. "என்னவோ, நீ இருக்கிற தெம்பிலே எல்லாம் நடத்தலாம்னு தைரியமாக இருந்தேன். எங்கோ போயிடறையே" என்ருள், அம்மாஞ்சியிடம் தனிமையில்.

"அதனுல் என்ன? வேணுங்கறபோது கடிதாசு போட்டா வந்துடறேன். ஊருக்குத்தானே போறேன்? வேறே எங்கும் போயிடலே பாரு."

"போருமே உன் பேச்சு. போனவாள்ளாம் போராதா! ஆச்சு, சாரதாவைப் புக்ககம் கொண்டுபோய் விடவேண்டும். மீனுவுக்கு வரன் தேடிக் கல்யாணம் பண்ணவேண்டும்; இதெல்லாம் யார் செய்வா, சொல்லு."

"எல்லாம் தானே நடக்கும். ஏன் விசாரப்பட்றே?" என்றார் அம்மாஞ்சி.

"தானே என்னமா நடக்கும்? மனுஷ்யாள்தானே செய்தாகணும்? நீயும் உன் ஆம்படையாளும் போயிட்டா இங்கே யார் இருக்கா, வரன் பார்க்கவும் கல்யாணம் நடத்தவும்? கோபாலன் யோகியாயிருக்கான்! அவனுக்கு ஒண்ணும் தெரியல்லே. நீ சொல்ற மாதிரி அதுவாத்தான் நடக்கணும்."

"அதது வேளை வந்தால் யாராவது ஏற்படுவா; எப்படியாவது நடந்துவிடும். காரியம் நின்று போய் விடாது."

"என்னவோ இந்த விசாரமெல்லாம் எனக்கு ஏதுக்கு? அவ இருந்து படப்படாதோ? பெண்டாட்டி மாதிரி யாரு எடுத்துச் சொல்லி இடித்துக் காண்பித்துச் செய்ய முடியும்? சாரதா கல்யாணம் எப்படி நடந்தது? அப்பவே நான் சொல்லலையா, மனுஷ்யாளும் தெம்பும் நெடுக இருக்கணுமேன்னு?' ஆனால் காமாக்ஷி செத்து வீடு இப்படி ஆகிவிடும்னு அப்ப நான் நினைக்கல்லே" என்றாள் சுப்பு. அவள் கண்களில் நீர் சுரந்து நின்றது.

"எதையும் முன்னாடி நினைத்துக் கவலைப் படப்படாது" என்றார் அம்மாஞ்சி, அவளைச் சமாதானப்படுத்த.

"கவலைப்படும்படி இருந்தா, படாமே என்ன பண்றது?"

"வரது வரபோது வரட்டுமே; முன்கூட்டி விசாரப்படுவதில் காரியம் என்ன?"

"நீ என்ன வேண்ணா சொல்லு; மீனுவுக்கு யார் வரன் பார்ப்பா? மதுரைக்கு வந்தவனை ஒரு நொடியில் இழுத்துண்டு போயி, சாரதாவுக்கு ஆம்படையான் நிச்சயம் பண்ணினே. அதுமாதிரி இப்போ யார் செய்வா?"

"ஏன், இப்போ செய்ய மாட்டேனா?"

"எங்கேயோ தெலுங்கு தேசத்துக்குப் போறே. அங்கே எந்தப் பையன் இருப்பான்?"

"திருநெல்வேலியில் இருக்கும் பையனைத்தானே இங்கிருந்து பிடித்தோம்? அதுபோல அங்கிருந்தாலும் இங்கிருக்கிற வரனைப் பார்க்கிறது."

"நீ சொல்றே; எனக்கு நடக்கும்னு தோணல்லே."

இப்படி இவர்கள் பேசிக்கொண் டிருந்தபோதே கோபாலையர் அங்கே வந்து சேர்ந்தார்; "சுப்பு என்ன உங்கிட்ட ரகசியம் பேசறு?" என்ருர்.

"சுப்புவுக்கு என்ன இருக்குப் பேச? எல்லாம் உன் குடும்பக் கவலைதான்" என்ருர் அம்மாஞ்சி. இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு வார்த்தை சொல்லிவைப்போம் என்பது அவருக்கு: கோபாலையர் ஒன்றையும் மேல்போட்டுக் கொள்ளாமல் இருக்கும் தப்பைச் சுப்புவிடம் வாய்விட்டுச் சொல்லாவிட்டாலும் அவரும் ஒப்புக்கொண்டதுதான்.

"அந்தக் கவலைகளுக்கு முடிவு ஏது? ஆயிசு பூராப் பட வேண்டியதுதான்" என்ருர் கோபாலையர், அசட்டுச் சிரிப்புடன்.

"அதற்காக நாம் செய்கிறதைச் செய்ய வேண்டாமா? அப்புறம் வேண்டுமானுல் வீண் கவலைகளைத் தள்ளலாம்."

"எல்லாம் நடந்துகொண்டுதானே இருக்கு? என்ன புதிசாச் செய்யணும்?" என்ருர் கோபாலையர், தம்மை ஏதோ அவர்கள் குற்றம் கூறுகிருர்கள் என்பதை ஊகித்துக்கொண்டு.

"சாரதாவுக்குச் சாந்தி முகூர்த்தத்துக்கு நாள் வைத்துச் சம்பந்திகள் எழுதியிருந்தாளே, அதற்குப் பதில் போட்டையோ?" என்ருள் சுப்பு, சமயத்தில் நினைவு வந்தவளாய்.

"சரின்னு போட்டிருக்கேனே?" இதைச் சொன்ன பொழுது தாம் என்ன செய்யவில்லை என்கிற கோபாலையரின் எண்ணம் நன்கு வெளிப்பட்டது.

"அதெப்போ போட்டே? எனக்குத் தெரியாதே! அப்படியானு அதுக்கு எல்லாம் பண்ண வேண்டாமோ?" என்று சுப்பு ஆரம்பித்தாள்.

"உன்னிடந்தான் சொன்னேன். நீ தானே அதது நடக்க வேண்டிய நாளிலே நடக்க வேண்டியதுதானேன்னு சொன்னே? அப்புறம் சரின்னு போடாமே என்ன பண்ணறது?"

"இருந்தாலும் ஒரு வார்த்தை எழுதப் போறேன்னு சொல்ல வேண்டாமோ? அதுக்குன்னு எவ்வளவோ செய்யணுமே."

"அதுக்கென்ன, செய்தாப் போறது" என்ருர் கோபாலையர்.

"பாத்துக்கோ; இப்படித்தான் இவன் காரியம். ஏதோ அவா நல்ல மனுஷ்யா; முன்னே பின்னே இருந்தாலும் தப்பு

எடுத்துக்க மாட்டா. அப்படியும் நான் ஒண்ணும் சும்மா இருக்கல்லே. அப்பப்ப உங்கிட்டேயும் சொல்லி ஏதோ தயார் பண்ணிண்டுதான் இருக்கேன். நீயும் போனப்பறம் மீனு கல்யாணம் எப்படி நடக்கும்? பார்த்துக்கோ'' என்று சுப்பு அம்மாஞ்சியிடம் சொன்னுள்.

''நீதான் மீனுவுக்கு அவாளே பார்த்துப் பண்ணிக்கக் கூடியவாளா வரன் நிச்சயம் பண்ணியிருக்கையே'' என்ருர் கோபாலேயர் மெதுவாய்.

''அது யாரு அப்படிப்பட்ட மனுஷ்யா?'' என்று அம்மாஞ்சி சுப்புவை அதிசயத்தோடு பார்த்தார். சுப்புவுக்கு ஏதோ குற்றம் செய்து மறைத்துவிட்டவள்போல் முகம் அசடு தட்டிற்று.

''நிச்சயம் யாரு பண்ணினு? நம்ம கணபதி அண்ணு (நாணம்மாவின் அகத்துக்காரர் அந்த ஊராருக்கெல்லாம் அண்ணுதான்) பிள்ளே சங்கரனுக்குக் கொடுக்கலாம்னு சொன்னேன். அதைச் சொல்ருன்.''

''அவனுக்குப் படிப்புப் போருதுபோல் இருக்கே. சொத்தும் சுமார்தான்; இல்லேயா?'' என்ருர் அம்மாஞ்சி.

''இரண்டே பிள்ளேகள்தானே?''

''வாஸ்தவந்தான்; படிப்பு இருந்துட்டா அந்தச் சொத்துப் போதும்; ஏதாவது உத்தியோகம் பண்ணிக்குவன். இல்லாட்டால் நெடுகிலும் சிரமப்படும். செல்வமாக வளர்ந்த குழந்தை பாரு: கஷ்டப்படாது?'' என்ருர் அம்மாஞ்சி.

''வேறே வரன் பார்க்கணுமே. அதுக்குத்தான் நினேச்சேன். இதுவானு முன்னே பின்னே பழகினவா; குழந்தையை அருமை யாய் வச்சுக்குவா. புதிசா விசாரிக்க வேண்டாம். படிப்பும் நாராயணனேப் போல வேண்ணு இல்லே; ஏதோ பாஸ் செய் துண்டு வருன். அவனும் பத்தாவது போருன்'' என்ருள் சுப்பு. அவள் எதனுல் அந்த வரன் தேவலே என்று நினேக்ருள் என்பது அம்மாஞ்சிக்குத் தெரியும். நாணம்மாளுக்கும் சுப்புவுக்கும் இருக்கும் சிநேகந்தான் எல்லோருக்கும் தெரிந்ததாயிற்றே! நாணம்மாவின் பிள்ளே என்பதற்காக அவளுக்குச் சரியென்று தோன்றுகிறது. இல்லாவிட்டால் பணமோ படிப்போ விசேஷ மாக இல்லாத அந்தப் பிள்ளேக்கு மீனுவைக் கொடுக்க அவள் மனம் ஒப்பமாட்டாள்.

'வாஸ்தவத்தில் வேறு வரன் கிடைக்கவில்லே என்ருல்தான் அந்தப் பிள்ளேக்குக் கொடுக்க வேண்டுமே ஒழிய வேறு இடம்

பாராமலே தீர்த்துவிடக் கூடாது' என்று அம்மாஞ்சிக்குப் பட்டது. ''அவசரம் என்ன? நான் ஞானத்துக்கு வரன் பார்க்க வேண்டாமா? அப்போ சேர்த்துப் பார்த்துட்டாப் போகிறது'' என்ருர் அம்மாஞ்சி.

''அப்படி வேண்ணு செய்யலாம். ஆனு மீனு, ஞானத்துக்குப் பெரியவ. அவளுக்கு இந்த வருஷமே பண்ணிவிடணும். வெச்சிண்டிருக்கப்படாது'' என்ருள் சுப்பு.

''எங்கோ வடக்கே போயிட்டா என்னத்தைப் பார்க்கிறது? உத்தியோகம் பண்ணுவரா, வரன் பார்ப்பரா? இவர் வார்த்தையை நம்பிண்டு இருக்காதீங்கோ அக்கா!'' என்ருள் தர்மாம்பாள், நடுவில் குறுக்கிட்டு.

''உன் பொண்ணுக்குப் பார்க்கிற வரனை மீனுவுக்கு ஏற்பாடு பண்ணிவிடுவேனே என்கிற பயமா?'' என்று அம்மாஞ்சி அவளைப் பரிகசித்தார்.

அவளுக்குப் பொதுவாக அது மாதிரி பயம் இருந்திருக்குமோ என்னவோ! ஆனல் எங்கே ஸப் ஜட்ஜியின் மகன் ஜாதகம் வாங்கியிருப்பதைச் சொல்லிவிடுகிருரோ என்று நிச்சயம் பயம் தோன்றியிருக்கக் கூடும். ஆனல் வெளிக்கு, ''போருமே உங்க பேச்சு. யார் அகமுடையானுக்கு யார் வாக்கப்பட்டுடுவா? அதுக்குச் சொல்லல்லே. உத்தியோகத்துலே போயி உட்கார்ந்துட்டா என்ன முடியப் போகிறது? உங்களுக்கே யாராவது ஒத்தாசை பண்ணியாகணும்னுதான் சொல்றேன்'' என்று சொல்லிவிட்டு, ''எங்கே, குழந்தைகள் யாரையும் காணேம்?'' என்று பேச்சையும் மாற்றினுள்.

''எல்லாரும் வாசல் திண்ணையிலே புளியம் விரை ஆட்டமும்மரத்துலே இருக்கா'' என்ருள் சுப்பு. அந்தச் சமயத்துக்குச் சரியாக வாசலில் ஒருவருக்கு ஒருவர் வாக்குவாதம் செய்யும் அவர்கள் குரல் கேட்டது. அம்மாஞ்சி அதென்ன என்று பார்க்க எழுந்து சென்ருர்.

புளியம்விதை ஆட்டத்தில் மகாலக்ஷ்மி ஜயித்துக்கொண்டிருந்தாள். இந்த ஒரு வாரமாக அவர்கள் பொழுது பொழுதாக ஞானத்துடன் சேர்ந்து ஆடினதில் மீனுவே ஒவ்வொரு தடவையும் ஜயித்து வந்தாள். ஞானம் ஆட்டத்துக்குப் புதிது; அதனுல் அவள் தோற்றது நியாயம். மகாலக்ஷ்மியுமன்றே வேளை தவருமல் தோற்றுவந்தாள்? அவள் எப்படியும் சிறியவள் தானே? ஆட்டத்தில் தேர்ச்சியும் குறைவாகத்தானே இருக்கும்?

இன்று என்னவோ அவளுக்கு ஒரு குருட்டு அதிருஷ்டம் திரும்பி அவளை ஜயிக்கச் செய்துகொண் டிருந்தது. அவள் பழம் பழ மாக எடுத்துக்கொண் டிருந்தாள். அந்தச் சந்தோஷம் அவளுக்குத் தாங்கவே இல்லை. அது மீனுவுக்குப் பொறுக்க வில்லை. "போரும், எத்தனை நாழி ஆடறது? அத்தை கோவிச்சுக்குவா" என்று சொல்லி ஆட்டத்தைக் கலைத்து எழுந்தாள்.

தான் ஜயித்துக்கொண்டு வரும்போது ஆட்டத்தை நிறுத்துவது மகாலக்ஷ்மிக்குப் பொறுக்கவில்லை. இன்னும் சில பழங்கள் அவள் எடுத்துவிட்டால் எதிராளி மேல் ஒரு தாச்சி ஏற்றிவிட்டதாக அர்த்தம். அது பெரிய ஜயம். அதற்கு இடம் இல்லாமல் மீனு எழுந்திருப்பதைப் பார்க்கவும், "ஆட்டத்தை முடித்துவிட்டுப் போடீ; நான் ஜயிக்கறேன்னுட்டுப் போறையா?" என்றாள் கோபமாக.

"அதொண்ணும் இல்லே. பிரமாத ஜயம்! நித்தியம் நான் ஜயிக்கலையாக்கும்" என்றாள் மீனு அசட்டையாக.

"நான் ஜயிக்கறேன்னுட்டுத்தான் உனக்கு மனசு ஆகல்லே" என்றாள் மகாலக்ஷ்மி, விடாமல்.

"என் மனசு உனக்கு ரொம்பத் தெரிஞ்சுட்டுதாக்கும்."

"பின்னே என்னவாம்? நான் ஜயிக்கறது உனக்குப் பிடிக்கல்லே."

"வாடி; அப்படி நீ நினைச்சுக்கறதா யிருந்தால் ஆடுவோம்; நீயே ஜயிச்சுட்டுப் போ. எனக்கு ஒண்ணும் இல்லே" என்றாள் மீனு வெறுப்புடன்.

"ஒண்ணும் வேண்டாம்" என்றாள் மகாலக்ஷ்மி. மீனு வேண்டா வெறுப்பாக ஆட வருகிறேன் என்று சொல்வது அவளுக்குப் பிடிக்கவில்லை. ஆனால் துக்கம் மட்டும் நெஞ்சை அடைத்தது. அவள் கண் கலங்கி நிற்பதைப் பார்க்கவும், மீனுவுக்கு மனம் இளகிவிட்டது. "வாடீ, வா. ஆடுவோம்" என்று அன்பாக அழைத்தாள். அவ்விதம் அவள் தன் தோல்வி யைப் பெரிதாக நினையாமல் பரிவுடன் அழைக்கவும் மகா லக்ஷ்மிக்கும் எப்படியாவது தான் ஜயித்து அவளைத் தோல்வியுறச் செய்யவேண்டும் என்கிற எண்ணம் போயே போய்விட்டது.

"இன்னிக்கு இதோடு போரும், ஆட்டம் வேண்டாம்" என்று விட்டாள். இந்த நிலையில் அவர்களைப் பார்த்த அம்மாஞ்சிக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. அந்தக்

குழந்தைகளுடைய விளையாட்டில்கூட ஒருவருக் கொருவர் வருத்தம் உண்டாக்க மனமில்லாத அந்தத் தனியான அன்பு அவருக்கு அதிசயமாகப் பட்டது. தாம் அவர்களைக் கவனித் ததைக் காட்டிக்கொள்ளாமல் இருக்க, அப்பொழுதுதான் அங்கு வந்தவர்போல், "கொண்டாருங்கோடி புளியம் விரையை. நான் உங்கள் எல்லாரையும் தோற்கடிக்கிறேன்" என்றார்.

அவர் அப்படிச் சொன்னது அவர்களுக்குப் பெரிதும் வேடிக்கையாக இருந்தது. 'பெண்குட்டிகளான தங்கள் ஆட்டம் அவருக்கு என்ன தெரியும்?' என்று அவர்களுக்குச் சிரிப்பாக இருந்தது. நிஜமாகவே கூடை நிறைய இருந்த புளியம் விதையைக் கொட்டி ஒரே ஆட்டத்தில் பாதியைப் பழம் பிடித்துவிட்டார் அம்மாஞ்சி. போலீஸ் ஆளல்லவா? அவர் ஆஜானு பாஹு. முறம் போன்ற கையில் போட்டுப் பிடிக்கவே பாதி விதையும் அந்தப் பிடியில் அடங்கிவிட்டது. இன்னொரு முறை பிடித்தவுடன் மற்றவர் ஆடுவதற்கு அங்கே விதையே இல்லாமல் எல்லாம் அம்மாஞ்சிக்குப் போய்விட்டது. "இப்பொ என்ன சொல்றேள்? எல்லாரும் தோத்தேளா? வாங்கோ. சப்பே சோபானே பன்றேன்!" என்று சொல்லிக் கொண்டே கூடை விதையையும் அவர்கள் தலையைச் சுற்றிக் கொட்டினார். தங்களுக்குள் ஒருவருக்குத் தோல்வி, ஜயம் என்றால் அவர்களுக்குள் கோபதாபங்கள் பெரிதாக வரக்கூடும். அம்மாஞ்சி ஜயித்ததில் ஒருவருக்கும் அவமானம் தோன்ற வில்லை. எல்லோரும் அதிசயித்து ஒன்று சேர்ந்து சந்தோஷப் பட்டார்கள். புளியம் விதை அபிஷேகத்தில் குழந்தை பாலுவும் சேர்ந்துகொண்டு, 'ஹா, ஹா!' என்று சிரித்துக் குதித்தான். கீழே விழுந்த கொட்டைகளைக் கூடையில் வாரி வாரித் திரும்பத் திரும்பத் தலையில் கொட்டிக்கொள்வது அவனுக்குப் பெருத்த விளையாட்டாக இருந்தது. அதிலிருந்து அவனை விலக்கி அழைத்துப் போவது பெரும் பாடாகி விட்டது.

அந்தத் தாயற்ற குழந்தைகளின் அழகையும் அவர் களுக்குள் இருக்கும் அன்பையும் பார்த்த அம்மாஞ்சி, அவர்கள் வாழ்க்கையில் இனி வரப்போகும் நாட்களை நன்னாட்களாக அமைக்கப் பகவான் அருள் புரிய வேண்டுமென்று பெரிதும் வேண்டிக்கொண்டார். அந்த எண்ணத்தில் தாம் புறப்படு வதற்கு முன் சுப்புவிடம், "மீனுவுக்கு அவசரப்பட்டு ஒன்றும் வரன் முடித்துவிட வேண்டாம்" என்றார்.

'இவருக்கு இருக்கும் அக்கறை பெத்தவனுக்கு இல்லையே! அவன்பாட்டுக்கு இருக்கிறானே!' என்று சுப்பு தானே அங்கலாய்த்துக்கொண்டாள்.

''கடிதாசு தவறாமல் போடு; நாராயணனைச் சின்ன லீவுக்கெல்லாம் இங்கே வந்துவிடச் சொல்லு. ஞானத்தை இங்கே விட்டுட்டுப் போகலாம். நீங்க ரெண்டு பேரும் கொட்டுக் கொட்டுன்னு தனியா என்ன பண்ணுவேள்? அதுக்குப் பார்க்க வேண்டியிருக்கு. உனக்காவது உத்தியோகம் இருக்கும். தர்மாம்பாள் என்ன பண்ணுவாள்?'' இதுமாதிரி யெல்லாம் சுப்பு சொல்லி அவர்களுக்கு விடைகொடுத்தாள். ஞானத்தை விட்டுப் பிரிய மீனுவுக்கும் மகாலக்ஷ்மிக்கும் மனமே இல்லை.

''புக்ககத்துலே சமத்தா இரு'' என்று சாரதாவுக்கு அன்பாகச் சொல்லிவிட்டு அம்மாஞ்சியும் தர்மாம்பாளும் புறப்பட்டுப் போனார்கள். அவர்கள் போன பிறகு வெறிச்சென்று யாருக்கும் கட்டோடு பிடிக்கவே இல்லை. வேலைக்காரன் கிருஷ்ணன்கூட, ''வீடு கலகலப்பா என்ன நல்லா இருந்துது? ஸத்தோன்னு ஒஞ்சு பூட்டுதே!'' என்று வர்ணித்தான். பாலு, ''மாமா, ஓ போயிட்டா'' என்று சதா வாசலைக் காண்பித்துச் சொல்லிக்கொண் டிருந்தான். கோபாலையர் அம்மாஞ்சியின் பிரிவை உணர்ந்தாரோ என்னவோ? வாய் விட்டு ஒன்றும் சொல்லவில்லை. தம் மனத்தை வெளியிட்டுச் சொல்லும் சுபாவந்தான் அவருக்கு இல்லையே!

# 10
# குளத்தங்கரை

**தா**னப்பாளையத்து மாதர்கள் சங்கம் கூடும் இடமாகிய குளக்கரையைப் பற்றி ஒரு வார்த்தை சொல்லாமல் நாம் கதை சொல்லிக்கொண்டு போவது சரியல்ல; கேவலம் குக்கிராமத்திலும் குக்கிராமமாகிய தானப்பாளையத்தில் மட்டும் அது இல்லாமல் வேறு எங்காவது அதுபோல ஒரு தடாகம் இருந்திருப்பின், அது இவ்வளவுக்குள் எவ்வளவோ பிரசித்தம் அடைந்திருக்கக்கூடும்; அதன் முத்துப் போன்ற தெளிந்த நீரும், சுற்று வட்டத்தின் ரமணீயமான அமைப்பும் பார்ப்பவர் மனத்தையெல்லாம் கொள்ளைகொள்ளும் விதத்தில்

இருந்தன. கண்ணுக்கு எட்டியவரையிலும் பச்சைப் பசேலென்ற புல்வெளியும் அதற்கு அளவு கோலிச் சுவர் எழுப்பினாற்போல் நின்ற சிறு குன்றுகளின் வளைந்த தொடரும் சேர்ந்து இயற்கை தானாக அவ்வூராருக்கு அமைத்துக் கொடுத்த தனி இடமாக அது இருந்தது. குன்றுகளின் பள்ளத்தாக்கில் பாறைகளின் நடுவிலிருந்து தானாகச் சுரந்த ஊற்றுநீரைத் தாயான பூமாதேவியின் அன்பூற்று என்று சொல்லாமல் வேறு என்ன சொல்வது? எவ்வளவு கடும் கோடையானாலும் அவ்விடத்திற் கென்று ஏற்பட்ட ஒரு தனிக்காற்று அந்தத் தெளிந்த ஜலத்தின் மேல் வீசி அடுக்கடுக்காகச் சிறிய அலைகளை எழுப்பி, சுற்றிலும் கரை சூழ்ந்து அசைவற்றிருக்கும் சாதாரணக் குளத்தின் நீர் போலன்றி 'முசி முசி' என்று ஒலித்தோடும் நதியின் தோற்றத்தை அதற்கு அளித்தது.

கிராமத்துச் சிறு வீடுகளையும் அதன் தெருக்களையும் கடந்து சிறிதே விலகி இவ்விடத்துக்கு வந்தால் விசாலமான பரந்த வெளியையும், சந்தடியற்ற அமைதியையும் காணலாம். ஆசாபாசங்களில் அகப்பட்டு உழலும் பாமரனுக்கும், சித்தத்தை அடக்கிச் சிவனைத் தன்னுள்ளே தனித்துத் தரிசித்து இன்புற்றிருக்கும் யோகிக்கும் உள்ள வித்தியாசத்தையே இவை எடுத்துக் காட்டி நின்றன. நாம் ஒரு கவியாக மட்டும் இருந்து அவ்விடத்தே சிறிது நின்று, அஸ்தமிக்கும் பகலவன் தன் பொற் கிரணங்களால் வானத்தை வெள்ளியும் தங்கமுமாக மெருகிட்டுச் செய்யும் ஜாலங்களையும், அந்த ஒளியில் தன் பசுமை நிறத்தையே மஞ்சள் நிறமாக மாற்றிக்கொள்ள யத்தனிக்கும் குன்றுகளையும், அதன் சரிந்த வயல் பிரதேசத் தையும், இவைகளையெல்லாம் ஒருங்கே கண்ணாடி போலப் பிரதிபலித்துக்கொண் டிருக்கும் படிகம் போன்ற தடாகத் தையும் பார்த்தோமானால், கவிதை தானாகவே பொங்கி வந்து விடாதா? சித்திரக்காரன் ஒருவன் அந்தக் காட்சியைக் காண நேர்ந்தாலும் அதை அப்படியே சித்திரமாக வரைந்து அழியாப் புகழ் அடைந்துவிட மாட்டானா? அவ்வளவு சொல்லுவானேன்? கற்பனையோ கைத்திறனோ வேண்டாத, கேவலம் 'போட்டோ'ப் படம் பிடிப்பவனாக இருந்தாலும் அந்தக் காட்சியைப் படம் பிடித்து வெளியிட்டு உலகப் பிரசித்தம் அடைந்துவிடுவான் என்பது நிச்சயம். இத்தகைய மனோரம்மியமான இடமானது சில சமயம் எங்கோ மறைந்து வசிக்கும் மகானைப்போல்

யாரும் அறியாவண்ணம் இந்தச் சிறிய கிராமத்தில் மறைந்திருந்தது.

ஆனால் அன்றாடம் அதில் நீராடி அதன் தண்ணீரை அறிந்தும் நமது தானப்பாளையத்து வாசிகள் அதன் விசேஷ செளந்தரியத்தைத் தனித்து அறிந்துகொள்ளாமலே, அநுபவித்து மட்டும் வந்தார்கள். மானஸ ஸரஸுக்கு ஒப்பான அந்தப் பொய்கை அவர்களுக்குத் தேகாரோக்கியத்தையும், அந்த ஆரோக்கியத்தினால் உண்டான செளக்கியத்தையும், அதை அநுசரித்து ஆயுள் விருத்தியையும் கொடுக்கும் சாதனமாக இருந்தது. கிராமத்திலிருந்து குளத்துக்கு வரும் பாதையை ஒட்டினாற்போல் குளத்துக்கு அருகில் ஒரு நந்தவனமும், குளத்தின் நீரினாலேயே செழித்து விளங்கிற்று. குளத்தின் கரும்பான நீரில் வளரும் மரஞ் செடிகள் செழித்து நிமிர்ந்து வளராமல் என்ன செய்யும்? 'நந்தவனத்தில் மலராத பூ இல்லை' என்று சொல்லும்படி பல வகையான செடி கொடிகளும் பூத்துக் குலுங்கின. குளத்தில் ஸ்நானம் செய்ய வரும் கிராமத்துப் பெரியவர்களையும் சிறுவர்களையும் அந்த நந்தவனம் மனத்தைக் கவர்ந்து இழுத்ததுபோல் அங்கே அருகில் கோயில் கொண்டிருந்த சிவபெருமானுக்கும் அவர்களைத் தன்பால் இழுக்கச் சக்தி இருந்ததாகத் தெரியவில்லை. பெரியவர்கள் தம் வீட்டுப் பூஜைக்காகப் புஷ்பம் எடுக்கும் வியாஜத்தில் நந்தவனத்துக்குள் சென்று வந்தார்கள் என்றால், சிறுவர்கள் மணம் கமழும் அதன் பூச்செடிகளின் நிழலில் விளையாடவும், சிறுமியர்கள் வாசனை மிகுந்த மலர்களைப் பறித்து மாலையாகத் தொடுத்துத் தலையில் சூட்டிக்கொள்ளவும், காலை மாலை இரண்டு வேளையும் அங்கே பொழுதைக் கழித்தார்கள். ஆடம்பரமற்ற வாழ்க்கை வாழும் அவ்வூராருக்குத் தேவைகள் மிகச் சொற்பமே யாகையால் ஈசுவரனிடம் வரங் கிடைக்கவேண்டிய அவசியமும் அவர்களுக்கு அவ்வளவாக இல்லை. ஏதாவது விசேஷ தினங்களில் ஈசுவரனைத் தரிசித்துப் பிரார்த்தித்துக் கொள்வது தவிர, சதா அவர் கோயிலை முற்றுகையிட்டு, சாதிக்கக் கூடாததைச் சாதித்துக்கொடுக்கும்படி வேண்ட அவர்களுக்குச் சந்தர்ப்பமே நேரவில்லை. இரண்டொரு பக்தர்கள் அப்போதப்போது வந்து தரிசித்துப்போவது தவிர மற்ற நேரமெல்லாம் ஏகாந்தத்தையும் நிம்மதியையும் அநுபவித்து வந்தார் அந்தப் பெருமான்.

கோவில் குருக்கள் மட்டும் நாலு கால பூஜையையும் நைவேத்தியத்தையும் தவருமல் செய்து வந்தார். அவர் வயிற்றுப்பிழைப்பு அதுவாக இருக்கும்போது அவர் அதைத் தவருமல் செய்து வந்ததில் அதிசயம் என்ன? அங்கே கோயில் கொண்டிருந்த பரமனும் தன்னை வந்து தரிசிக்கும் பக்தகோடிகளைப் பெருக்கி இந்தக் குளத்தின் அமைதியைக் கலைக்க விரும்பவில்லை போலும்! சுருங்கச் சொல்லுமிடத்து மனோகரமான ஏகாந்தம் அவ்விடத்தில் அமைந்திருந்தது. அவ்வூராரும் அதை அறியாமலே அதில் ஈடுபட்டு லயித்திருந்தார்கள். மாதர்கள் மணிக்கணக்கில் பொழுது போவதே தெரியாமல் குளத்தில் நீந்தி விளையாடி ஸ்நானம் செய்தார்கள். அதோடு தங்கள் ஊர்வம்பை ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொண்டு அளவளாவும் இடமாகவும் அதை அமைத்துக்கொண்டார்கள். கிராமத்தில் ஒருவர் வீட்டு நல்லதோ கெடுதலோ எதுவானாலும் அங்கேகூடும் பெண்களால் அது விவாதிக்கப்பெற்று, 'சரி, தப்பு' என்கிற விதாயமும் செய்யப்பட்டுவிடும். அவ்விதம் தீர்த்துவிட்ட விஷயத்தைச் சிலர் வேறுவிதமாக நினைத்தாலும் வெளியிட்டுச்சொல்ல யாரும் துணியமாட்டார்கள். ஏனென்ருல் பலபேர் ஒன்ருகத் தீர்மானித்த அபிப்பிராயத்துக்கு மாருக சிலருடைய நினைப்புக்குப் பலம் ஏது? மொத்தத்தில் தங்கள் காரியம் எதற்கும் இந்த மாதர் சங்கம் என்ன சொல்லுமோ என்கிற பயம் அந்தக் கிராமத்தார் ஒவ்வொருவருக்கும் உண்டு.

இவ்விதம் அவ்வூர் மாதர்கள் கூடிப் பேச அதன் மத்தியில் நிதானமாகத் தங்கள் ஸ்நானத்தை முடித்துக்கொள்ள நிறைய அவகாசம் அவர்களுக்குத் தினந்தோறும் கிடைத்து வந்தது. அந்த உரிமையை அவர்களிடமிருந்து யாரும் பறிக்கவில்லை. புருஷர்கள் பகல் பத்துநாழிகை வாக்கில்தான் தங்கள் ஸ்நான பானுதிகளைச் செய்ய அங்கே வருவார்கள். ஆகையால் அரண்மனை அந்தப்புரம்போல் இஷ்டப்படி அநுபவிக்க மாதர்களுக்குச் சுதந்தரம் தானுகவே ஏற்பட்டிருந்தது. குடியானவர்களுக்கென்று வயல் நடுவில் பிரத்தியேகமான சிறு குளம் ஒன்றும் இருந்தது. அதைத் தங்கள் சௌகரியம்போல் உபயோகித்துக் கொண்டார்கள் அவர்கள்.

இவ்விதம் எல்லா விதத்திலும் தனிப்போக உரிமை கொண்டு காலை நேரத்தில் இஷ்டம்போல் வம்பு பேசி, தெளிந்த நீரில் இன்பமாக நீராடி, மனத்திலும் உடலிலும் ஒருங்கே உத்-

சாகத்தை அடைந்து வந்தார்கள், அவ்வூர் மாதர்கள். அதிலும் கோடை நாட்களில் பின்னும் விசேஷமாகவே வெகு நேரம் வரையிலும் அந்தக் குளிர்ந்த நீரை விட்டு வரவே அவர்களுக்கு மனம் வருவது இல்லை. வீடும் வீட்டுக் காரியங்களும் அவர்களை மல்லுக்கட்டாவிட்டால் அவர்கள் நாள் முழுவதையும் அங்கேயே கழித்துவிட மாட்டார்களா?

நாம் கதை சொல்லும் அன்றும் கோடைதான். பெண்கள் என்றும்போல் குளக்கரையில் குழுமியிருந்தார்கள். ''ஏண்டி லக்ஷ்மி, உங்க எதிராத்துலே கல்யாணமாமே?'' என்று ஒருத்தி பேச்சை ஆரம்பித்தாள்; கோபாலையரகத்துக்கு எதிர்வீட்டு லக்ஷ்மியிடம்.

''ஆமாம்; அப்படித்தான் தோன்றுகிறது'' என்றாள் லக்ஷ்மி.

''அதென்ன அப்படி விட்டேத்தியாப் பேசறேள், எதிராத்தில் இருந்துண்டு?'' என்றாள் இன்னொருத்தி.

''எதிராத்துக் காரியம்னு மட்டும் தனியே ஏதாவது பாத்தியமா? உங்க எல்லாரையும் போலத்தானே அவாளும்?''

''இருந்தாலும் எதிரில் கண்ணுலே படறதும் காதுலே கேட்குறதும் அதிகம் இருக்கும்.''

''என்னவோ நமக்கு ஏதுக்கு இன்னொருவர் வம்புன்னு நான் கவனிக்கறதில்லே.'' - இது அவள் பெண் மங்களத்தின் கல்யாணத்தைப்பற்றிச் சுப்பு தவறாக அவளை நினைத்ததிலிருந்தே அவளுக்கு வந்திருந்த வைராக்கியம். ஆனாலும் அவர்களைப்பற்றி முற்றும் கவனியாமலும் பேசாமலும் இருந்துவிட அவளால் முடியுமா? ''கடைசியிலே நாணம்மாள் பிள்ளைக்குன்னா கொடுக்கறா?'' என்றாள்; அப்படிச் சொல்லும்போது சுற்று முற்றும் நாணம்மாளோ அவள் மூத்த நாட்டுப் பெண்ணோ, கோபாலையர் வீட்டு மனுஷ்யர்களோ யாரும் இல்லையா என்பதைப் பார்த்துக் கொண்டே சொன்னாள்.

''அதுதாண்டி எனக்கும் அதிசயம்! வேறே வரன் கிடைக்கலையா இவாளுக்கு? நாணம்மாள் அதிருஷ்டத்தைப் பாரேன்'' என்றாள் ஒருத்தி.

''அப்படிச் சுப்புவே குழையடிச்சுக் காரியத்தை முடிச்சுண்டிருக்கா; கோபாலையர்தான் ஒண்ணையும் காதிலே போட்டுக்கறதில்லையே; அப்புறம் என்ன?'' என்றாள் லக்ஷ்மி.

''இருந்தாலும் அந்தப் பிள்ளை எதிலே ஒசத்தி? நம்ம ஊர்ப் பாக்கிப் பிள்ளைகளைக் காட்டிலும், படிப்பா, பணமா, ரூபமா,

என்னதான் பிரமாதமாக இருக்கு, கோபாலன் பொண்ணைக் கொடுக்க?'' என்றாள் பெரியவளான ஒருத்தி.

''எல்லாரையும்விட நாணம்மாவுக்குச் சமத்திருக்கு; அதைச் சொல்லவேணுமோ இல்லையோ? இதை மனசுலே வெச்சுண்டு சுப்புவை அன்னியிலிருந்து சிநேகம் பிடிச்சு வச்சிருக்கா. காமாக்ஷி போனதுகூட ஒரு விதத்துலே நல்லதாப் போச்சு. அவ இருந்தா இப்படி வேறே வரன் பார்க்காமே கொடுத்துடச் சம்மதிப்பாளா? ஒருகாலும் மாட்டாள். அப்போ கோபாலையரும் இப்படிக் குடும்பப் பத்து இல்லாமே இருக்க மாட்டார். சுப்புவுக்கும், 'என்ன செய்வோம்? எங்கே போய்த் தேடுவோம்?' என்கிற கவலை ஒரேயடியா வந்து நாணம்மா பிள்ளையே போரும்னு அப்போ தோணியும் இருக்காது'' என்றாள் லக்ஷ்மி.

''ஆமாம், அது வாஸ்தவம்; அவா அம்மாஞ்சி வேறே மாத்தலாகித் தூரதேசம் போயிட்டார். யார் வரன் பார்ப்பாங்கற கவலைதான் அவளுக்கு. பொண்ணு பெரிசாயிடுத்து; இந்த வருஷம் பண்ணுமே வெச்சுண்டிருந்தா நன்னாவே இருக்காது. அப்புறம் குடி முழுகிப்போகும்'' என்றாள் லக்ஷ்மியின் மாமியார்.

''அப்படி முழுகறதா யிருந்தா நம்மூரிலே எத்தனையோ குடி முழுகி யிருக்கலாமே. எல்லாரும் குதிர் குதிராப் பொண்ணை வெச்சிண் டிருக்கலையா?'' என்றாள் ஜாடையாக ஒருத்தி. முன் பேசினவள் பேத்திகளுக்கெல்லாம் எந்த வயசில் கல்யாண மாயிற்று என்பதை அந்தப் பேச்சிலே குத்திக் காண்பித்தாள்.

''அதுக்கென்ன, எத்தனை வயசு வெச்சுண்டிருந்தாலும் வரவன்தானே வரப்போறான்? புதிசா யாரும் பொறக்கப் போறதில்லையே?'' என்றாள், அந்தப் பேச்சை ஓட்ட மனம் இல்லாத லக்ஷ்மி. அவள் பெண் மங்களத்துக்கு வயசு ஆக விட்டுத்தானே கல்யாணம்? அந்த நினைவு அவளை உறுத்தாதா?

''சாரதா புக்ககம் போனதிலிருத்து குழந்தைகளைத் தூர தேசத்துக்கு அனுப்பிவிட்டுப் பிரிஞ்சிருக்கச் சுப்புவுக்கு மனசில்லே. புக்ககத்தில் இருக்கும் பொண்ணை அடிக்கொருதரம் போய்ப் பார்க்கவும், அழைத்து வரவும் இங்கே யார் இருக்கா? மருமுழிச்சுப் போன பொண்ணை இன்னம் திரும்ப அழைக்க வகையில்லாமே கிடக்குன்னு சதா அங்கலாய்ச்சுண்டு கிடக்கறா. அதுதான், இந்த வரனை உள்ளூரு; எங்கும் போகவேண்டாம்.

குழந்தையைக் கண்ணாலேயாவது பாத்துண்டிருக்கலாம் என்கிறது அவளுக்கு'' என்று லட்சுமி சொல்லி வந்தபோதே, ''நாணம்மாள் நாட்டுப்பொண்ணை நன்னா வெச்சுக்குவள்'' என்றாள் நடுவில் ஒருத்தி.

''மத்தவா மட்டும் சரியா வெச்சுக்கமாட்டாளா, என்ன?'' என்றாள் லக்ஷ்மி சற்றுக் கோபமாக. அவள் நாட்டுப் பெண்ணைப் படுத்துவதாக ஊரில் ஒரு வம்பு என்பது அவள் காதுகளுக்கும் கொஞ்சம் எட்டித்தான் இருந்தது. வெளி வேஷம் போடஅவளுக்குத் தெரியாது. யாராக இருந்தாலும் மனத்தில் பட்டதைப் பளிச்சென்று சொல்லிவிடுவதில் அவளுக்கு அந்தப் பெயர். அதோடு அவள் நடத்தையில் நல்லது, கெட்டது, இவைகளை எடுத்து நாலுபேரிடம் சொல்லிப் பகிரங்கப்படுத்த அவள் மாமியார் போன்ற பந்துக்களும் அவளுக்கு இருந்தார்கள். நாட்டுப் பெண்ணிடத்திலும் சரி, தப்பை எடுத்துக் காண்பித்துக் கண்டிப்பாகத்தான் நடந்துகொள்ளுவாள். அது பார்க்கிறவர்களுக்குச் சிறு பெண்ணைக் குற்றம் கூறுவதாகப் படும். அதற்கு வேண்டி இவ்வளவு நாளும் பழகிப் போன சுபாவத்தை அவள் மாற்றிக்கொள்ள முடியுமா?

''பாத்திரம் பண்டம் எல்லாம் வேணுங்கறபடி நாணம்மாளேன்னு வாங்கிக்கொள்ளறாளாம்? கல்யாணங்கூட அவளே நடத்திக்கப் போறாப்பலே இருக்கு'' என்றாள் இன்னொரு வம்புக்காரி.

''நமக்கேதுக்கு இந்த வம்பெல்லாம்? போரும். பகலிலே பக்கம் பாத்துப் பேசணும். சுப்பு வேண்ணாப் பேசாமே இருந்தாலும் இருந்துடுவ. நாணம்மா காதிலே பட்டா நம்மையெல்லாம் கப்பலேத்திப்புடுவ!'' என்றாள், தூரத்தில் நாணம்மாள் வருவதைப் பார்த்த ஒருத்தி.

''தப்பா என்ன சொல்லிப்பிட்டாளாம்?'' என்று லக்ஷ்மி சொல்லி வாய் மூடவும், நாணம்மாளும் அருகில் வந்து சேர்ந்தாள்.

அவளை எல்லோரும், ''வாங்கோ'' என்று வரவேற்று, ''பிள்ளைக்குக் கல்யாணமாமே; முகூர்த்தம் எப்போ? இவ்வளவு தள்ளிப்போயிப் பொண்ணைப் புடிச்சேளே!'' என்றெல்லாம் வேடிக்கையும் விளையாட்டுமாகச் சந்தோஷம் விசாரிப்பதில் முனைந்தார்கள்.

அத்துடன் அவள் சொல்லும் பதிலை ஆவலோடு கேட்டுக் கொண்டே அவரவர்கள் ஸ்நானத்தை முடித்துக்கொண்டு வீடு போய்ச் சேர்ந்தார்கள். லக்ஷ்மிக்கு மட்டும், 'என் மகனைப் போலத்தானே நாணம்மாள் பிள்ளையும்; அவனுக்கு இந்தப் பெண்டாட்டி கிடைக்க என்ன அதிருஷ்டம்?' என்றுதான் இருந்தது. எதிர் வீட்டில் இருந்துகொண்டு அவள் எப்போதும் அந்தப் பெண் குழந்தைகளின் சமர்த்தையும், அவர்கள் அன்பையும் அடக்கத்தையும் பார்த்துப் பார்த்து வியந்து மனத்துக்குள் கொண்டாடிக்கொண் டிருக்கிறாள் அல்லவா?

# 11

# நாணம்மாளின் சமர்த்து

அந்த மாதர்கள் பேசிக்கொண்டதுபோலச் சுப்புவுக்கு ஒத்தாசை செய்யும் பாவனையில், நாணம்மாள், தானே கல்யாணத்துக்கு வேண்டிய சகல ஏற்பாடுகளையும் செய்துகொண்டாள். சீர் வகைகளையெல்லாம் தங்கள் வீட்டுக்கும் தனக்கும் வேணும் என்கிற வகையில் வாங்கி வைத்துக்கொண்டாள். 'சாரதாவின் கல்யாணத்தைப்போல் வீண் ஆடம்பரத்தில் செலவு செய்வானேன்?' என்று கல்யாணத்தையும் சிக்கனமாகச் செய்ய ஏற்பாடுகள் பண்ணினாள். 'குழந்தைகளுக்குள் ஒருவருக்கொருவர் வித்தியாசம் செய்யலாமோ? கூடாது' என்று சுப்பு நினைத்ததற்கு அந்தப் பணத்துக்கும் சேர்த்துச் சீர்வகைகளில் அதிகப்படுத்திக் கொள்ளலாம், என்றென்றும் உபயோகப்படும் என்று எடுத்துக் காட்டி, அதற்காகவும் சேர்த்துச் சாமான்கள் வாங்கிக்கொண்டாள்.

''இப்படிப் பேச்சிலேயே சுப்புவின் தலையைத் தடவி அடிச்சிப் பறிச்சிண்டு போறாளே! இதை யார் எடுத்துச் சொல்லித் தடுக்க முடியும்?'' என்று ஆத்திரம் ஆத்திரமாக வந்தது எதிரகத்து லக்ஷ்மிக்கு.

'நாலு பேர் வந்து பார்த்துப் புகழும்படி கல்யாணம் விமரிசையாகச் செய்வதும், ரெண்டாம்பேர் அறியாமல் ரகசியமாக வாங்கி உள்ளே வச்சிப் பூட்டிக்கறதும் ஒண்ணாகப் போயிடுமோ? பிள்ளை இல்லாச் சொத்தா? கல்யாண ஆடம்பரம் வேண்டாம் என்றால் பணம் மிச்சமாகட்டுமே? அதையும் சேர்த்து இவளை யார் வாங்கிண்டு போகச் சொல்றா? நல்ல

அதிசயம்! இவள் வஞ்சகம் சுப்புவுக்குத் தெரியல்லியே. எடுத்துச் சொல்வாரும் இல்லேயே!' - இது லக்ஷ்மியின் ஆதங்கம்.

'அம்மாஞ்சியாவது வந்து இந்தப் பகல் கொள்ளேக்கு ஏதாவது முட்டுக்கட்டை போடுவாரோ?' என்று அவள் ஆவலாக எதிர்பார்த்ததும் வீண்போயிற்று. அம்மாஞ்சிக்கு லீவு கிடைக்கவில்லே. அதனுல் கல்யாணத்துக்கு வர முடியவில்லே. மனேவியையும் பெண்ணேயும் மட்டும் அனுப்பியிருந்தார்.

அவர்களும் கல்யாணம் இரண்டு நாள் இருக்கும்போது தான் வந்து சேர்ந்தார்கள். தர்மாம்பாள் இது மாதிரி விஷயங்களில் தானுகத் தலேயிட்டுக்கொள்ளுகிறவள் அல்ல. சுப்பு, அம்மாஞ்சியிடம் போய் யோசனே கேட்கப் போகிருளா? இல்லே. "இப்படி அம்மாஞ்சி வர முடியாமே போகுமோ? நாணம்மாவாக இருக்கக்கொண்டு என்னமோ நம்ம யோக்கியதை தெரிஞ்சு தானே செஞ்சுக்கரு. இன்னொரு சம்பந்தியாளு, இப்படி அம்மாஞ்சியும் ஒத்தாசைக்கு இல்லாமே இருக்கறத்துக்குச் சிரிப்பாய்ச் சிரிக்கணும்'' என்று சுப்பு வாய்க்கு வாய் சொல்லத் தொடங்கினுள்.

இப்படிச் சுப்பு நினேக்க ஆரம்பித்த பிறகு நாணம்மாளிடம் குற்றம் எடுத்துக்காட்டி அவள் மனத்தில் படவைப்பது என்பது எவ்விதம் சாத்தியம்? அதுபற்றி லக்ஷ்மி அதிகம் பேசினுலும் ஊரில் உள்ளவர்கள் அவளுக்கு நாணம்மாளிடம் பொருமை என்றுதான் எடுத்துக்கொண்டார்கள். அதனுல் குளக்கரைச் சங்கத்திலும் எதிர்வீட்டில் இருந்துகொண்டு தனக்கு அப்போது கண்ணில் படும் அதிசயத்தையும் காதில் விழும் விந்தையையும் சொல்லி, நாணம்மாளுடைய சாமர்த்தியத்தையும் அதில் இருக்கிற அற்பத்தனத்தையும் விவரித்து வெளிப்படுத்த முடியாமற் போயிற்று. தனக்குத் தானே வீட்டில், "நாணம்மாள் என்னதான் ஜன்மாந்தரத்தில் பூஜை பண்ணியிருப்பாள், இப்படிப்பட்ட நாட்டுப் பொண் வருவதற்கு? ஏதோ கொஞ்சம் கொஞ்சம் அங்கபணீன்னு அரிசி பருப்புச் சாமான் வாங்கிவைப்பா, பார்த்திருக்கு. நாணம்மாள் வருஷாந்தரத்துக்குன்னு சாமான்கள் சேத்துட்டா; மூட்டையோடு அரிசியும் பருப்புமா! புதையலே எடுத்த மாதிரின்னு இருக்கு, அவளுக்கு நாட்டுப்பொண் வந்தது?'' என்று பொரிந்துபோனுள் லக்ஷ்மி.

அவள் அகத்துக்காரர், பிள்ளை, பெண்கள், இவர்களிடங் கூட அவளால் இதைப்பற்றி அதிகமாகச் சொல்ல முடியவில்லை. இவள் மனத்தைத் தெரிந்துகொள்ளாமல், 'பிறத்தியாரைப் பார்த்து அசூயைப் படுவது சரியில்லை' என்று அவர்களும் அவளுக்கு நற்போதனை செய்யத் தொடங்கினார்கள். ''ஐயேடி! இவர்களுக்கு எங்கே தெரிகிறது, என் சுபாவம்? ஒத்தரைப் பார்த்து எனக்கு அசூயையும் இன்னொண்ணும் கிடையாது. எந்த இடத்து நியாயமும் அநியாயமும் என் மனசில் பட்டு விடும். மனசு பொறுக்காது. அவ்வளவுதான்'' என்று தன்னைத்தானே அடக்கிக்கொள்ள வேண்டியிருந்தது லக்ஷ்மிக்கு.

லக்ஷ்மி நினைத்தது இம்மியளவுகூடப் பிசகில்லை. நாணம்மா ளுக்கும் அவள் பிள்ளை சங்கரனுக்கும் அபார அதிருஷ்டந்தான் என்பதில் சந்தேகம் என்ன? காமாக்ஷி இறந்து, கோபாலனும் குடும்பக்கவலையை மேல்போட்டுக் கொள்ளாமல் தன்பாட்டுக்கு இருந்திருந்தால், அந்தப் பிள்ளைக்கு மீனுவைக் கொடுத்து விவாகம் செய்ய - என்னதான் நாணம்மாவிடம் சிநேகம் என்றாலும் - சுப்புவுக்கும் அவ்வளவு சடுதியில் மனம் ஒப்பி யிராது. 'அம்மாஞ்சியும் எங்கோ தூரத்தில் போய் உட்கார்ந்து விட்டான். வரன் பார்க்கவும் நமதாய் மனுஷ்யாள் இல்லை. அப்படியும் எங்கோ கண்காணாமல் கொடுத்துவிட்டு என்ன பண்ணுகிறது? சாரதாவையே அடிக்கடி பார்க்க முடியாமல் கஷ்டமாக இருக்கிறது. ஏதோ நல்ல மனுஷ்யாள்; குழந்தை சந்தோஷமாக இருக்கிறாள் என்பதில் மனசு சமாதானமாக இருக்கிறது. அதில்லாமல் குழந்தைக்குக் கஷ்டம் என்றிருந்தால் எப்படி இருக்கும்? அதைத் தீர்க்கக் கோபாலனால் ஆகுமா?'

இது மாதிரி நினைக்கவே சுப்புவுக்கு மனம் நடுங்கிற்று. 'ஏதோ அந்த மட்டும் சாரதா அதிருஷ்டசாலி; நல்ல மாமனார், மாமியார், சாதுக் கணவன்; எல்லாம் அவளுக்குக் கிடைத்து விட்டார்கள். அதே போலப் பாக்கிப் பொண்களுக்கும் எதிர் பார்க்கமுடியுமா? நாணம்மாவானால் உள்ளூர் மட்டுமா, பிறந்த அன்று முதல் பழக்கம். குழந்தை ஆத்துலேயே இருக்கிற மாதிரிதான். ஏதாவது சிறிது முன்னே பின்னே நடந்தாலும், ஏன் அப்படி என்று தாட்டியாகக் கேட்கலாம். தாயில்லாக் குழந்தையை அருமை தெரிஞ்சு வெச்சுக்க வேறெங்கே சரியாக வரும்?' - இப்படி நினைத்துத்தான் சுப்பு ஏற்பாடு செய்து விட்டாள். கோபாலையரும் ஒப்புக்கொண்டுவிட்டார்.

அதிருஷ்டம் வரும்போது இவ்விதந்தான் ஏதேதோ காரணம் கொண்டு வரும். நாணம்மாள் சந்தோஷத்தில் பறந்து பறந்து எல்லாம் செய்தாள். அவள் கணவருடைய பெருமைகளுக்குக் கேட்க வேண்டுமா? என்றுமே மனைவியின் சாமர்த்தியத்தில் அவருக்கு அபார நம்பிக்கை. இப்போது அது உச்ச நிலையை அடைந்தது. வாய் திறந்தால் மனைவியின் சிலாகிப்பைத் தவிர வேறு பேச்சு அவரிடம் இல்லை. தன் கணவர் இவைகளைக் கேட்டு வந்து வீட்டில் சொன்னபோது லக்ஷ்மிக்குக் காது கொப்புளித்துவிடும்போல் இருந்தது.

''அந்தப் பிராம்மணன் போது போகாமே பெருமை அடிச்சுண்டா, அதைக் கேட்டு வந்து நீங்களும் வெட்கமில்லாமே, அதிசயமாச் சொல்றேளே. நான் ஒரு காரியம் வீட்டிலே சொன்னா, நீங்க, உங்க பொண்ணு, பிள்ளை, சகலமான பேரும் அதைத் தடுத்துச் சொல்லிச் செய்ய வொட்டாமல் பண்ணிவிடுகிறேள். உடனெடொத்த பிராம்மணன் - நாணம்மாள் ஆம்படையான் - ஊரெல்லாம் பொண்டாட்டி பெருமையைப் பீத்திண்டு அலையறார். அதையெல்லாம் விடாமே கேட்டு வந்து சொல்லுங்கோ, இதுலேயே உங்களுக்கும் அவருக்கும் இருக்கிற வித்தியாசம் தெரியலையா?'' என்று அடுக்கிக்கொண்டே போனாள் லக்ஷ்மி.

அப்படி அவள் தம்மையே திருப்பிக்கொண்டதில் மேலும் மேலும் அவள் கணவர் நாணம்மாளின் பெருமைகளைக் கேட்டு வந்து எவ்விதம் சொல்ல முடியும்? ஆனால் வீட்டில்தான் அதைப்பற்றிப் பிறகு வாய் திறக்கவில்லையே தவிர, அதை அவரே கேளாமல் இருப்பதென்பது அவருக்குச் சாத்தியமாக இல்லை. நாணம்மாளின் பர்த்தா அவரைச் சும்மா விடவில்லை. நாணம்மாள் செய்ய வேண்டியவைகளை எல்லாம் தானே செய்து கொண்டு விடுகிறாள்; கணவருடைய சாமர்த்தியங்களில் அவளுக்கு அவ்வளவாக மதிப்பில்லையாகையால் தன் ஏற்பாடு எதற்கும் அவரை அவள் எதிர் பார்க்கவில்லை. அப்படி இருக்கும் போது அவருக்கு மனைவியின் புகழைக் கீதமாகப் பாடிவருவது தவிர வேறு ஜோலிதான் ஏது? ஆகவே மனைவியின் பெருமை தமக்கும் பெருமை என்பதாக எடுத்துக்கொண்டு அதை நெடுகிலும் சொல்லிவந்தார்.

விவாகம் 'காதும் காதும்' வைத்தாற்போலச் சத்தமின்றி நடந்தது. ஒரு தடபுடல் இல்லை. சாரதா, அவள் கணவன்,

அவள் மாமனார், மாமியார் இவர்கள் வந்திருந்தார்கள். ஏற்கனவே தர்மாம்பாளும் அவள் பெண்ணும் வந்திருந்தார்கள் அல்லவா? பரீட்சை முடிந்து காலேஜ் மூடி விட்டார்கள் ஆகையால் அவர்களோடு நாரயணனும் வந்திருந்தான். இந்த மனிதர்களை வைத்துக்கொண்டு ஊரைக்கூட வருந்தி வருந்தி ஒவ்வொரு வேளையும் அழையாமல் விவாகம் நடந்தேறியது.

வந்த சம்பந்திகளையும் மாப்பிள்ளையையும் தர்மாம்பாளை யும் கூடவே பத்துப் பதினைந்து நாள் இருந்து போகும்படி சுப்பு வற்புறுத்திச் சொன்னதில் அவர்களும் அவள் வார்த்தையைத் தட்டமுடியாமல் தங்கினார்கள். அநேகமாக ஒத்த வயசுப் பிள்ளைகளான ஸ்ரீநிவாசன் புதுமணமகன் சங்கரன் இனி மாப்பிள்ளை யாகப்போகும் நாராயணன் மூவரும் ஒருவருக் கொருவர் வேடிக்கையும் விநோதமுமாக வம்பு பேசிப் பொழுது போக்கினார்கள். போது போதாய் அவ்விடத்துக் கோவில் குளத்தை யெல்லாம் சுற்றி வருவதில் ஒருவகைச் சந்தோஷமும் அடைந்தார்கள். கிராமத்தின் சுத்தமான காற்று, தேகத்துக்குச் சுறுசுறுப்பையும் மனத்துக்கு இன்பத்தையும் ஒருங்கே ஊட்ட வல்லது அல்லவா?

கல்யாணம் இனித்தான் ஆகவேண்டும் என்றாலும் நாராயணன் இப்போதே மாப்பிள்ளையாகக் கருதப்பட்டு விட்டான் அந்த வீட்டில். மாப்பிள்ளைக்கு நடக்கும் ஆசார உபசாரம் அவனுக்கும் நடக்கும்படி சுப்பு கவனமாகப் பார்த்துக் கொண்டாள். வேலையாள் கிருஷ்ணன் பிரத்தியேகமாகச் 'சின்ன மருமகப் பிள்ளை'யை, ஓடியாடிக் கவனித்துக்கொண்டான்.

''நம்ம சின்னம்மா மாப்பிள்ளையின்னா, நான் நல்லா விசாரிச்சுக்க வாணாமா?'' என்று அவன் அதற்கு நியாயம் வேறு எடுத்துச் சொன்னான். மகாலக்ஷ்மி அவன் கண்களில் படாமலே ஓடி ஒளிந்தாள். 'எங்கே ஆம்படையான்?' என்று கேட்டு, அவனைத் தேடி அலைந்த அவளுடைய துணிச்சலெல்லாம் இப்போது எங்கோ பறந்து போயிற்று. அவனைக் கண்ணால் பார்க்கவே அவளுக்கு வெட்கம் பிடிங்கித் தின்றது. அவன் இருக்கும் இடத்திலேயே நிற்க வெட்கிப் பதுங்கிக்கொண்டாள். எல்லோரும் புதுத் தம்பதிகளான சங்கரனையும் மீனாவையும் பரிகசித்ததோடு நாராயணனையும் மகாலக்ஷ்மியையும் வேறு சேர்த்துக்கொண்டார்கள்.

நாராயணன் அவ்வளவையும் ஏற்றுச் சந்தோஷப் படுவதோடு நின்றுவிடாமல் ஊருக்குப் போகுமுன் மகாலக்ஷ்மியிடம் தனியே ஒரு வார்த்தை பேச வேண்டுமென்றும் ஆசைப் பட்டான். இரண்டு மாதக் கோடை விடுமுறையை அவன் தன் தந்தையோடு அவர் வேலை பார்க்கும் இடத்தில் கழிக்க எண்ணினான். கல்யாணத்துக்கு வந்திருக்கும் தாயுடனும் தங்கையுடனும் அவனும் போவதாக இருந்தான். அப்படி அவன் போவதற்குள், கேவலம் நாட்டுப் புறத்துப் பெண்ணாக அவள் அம்மானையும் கழற்கோடியும் மட்டும் ஆடித் திரியாமல் படிப்பிலும் சிரத்தை வைத்துப் படிக்க வேண்டுமென்னும் தன் விருப்பத்தை அவளிடம் தெரிவிக்க வேண்டும் என்பதே அவன் ஆவல். கிராமத்தில் உள்ள சிறு பள்ளியில் அவள் இப்போது நன்றாகப் படித்து வந்தால் பிற்பாடு அதை விருத்திக்குக் கொண்டு வருவது அவன் பொறுப்பு. படிப்பில் சிரத்தைமட்டும் இப்போதே அவளுக்கு வந்துவிட வேண்டும்; அதுதான் அவன் எண்ணம். அதற்காக அவளிடம் தனித்துப் பேசச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்தான்.

நாராயணன் எதிர்பார்த்த சந்தர்ப்பமும் தானாகவே அவனுக்குக் கிடைத்தது. அவன் ஊருக்குப் புறப்படுவதற்கு முதல்நாள் காலை பக்கத்துக் கிராமத்துத் தர்மராஜு அவனைப் பார்க்க வந்து சேர்ந்தான். ஷட்டகர்களாக நினைத்துப் பழகும் கோபாலையர் மாப்பிள்ளைகள் இருவரையும் விட்டுத் தனியே தன் நண்பனுடன் பேசி இருக்க அவனுக்குப் பெரிதாக விருப்பம் ஏற்பட்டது. என்ன இருந்தாலும் பள்ளித் தோழர்களான அவர்கள் சிநேகத்தைப் போல் பாக்கி உள்ளவர்கள் ஆக முடியுமா? அவர்கள் இருவருக்கும் பேசிக்கொள்ள நிறைய விஷயம் இராதா?

அவர்கள் ஏதேதோ பேசிக்கொண்டு, நடுநடுவே தானப் பாளையத்தின் இயற்கை அழகையும் கண்டு ஆனந்தித்துக் கொண்டு குளக்கரையை அடைந்தார்கள். அங்கே மாதர்கள் நீராடுவதைக் கண்டு, அங்கே போவது சரியல்ல, அவ்வூரார் வழக்கமும் அல்ல என்பதற்காகப் பக்கத்து நந்தவனத்துக்குள் நுழைந்தார்கள். அவ்விடத்தில் மகிழமரம் ஒன்று கப்பும் கிளையுமாகப் படர்ந்து மலர் நிறைந்து, ஒரு புறம் பாதி இடத்தை மறைத்து நின்றது. அதன் மலர்கள் தரையெங்கும் உதிர்ந்து தம் வாசனையைப் பெரியோர்களின் கீர்த்தியைப்போல்

நெடுகிலும், அதாவது நந்தவனத்திலும் அதற்கு அப்பாலும் பரப்பி, எல்லோருக்கும் ஒரு வகை இன்பத்தை ஊட்டி வந்தது.

அதன் அடியில் கிராமத்துச் சிறுமிகள் சிலர் மடி நிறையப் புஷ்பத்தைப் பொறுக்கி மாலையாக வாழை நாரில் கோத்துக் கொண் டிருந்தார்கள். அவர்களுக்குள் யார் உதிர்ந்த பூவை நிறையப் பொறுக்கிப் பெரிய மாலை தொடுக்கிறார்கள் என்று ஒரு போட்டி ஏற்பட்டிருந்தது. அதனால் அவர்கள் பேசிச் சிரித்துக் காலத்தை வீணாக்கப் பயந்து ஒருவருக்கு ஒருவர் ஒரு வார்த்தையும் பேசாமல் வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருந் தார்கள்.

மகாலக்ஷ்மி, மீனா, ஞானம் இவர்களும் அதில் கலந்திருந் தார்கள். மாலை கோத்து முடிந்தது. எல்லாருடைய மாலை களையும் சேர்த்துப் பார்த்தபோது அநேகமாக எல்லாம் கிட்டத் தட்ட ஒரே அளவு உள்ளவைகளாகவே தெரிந்தன; சொல்லும் படியான ஏற்றத் தாழ்வு அதிகம் இல்லை. மகாலக்ஷ்மியினுடையது மட்டும் அதிகச் சிறிதாகக் காணப்படவே, மற்றவர்கள் சிரித்து அவளைக் கேலி செய்தார்கள். ''கடைசிக்குப் பிரைஸ் கொடுப்பதாக இருந்தால் அவளுக்குக் கொடுக்கலாம்'' என்றார்கள்.

''அதில்லை; அவள் பூவே சரியாகப் பொறுக்கல்லே; ஏதோ நினைவாக இருந்தா; அதனாலே பூக் குறைஞ்சுபோச்சு'' என்று மீனா அவளுக்குப் பரிந்து சொல்லப்போனது விபரீதமாயிற்று.

''என்னடி, ஏதோ நினைவு? ஆத்துக்காரரைப் பற்றியா? இன்னும் கல்யாணம் ஆகல்லை. அதுக்குள்ளே என்னவாம்!'' என்று அந்தப் பெண்கள் பின்னும் அதிகமாகப் பரிகசிக்கத் தொடங்கினார்கள். அவர்கள் மேலும் மேலும் விடாமல் இது மாதிரி பேசவே மகாலக்ஷ்மிக்குக் கோபம் வந்தது. ''ஆமாம், அப்படித்தான்'' என்று சொல்லி ஒதுங்கி நின்றுகொண்டாள். அவர்கள் வீட்டுக்குத் திரும்பினபோது அவர்களுடன் சேர்ந்து செல்லக்கூட அவளுக்குப் பிடிக்கவில்லை. மீனாவும் ஞானமும் கூப்பிட்டதற்கு, ''நான் வந்துகொள்ளுகிறேன்; நீங்கள் போங்கள்'' என்று கோபமாகச் சொன்னாள்.

''ஐயோ, அதிசயமே! அந்தப் பொண்கள் சொன்னதற்கு நாங்கள் என்ன பண்ணுவோமாம்? எங்களோடே வராட்டாப் போயேன். அவரை வேண்ணா அனுப்பறோம்; அழைச்சிண்டு வரட்டும்'' என்று தாங்களும் அதற்கு மேல்கொண்டு ஒரு

பரிகாசத்தைத் தூக்கிப் போட்டுவிட்டுச் சென்றுர்கள் அவர்கள்.

மகாலக்ஷ்மி தனியே யோசனையுடன் நின்ருள். அந்தச் சமயத்தில்தான் நாராயணனும் தர்மராஜுவும் நந்தவனத்துள் நுழைந்தவர்கள், அவ்விடத்துக்குச் சரியாக வந்து சேர்ந்தார்கள். கடைசியில் மீனுவும் ஞானமும் சொன்ன சொல் அவர்கள் காதிலும் விழுந்தது. நிஜமாகவே தன்னைப் பார்த்து விட்டுத்தான் சொல்லுகிருர்களா என்று நாராயணன் ஒரு நிமிஷம் தயங்கினுன்.

''அவர்களுக்குள் ஏதோ சண்டைபோல் இருக்குடா, பாவம்! மகாலக்ஷ்மி தனியே நிற்கிருள்; நீ போய் விசாரிடா'' என்ருன் தர்மராஜு. அதற்குள் அவள் நிலைமைக்கு அவன் மனம் இரங்கிவிட்டது.

''நீயுந்தான் வாயேன். இரண்டு பேருமே விசாரித்துச் சமாதானம் சொல்லுவோம்'' என்று சொல்லி நாராயணன் அவனையும் கூட்டிக்கொண்டு அவள் எதிரில் வந்தான். அவளுடன் தனித்துப் பேசும் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருந்தானே; இப்போது என்ன இந்தச் சங்கோசம் அவனுக்கு? ஆண் பிள்ளை என்ருலும் இதுமாதிரி சமயங்களில் சிறிது சங்கோசம் தோன்றக் கூடியதுதானே?

மகாலக்ஷ்மி அவர்களைக் காணவும், 'இவர்கள் இங்கே எங்கு வந்தார்கள்?' என்று திகைத்தே போனுள். எங்கே ஓடி ஒளிந்துகொள்வது என்று அவளுக்குத் தெரியவில்லை. 'ஐயோ, அந்தப் பெண்களுடனேயே போகாமற் போனேனே?' என்று அவள் மனம் படபடத்தது. தங்கள் வருகைக்காக அவள் பயந்து போனதைக் கண்டு, ''பயப்படாதே மகாலக்ஷ்மி. நான் உன் அம்மாஞ்சிதானே? வேறு யாரும் அல்லவே. என்னிடம் பயம் என்ன? இவன் பக்கத்து ஊர் தர்மராஜு. நீ எத்தனையோதரம் பார்த்திருப்பாயே. நீ மட்டும் ஏன் தனியாக நிற்கிருய்? ஏன், என்ன நடந்தது? உன்னை விட்டுவிட்டு அவர்கள் ஏன் போகிருர்கள்?'' என்றெல்லாம் நாராயணன் அவள் கலவரத்தைப் போக்கக் கேட்டுக்கொண்டே போனுன்.

உடனுக்குடனே பதில் பேசும் மகாலக்ஷ்மியால் ஏனே இப்போது ஒரு வார்த்தையும் பேச முடியவில்லை. அவள் பேசாமடந்தை ஆனுள். ''ஏன் பேசமாட்டேன் என்கிருய்? இந்த மாதிரி நாட்டுப் புறமாக இருக்கக்கூடாது, தெரியுமா?

என்னையும் என் சிநேகிதனையும் கண்டு நீ ஏதுக்காகப் பயந்து பேசாமல் இருக்கணும்? படிச்ச பெண்ணெல்லாம் தைரியமாகத் தான் இருப்பார்கள். நீயும் நன்றாகப் படிக்கணும், தெரியுமா?'' என்றான் நாராயணன். அவன் மனத்தில் உள்ளதைச் சொல்லத் தானாகவே சமயம் நேர்ந்தது.

''பயம் என்ன, நாம் புலியா, கரடியா? அவளுக்கு வெட்க மாக இருக்கு! அவ்வளவுதான். வா, நாம் போவோம், அவளும் வீட்டுக்குப் போகட்டும்'' என்றான் தர்மராஜு அவள் கலவரத்தைக் குறைக்க எண்ணி.

நாராயணனும் கணவனுடைய பாத்தியதையோடேயே, ''அவளும் நம்மோடு வரட்டும். நந்தவனத்துக்கு வெளியே வந்து அந்தப் பெண்களோடு சேர்ந்துகொள்ளட்டும்'' என்றான்.

பேச்சுக்காரியான மகாலக்ஷ்மி வாயடைத்து மறுத்துக் கூறவும் வகை தெரியாது அவர்களுடனே வெளி வந்து மற்றப் பெண்களுடன் சேர்ந்துகொண்டாள். கலகலவெனச் சப்தித்துப் பறந்துகொண் டிருந்த அந்த மரத்திலிருந்த பக்ஷிஜாலங்களும் அவள் மௌன நிலையைப் பரிகசித்துத்தான் அவ்விதம் சப்தம் செய்வதாக அவளுக்குத் தோன்றிற்று.

'நாராயணனும் தர்மராஜுவும் அங்கே எப்படி வந்தார்கள்?' என்பதை அந்தப் பெண்களும் ஒருவரை ஒருவர் கண்ஜாடையிலேயே கேட்டுக்கொண்டு வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

## 12

## மகாலக்ஷ்மியின் படிப்பு

''நீ நன்றாய்ப் படிக்கணும், தெரியுமா?'' என்று நாராயணன் சொன்ன சொல் மகாலக்ஷ்மியின் மனத்தில் ஆழ மாகப் பதிந்துகொண்டது. அவள் அதைத் தெய்வ வாக்காகக் கொண்டு அதன்படி நடக்க மிகுந்த ஆசை கொண்டாள். கணவன் விருப்பத்துக்கு இணங்கி நடக்கச் சிறு வயசிலிருந்தே நம் பெண்கள் பழகிக்கொண்டு விடுகிறார்கள் அல்லவா? மணம் ஆகாவிட்டாலும் மகாலக்ஷ்மி நாராயணனைக் கணவனாகவே தான் பாவித்து வந்தாள்.

அந்தச் சிறு கிராமத்தில் பள்ளிக்கூடம் என்று ஒன்று இருந்தது வாஸ்தவம். அதில் ஐந்தாறு வகுப்பு வரையும்

உண்டு என்றும் சொல்லலாம். வயசு சென்ற 'ரிடயர்ட்' போஸ்ட்மாஸ்டர் அதற்கு 'ஹெட்மாஸ்ட'ராக இருந்து வந்தார். தனியே 'ஹெட்மாஸ்டர்' என்கிற பேர் எதற்கு? வேறு ஆசிரியர்கள் இருந்தால் அன்றோ இது மாதிரி வேற்றுமைச் சொல்லுக்கு இடம் உண்டு? பாதி சமயங்களிலும் அவர்தாம் எல்லா வகுப்புக்களையும் அநேகமாக நடத்தும்படி இருக்கும். இரண்டொருவர் அப்போதப்போது அவருக்கு உதவியாக இருந்து வந்தாலும், சம்பள உயர்வில் வேறு வேலை கிடைத்ததும் போய்விடுவார்கள். கிராம வாழ்க்கைக்குக்கூடக் கட்டுபடியாகாத சொற்ப சம்பளத்தில் உழைக்க அவர்களுக்கு மனம் வருமா?

ஏதோ ஊரில் உள்ளவர்கள் அவரவர்கள் குழந்தைகளுக்குப் பள்ளிச் சம்பளமாகக் கொடுக்கும் பணத்தில் பள்ளிக்கூடம் முழுவதும் நடக்கவேண்டும் என்றால் சிரமந்தானே? ஜில்லாபோர்டுக்கு எழுதிப் போட்டு அவர்களையே பள்ளியை எடுத்து நடத்தும்படி அவ்வூரார் கேட்டுக்கொண்டிருந்தார்கள். அப்படியானால் உபாத்தியார்களை நியமித்து அவர்கள் சம்பளம் முதலான செலவுகளையும் ஏற்றுக் கண்டிப்பாய்ப் பள்ளிக்கூடம் நடக்கும் அல்லவா?

ஆனால் அதற்கு ஒரு குறிப்பிட்ட அளவுக்குக் குழந்தைகள் பள்ளியில் பயிலவேண்டி யிருந்தது. தானப்பாளையத்து வாசிகள் தங்கள் பிள்ளைகள் படிப்பில்தான் ஓரளவு சிரத்தை காண்பித்தார்களே தவிர, பெண்கள் கல்வியைப்பற்றி அவர்கள் கவலை கொள்ளவே இல்லை. பெண் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடம் வேண்டாம் என்று அவர்கள் பிரத்யேகமாக நினைக்காவிட்டாலும் கட்டாயப்படுத்திப் பள்ளிக்கு அனுப்பவில்லை. 'பெண்கள் படித்து உத்தியோகமா பார்க்கப் போகிறார்கள்? அவர்களுக்கு வேறு காசு செலவழிப்பானேன்?' என்பது கணக்குப் பார்த்துச் செலவு செய்யும் சிலருடைய எண்ணமுங்கூட.

சிறு வயசில் தாங்களாகவே வித்தை பயிலுவது என்பது எங்காவது உண்டா? பெரியவர்களான பிறகு வேண்டுமானால், 'சிறுவயசில் கற்காமல் போனோமே; கல்வி அறிவில்லா முழு மூடமாக இருக்கிறோமே' என்று தெரிந்து வருந்தக்கூடும். ஆகையால் தாய்தந்தையரே சிரத்தைகொண்டு மக்களைப் படிக்க வைத்தால் அல்லாது வித்தை கற்க வழி இல்லை.

எல்லாப் பெண்களும் பிள்ளைகளும் நிரக்ஷர குக்ஷிகளாகத்தான் இருக்க வேண்டிவரும். 'இளமையில் கல்' என்கிற வாக்கியத்துக்கு இணங்க, கவலை அற்ற இளம் வயசில் மனம் படிப்பில் சென்று விஷயங்களை வாங்கிக்கொள்வது போலப் பிறகு முடியுமா?

அவ்வூர்ப் பெண் குழந்தைகளும் சேர்ந்து படித்தால்தான் கணக்குச் சரிக்கட்டி வரும். அப்போதுதான் ஜில்லாபோர்டும் அதை ஏற்று நடத்தும். அதற்காக வேண்டிப் பெண் குழந்தைகளையும் தவறாமல் அனுப்பி வரும்படி சிபார்சு செய்து பாடு பட்டார் அந்த ஹெட்மாஸ்டர். தாம் சாகுமுன் ஊரில் ஒரு பள்ளிக்கூடத்தை ஸ்தாபித்த பேரும் புகழும் தமக்குக் கிடைக்க வேண்டும் என்கிற ஆசை அவருக்கு. அது மிகவும் தகுதியான ஆசை அல்லவா?

அவர் வீடேறி வந்து நச்சரிப்பதற்காகச் சிலர் தங்கள் பெண்களைப் பள்ளிக்கு அனுப்பிவந்தார்கள். அந்தப் பெண்களும் வீட்டில் நாள் கிழமை என்று சாக்குச் சொல்லிப் பள்ளிக்கூடம் போகாமல் நின்றுவிடுவார்கள். அவர்கள் தாய்மார்களும் தங்களுக்கு ஒத்தாசையாகச் சில்லறை வேலைகளைச் செய்யச் சொல்லிப் பள்ளிக்கூடம் போகாததைப் பயன்படுத்திக் கொள்ளுவார்கள்.

இப்படி அரைகுறையாகப் பெண்கல்வி முன்னேறிக் கொண்டிருந்த தானப்பாளையத்தில் இப்போது நம் மகாலக்ஷ்மி சிரத்தை காண்பித்து மும்மரமாகப் படிக்க ஆரம்பித்ததிலிருந்து அவ்விடத்து நிலைமை முற்றும் மாறுபடத் தொடங்கிற்று. அவளுக்குக் கல்வியில் இருக்கும் ஊக்கத்தையும் அவள் அதைக் கற்கும் வேகத்தையும் அந்த ஹெட்மாஸ்டர் வியந்து அவள் தந்தையிடத்தும் மற்றவர்களிடத்திலும் பெரிதாகப் பாராட்டத் தொடங்கினர். அந்தப் பாராட்டுக்களைக் கேட்டபோது எல்லாத் தந்தைகளுக்குமே தங்கள் பெண்களைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவதில் சிறிது ஊக்கம் அதிகமாகவே ஏற்படத் தொடங்கிற்று. 'ஏன், இன்று பள்ளிக்கூடம் போகவில்லையா?' என்று பிள்ளைகளைக் கேட்பது போலவே பெண்களையும் பெற்றோர் கண்டித்துக் கேட்கத் தொடங்கினர்கள். மகாலக்ஷ்மியை வாத்தியார் கொண்டாடுவதைக் கேட்கக் கேட்க தங்களுக்கும் அது மாதிரி சிலாகிப்புக் கிடைக்கவேண்டும் என்ற ஆவலும் போட்டியும் குழந்தைகளுக்கும் தாமாகவே

உண்டாயின. கல்வி முன்னேற்றத்துக்குப் போட்டி மனப்பான்மை அவசியம் அல்லவா? அவர்களும் தவருமல் பள்ளிக்கூடம் செல்லத் தொடங்கினுர்கள்.

இவ்விதம் தானப்பாளையத்துப் பள்ளிக்கூடம் அதுவரைக்கும் இல்லாத விதமாகச் சிறுவரும் சிறுமியருமாக நிரம்பி மும்முரமாக வித்தை பயிலும் இடமாகக் காட்சி அளித்தது. ஜில்லா போர்டார் அதை வந்து பார்த்தபோது இவ்வளவு குழந்தைகள் கல்வி பயிலும் அந்தக் கிராமத்துக்கு ஒரு பள்ளி அவசியம் என்பதை உணர்ந்து அதை நடத்தும் பொறுப்பை ஒப்புக்கொண்டார்கள். ஜில்லா போர்டு தன் செலவில் இரண்டோர் ஆசிரியர்களையும் நியமித்து அந்த அந்த வகுப்புச் சம்பளங்களையும் கணக்காக ஏற்படுத்தி அதைச் சரியான பள்ளிக்கூடமாகச் செய்தார்கள். ஊரில் உள்ளவர்கள் கேட்டுக்கொண்டு, பள்ளிக்கூடம் ஸ்தாபிதமாவதற்கு மூலகாரணமாக இருந்த ஹெட் மாஸ்டரைப் பள்ளிக்கூடப் பிரதம ஆசிரியராகச் செய்து விட்டார்கள்.

இவ்வளவும் நம் மகாலக்ஷ்மி முனைந்து படிக்கத் தொடங்கின இரண்டொரு வருஷத்துக்குள் ஏற்பட்ட முன்னேற்றங்கள். அவ்விடத்தில் ஒரு சரியான பள்ளிக்கூடம் ஏற்பட அவள்தான் காரணம் என்பதை யார் தெரிந்துகொண்டிருக்கப் போகிருர்கள்? 'ஏதோ சில வகுப்பு வரைக்குமாவது குழந்தைகளை அனுப்பி வர நல்ல பள்ளியாக உன்ளூரிலேயே ஏற்பட்டதே' என்று அவ்வூர் வாசிகள் திருப்தி மட்டும் கொண்டார்கள். அதற்காக முனைந்தவர் தங்கள் ஹெட்மாஸ்டர் என்பதனுல் அவரைக் கொண்டாடவும் கொண்டாடினுர்கள்.

மும்முரமாக விளையாடி வந்ததை விட்டு மகாலக்ஷ்மி மும்முரமாகப் படிக்கத் தொடங்கினுள். அது அத்தைக்கு முதலில் பிடிக்காமல் இருந்தது. 'ஒரு சின்னப் பெண் சதா புத்தகமும் கையுமாக இருந்தால் என்னத்துக்கு ஆகும்?' என்று நினைத்தாள். 'வீட்டில் நாலும் தெரிந்துகொள்ள வேண்டாமா? தான் சாப்பிட்ட இடத்தைக்கூடச் சுத்தி பண்ணுமல் புத்தகத்தை வைத்துக்கொண்டு உட்கார்ந்தூட்டா என்ன காரியம் வரும்? கல்யாணமாகிச் சம்சாரம் நடத்தணும்னு எப்படி?' என்று நிஜமாகவே கவலைப்படத் தொடங்கிவிட்டாள்.

இதனுல் மகாலக்ஷ்மி எப்போது படிக்க உட்கார்ந்தாலும் ஏதாவது வேலை ஏவிப் படிப்பை விட்டு எழுந்திருக்கும்படி

செய்வாள். சின்னச் சின்னக் காரியத்துக்கெல்லாம் வீணுக அவளை எழுப்புவாள். சுருங்கச் சொல்லுமிடத்து, கையில் புத்தகத்துடன் மகாலக்ஷ்மியைக் காணவே அவளுக்குப் பிடிக்காமல் இருந்தது என்றே சொல்ல வேண்டும்.

அத்தை கண்ணில் படாமல் படிக்கவேண்டியிருந்தது மகாலக்ஷ்மிக்கு. சுமாராக அவள் செய்யக்கூடிய காரியங்களையெல்லாம் முடித்துவிட்டு ரேழி உள்ளுக்குள்ளோ மாடிச் சின்ன அறைக்கோ சென்றுதான் படிக்கவேண்டும். ஊருக்குப் பெரிய பண்ணையான அவர்கள் வீட்டில் 'மச்சுவீடு' என்று உயர்வாகச் சொல்ல மெத்தையில் ஒரு சின்ன அறை இருந்தது. சில சமயம் அவள் எவருக்கும் தெரியாமல் மறைவிடத்தில் இருந்து படிக்கும்போது அவளைத் தேடி அலையும் அவள் தம்பி பாலு பார்த்துவிட்டால், ஒளிந்து பிடிக்கும் விளையாட்டில் கண்டுபிடித்து விட்டவன்போல், "மகாலக்ஷ்மி அக்கா இதோ இருக்காளே!" என்று இரைந்து கூவி ஆனந்தப்பட்டு ஏதாவது விளையாட்டுக்குத் தன்னுேடு வரும்படி தொந்தரவு செய்வான். அவள் மறுத்தால் அவன் கேளாமல் பிடிவாதம் பிடிப்பதைக் கண்டு அத்தை வந்துவிடுவாள். அவன் பங்கில் பேசி அவளைப் பாடத்தை விட்டு எழுப்ப, "குழந்தை கூப்பிடறச்சே என்னடீ வந்திருக்கு படிப்பு? நீ பெரிசா உத்தியோகமா பண்ணப்போறே? அப்பறம் படியேன்" என்பாள். பாலுவோடு விளையாடப் போனுல் அப்புறம் அன்று படிப்பது ஏது?

இதுமாதிரி சமயங்களில் கிருஷ்ணன்தான் அவளுக்கு உதவி செய்வான். அவளுக்குப் பாடம் இருக்கும். படிக்க வேண்டும் என்பதற்காக வேண்டி, பாலுவை ஏதாவது விளையாட்டுக் காட்டிச் சமாதானமாக அப்பால் அழைத்துப் போய்விடுவான். இதனுல் எல்லாம் அவளுக்குக் கிருஷ்ணனிடத்தில் நன்றி மேலிட்டுப் பிரியம் அதிகரித்தது.

நல்ல காலமாக இதுமாதிரி அவஸ்தைகள் வெகு நாள் நீடித்திருக்கவில்லை. மெள்ள மெள்ள அத்தையின் மனம் அவளையும் அறியாமல் மாறத் தொடங்கிவிட்டது. படிப்பில் மகாலக்ஷ்மிக்கு இருக்கும் ஊக்கத்துடன் உபாத்தியாயர் பாராட்டுவதையும் கேட்கக் கேட்கப் பெருமை தானுகவே உண்டாயிற்று. அதோடு அவளுக்குத் தமிழ் நன்ருகப் படிக்கவும் எழுதவும் வந்த பிறகு, சிறு சிறு கதைப் புத்தகங்களை அவள் படிக்கும்போது கேட்டு ரசிக்கத் தொடங்கிவிட்டாள் அத்தை.

தமிழில் மொழிபெயர்க்கப்பட் டிருக்கும் ராமாயண மகாபாரத புத்தகங்களை எல்லாம் அங்கும் இங்கும் கேட்டு வாங்கிவந்து மகாலக்ஷ்மியிடம் கொடுத்து வாசிக்கச் செய்து கேட்டுச் சந்தோஷப்பட்டாள்.

இன்று ராமாயணத்தில் ராமன் வில்லை முறித்துச் சீதையை மணம் புரியும் கட்டத்தை வாசித்தாள். "என்னமாக இருந்தது! எழுந்திருக்கவே மனசு வல்லே. இன்னிக்கெல்லாம் கேண்டுண்டே இருக்கலாம்போல் இருக்கு" என்று அதை மகாலக்ஷ்மியே எழுதியிருந்தால் எப்படியோ அப்படிப் பெருமையடித்து மகிழ்ந்துபோனாள் அத்தை. நமதுப் புராணக் கதைகள் தாம் கேட்டாள் என்பதில்லை; கமலாம்பாள் சரித்திரம், பத்மாவதி சரித்திரம் - இத்தகைய நவீனங்களைப் படித்துக் கேட்பதிலும் அத்தைக்குச் சுவாரசியந்தான். 'அப்புறம் என்ன ஆச்சு?' என்று கேட்டுக்கொண்டு மகாலக்ஷ்மி பள்ளிக்கூடம் விட்டு வந்ததும் வராததுமாகக் கதை கேட்கத் தயாராகி விடுவாள்.

"என்ன வேகமாக வாசிக்கறு! ஒரு நாளைக்கு ஒரு புத்தகம் முடிந்துபோகிறது" என்று அதிசயத்தோடு எல்லோரிடமும் பெருமையாகச் சொல்லிக்கொள்வாள், அத்தை. இது சமயத்தில் பாலு ஏதாவது தொந்தரவு பண்ணினாலும் எப்போதும் அவனை அதட்ட மனம் இல்லாத அவள் அப்போது சும்மா இராமல் கோபிக்கவும் கோபிப்பாள்: "அக்கா வாசிக்கறு கேளுடா; நீயும் அது மாதிரி வாசிக்க வேண்டாமா?" என்று வேறு போதிப்பாள்.

அவனும் இப்போது ஆறு ஏழு வயசுப் பையன் ஆகிவிட்டபடியால், கதை கேட்கத் தெரிந்துகொண் டிருந்தான். மணிக்கணக்கில் சுவாரசியமாகக் கேட்பான். துளி அலுப்புச் சலிப்பு இராது. பசி தாகம் எல்லாம் மறந்துபோகும் அவனுக்கு. இந்தக் கதை கேட்கும் ஆசையில் தான் படிக்க வேண்டிய பள்ளிக்கூடப் பாடங்களையும் சரியாகப் படிக்காமல் வகுப்பில் கடைசியில் இருக்கத் தொடங்கினன். சின்ன வகுப்பில் கடைசி என்ன, முதல் என்ன என்றாலும், சின்னப் போதிலிருந்தே பின்னுக்குப் போவதிலே அவமானம் வர வேண்டும் அல்லவா? அதற்காக உபாத்தியாயர் அவனைக் கண்டித்தார். 'அவன் வீட்டில் சரியாகப் படிக்கும்படி பார்த்துக்கொள்' என்று மகாலக்ஷ்மியிடம் சொன்னர். அவள் அதில் அசட்டையாக இராமல்

பொறுப்பை ஏற்று அவனைப் படிக்கும்படி செய்து தானும் கற்றுக்கொடுத்து உதவி செய்தாள்.

இப்படி அவர்களுடைய வித்தியாப்பியாசம் சௌகரியமாக நடந்து நாளுக்கு நாள் விருத்தி அடைந்துகொண் டிருந்தது. நாராயணனுக்கு இதைக் கேட்கப் பரம சந்தோஷம். தனக்குக் கிடைக்கும் தமிழ்ப் புத்தகங்களையும் தினசரிகளையும் யாராவது கிராமத்துக்குப் போகிறவர்களிடமோ நேர்ந்தபோது தபாலிலோ அனுப்பி வந்தான். அதனாலும் மகாலக்ஷ்மிக்கு வெளி விஷயங்களையும் கொஞ்சம் கொஞ்சம் தெரிந்துகொள்ளச் சந்தர்ப்பம் ஏற்பட்டு வந்தது.

கிராமமும் முன்போல் இல்லை. பக்கத்துக் கிராமமாகிய மேலப்பாளையத்து வாசிகள் சிலர் காங்கிரசில் சேர்ந்து தொண்டாற்றி வந்தார்கள். அவர்கள் அடிக்கடி கிராமங்களி லெல்லாம் மகாத்மா காந்தியின் பெருமைகளை எடுத்துச்சொல்லிப் பிரசங்கம் செய்து வந்தார்கள். ஆகையால், காந்தி நமது தேசத்து ஏழை மக்களின் பிரதிநிதி என்றும், அவர் அவர்களுக்கே தொண்டு செய்து வருவதையும் ஒருவாறு தெரிந்துகொண் டிருந்தார்கள். அதிலும் உழுது பயிரிட்டு உலகத்துக்கே உணவளிக்கும் தங்களுக்காகத்தான் விசேஷமாக அவர் பாடு படுவதாக அவர்கள் அறிந்திருந்தார்கள்.

வேலைக்காரக் கிருஷ்ணனும் இது மாதிரி விஷயங்களை அங்கங்கே தங்கள் இனத்தாரோடு பேசும்போது கேட்டுத் தெரிந்துகொண் டிருந்தான். தினசரி ஏதாவது அவன் கைக்குக் கிடைத்தால் அதைப் பத்திரமாக மகாலக்ஷ்மியிடம் கொண்டு வந்து கொடுத்துப் படிக்கச் சொல்லி அவனும் இது மாதிரி விஷயங்களைக் கவனமாகக் கேட்டுக்கொள்ளுவான். மறுபடியும் தங்கள் மனிதர்களோடு பேசும்போது தனக்கும் கொஞ்சம் தெரியும் என்று காண்பித்துக்கொள்ள அவனுக்கும் ஆசை இராதா?

இப்படி வீட்டே மகாலக்ஷ்மி கல்வி கற்பதில் உத்ஸாகத்தோடு ஈடுபட்டிருந்தபோது, நாணம்மாள் மட்டும், 'பொம்மனாட்டிப் படிப்பை இப்படிப் பெரிசு பண்ணலாமோ! நாளைக்குக் கல்யாணமாகிக் குடித்தனம் பண்ணப்போறாளா? இல்லை, புருஷனைப் போல் உத்தியோகம் பண்ணப் போறாளா? இது நன்னாவே இல்லையே!' என்று நினைத்தாள். அவள் நாட்டுப் பெண்ணான மீனாவின் படிப்பை இது மாதிரிக் காரணங்கள்

கொண்டே அவள் நிறுத்தியிருக்கும்போது அவள் வேறு எப்படி நினைப்பாள்?

அதோடு, 'நாராயணன் கல்யாணமாவதற்கு முன் புத்தகமும், அதுவும் இதுவும் அனுப்பலாமோ? மூணு முடிச்சுப் போட்ட அப்புறந்தானே இதுக்கெல்லாம் பாத்தியம் வரும்?' என்று சுப்புவிடம் ஜாடை மாடையாகச் சொல்லவும் தொடங்கினாள். எந்தவிதத்திலாவது மகாலக்ஷ்மியின் படிப்பை நிறுத்த வேண்டும் என்கிற நினைப்பு அவளுக்கு.

முதலில் சுப்பு அதைப் பொருட்படுத்தாவிட்டாலும், நாணம்மாள் அடிக்கடி சொல்லக் கேட்ட பிறகு, 'கல்யாணத்தைச் சுருக்க ஏற்பாடு பண்ணி முடிச்சூட்டாப் போறது. பிற்பாடு ஒரு வம்புக்கும் இடம் இராது' என்று நினைக்கத் தொடங்கினாள். கோபாலனை விட்டு அம்மாஞ்சிக்கு அதைப் பற்றி உடனே கடிதம் எழுதச் சொல்லி மகாலக்ஷ்மியின் விவாகத்தைத் துரிதப்படுத்துவதில் முனைந்தாள்.

# 13

# ஜோஸ்யம் எப்படியோ?

சுப்பு நினைத்த அவ்வளவு வேகத்தில் காரியம் நடப்பதாக இல்லை. கோபாலையரின் கடிதத்துக்கு அம்மாஞ்சி பதில் எழுதுகையில், ''முதலில் என் பெண் ஞானத்தின் விவாகத்தை முடித்துக்கொண்டுதான் பிறகு நாராயணனுக்குச் செய்ய வேண்டும். அதுமாதிரி நான் செய்யாவிட்டால், உங்கள் அம்மாஞ்சி மன்னி என்னை உயிரோடு இருக்க விடுவாளா? ஆகையால் அதை முதலில் ஏற்பாடு பண்ணி முடித்துவிட்டுப் பிறகு இந்தக் கல்யாணத்தை நடத்திவிடுவோம்'' என்று ஹாஸ்யமாக எழுதி யிருந்தார். அதுவுமன்றி அவ்விடத்தில் இருக்கும் நல்ல ஜோஸ்யர்களிடம் குழந்தைகளின் ஜாதகங்களைக் காண்பித்துப் பொருத்தம் பார்க்கப் போவதாகவும் அதில் ஒரு வார்த்தை இருந்தது.

'இது ஒன்று எதற்கு நடுவில்? இவ்வளவு நாளும் நம்மூர் ஜோசியர் பார்த்துக் கொடுத்ததோடு நாம் திருப்தியாக இல்லையா? என்ன கெடுதல் நேர்ந்துவிட்டது? எவனாவது புதிதாகப் பார்த்து எதையாவது கிளப்பப் போகிறானே!' என்று சுப்புவுக்குக் கட்டோடு இது பிடிக்கவில்லை. 'நம்மை நன்றாக

அறிந்திருக்கும் உள்ளூர் ஜோசியரைக் காட்டிலும் வெளியூர்க்காரன் மனத்துக்குச் சரியாகச் சொல்லுவானு?' என்று அவளுக்குச் சந்தேகமாகவே இருந்தது.

நமது மனவிருப்பத்தை அநுசரித்து அதற்குப் பக்கபலம் அளிக்கவே ஜோசியம் உதவுகிறதே தவிர, நமது அந்தச் சாஸ்திரம் சுட்டிக் காட்டுவதை வைத்துக்கொண்டு, நமது வாழ்க்கையைச் சுலபமாக அமைத்துக்கொள்ள அது வழி காட்டுகிறது என்பதைச் சுப்பு ஒப்புக்கொண்டதாகத் தெரியவில்லை. 'எதையாவது சொல்லிக் குழந்தையிலிருந்து தீர்மானித்திருந்த விவாகம் நின்றுபோய்விடப் போகிறதே!' என்கிற விசாரம் அவளைப் பலமாக பிடித்துக்கொண்டது. 'நம்ம ஊர் ஜோசியர் பார்த்திருக்கும்போது வேறு ஒருவரிடம் எதற்காகப் பார்க்கிறது?' என்று கோபாலனைவிட்டு உடனே பதில் எழுதச் சொன்னுள்.

அவள் பரப்புக்குச் சரியாக அவருக்கு வேகம் இல்லை. ஆகவே அவளுக்குப் பின்னும் தவிப்பு அதிகரித்தது. ' 'தனக்காகவும் தெரியாது; சொன்னுலும் கேட்கமாட்டான்' என்று இருக்கும் தம்பியை வைத்துக்கொண்டு எல்லாம் மனம்போல் நடக்கவேண்டும் என்ருல் எப்படி? ஒரு கடிதத்துக்கு இரண்டாகப் போட்டால் என்ன? வேறு யாருக்கு? அம்மாஞ்சிக்குத் தானே? அதுபோட இவனுல் ஆகவில்லை என்ருல், அப்புறம் இவன் சிரமப்பட்டுக் குழந்தைகளுக்கு என்ன நன்மையெல்லாம் செய்துவிடுவான்? அவர்களுக்காகவே அதிருஷ்டம் இருக்க வேண்டும்; எல்லாம் நேர்மையாக நடப்பதற்கு.' - சுப்பு இப்படித் தவித்து நாணம்மாளிடம் அங்கலாய்த்துக்கொண்டாள்.

அதற்கு நாணம்மாள் சொன்ன பதில் சுப்புவைச் சமாதானம் செய்வதற்குப் பதிலாக அவள் விசாரத்தைப் பெரிது பண்ணிற்று. ''தெலுங்கு தேசத்தவர்களுக்குப் பொருத்தம் பார்க்கத் தெரியுமோ? நமக்குப் பொருந்துவது அவர்களுக்குப் பொருந்த வேண்டும் என்பது என்ன? எதையாவது சொல்லி, பிறந்த அன்று முதல் நிச்சயமாக இருந்தது இல்லை என்று ஆகிவிடப் போகிறதே?'' என்ருள்.

''அப்படியாவதற்கு அம்மாஞ்சி விட்டுவிடுவானு?'' என்று சுப்பு சந்தேகித்ததற்கு, ''ஜோசியர் கண்டிப்பாகச் சேராதுன்னு சொன்னுல், அப்புறம் யாருக்குத்தான் ஆகட்டும், மனசு வருமா? நல்லது, கெடுதல் இரண்டு பேருக்கும் பொதுத்தானே? ஆயிரங்

காலத்துப் பயிருன்னு; நெடுகிலும் யோசித்துத்தானே செய்ய வேணும்? வேறே வரன் பார்க்க வேணுமே என்கிறதுக்காக முடித்துவிடப் படாது பாரு. அதுவும் பிள்ளைக்கு என்ன? எத்தனையோ பேர் நான், நீ யின்னு பெண்ணைக் கொடுக்க வருவா. தர்மாம்பாளுக்கும் உத்தியோகஸ்தர் மோகம் கொஞ்சம் உண்டு'' என்று நாணம்மாள் சொன்ன பதில் சுப்புவைப் பெரிதும் கலவரப்படுத்தி விட்டது. 'இந்தப் பொருத்தம் பார்க்கும் விவகாரமே கல்யாணத்தை நிறுத்தத்தான் கிளம்பியிருக்கிறதோ!' என்றுகூட அவள் மனத்தில் பலத்த சந்தேகம் ஒன்று புகுந்து வாட்டத் தொடங்கிற்று.

'பிள்ளைக்கு உத்தியோகஸ்தன் மகளாகப் பார்த்துப் பண்ணிக்கொள்ளும் ஆசையில் தர்மாம்பாள்தான் இது மாதிரி முட்டுக்கட்டைக்கு வழி தேடிவிட்டாளோ? அம்மாஞ்சி இதற்கெல்லாம் சம்மதிப்பானு? ஆனுல் ஜோசியமும் விரோதமாக இருந்து, அதற்கு அநுசரணையாக மனைவியும் உபதேசித்தால், அவன் அதற்கு உடன்படாமல் என்ன செய்வான்? பெண்டாட்டி சொல்லைக் கேளாத புருஷன் உண்டா? அதிலும் தங்கள் குழந்தைகளின் வருங்கால வாழ்க்கையில் அவளைவிட வேறு யாருக்கு அக்கறை அதிகம் உண்டு என்று நினைக்காமல் இருப்பானு?' — இது மாதிரி எண்ண அலைகள் மேன்மேலும் எழத்தொடங்கின பின் சுப்புவுக்கு மனநிம்மதி இருக்குமா?

துளியாவது கவலையோ பொறுப்போ இல்லாமல் கோபாலன் நிம்மதியாக இருப்பதற்கும், காமாக்ஷி பொறுப்பு அவ்வளவையும் தன் தலையில் சுமத்திவிட்டுப் போயிருப்பதற்கும் ஓயாது புலம்பினவண்ணம் இருந்தாள் சுப்பு.

நிஜமாகவே தர்மாம்பாள் விவாகத்தை நிறுத்தும் உத்தேசத்தில் ஜோசியத்தைக் கிளப்பினுளா? அப்படி இல்லை. எப்படியாவது பெண்ணைப் பெரிய உத்தியோகஸ்தனுன ஸப்ஜட்ஜின் ஒரே அருமைப் பிள்ளைக்குக் கொடுத்துவிட வேண்டும் என்கிற பேராசைதான் அவளைப் பிடித்திருந்ததே தவிர, மகாலக்ஷ்மியை நாட்டுப்பெண்ணுகக் கொள்வதைப்பற்றித் தனியே அவள் ஒன்றும் சிந்திக்கவில்லை. பெண்ணின் கல்யாணத்தை நிச்சயம் செய்து நடத்தவேண்டும் என்கிற ஆத்திரத்தில் பிள்ளையின் விவாகத்தைப்பற்றின நினைவு அவளுக்கு இல்லவே இல்லை. 'அவனுக்கு என்ன இப்போது அவசரம்?' என்று அதைத் தள்ளியே விட்டாள். ஞானம், கோவிந்தராஜன் இவர்

களுடைய ஜாதகங்களை ஜோசியரிடம் காட்டிப் பொருத்தமும், பலனும், பிரத்தியேகமாக யோகங்களும் பார்த்து அதை ஸப் ஜட்ஜ் வீட்டாருக்கு எடுத்துச் சொல்லி மணத்தைச் சடுதியில் முடிக்கும் சிரத்தையில் இருந்தாள்.

ஜாதகம் பார்க்கும்போது பெண்ணின் ஜாதகத்திலிருந்தே அவள் தந்தையின் வாழ்க்கையில் ஏற்கனவே நடந்துபோன சில சம்பவங்களை, ஜோசியர் நேருக்கு நேராகக் கண்ணுல் பார்த்தவர் போலச் சொன்னது, அம்மாஞ்சிக்குப் பெரிதும் அதிசயமாக இருந்ததுடன், ஜோசிய சாஸ்திரத்திலேயே பெரு மதிப்பும் உண்டாயிற்று. மேலும் அவர் எந்த ஊரிலிருந்து மாற்றலாகி வந்தாரோ அந்த ஊருக்கே திரும்பவும் மேல்பதவி பெற்றுப் போகப் போகிருர் என்பதை ஜோசியர் சொன்னபோது நம்பிக்கை மிகவும் பலப்பட்டது. ஏனெனில் காரியாலயத்தில் அம்மாதிரி ஒரு பராபரிச் சொல் நடமாடியது. அதுகாறும் விவாகங்களைத் தீர்மானிக்க ஜோசியத்தை ஓர் அங்கமாகக் கருதியிருந்தார் அம்மாஞ்சி; அவ்வளவுதான். அதற்கு மேல்கொண்டு அதில் நம்பிக்கை இல்லாததால் அதுபற்றிச் சிரத்தையும் அவருக்கு இல்லை. தலையெழுத்தை எழுதின அந்தப் பிரம்மதேவனே நேரில்வந்து சொல்வதுபோல் இப்போது ஜோசியர் விதியை விளக்குவதைக் கேட்டால், ஒரே பிரமை தட்டாமல் என்ன செய்யும்?

'ஞானத்தின் ஜாதகப்படி பொருத்தம் சுமாராக இருந்தாலும் பெண் அந்தப் பிள்ளைக்குத்தான் வாழ்க்கைப்படுவாள். பெண்ணின் பெற்றோருக்கு அந்தச் சம்பந்தத்திஞல் வெகுவாகச் சந்தோஷம் என்பது ஏற்படாவிட்டாலும் பெண்ணின் மங்களத்துக்கு ஒரு குறைவும் இராது' என்று ஜோசியர் அபிப்பிராயப் பட்டார். தர்மாம்பாளைத் திருப்தி செய்ய அது போதுமான தாக இருந்தது. அவள் கணவர் நினைத்ததுபோல் ஸப்ஜட்ஜ் வீட்டவர் தங்களை மதிக்காமல் நடத்தலாம்; அது தங்களுக்கு மனக்குறையாக இருக்கும்; அதனுல் என்ன? பெண் அதிருஷ்ட மாக இருக்கவேண்டி இந்தத் தியாகம் செய்ய அவர்களால் முடியாதா? எப்படியாவது பெண் ஸப்ஜட்ஜ் மருமகள் ஆகிவிடுவாள் என்று ஊர்ஜிதமாவதில் அவள் பூர்ண திருப்தி கொண்டாள். ஜோசியர் சொன்னதையே முக்கிய காரண மாகக் கொண்டு விவாகத்தைத் துரிதப்படுத்தி நிச்சயம் செய்யக் கணவரை வெகுவாகத் தூண்டினுள்.

அம்மாஞ்சியும் அந்தத் தூண்டுதலுக்கு இணங்கினார்; அவருக்குத்தான் இப்போது ஜோசியத்தில் அபார நம்பிக்கை வந்திருக்கிறதே. அந்த நம்பிக்கையில்தான் நாராயணன், மகாலக்ஷ்மி இவர்களுடைய ஜாதகங்களையும் காண்பித்து ஜோசியரிடம் பலன் கேட்டார். அவர்களுக்கும் அந்த ஜோதிஷ சாஸ்திரம் என்ன குறிப்பிடுகிறது என்பதைத் தெரிந்துகொள்ள எண்ணினார்.

ஜோசியர் அவைகளைப் பார்வையிட்டபோது பெரிதும் அதிசயித்தே போய்விட்டார். அதுமாதிரி ஒன்றுக்கு ஒன்று பொருந்தும் ஜாதகங்களை அவர் அது வரைக்கும் பார்த்ததே இல்லை என்று வியந்தார். ''மகாலக்ஷ்மியின் ஜாதகத்தில் பதிவிரதையின் லட்சணங்கள் அற்புதமாக அமைந்திருக்கின்றன. கிரகங்களின் சேர்க்கை வெகு யோகமாக விழுந்திருக்கிறது. ஏதோ சிறிது காலத்துக்கு ஒரு சுமாராக இருந்தாலும் பிற்பாடு பிரமாதமாக இருக்கும். பர்த்தாவுக்குச் சகல பாக்கியத்தையும் கொடுத்து, பிறந்த இடம், புகுந்த இடம் இரண்டுக்கும் மிகுந்த புகழை அடைவிக்கக் கூடியதாக இருக்கிறது. ஸ்ரீமான் லக்ஷ்மீ நாராயணரைப் போலன்றோ பொருத்தம் அமைந்திருக்கிறது?'' என்று வானளாவப் புகழ்ந்தார் ஜோசியர்.

அதைக் கேட்ட அம்மாஞ்சி மிகுந்த திருப்தியும் சந்தோஷமும் கொண்டார். அவர்கள் குழந்தைகளாக இருந்ததிலிருந்து தாங்கள் ஏதோ குருட்டு நினைவாக நினைத்து வந்தது இவ்வளவு உயர்வாக இருக்கிறதென்றால், யாருக்குத்தான் அதில் பரம திருப்தி உண்டாகாது? ''இரண்டு கல்யாணங்களும் எப்போது நடக்கும்?'' என்று அவர் கேட்டதற்கு, ''இரண்டும் அநேகமாகச் சித்திரை, வைகாசியிலேயே நடந்துவிடும். குருபலம் சீக்கிரத்திலேயே வந்துவிடுகிறது. அப்போது நடந்துதான் தீரவேண்டும். நீங்கள் சும்மா இருந்தாலும் உங்களைச் சும்மா இருக்கவிடாது'' என்று சொல்லி ஊர்ஜிதப்படுத்தினார் ஜோசியர்.

பிறகு அம்மாஞ்சி அதற்கான முயற்சிகளில் முனைந்தார். அப்படி அவர் முனையாவிட்டால் அவர் மனைவி சும்மா இருக்க விடுவாளா?

மேலும், ஜோசியர் ஏதாவது உளவு விசாரித்துத்தான் அவ்விதம் சொன்னாரோ, இல்லாவிட்டால் சாஸ்திரந்தான் அவ்வளவு வெட்ட வெளிச்சமாகக் காண்பிக்கக்கூடியதாக இருக்கிறதோ என்று பிரமிக்கும்படி, சரியான சமயத்தில்

ஜோசியப்படி அம்மாஞ்சிக்கு டிப்டி சூப்ரன்ட் பதவி கிடைத்து, மதுரைக்கே மாற்றலும் ஆகி, திரும்ப அந்த ஊருக்கு வரும்படி நேர்ந்தது. பிறகு உத்ஸாகமும் ஆசையும் வெகுவாகத் தூண்ட, பெண்ணின் விவாகத்தை நிச்சயிக்க முனைந்து வேலை செய்யாமல் இருப்பாரா அம்மாஞ்சி?

இவர்கள் மதுரை வந்தபோது ஸப்ஜட்ஜ் திருநெல்வேலிக்கு மாற்றலாகிப் போயிருந்தார். அதனால் என்ன? அங்கே சென்று விவாகப் பேச்சை முடித்துக்கொள்ள அவருக்குத் தெரியாதா? சாமர்த்தியந்தான் இல்லையா? அவர் அந்தஸ்தும் இப்போது ஸப்ஜட்ஜின் அந்தஸ்துக்குச் சரியாக உயர்ந்திருக்கிறதல்லவா? ஆகையால் தாராளமாகப் போய்க் கேட்க என்ன தடை?

அவனோடு படிப்பவனாயிற்றே, தெரிந்திருக்குமே என்பதற்காகப் பிள்ளையைப்பற்றி நாராயணனிடம் விசாரித்தார். ''ரொம்ப ராங்கிக்காரன் அப்பா!'' என்று அவன் சொன்னான். ''இருக்கக் கூடியதுதானே? ஸப்ஜட்ஜின் ஒரே மகன் என்றால் லேசா?'' என்று சமாதானம் சொன்னாரே ஒழிய, அதை அவன் குணத்துக்கு ஒரு தோஷமாக அவர் எடுத்துக்கொள்ள வில்லை.

''ஆமாம், இவனுக்குத் துளி கௌரவம் காட்டிக்காமே, தாந்தோனியாத் திரிஞ்சாத்தான் பிடிக்கும். இவன் இருக்கிறானே இல்லையோ, பணக்காரா, ஏழை எங்கற வித்தியாசம் இல்லாமே, மேல்ஜாதி கீழ்ஜாதி இன்னுகூடப் பார்க்காமே, எப்போது பார்த்தாலும் அந்தத் தர்மராஜுவைக் கட்டிண்டு அழறானே; அதுமாதிரி இருக்கணுமாக்கும்!'' என்று தர்மாம்பாள் பிள்ளையின் வார்த்தையை ஒரே அடியில் தள்ளிவிட்டாள். அவளுக்கு முதலிலிருந்தே ஸப்ஜட்ஜ் மகன் பேரில்தானே கண்; அப்படியிருக்க இதுமாதிரி ஆட்சேபங்கள் அவளுக்கு ஒரு பொருட்டாகப் படுமா?

# 14

# சந்தேகம்

**அ**ம்மாஞ்சியும் அவர் மனைவியும் ஒரு மனத்தோடு ஒன்றிப் பாடுபட்டும் பெண்ணின் விவாகத்தை எளிதில் தீர்மானம் செய்துகொண்டுவிட முடியவில்லை. மதுரையில் இருந்துகொண்டு திருநெல்வேலிக்கு ஸப்ஜட்ஜிடம் நூறு நடை செல்லவேண்டி யிருந்தது, அம்மாஞ்சிக்கு. ஸப் ஜட்ஜ் வீட்டவர்களின் சம்மதம் பெறுவது அத்தனை பெரிய காரியமாக

இருந்தது. தர்மாம்பாளும் ஸப் ஜட்ஜ் சம்சாரத்தினிடம் நேரில் தன் வேண்டுகோளைச் சமர்ப்பித்து அநுக்கிரகிக்கும்படி வேண்டுவதற்காக அம்மாஞ்சி சென்றதில் பாதித்தடவையாவது செல்லத்தான் வேண்டி வந்தது.

'இப்போது டிப்டி சூப்ரெண்ட் என்றாலும் முன்பு இன்ஸ்பெக்டர்தானே, தர்மாம்பாள் கணவர்?' என்பதை ஸப்ஜட்ஜ் சம்சாரம் மறந்ததாகத் தெரியவில்லை. தங்கள் அந்தஸ்துக்கு அவர்கள் சரியோ என்கிற சந்தேகம் அவளுக்கு இருந்தது. ஆகவே எளிதில் சம்மதம் தெரிவிக்க வில்லை அவள். அவள் சொற்படி நடப்பவர்தாமே அவள் கணவர்? கல்யாணத்தை முன்னிட்டு வரும் அம்மாஞ்சியிடம் ஒவ்வொரு தடவையும் லோகாபிராமமாகப் பேசி அனுப்பிக்கொண் டிருந்தாரே தவிர, தீர்மானமாக எதுவும் சொல்லாமல் காலத்தைக் கடத்திக் கொண் டிருந்தார்.

சீர்வகைகள், கையில் கொடுக்கும் எதிர் ஜாமீன் இவைகளைக் கொஞ்சம் கொஞ்சமாக ஏற்றிக்கொண்டேபோய்த் தாங்கள் முதலில் போட்டிருந்த திட்டத்துக்கு இரட்டிப்பு மடங்காக அதிகப்படுத்தி அதனால் ஸப்ஜட்ஜ் சம்சாரம் நினைத்த அந்தஸ்தின் தாழ்வை ஈடுசெய்ய நினைத்தாள், தர்மாம்பாள். அந்தப்படி வெளிப்படையாகவும் அவர்களிடம் வாக்களித்தாள்.

தங்கள் மகளுக்குச் செய்வதில் அவர்கள் போட்டிருந்த திட்டமே சாதாரணமாக அவர்களைப் போன்றவர்கள் செலவழிப்பதற்கு அதிகந்தான் என்று சொல்லவேண்டும். இப்போது ஸப்ஜட்ஜ் வீட்டவர்களின் பிகுவைக் காணக் காண அது மிகவும் ஏறியே போயிற்று. அம்மாஞ்சி இது மாதிரிச் செயல்களுக்கு ஒரு நாளும் இடம் கொடுக்கமாட்டார். ஆனல் அவருக்கும் தாம் முனைந்த காரியத்தில் தோல்வியடைய விருப்பம் இல்லை. ஆகையால் எந்த விதத்திலாவது காரியத்தைச் சாதித்துக்கொள்ளவேண்டும் என்ற எண்ணத்தினுல் அதற்கு இணங்கினர்.

அவர்கள் திருநெல்வேலிக்குப் போன போதெல்லாம் சாரதாவின் புக்ககத்தில் தங்குவார்கள். ஒருவரைப்பற்றி நமக்கு ஆக வேண்டியது என்ன என்று ஒரு வம்பும் பேசாத சாரதாவின் மாமியார்கூட, அம்மாஞ்சியும் தர்மாம்பாளும் நடைநடையாக வருவதையும், சீர் வகையராக்களை ஏற்றிக் கொண்டே போவதையும் கேட்டுவிட்டு, "நாங்கள் இதுமாதிரி

நடந்துக்க மாட்டோம்; உண்டு, இல்லை என்கிறதை ஒரு வார்த்தையில் சொல்லி விடுவோம். சீரும் சிறப்பும் அவர்கள் பெண்ணுக்கு அவர்கள் செய்கிறூர்கள். நமக்கு என்ன அதைப் பற்றி?'' என்று சொன்னது தர்மாம்பாள் மனத்தில் வாஸ்தவம் என்று பட்டது. அவர்கள் சாரதாவை இரண்டாம் வார்த்தை யின்றித் தங்கள் மகனுக்கு மணந்துகொண்டார்கள் என்பது உண்மை. ஆனுல் அவர்கள் ஸப்ஜட்ஜைப் போலப் பெரிய உத்தியோகஸ்தர்கள் அல்லவே என்கிறதாக அதற்கு ஒரு சமாதானம் செய்துகொண்டாள்.

ஒருவிதமாக அவர்கள் விவாகப் பேச்சை முடித்து முகூர்த்தம் வைத்துக்கொள்வதற்கே மாதக் கணக்கில் நாட்கள் சென்றுவிட்டன. அப்புறம் அதை நடத்துவதற்கு வேண்டிய சாதனங்களைச் சேகரிக்க வேண்டாமா? அதிலும் பலத்த சீரும், அதற்குத் தகுந்த பெரிய கல்யாணமும் செய்யவேண்டும் என்ருல் மூச்சுவிட அவகாசம் இருக்குமா? வேருென்றைப்பற்றி நினைக்க அவர்களுக்குப் பொழுது ஏது?

ஞானத்தின் கல்யாணம் நிச்சயமாகித் தேதி குறிப்பிட்டிருப்பதையும் தெரிவித்து, சுப்புவையும் அழைத்துக்கொண்டு குழந்தைகளுடன் வரும்படி கோபாலையருக்குக் கடிதம் மட்டும் போட்டுவிட்டு, அம்மாஞ்சி காரியத்தில் முனைந்தார். சாரதாவின் மாமனுர், மாமியார், கணவன் இவர்களையும் கல்யாணத்துக்கு நாலு நாள் முன்னதாகவே வந்துவிடும்படி வருந்தி அழைத்து விட்டு, சாரதாவை மட்டும் அவர்கள் அநுமதி பெற்றுக் கூடவே அழைத்து வந்திருந்தார். புது உத்தியோக அலுவல்கள், கல்யாணக் காரியங்கள், இத்தனைக்கு மத்தியிலும் சாரதா தன்னுடன் வந்திருப்பதை நினைவாகக் கோபாலையரின் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். அதற்குமேல் அவர் என்ன தான் செய்வார்? வாயில் ஈப் புகுந்தது தெரியாமல் வேலைகளில் ஆழ்ந்திருந்த அவருக்கு, நாராயணன் விவாக விஷயமாக எழுத நேரம் எங்கே? மேலும், சாவகாசமாகப் பேச வேண்டிய விஷயம் அன்ருே அது? ஜோசியர் சொன்னவைகளைச் சுப்புவிடமும் கோபாலனிடமும் சொல்லிச் சந்தோஷப்பட நிறைய அவகாசம் வேண்டாமா?

ஆனுல் இவைகளையெல்லாம் சுப்பு கண்டதெப்படி? அம்மாஞ்சி கடிதச் சமாசாரத்தைக் கோபாலன் வாயால் சொன்னது அவளுக்குத் திருப்தியை அளிக்கவில்லை. மகாலக்ஷ்மி

யிடம் கடிதத்தைக் கொடுத்து வரி வரியாக வாசிக்கச்சொன்னுள். ஏதாவது அதில் மகாலக்ஷ்மியைக் கல்யாணம் பண்ணிக்கொள்வது பற்றி ஜாடையாகவாவது ஒரு வார்த்தை இருக்கிறதோ என்று கவனித்தாள். ஒன்றும் இல்லை. 'ஜோசியன் கூடாதுன்னு சொல்லிவிட்டானே? அதுதான் அம்மாஞ்சி அதைப்பற்றி வாய் திறக்கவில்லையோ?' என்று எண்ணி ஏங்கினுள்.

பிறகு அவளுக்கு நிம்மதி ஏது? உடனே பறந்து சென்று அம்மாஞ்சியிடம் விஷயத்தைத் தெரிந்துகொண்டு, 'நம்ம ஊர் ஜோசியர் அன்று குழந்தையிலிருந்து சொல்லியிருப்பதைக் காட்டிலும், வெளியூர் ஜோசியன் என்னத்தை உயர்வாகச் சொல்லிவிட முடியும்?' என்று சண்டைப்பிடித்து அம்மாஞ்சியை சரிப்படுத்திச் சம்மதிக்கச் செய்யவேண்டும்' என்று ஒரே அடியில் ஆத்திரப் பட்டாள். ஆனுல் மறு நிமிஷமே, 'ஆயுசுக்கே கெடுதலாக எதையாவது சொல்லித் தொலைத்திருப்பானே? அப்போது என்ன பண்ணுகிறது?' என்று பயப்பட்டாள். 'ஜோசியத்தைப்பற்றி வாயே திறக்காமல் விவாக முகூர்த்தம் வைத்துக்கொள்வது எப்படி? நாம் பேசாதிருந்தாலும் அம்மாஞ்சி அதைப்பற்றிச் சொல்லாமல் இருப்பாஞ?' இதேதடா பெரிய இக்கட்டாகப் போய்விட்டதே?' என்று பலவாறு சொல்லிப் புலம்பத் தொடங்கிவிட்டாள் சுப்பு. எல்லா விதத்திலும் பொருந்திச் சிலாக்கியமாக இருந்து குழந்தை ஜனனமான அன்று முதல் தீர்மானமாக இருந்த கல்யாணம் நின்றுபோவதென்ருல் யார்தாம் சகிப்பார்கள்?

'கோபாலன் எல்லாரையும்போல் நல்லது, கெடுதலை யோசித்துத் தைரியமாக மேல்போட்டுக்கொண்டு காரியம் நடத்துகிறவஞ? அவன்பாட்டுக்குச் சும்மா இருப்பான். வானமே இடிந்து விழுந்தாலும் அவனுக்குப் பறப்புக் கிடையாது. அதைக் தடுக்க எந்த உபாயமும் தேடமாட்டான்' என்று கோபாலைய ரிடம் குறைப்பட்டாள் சுப்பு.

''பறந்து என்ன பண்ணுகிறது? நாம்தான் கல்யாணத் துக்குப் போகிருேமே. நேரில் எல்லாம் தெரிந்துகொள்ளு வோமே'' என்று அவர் சாவதானமாகச் சொன்னது சுப்புவுக்குப் பொறுக்கவில்லை. 'அம்மாஞ்சி பெண்ணின் கல்யாணத்துக்குச் சென்று தங்கள் பெண் கல்யாணத்தை, எப்படிப் பேசி முடித்துக் கொள்ளுகிறது?' என்பதே அவளுக்கு விசாரமாகப் போயிற்று. ஜோசியர் ஒப்புக்கொள்ளவில்லை என்பதைச் சொல்லி, 'இருவரும்

நமது குழந்தைகள்; நல்லது கெடுதல் இருவருக்கும் பொது தானே?' என்று அம்மாஞ்சி நியாயம் எடுத்து ஓதி, தன் மனத்தைக் கலவரப்படுத்திவிடுவானே என்கிற பயம் ஒருபுறம். 'அதற்காகப் பேசாமலே இருந்துவிடுகிறதா?' - இவ்விதம் எந்த வழியில் செல்வதற்கும் தோன்றாமல் அல்லல் பட்டுப்போனாள் சுப்பு.

அத்தை தனக்காகப் படும் விசாரம் மகாலக்ஷ்மியைப் பாதிக்காமல் விடுமா? அவள் நாராயணனைக் கணவனாக இன்று நேற்றில் இருந்தா நினைத்திருக்கிறாள்? அவள் பேசத் தொடங்கின மழலைப் பருவத்திலிருந்தே, 'அகமுடையான்' என்றுதானே அவனை நினைத்துப் பழகியிருக்கிறாள்? வீட்டில் யாருக்கு அவன் என்ன உறவானாலும் அவளுக்கு அவன் கணவன்தானே? பிறந்ததி லிருந்தே ஏற்பட் டிருந்த அந்த உறவுமுறை எவ்விதம் மாற முடியும்? இப்போது புதிதாக ஜோசியம் அதை மாற்றுவதாவது? —அவளுக்குப் புரியவே இல்லை. இதுகாறும் கணவன் என்கிற அபிமானத்துடன் அவனிடம் பழகி, நாளுக்கு நாள் விருத்தியாகி வரும் அவன் அழகிலும் புத்தியிலும் உள்ளத்தைப் பறி கொடுத்து, நாராயணனுடைய ஒரே தியானமாகவே இருக்கிறாள் அவள். இப்போது அவனை மணப்பது சாத்தியமில்லை என்றால் அவள் மனத்தை விட்டு அவன் உருவை விலக்க வேண்டாமா? அது அவளால் முடியுமா? அவள் இருதயத்தினுள்ளே ஆழப் பதிந்துபோன அந்த உருவை வலியப் பிடுங்கி எடுப்பது அந்த இருதயத்தையே இரண்டாகப் பிளந்துவிடாதா? நாராயண னுக்கு ஜோசிய சங்கதி தெரியுமா? தெரிந்திருந்தால் அவன் என்ன நினைக்கிறான்? அவனும் சிறு பிராயத்திலிருந்தே அவளை நேசித்து மனைவியாகவே கருதி வந்திருக்கிறான் அல்லவா?

அவன் மனத்தை அறிய அவள் வெகுவாய்த் துடித்தாள். அவனுக்கு ரகசியத்தில் கடிதமாவது எழுதித் தெரிந்துகொள்ள எல்லை மீறின ஆவல் ஏற்பட்டது அவளுக்கு. 'என்ன எழுதுவது? எப்படி எழுதுவது? மேலும் அதை ரகசியத்தில் செய்ய வேண்டுமே!' - அவளுக்கு ஒன்றுமே புலப்படவில்லை.

முதலில் தபால் தலையோ, கவரோ வேண்டும். பிறகு தபாலாபீசுக்குச் சென்று எழுதின கடிதத்தைத் தபாலில் சேர்க்க வேண்டும். கடிதம் எழுதினது தப்பித் தவறி வீட்டில் அத்தைக்கோ, ஊரில் யாருக்காவதோ தெரிந்துவிட்டால் அப்புறம் விபரீதம் ஆகிவிடும். ஊரார் அவளைச் சும்மா விடு

வார்களா? மணமாகும் முன் அன்னிய புருஷனுக்குக் கடிதம் எழுதுவதாவது!

இவ்விதம் அவள் எண்ணித் தவித்து மனம் புழுங்கிக்கொண்டிருந்தாள். ஒன்றிலும் மனம் செல்லவில்லை. உத்ஸாகம் இழந்து வீட்டில் நடைப்பிணமாகச் சுற்றி வளைய வந்துகொண்டிருந்தாள். அவள் மன நிலையை அறிந்து அதற்குப் பரிகாரம் தேடக்கூடியவர்கள் அந்த வீட்டில் யாரும் இல்லை.

பாலு சிறு பையன். விளையாட்டில் அவள் தன்னுடன் முழுமனத்தோடும் ஈடுபடவில்லை என்பதைக் கவனித்து, அதற்காக அவளை அவன் தொந்தரவு செய்வான். அத்தையைப் பற்றியோ கேட்க வேண்டியதில்லை. அவள் விசாரங்களில் பிறரைக் கவனிக்க அவளுக்கு மனத்தெளிவோ நேரமோ இல்லை. கோபாலையரோ என்றைக்காவது தம் தாயற்ற குழந்தைகளை நெருங்கிப் பார்த்திருந்தால் அல்லவா, இன்று அவர் மகள் மன வருத்தத்தை அறியக்கூடும்? கூட இருந்த மீனுவுக்கும், ஒரே ஊர்தான் என்றாலும் புக்ககத்தில் இருந்தாளாதலால் அவ்வளவாகக் கவனிக்க முடியவில்லை.

வேலைக்காரன் கிருஷ்ணன்தான் மகாலக்ஷ்மியின் வாட்டத்தைத் தொடர்ந்து கவனித்தான். அத்துடன் சும்மாயிராமல், "ஏன் தாயீ, உடம்பு சரியில்லையா? அல்லது வேறு ஏதாச்சியுமா? என்னிடம் சொல்லு தாயீ?" என்று அவளைத் தனிமையில் பரிவோடு கேட்டான்.

குழந்தையிலிருந்தே மகாலக்ஷ்மி தன் சந்தோஷமோ துக்கமோ எதுவானாலும் அவனிடம் வெளியிடுவது வழக்கம். இப்போதுமட்டும் மனத்துக்குள்ளேயே வருத்தத்தைச் சுமந்து அவனிடம் சொல்லாமல் இருப்பது அவளுக்குச் சாத்தியமாக இல்லை. அவன் அவ்வளவு ஆதரவோடு கேட்ட போது, அத்தை படும் கவலைகளைச் சொல்லி, "ஜோசியர் கூடாதுன்னு சொன்னா என்னடா செய்கிறது? அதை நம்பிண்டு தானே அம்மாஞ்சி காரியம் செய்கிறாப்போலே இருக்கு?" என்றாள்.

"அம்மாஞ்சிஐயாகூட அது மாதிரி செய்வாங்களா? நல்லா இருக்கு; ஜோசியமும் ஆச்சு, மண்ணும் ஆச்சு. தெய்வம் கல்பிச்சதை ஜோசியம் மாத்துமா? அதெல்லாம் நடக்காது. நான் சண்டை போடறேன். மாப்பிள்ளைஐயா கிட்டே நேரிலே போய்ச் சொல்லி, அவுங்க அப்பாவை என்ன சேதீன்னு

கேட்டு, அதெல்லாம் முடியாதூன்னு சொல்லச் சொல்றேன்'' என்ருன் கிருஷ்ணன், ஆத்திரமாக.

''அது சரிதாண்டா. முதலிலே மாப்பிள்ளை மனசு நமக்குத் தெரிய வேண்டாமா?'' என்ருள் மகாலக்ஷ்மி.

''தெரியாமே என்ன? அதிலேகூடச் சந்தேகமா?''

''அதில்லேடா; இந்த ஜோசிய சங்கதி ஒண்ணு இருக்கு, பாரு. அவரும் அதை நம்பருரா? அதைத் தெரிஞ்சிக்க வாண்டாமா? அதெப்படி? அதுதான் தெரியல்லே'' என்ருள் மகாலக்ஷ்மி கவலையுடன்.

''எனக்கு ஒரு யுக்தி தெம்பிடுது தாயி'' என்ருன் கிருஷ்ணன் குதூகலத்துடன். ''நானு ஐயாகிட்டே எனக்குச் சொந்தக் காரியம் இருக்குதூன்னு உத்தரவு கேட்டுக்கிட்டுப் போய் வாறேன். மாப்பிள்ளை ஐயாவோடே ரகசியமாகப் பேசி அவர் மனசு, அவர் செய்யப்போறது எல்லாம் தெரிஞ்சுக்கிட்டு வந்துடறேன்'' என்ருன்.

''அது சரிதாண்டா; அவர் உன் கிட்டச் சொல்லா விட்டால்?'' என்று சந்தேகத்தைக் கிளப்பிஞள் மகாலக்ஷ்மி.

''தாயி அனுப்பிச்சுதுன்னு சொல்ல மாட்டேனு? அது உருகிக்கிட்டுக் கிடக்குதூன்னு சொன்ஞ அதைக் கேட்டுக்கூடச் சும்மா இருப்பாரா? பாக்கலாம். அப்படி இருந்தூட்டா அந்த மாப்பிள்ளைதான் நமக்கு ஏதுக்கு?'' என்று ஒரு போடு போட்டான் கிருஷ்ணன். அவன் நாராயணனுடைய அன்பைச் சோதிக்க இதை ஒரு நல்ல வியாஜமாகக் கொண்டான் போலும்!

# 15
# தெளிவு

மகாலக்ஷ்மிக்கு அவன் சென்றிருந்த இரண்டு தினங்களும் இரண்டு யுகமாகக் கழிந்தன. ஒன்றிலும் மனசு பொருந்தாதவளாக, நாராயணனிடமிருந்து அவன் என்ன கேட்டு வருவானே என்கிற ஏக்கத்தோடு இருந்தாள். அவள் தலையெழுத்து அதனுல் அல்லவா நிர்ணயமாகப் போகிறது?

அவளிடம் நாராயணனுக்கு மிகுந்த ஆசை உண்டு. இதை அவள் ஒருவாறு நன்கு அறிந்திருந்தாள். ஆனுலும் அவன் தந்தை அவர்கள் மணத்தை ஒப்பாவிட்டால் அவன் என்ன

செய்வான்? அவரும் ஜோசியத்தைக் காரணமாகக் கொண்டன்றே சொல்லுகிறார்? ஜோசியப்படி ஜாதகம் அவர்களைச் சேர்க்காவிட்டால் அவர்கள் சேர முடியுமா? - இவ்விதம் பலவாறு சிந்தித்து மனத்தை ஒரு நிலையில் நிற்கவிடாமல் வாட்டிக்கொண் டிருந்தாள் அவள்.

''இந்தப் பெண்ணுக்கு என்ன திண்டாடுகிற ஜாதகமோ, யார் கண்டா?'' என்று அத்தை வேறு நடு நடுவில் நொந்துகொண்டு சொல்லம்பைப் பிரயோகித்தது அவள் மனத்தைப் புண்படுத்தியது.

கிருஷ்ணன் சொன்னபடி திரும்பி வந்தான். ''என்னடா அம்மாஞ்சி வீட்டுக்குப் போனையா? கல்யாண காரியமெல்லாம் நடக்கிறதா? என்னவோ எல்லாம் பிரமாதமாமே?'' என்று அவனைச் சுப்பு கேட்டாள்.

''ஆமாங்க அம்மா, பலே அமக்களம்னுதான் தோணுதுங்க. பந்தல் ஜோடிக்கிற முஸ்தீப்பைப் பாத்தாலே எல்லாம் கன ஜோராகத்தான் தென்படுது. மீனாக்ஷியம்மன் கல்யாணம் தோத்துப்போகும்னு நெனைக்கிறேன்'' என்றான் கிருஷ்ணன்.

''கல்யாணத்துக்குக் கிட்டத்தட்ட ஒரு மாசம் இருக்கே? அதுக்குள்ளாகவா பந்தல்? அம்மாஞ்சிக்கு என்ன? எல்லாம் போலீஸ் அதிகாரத்திலே நடக்கும். அதுவும் இப்போ பெரிய உத்தியோகம் வேறே'' என்றாள் சுப்பு.

அவளுக்கு அம்மாஞ்சியின் பெருமைகளைக் கேட்கக்கூட அவ்வளவாகப் பிடிக்கவில்லை. மகாலக்ஷ்மியின் கல்யாணம் தொங்கலில் இருக்கும்போது வேறொருவரின் சிலாகிப்பைக் கேட்க அவளுக்குப் பிடிக்குமா?

''ஆமாங்க, நீங்க சொல்றது ரொம்ப சரி. வீட்டுக்குள்ளே நுழைஞ்சு வரவே பயமாயிருக்குங்க. அத்தனை போலீஸ்காரன்கள் நெறைஞ்சு கிடக்குறானுங்க'' என்றான் கிருஷ்ணன் தமாஷாக. ''உங்களையெல்லாம் சுருக்க வரச் சொன்னாரு அம்மாஞ்சி. ஏன் இன்னும் வல்லேன்னு கோவுச்சுக்கிட்டதாகச் சொல்லச் சொன்னாரு'' என்று வேறு சொன்னான்.

''ஆமாம், இவனுக்கு ஆனந்தம் பொங்குகிறது; சொல்றான். பல்லை இளிச்சுண்டு ஊருக்கு முன்னே போய் நிக்கணுமாக்கும்!'' என்று சொல்லிவிட்டாள் சுப்பு. அவளுக்கு இருந்த வெறுப்பில் கல்யாணத்துக்கே போகாமல்கூட இருந்துவிடுவாளோ என்று இருந்தது.

'கிருஷ்ணன் என்னிடம் ஏன் ஒன்றும் சொல்லாமல் திரிந்துகொண் டிருக்கிறுன்?' என்று மகாலக்ஷ்மிக்குத் தவிப்பாக இருந்தது. அவன் தன்னிடம் நெருங்காமல் ஒதுங்குவதைப் பார்த்தால், நல்ல சேதியாகச் சொல்ல ஒன்றும் இல்லையோ என்று அவளுக்குப் பலத்த சந்தேகம் ஏற்படத் தொடங்கிற்று. நாராயணனும் தகப்பனுர் எண்ணத்தை ஆமோதிக்கிருனே என்னவோ, யார் கண்டது? ஜோசியர், தன்னை மணந்தால் ஏதாவது மகத்தான கெடுதல் ஏற்படுமென்று சொல்லியிருந்தால், அவன் அதற்குப் பயப்படுவது நியாயந்தானே? ஆனுலும், ஆனுலும்..'

மேலே நினைக்க முடியாமல் அவள் நெஞ்சம் விம்மிற்று. கடைசியில் சாப்பாடு முடிந்து, அத்தையும் அப்பாவும் சிறிது சிரம பரிகாரமாகக் கண்களை மூடிப் படுத்துக்கொண்டார்கள். பாலுவும் பக்கத்து வீட்டுக்கு விளையாடச் சென்றுன். அப்போது மகாலக்ஷ்மி ஏதோ புத்தகத்தை வைத்துக்கொண்டு மாடிச் சின்ன அறையில் உட்கார்ந்திருந்தாள். அவளுக்குப் புத்தகத்தில் மனம் செல்லவில்லை. 'கிருஷ்ணன் சாப்பிட்டு முடித்திருப்பான். இப்போது வேறு யாரும் இல்லை. மெள்ளத் தனியே அவனை விசாரிப்போம்' என்று அவள் கிளம்பினுள். அப்போது அவனே அவளைத் தேடி அங்கே வந்து சேர்ந்தான்.

"என்னடா கிருஷ்ணு, என்னைப் பார்க்காமலே ஒளிகிருயே? போனதைச் சொல்லுடா" என்றுள் பரப்புடன்.

"நான் போனதை மட்டும் சொல்லணுமா? அங்கே நடந்ததையும் சொல்லணுமா?" என்று குறும்பாகக் கேட்டான் கிருஷ்ணன்.

"போடா, நீ போனது எதுக்கு? அதுதான் தெரியுமே. அங்கே என்ன நடந்தது சொல்லு; மாப்பிள்ளையைப் பார்த்தாயா? அவர் உன்னிடம் என்ன சொன்னுர்?" என்றுள் விடாமல்.

"அவரு என் கிட்ட ஒண்ணும் சொல்லல்லே."

"அப்படியானு அவப்பா சொல்வதை ஒத்துக்கருராமா?" - இப்படிக் கேட்டபோது அவள் குரல் தழுதழுத்தது. அதைக் கவனித்த கிருஷ்ணன் மனம் இரங்கிப் போனுன். விளையாட்டை நிறுத்திக்கொண்டு சற்று வேகமாகவே, "அப்படி இல்லை; வாயாலே ஒண்ணும் சொல்லல்லே; அவ்வளவுதான். இதோ பாரு கடிதாசு கொடுத்திருக்காரு; நீயே படிச்சுக்கோ.

உங்கிட்டவே கடிதாசிலே பேச்ருரு; வேறே ஒண்ணும் இல்லே'' என்று சமாதானமாகச் சொல்லி அவளிடம் ஒரு கடிதத்தை நீட்டினுன்.

அதைப் படித்தபோது அவள் முகபாவம் விதம் விதமாக மாறிற்று. சந்தோஷமும் துக்கமும் பயமும் அதில் கலந்து கலந்து வெளிப்பட்டன.

கிருஷ்ணன் வந்து சொன்ன பிறகுதான் அவனுக்கு விஷயமே தெரியும். அதுவரைக்கும் தகப்பஞர் அதுமாதிரி ஜோசியம் கேட்டு வைத்திருப்பது, அவனுக்குத் தெரியவே தெரியாது. ஜோசியமாவது, இன்ஞென்ருவது! திரிமூர்த்திகளே வந்து தடுத்தாலும் அவர்கள் கல்யாணம் நிற்கப்போவதில்லே. அதுபற்றி மகாலக்ஷ்மிக்குச் சந்தேகமே வேண்டாம். தந்தை அவர் பெண் விவாகத்தில் ஈடுபட்டிருப்பதால் அவரிடம் அது பற்றிக் கேட்கச் சாவகாசம் இல்லே. ஆனுல் பிறகு அவன் சும்மா இருப்பானு? மாட்டான். அவரிடம் மனம்விட்டுப் பேசி முடித்துக்கொள்ளுவான். அவர் விரோதமாக இருந்தால் அவரைப் பொருட்படுத்தப் போவதில்லே. அவர்களுக்குள் இது சம்பந்தமாக மனஸ்தாபமே நேருவதாக இருந்தாலும் பாதகம் இல்லே. பிரத்தியக்ஷத்தை விட்டு ஏட்டுச் சுரைக்காயை நம்புவார் உண்டா? அதை நம்பி வாழ்க்கையை ஆயுள் உள்ள வரைக்கும் நாசமாக்கிக் கொள்ளுவார்களா? இது மாதிரியான பைத்தியக்காரத்தனம் அவனிடம் இல்லே.—இப்படி அவளுக்குத் திடம் சொன்னதோடு எவ்வளவோ ஆசை மொழிகளேயும் அதில் கொட்டியிருந்தான். தன்னே மணக்க முடியாமல் போய் விடுமோ என்று அவளுக்கிருந்த கவலேயைத் தெரிந்துகொண்டு அவனுக்கு ஏற்பட்ட சந்தோஷப் பெருக்கை வேறு குறிப்பிட்டிருந்தான்.

''ஏண்டா, இந்தக் கடிதாசைக் கொடுக்காமே இத்தனே தாமதம் பண்ணினே? நான் என்னவோன்னு பயந்து போனேன்'' என்று மகாலக்ஷ்மி கிருஷ்ணனிடம் கேட்டபோது உணர்ச்சி மிகுதியால் அவள் குரல் கம்மிப் போயிற்று.

''ஆமாம்; நீ ஒரு மணி நேரமா வாசிச்சுக்கிட்டு நிக்கறயே. அதுக்கு நேரம் வாணுமா? எல்லார் முன்னேயும் கொடுக்கலாமா? சொல்லு'' என்ருன் கிருஷ்ணன் கேலியாக. ''போடா'' என்று அவள் கோபிப்பவள்போல் சொல்ல, ''நீ கடிதாசியை நாள் பூரா வாணுலும் படிச்சிக்கிட்டிரு. மாப்பிள்ளே

தங்க மானவரு. அதுதான் எனக்கு வேணும்'' என்று திருப்தியோடு சொல்லிவிட்டு அவன் தன் காரியத்தைப் பார்க்கச் சென்றுவிட்டான்.

வாஸ்தவத்தில் நாராயணனுக்கு அவளிடத்தில் இருக்கும் அன்பு இதனால் வெளியானதென்பதில் கிருஷ்ணனுக்கு அளவற்ற திருப்தி ஏற்பட்டது.

மகாலக்ஷ்மி அந்தக் கடிதத்தைப் பொக்கிஷமாகப் பத்திரப் படுத்திக்கொண்டாள். அவளுக்கு முதல்முதல் வந்த காதல் கடிதமல்லவா அது? அதை ஒவ்வொரு வார்த்தையாக ஒருவரும் அறியாமல் ரகசியத்தில் படித்து இன்புற வேண்டும் என்ற ஆசை அவளுக்கு எழுந்தது. ''என் அன்பே மகாலக்ஷ்மி!'' என்று அவன் அழைத்திருப்பதைப் படித்தபோது அவளுக்கு உடல் சிலிர்த்தது. அந்த வார்த்தையைச் சுற்றியே, மலரைச் சுற்றி வட்டமிடும் வண்டைப்போல அவள் மனமும் நகராமல் சுழன்று நின்றது. மேலும் அவள் மன ஏக்கத்துக்கு ஆறுதல் அளிக்கும் மருந்தாகவும் அது ஆயிற்று. ஆனால் உள்ளூற ஒரு கவலையும் இருந்தது. 'தந்தையை விரோதித்துக்கொள்ளும்படி அவனை விடுவது சரியா? தன்னை மணப்பது அவனுக்கே கெடுதல் விளைவிக்கும் என்றிருந்தால் அதைச் செய்யலாமா? ஜோசியம் அவ்வளவுக்கு உண்மையாக நடக்கக் கூடியதா?' - இவ்விதம் பலவாறு மனம் பிரமை கொண்டது.

எதுவானாலும் மகாலக்ஷ்மிக்குக் கடிதம் தெம்பை அளித்தது உண்மை. அத்தைக்கு அதுவும் இல்லையே! நாராயணனுக்கும் மகாலக்ஷ்மிக்கும் தீர்மானித்திருந்த கல்யாணம் நின்று போனதாகவே எண்ணி, ஒன்றிலும் மனம் பொருந்தாமல் இருந்தாள் அவள். ஞானத்தின் விவாகத்துக்குக்கூட, 'போக வேண்டுமே' என்றுதான் கோபாலனுடனும் குழந்தைகளுடனும் சென்றாள். போன இடத்தில் எப்படியாவது விவாகத்தை நிச்சயம் செய்து கொள்ள ஏதாவது செய்யலாமோ என்கிற நம்பிக்கைதான், அவளைப் போகும்படி செய்யச் சிறிதாவது காரணமாயிற்று.

அம்மாஞ்சியும், அம்மாஞ்சி மன்னியும் ஆசை ஆசையாக வரவேற்றது அவளுக்கு ஒரு பொருட்டாகவே படவில்லை; கல்யாண விமரிசை ஒன்றையும் அவள் கவனிக்கவும் இல்லை. சும்மா இருந்து பழக்கம் இல்லாததனாலேயே கல்யாணக் காரியங் களில், அதாவது உள்ளிருந்து பட்சணம் முதலானவை செய்வதில் பங்கெடுத்துக்கொண்டாள்.

அம்மாஞ்சியும் அவர் சம்சாரமும் விவாக ஏற்பாடுகளில் முனைந்து, பெரிய உத்தியோகஸ்தர்களான சம்பந்திகளை உபசரித்துத் திருப்தி பண்ணும் கவலையில் முழுகிக் கிடந்தார்கள். அதனால் சுப்புவின் மனச்சோர்வைக் கண்டுபிடிக்கவில்லை. பெண்ணின் மாமியாராகிவிட்ட ஸப்ஜட்ஜ் சம்சாரத்தின் காலடியில் நின்று அடிக்கடி விசாரித்துக்கொள்ளத்தானே தர்மாம்பாளுக்குச் சரியாக இருந்தது? அவ்வளவு உபசரிப்பையும் உரிமையோடு ஏற்று எதிலும் சிறு குற்றம் குறைகளைக் கண்டு பிடித்துச் சொல்லிவந்தாள் ஸப்ஜட்ஜ் சம்சாரம்.

அம்மாஞ்சி தம் போலீஸ் அதிகாரம் முழுவதையும் செலுத்திப் புலிப்பால் கூடக் கிடைக்கும் என்கிற விதத்தில் பெரிய தோரணையில் சகலமும் செய்தும், எல்லாவற்றையும் ஒரு சிலாகிப்பு இல்லாமல் அலக்ஷ்யமாகவே ஏற்றுக்கொண்டார்கள் சம்பந்திகள். என்ன உயர்வு இருந்தாலும் பிள்ளையும் அவன் வீட்டவர்களும் ஒரு படி மேலல்லவா?

மாப்பிள்ளை மகாவிஷ்ணுவுக்குச் சமானம் என்பதற்கு இணங்க, கோவிந்தராஜனுக்குக் கிடைத்த உபசரிப்புகளுக்குக் கணக்கு வழக்கே இல்லை. பூவை எடுத்துப் பூஜிக்கவில்லை; அவ்வளவுதான். மற்றப்படி அதற்கு மேலாகவே எல்லாம் நடந்தன. சாக்ஷாத் மகாவிஷ்ணுவைக்கூடப் பக்தர்களுக்கு வசப்பட்டவராகத்தான் சொல்லுவது வழக்கம். ஆனால் இந்த மாப்பிள்ளை மகாவிஷ்ணுவோ, தன் தாசர்களான வேட்டகத்து மனுஷ்யர்களிடம் அவ்விதம் சாதாரணமாக நடந்துகொண்டு விடவில்லை. 'பிகு, சுகு'வுடனேயே எல்லா உபசாரங்களையும் ஏற்றுக்கொண்டான். பள்ளித் தோழனான நாராயணனிடங்கூட இப்போது மைத்துனன் என்பதற்காக முன்போல் அவ்வளவு சகஜமாக இருக்க விரும்பவில்லை. 'பழைய சிநேகத்துக்காக அவனிடம் சமமாக எதற்காக இருக்கவேண்டும்?' என்று நினைத்தான். முக்கியமாகத் தன்னைக் கௌரவிக்க வேண்டியவர்களில் நாராயணன் ஒருவன் அல்லவா?

இவ்விதம் கல்யாணம் எவ்வளவோ செலவில் சிறப்பாக நடந்தும், அதை ஏற்றுக்கொண்டவர்கள் அவ்விதம் காண்பித்துக் கொள்ளாமல் போகவே, அம்மாஞ்சிக்கோ அவர் மனைவிக்கோ முழுப் பெருமையும் சந்தோஷமும் கிடைக்க வேண்டிய அளவு கிடைக்காமல் போயிற்று. இல்லாவிட்டால் கல்யாணத்தில் தம்பதிகளுக்கு வந்து குவிந்த பரிசுகள் ஒன்றுக்கே எவ்வளவோ

பெருமைப்பட் டிருக்கலாமே. போலீஸ் உத்தியோகத்தில் லஞ்சம் வாங்காத அபூர்வ ஆபீசரான அம்மாஞ்சியின் ஒரே மகளின் கல்யாணத்துக்கு ஊரிலுள்ளவர்கள் எல்லோரும் ஏதாவது தங்கள் அன்பளிப்பாகக் கொடுக்கப் பெரிதும் விரும்ப மாட்டார்களா? ஸப்ஜட்ஜ் மகனான மாப்பிள்ளைக்கும் விவாகப் பரிசுகள் வரத்தான் வந்தன.

சிறப்பாகப் பாணிக்கிரகண மஹோத்ஸவம் முடிந்து, வந்தவர்கள் அவரவர்கள் இடம் போய்ச் சேர்ந்து, எல்லாத் தடபுடல்களும் ஒருவாறு ஓய்ந்தபிறகு, கோபாலன், சுப்பு இவர்கள் மத்தியில் வந்து உட்கார அம்மாஞ்சிக்கு அவகாசம் கிடைத்தது. அவர்கள் மட்டும் இன்னும் ஊர் போகவில்லை. மகாலக்ஷ்மியின் கல்யாணத்தைப்பற்றி இரண்டில் ஒன்று தெரிந்துகொண்டுதான் போகவேண்டும் என்று அவர்கள் தங்கியிருந்தார்கள்.

''அப்பா! ஜோசியம் துணைசெய்யாவிட்டால், நான் இந்தக் கல்யாணத்தை முடிக்கிறது ஏது? அவர்கள் அத்தனை பிகுசெய்து கொண்டார்களே!'' என்று சொல்லிக்கொண்டார் அம்மாஞ்சி.

'எதற்காகச் சொல்லுகிறான்? ஜோசியத்தில் தனக்கிருக்கும் நம்பிக்கையை நமக்குத் தெரிவிக்கவா?' என்கிற சந்தேகம் சுப்புவைப் பிடித்துக்கொண்டது. அவளால் சும்மாயிருக்க முடியவில்லை. ''இப்போது என்ன, உனக்கு ஜோசியத்தில் நம்பிக்கை அபாரமாக வந்தூட்டுதே?'' என்றாள் மெதுவாக.

''நம்பிக்கை வரும்படி அவ்வளவு நன்றாய் ஒவ்வொன்றையும் கண்ணால் பார்க்கிற மாதிரீன்னு சொல்லியிருக்கான்! அவன் சொன்னபடி அணுப் பிசகாமேன்னு நடந்திருக்கு? 'இந்தக் கல்யாணம் கட்டாயம் நடக்கும். ஆனால் உனக்கு அதிகச் சந்தோஷம் இருக்காதூ'ன்னு சொன்னான். அதுக்குச் சரியா அவா நம்மை வாட்டி எடுத்துச் சந்தோஷப்பட முடியாமே செஞ்சூட்டா பாரு'' என்றார் அம்மாஞ்சி.

''அவ்வளவெல்லாம் ஜோசியத்திலே தெரியுமா? நான் கேட்டதில்லை. பொதுப்படையாக, காலபலம், பொருத்தம் இவைகளைத்தான் சொல்லுவார்கள். கேட்டிருக்கிறோம்'' என்றார் கோபாலையர்.

''அதெல்லாம் நம்ம ஊர்ப் பஞ்சாங்க ஜோசியம்னு? அதை விட்டுத் தள்ளுங்கறேன். அந்தத் தெலுங்குச் சீமையிலே, எப்படீன்னு, சாக்ஷாத் பிரம்மாவே வந்து சொல்வதுபோல் சொல்லறான்'' என்று அம்மாஞ்சி விடாமல் சிலாகித்தார்.

'எதற்காக இப்படிப் பூர்வ பீடிகை போட்டுக்கொண்டு பேசுகிறான்? நாராயணனுக்கும் மகாலக்ஷ்மிக்கும் ஜாதகம் பொருந்தவில்லையென்று அந்த ஜோசியன் சொல்லியிருக்கிறதை உடனேதான் சொல்லட்டுமே' என்று சுப்புவுக்கு ஆத்திரம் பொத்துக்கொண்டு வந்தது. ஆனால் அதைக் கேட்டுவிடவும் மனசு துணியவில்லை. ''என்னவோப்பா, இத்தனை நாளும் நம்ம ஊர் ஜோசியர் பார்த்துச் சொல்லித்தானே எல்லாம் நடத்தியிருக்கோம்? இப்போ அது போருமே; புதிசா என்ன வந்தூட்டுது?'' என்று அந்த ஆத்திரத்தை வெளிக்காட்டாமல் கூறினாள்.

''உனக்கு, கோபாலனுக்கு, எல்லாம் நம்ப ஊரு ஜோசியர் பார்த்துப் பண்ணின அழகுதான் என்னமா இருக்கு? போருமே!'' என்றார் அம்மாஞ்சி.

''அது அவரவர்களுடைய தலையெழுத்து. அதுக்கு யார் என்ன பண்ண முடியும்? ஜாதகத்துலே அது மாதிரி இருந்தா மாத்த முடியுமா?''

''எதுக்காகப் பின்னே ஜாதகம் பார்க்கிறதாம்? அந்தச் சாஸ்திரம் ஒண்ணு பெரிசாக எதுக்கு இருக்கு? வரப்போற கெடுதல் தெரிஞ்சு ஜாக்கிரதையாகத் தடுத்துக்கறத்துக்குக்கூட இல்லையின்னா, ஜோசியம் பார்ப்பானேன்?'' என்றார் அம்மாஞ்சி.

''என்னவோ, இப்போ ஞானத்தின் கல்யாணம் இந்த இடத்திலே நடக்கத்தான் நடக்கும்னு சொல்லிப்பிட்டான்: உனக்கு அப்படியே பலிச்சூட்ட மாதிரி இருக்கு. ஞானத்தை விட உயர்ந்த பெண் அவாளுக்குக் கிடைக்குமாக்கும்! அவா பண்ணிண்ட ராங்கி அவாளைப் பெரியவாளாத் தோண வச்சூடுத்து. எல்லாந் தெரிஞ்சிண்டுதான் அவாளும் பண்ணிண்டிருக்கா. இது சொல்லப் பெரிசா ஜோசியம் ஒண்ணும் வேண்டாம்'' என்று ஒரு போடு போட்டாள் சுப்பு.

''நம்ம நாராயணன் கல்யாணத்தைப் பத்திக்கூடத்தான் சொல்லியிருக்கான். அதைக் கேட்டா அப்போ சொல்லுவே.'' இப்படி அம்மாஞ்சி ஆரம்பிக்கு முன் சுப்புவுக்கு நெஞ்சும் மார்பும் படபடவென்று அடிக்கத் தொடங்கின. அவர் என்னத்தைச் சொல்லிவிடுவாரோ என்கிற பயத்தில், ''ஜோசியன் எதை வேண்டுமானாலும் சொல்லட்டுமே. அதுக்காகப் பிறந்தன்னி முதல் தீர்மானமாக இருக்கிறதை நிறுத்த முடியுமா?'' என்றாள் சுப்பு, ஆத்திரத்துடன்.

''நிறுத்துவதா? யார் சொன்னது?'' என்றார் அம்மாஞ்சி, ஒன்றும் புரியாது ஆச்சரியம் மேலிட்டவராக. ''இது மாதிரி பொருந்துகிற ஜாதகங்களை நான் இதற்கு முன் பார்த்ததே இல்லை' என்றல்லவா ஜோசியன் அதிசயப்பட்டுப் போனான்? அதைன்னா நான் சொல்ல வருகிறேன்'' என்றார் அவர். அவர்கள் வேறு விதமாக நினைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்பது அப்போதுதான் அவருக்கு உதயமாயிற்று.

''நீ இதை முதலிலேயே எழுதப்படாதா? சுப்பு பிராணனையே விட்டிண்டிருந்தா, இத்தனை நாளும். என்னையும் தொந்தரவு பண்ணித் தீத்துட்டா. நான்தான், நீ ஒன்றும் அது மாதிரி செய்யமாட்டே, உனக்கு இப்போ காரியம் கிடக்கும், தொந்தரவு பண்ணக்கூடாதுன்னு சும்மா இருந்தேன்'' என்றார் கோபாலையர் சாவதானமாக.

அம்மாஞ்சிக்கு அவர்கள் விசாரத்தைக் கேட்டுச் சிரிப்புக் கூட வந்தது. ''அடியே, இதைக் கேளு. நாம் நம்ம கல்யாண விமரிசையில் இருந்தா, இவா அநாவசியத்துக்குத் தவிச்சிருக்கா'' என்றார் மனைவியைக் கூப்பிட்டு.

''நீங்க ஒரு வரி கடிதாசு போட்டிருக்கலாமே'' என்றாள் அவர் மனைவி. ''இப்போ, சாவகாசமாச் சொல்ல மாட்டியா? அப்போ நான் ஞானத்தின் கல்யாணம் தவிர வேறே செய்யறது கிடக்கட்டும்; நினைக்கவாவது நீ விடுவையோ?'' என்றார் விளையாட்டாக.

''இப்பத்தான் என்ன? எல்லாந்தான் சரியாப் போச்சே'' என்றாள் அவர் மனைவி.

நாராயணனுக்குத் தந்தையை எதிர்த்துப் போராடித் தன் அசாதாரண அன்பை மகாலக்ஷ்மிக்குக் காட்டமுடியாமல் போய் விட்டதே என்கிறதுதான் ஒரு குறை. இவ்வளவு சுலபமாகப் பெரியவர்களுக்கோ ஜோஸ்யத்துக்கோ விரோதமின்றி எல்லாம் இனிது முடிந்ததில் மகாலக்ஷ்மிக்கு அளவற்ற சந்தோஷம்.

சுப்புவுக்கு அவள் பட்ட கவலைகளும் சிரமங்களும் சூரியனைக் கண்ட பனிபோல் ஒரு நிமிஷத்தில் மறைந்தே போயின. சமீபத்திலேயே முகூர்த்த தினத்தைக் குறிப்பிட்டுக்கொண்டு, ஊர் திரும்பிக் கல்யாண காரியங்களைச் செய்யும் அவசரத்தில் இருந்தாள் அவள். எந்தச் சிரமத்திலும் பங்கெடுத்துக் கொள்ளாமல் சந்தோஷத்துக்கு மட்டும் பாத்தியஸ்தராயிருக்க,

கோபாலையரின் ஜாதகத்தில் ஏதோ இரு கிரகங்களின் சேர்க்கை விசேஷமாக அமைந்துதான் இருக்கும்!

''உனக்கு இந்தமட்டிலாவது, அவர்களைத் தவிக்கச் செய்து, பிள்ளையைப் பெற்ற பெருமையை நிலைநாட்டிக் கொண்டோமே என்கிற திருப்தியாக்கும்?'' என்று அம்மாஞ்சி மனைவியைப் பரிகசித்தார்.

''இல்லாவிட்டால் பிரமாத கௌரவம் பண்ணிக்கொண்டு, ஒவ்வொருத்தரைப்போல், சம்பந்திகளைக் கண்ணில் விரலை விட்டுத்தான் நான் ஆட்டப்போறேனாக்கும்!'' என்று அலுத்துக் கொண்டு சொன்னாள், தர்மாம்பாள். ஸப்ஜட்ஜ் சம்சாரத்தினிடம் பட்ட அநுபவம் அதற்குள் அவள் மனத்தை விட்டுப் போய்விடுமா?

நாராயணனுக்கும் மகாலக்ஷ்மிக்கும் சமாசாரம் தெரியவும் ஒரேமட்டில் பூரிப்படைந்தார்கள். 'பழம் நழுவிப் பாலில் விழுந்த'தற்கொப்ப, ஜாதகம் பொருந்துவது மட்டும் அல்ல; இதைவிடச் சிலாக்கியமாகப் பொருந்தக்கூடிய ஜாதகங்கள் இல்லை என்று சொல்லும்படி அல்லவா விஷயம் இருக்கிறதாகத் தெரிகிறது!

## 16
# அநாசாரம்

நாராயணனும் மகாலக்ஷ்மியும் அக்கினிச் சாட்சியாகக் கணவனும் மனைவியும் ஆகிவிட்டார்கள். இனி யாரும் வம்பு வளர்த்துவதற்கு இடம் இல்லாமல் எல்லாம் இனிது நிறைவேறிவிட்டன. சுப்புவும் ஆசுவாசமாகப் பெருமூச்சு விட்டு நிம்மதியாக இனிக் காலம் தள்ளலாம்.

நம் பெரியவர்கள் பெண்ணுக்குப் புருஷனைத் தேடிக் கொடுத்துவிட்டால் தங்கள் தோளை விட்டுப் பெருத்த சுமை ஒன்று இறங்கினாற்போன்ற ஆறுதலும் திருப்தியும் அடைகிறார்கள். இவர்கள் செய்துவைத்த மணத்தினால் அந்தப் பெண்ணின் வாழ்க்கை சுகமற்றுப் போனாலும், 'தலைவிதி, நாம் செய்வது ஒன்றும் இல்லை' என்று சமாதானம் செய்து கொள்கிறார்கள். அந்த வருத்தத்திலுங்கூடக் கடமையைச் செய்த திருப்தி அவர்கள் மனத்தை விட்டு அகலுவதில்லை. ஊரில் உள்ளவர்களும், 'அவர்களுக்கு என்ன? பெண்களுக்

கெல்லாம் கல்யாணம் ஆகிவிட்டது' என்றுதான் அவர்கள் நிலைக்குப் பொருமைப்படும் தோரணையில் பேசுகிறார்கள்.

கோபாலையரைப் பற்றியும் அவ்விதந்தான் தானப்பாளைய வாசிகள் கருதினார்கள். குளக்கரைச் சங்கத்திலும் ஸ்திரீகள் ஸ்நானத்துக்காகக் கூடினபோது, "காமாக்ஷி வேணுக் குடுத்து வைக்கல்லே; அல்பாயுசுலே போயிட்டா; குழந்தைகளுக் கெல்லாம் ஜம் ஜம்முன்னு கல்யாணமாயிடுத்து" என்று பேசிக் கொண்டார்கள்.

"கோபாலன் ராங்கிக்காரனாக இருக்கான் என்றால், இல்லாமே என்ன பண்ணுவான்? துளி சிரமப்படாமே ஆத்து வாசப்படி தாண்டாமே தங்கம் தங்கமா மாப்பிள்ளைகள் கிடைச்சுட்டான்கள். கடைசி மாப்பிள்ளை எல்லாருக்கும் மேலாகப் போய்விட்டான். பெரிய உத்தியோகஸ்தன் பிள்ளை; படிச்சவன் வேறே" என்றாள் பெரியவளான ஒருத்தி.

"அதிலும் அத்தானும் அம்மாஞ்சியும் சம்பந்தம். ஒருவருக் கொருவர் தோளிலே கை போட்டுக்கொள்ளலாம். ஒரு மட்டு, மரியாதை பார்த்துண்டு தவிக்கவேண்டாம். அதைச் சொல்லு" என்றாள் எதிரகத்து லக்ஷ்மி. அவள் சின்னப்பெண் கல்யாணத்தில் சம்பந்திகள் படுத்தின பாடு அவளுக்கு அப்போது நினைவுக்கு வந்தது.

"தர்மாம்பாள் பெரிய உத்தியோகஸ்தன் ஆம்படையாள் என்கிற பெருமை துளியும் இல்லாமே அன்னிக்கும் இன்னிக்கும் ஒண்ணுபோலே இருக்கா. அவ சம்பந்தி ஒருத்தி வந்திருந்தாளே அடே அப்பா! அவளோடே ராங்கி சொல்லி முடியாதுபோலே இருந்தது" என்றாள் இன்னொருத்தி.

"அவளா? அவாத்துக்காரர் ஸப்ஜட்ஜியாம். அதுக்காக அவ செய்துண்ட அமர்க்களம் சொல்லத் தரம் இல்லே; அவளுக்குத் தனியாக இருக்கணுமாம்; கல்யாணக் கூட்டமும் சாப்பாடும் ஒத்துக்காதாம்."

"அப்படீன்னு எதுக்குக் கல்யாணத்துக்கு வரா? ஆத்துலேயே பேசாமே இருக்கப்படாதோ!" என்றாள் ஒருத்தி சிரித்துக்கொண்டு.

"என்னவோ பாவம்னு மத்தியான்னம் சித்தே சந்தடி யில்லாமே எங்காத்துலே வந்து இருக்கட்டும்னு ஆயிரம் உபசாரம் செஞ்சு அழைச்சுண்டு வந்தா, என்னவெல்லாம் தூஷிச்சா தெரியுமோ? நாம்பாட்டுக்கு இராமே ஏண்டாப்பா

கூட்டிண்டு வந்தோம்னு போயிடுத்து எனக்கு'' என்ருள் லக்ஷ்மி.

''சொல்ல என்ன இருக்கு? கோபாலனுத்துக் கல்யாண மாட்டமா நம்மூரிலே ஆராத்துக் கல்யாணம் அவ்வளவு நறுவிசா நடக்கிறது? சுப்பு இருந்தாலும் காலோடு தலே கவனிச்சு, ரொம்ப நன்னுத்தான் எல்லாம் செய்யரு'' என்ருள் லக்ஷ்மியின் மாமியார்.

''நீங்களும் நானும் அப்படி நினேச்சிண் டிருக்கோம்; அந்தம்மா சொன்ன சொல்லேக் கேக்கணுமே. கிராமத்தையே ஒரு மண்டுன்னு தூஷிச்சா. நம்மையெல்லாம் நாகரிகம் இல்லாத காட்டுமிராண்டி மாதிரி பேசினு. ஊரோடே புழுதியும் நாத்தமும் சொல்லமுடியலேயாம். வீடெல்லாம் பங்களாவாக இல்லேயாம். அவ சொன்னதைப் பாத்தா எங்கோ சீமையிலே இருந்து வந்து குதிச்ச மாதிரி இருந்துதே தவிர, நம்மூரிலே பிறந்து வளந்தவளாத் தோணலே. கதவைச் சாத்திண்டு குளிக்க உள்ளு இல்லேயாம். 'ஐயே! எல்லாரும் பார்க்க என்ன குளிப்பு?'ன்னு பரிகாசம்னு பண்ணினுள்?''

''யாரெல்லாம் பார்க்கிருளாம்? நன்னுருக்கு! அப்படியும் யாரும் அவுத்துப் போட்டுண்டு நிக்கல்லே?''

''ஸ்படிகமாட்டமா நீரோடே குளம் கிடக்கு. அதுலே ஜிலுஜிலுன்னு காத்தடிக்க அமிழ்ந்து இன்னிக்கெல்லாம் குளிர ஸ்நானம் செய்வதை விட்டுட்டு, குளிக்க உள் எதுக்காம்? உள் கெணத்துத் தண்ணியே மொண்டு வச்சுண்டு கதவை அடைச்சிண்டு சொம்பு சொம்பாப் பட்டதும் படாததுமா ஒடம்பிலே விட்டுக்கறத்துக்கா? அழகுதான்!'' என்ருள் ஒருத்தி.

''நம்ம குளத்து ஒசத்தி அவளுக்கு என்ன தெரியும்? பட்டணவாசத்துலே சுடச்சுடக் குழாய்த்தண்ணியிலே காக்கா யாட்டமா மூக்கை நனேச்சுத்தானே பழக்கம்?''

''எதுவோ, தூஷிக்க வேண்டாம். கிராமத்துலே நெல் வெளேஞ்சு வராட்டா, இவா பட்டணத்துலே உக்காந்து என்னத்தைச் சாப்பிட்டு வயத்தைக் கழுவிக்கறதாம்? என்னத்தை வேணுச் சொல்லட்டும். நம்மாலே சண்டை வளந்துதான்னு வரவேண்டாம்னு பேசாமே இருந்தேன். அவவேணு நம்மை ஒண்ணும் தெரியாதவான்னு நெனேச்சுண் டிருக்கா. அவளுக்குத்தான் ஒண்ணும் தெரியலே என்கிறது நமக்குத் தெரியாதா? இருந்தாலும் தர்மாம்பாளுக்குக்

கஷ்டந்தான், இதுமாதிரி சம்பந்தி வந்திருக்கிறது. இத்தனை நல்ல பாலும் காபியும் பட்டணத்துலே ஏது? அதைக்கூடன்னு ஏதோ விஷமாட்டமாக் குத்தம் சொன்னு?'' என்றாள் லக்ஷ்மி.

"தர்மாம்பா, கல்யாணத்துலே பிள்ளையைப் பெத்தவளா, கவலையத்துச் சந்தோஷமா இருக்காமே, இவ பக்கத்துலே நின்னுண்டு போது போதா உபசாரம் பண்ணிண்டுன்னு தவிச்சாளாம், பாவம்!''

"என்ன பண்ணறது? தப்பு எடுத்துக்கறவான்னு பயப்பட வேண்டியதுதானே? அதுவும் இவள் பெண்ணைக் கொடுத்தவள். நெடுகிலும் பெண்ணைச் சரியா வச்சுக்கணுமே. இதுமாதிரி மனுஷா அமைஞ்சுட்டாக் கஷ்டந்தான். பிள்ளையும் அவளாட்டமா இருந்தூட்டாக் கேக்கவே வேண்டாம்.''

"அப்படித்தான் இருப்பன்போலே இருக்கு. சின்னப் பிள்ளையா லக்ஷணமா, கலகலப்பாத் தெரியல்லே. அடுத் தாப்பலே அம்மாஞ்சி பிள்ளை நாராயணன் இல்லையா, எல்லா ரோடும் பேசிச் சிறிச்சுண்டு சகஜமா? அதுமாதிரி இருக்க மாட்டான்னு தோணறது'' என்றாள் லக்ஷ்மி. அவள் எதிர கத்தில் இருந்துகொண்டு அந்தப் பிள்ளைகளை யார் யார், எவ் விதம் என்று கவனித்துக்கொண்டுதானே இருக்கிறாள்?

"ஒரு சமாசாரம்னு? உனக்குத் தெரியுமோ? நாராயணன் அந்த மேலப்பாளையத்துப் பிள்ளை இருக்கானே-அவனோடு கூடப் படிக்கிறவன்-அவனையும் கூட வச்சுண்டுன்னு சாப்பிட்டானும்?'' என்று லக்ஷ்மியிடம் ரகசியம் போலக் குரலைத் தாழ்த்திக் கொண்டு சொன்னாள்.

"அது யார் சொன்னு? எனக்குத் தெரியாதே. அவன் குடியானவன் இல்லையோ?'' என்றாள் லக்ஷ்மி.

"என்னவோ, நாணம்மாளே சொன்னாள். 'பிள்ளைகள் படிச்சூட்டா ஆயிடுத்தா? என்ன என்னவோன்னு பண்ணறது கள் இந்தக் காலத்துலே'ன்னாள். ஜாதியா ஆசாரமா ஒண்ணும் இல்லாட்டா எப்படி?'' என்றாள் முதலில் சமாசாரம் சொன்னவள்.

"நாணம்மா வார்த்தையை முழுக்க நம்பப்படாது. தூளின்னு நிர்த்தூளின்னு பெரிசு பண்ணுவ. அதுவும் அவ பிள்ளை பரீக்ஷை தோத்துப்போயிண்டு, நாராயணன் முதல் முதலாகத் தேறிண்டு வருவது, அவளுக்கு அன்னியே முதல் வயத்தெரிச்சல். அதுக்கே ஏதாவது கட்டிவிடுவள்'' என்றாள் லக்ஷ்மி.

''இருந்தாலும், அந்த ராஜாக்கள் பிள்ளையும் இவனும் ரொம்பத்தான் சிநேகிதமாக இருந்தான்கள். நானுந்தான் பார்க்கிறேன். அவன் எப்போ இந்த ஊருக்கு வந்தாலும் இவன் அங்கே போறதும் அவன் இங்கே வரதும் ரொம்பத்தான் அதிகமா யிருக்கு.''

''எதுவோ, அதுக்காக ஜாதியை விட்டூட்டா நன்னு இருக்கா? ஆத்துலே பெரியவாள்ளாம் ஒத்துண்டாளாமா, ரெண்டுபேரும் சேர்ந்து சாப்பிட?''

''நாராயணன் யாரு சொன்னாலும் கேக்கமாட்டேன் னூட்டானுமே. எல்லாம் தெரிஞ்ச நல்ல பிள்ளையாட்டமா இருக்கான்; இது தெரியலையே? சொன்னாலும் கேக்கலையாமே. எல்லாம் அப்பா அம்மா மேலேதான் பிசகு. இவா பிள்ளையை அந்தப் பையனோடேயே இருக்க விட்டூட்டுப் போயிட்டா. பிராமணப் பிள்ளையைப் பிராமண ஆசாரத்தோடே வளர்க்க வேண்டாமோ?''

''இருந்தாலும், பறப்பட்டணம்னு பட்டணத்துலே எப்படி இருந்தாலும் பாதகம் இல்லே. நம்ம கிராமத்துலே அது மாதிரி இருக்கப்படாதூன்னு தெரிஞ்சுக்க வேண்டாமோ?'' என்றாள் இன்னொருத்தி.

''அதில்லே; அந்த மேலப்பாளையத்துப் பிள்ளையோடே சேர்ந்துண்டு, இவனும் கொஞ்சம் காந்தி கட்சியாத்தான் இருக்கானும். காந்திக்குத்தான் பிராமணன், குடியானவன் என்கிறது கிடையாதே. அது மாதிரீன்னு அவன் ஊரைக் கெடுக்கறான்'' என்றாள் பெரியவளான ஒருத்தி.

''எந்த ஊரு எப்படிப் போனா நமக்கு என்ன? நம்ம ஊரிலே யாரும் இதுவரைக்கும் இது மாதிரி கௌம்பல்லே. ஆசார விவகாரமா நாம்பாட்டுக்கு இருக்கோம். இங்கே ஏதுக்கு இந்தக் கூத்தெல்லாம்?''

''எல்லாம் படிப்பு, படிப்பூன்னு கெடந்து அலேஞ்சா இப்படித்தான்; பெரிசா, உத்தியோகம் பண்ணணும்னு ஆசைப் பட்டா, இதெல்லாந்தான் பலன்.''

''சுப்பு கஷ்டப்பட்டுப் போவளே. இவளுக்கு இதுமாதிரி யெல்லாம் பிடிக்காதே. ஆனால் அம்மாஞ்சி பிள்ளைதானே? எல்லாருமாச் சொல்லிச் சரிபண்ணிப் புடுவா. ஏதோ குழந்தைப் பிள்ளை, பிடிவாதமாயிருக்கான்; தானே வழிக்கு வந்துடுவான்'' என்று சமாதானமாகச் சொன்னாள் லக்ஷ்மி.

''சரியா வந்தால்தான் தேவலை. இல்லாவிட்டால் பிராமண ஜன்மம் எடுத்தூட்டுக் கெட்டுப்போறதைக் கேட்க நமக்குப் பிடிக்கல்லை.''

''என்ன இருந்தாலும் வரவர ஊரெல்லாம் கெட்டுத்தான் கெடக்கிறது. முன் மாதிரி ஒசந்த ஜாதீங்கறதே அடியோடு தொலைஞ்சுதான் போச்சு. எல்லாருந்தான் சொல்றா, பிராமணா அவா ஆசாரத்தை விடாமே இருந்தான்னு மத்த ஜாதிக்காரா மரியாதை வைப்பா. காலம் கெட்டுப் போயிண்டிருக்கு. கலி வந்து வர்ணாசிரமங்கள் இல்லாமே போயிடும்னு பகவானே சொல்லியிருக்கச்சே, அதும்படி நடக்காமே என்ன பண்ணும்?''

''என்னவோ, எங்கே எப்படி இருந்தாலும், நாம எங்கேயோ ஒரு மூலையிலே ஆசாரசீலமா ஒண்ணையும் விடாமே இருந்துண்டு வரோம். அதுக்கும் ஆபத்து வரவழைச்சுக்கலாமோ? ஊரிலே இருக்கிற பெரியவாளெல்லாமாவது ஒண்ணு சேர்ந்து இதை முத்தவிடாமே பாத்துக்கணும். மத்தப் பிள்ளைகளும் இவனைப் பாத்துக் கெட்டுப் போகாமே இருக்கணுமோ இல்லையோ?'' என்றாள் ஒருத்தி.

''ஆமாம், புதிசா இன்னமே ஏதோ கெடணுமாக்கும். நாணம்மா பெரிய பிள்ளை, சேரியிலே இருக்கிற பெண்களையெல்லாம் பாத்துண்டு நிக்கறானும்; எல்லாருந்தான் சொல்றா'' என்றாள் சின்னவளான ஒருத்தி.

''ஐயோ! வாயைப் பொத்து. அதைச் சொல்லாதே. நாணம்மா கேட்டா நம்மையெல்லாம் சேத்துக் குண்டு போட்டுடுவ'' என்றாள் லக்ஷ்மி.

''அவா யாருந்தான் இப்போக் கொஞ்ச நாளாக் குளத்துக்கே வரதில்லையே. அந்தத் தைரியத்திலேதான் சொன்னேன்'' என்றாள் அவள் விடாமல்.

''அது மாதிரி சின்ன வயசிலே இருக்கிறதுதான். அதுக்காக வீட்டுக்குள்ளே அழைச்சு வச்சுப் பக்கத்திலே வச்சுண்டு சாப்பிடறதூன்னா நன்னாயில்லையே. வீட்டையே கெடுத்து விடாதோ? அனாசாரமின்னா சாமி கண்ணை அவிச்சுப்படாதோ?'' என்றாள் பெரியவளாக இருந்த ஒருத்தி.

''சுப்பு சும்மா இருக்கமாட்டா. அம்மாஞ்சியும் நாலும் தெரிஞ்சவர். நாராயணனும் அப்படி ஒண்ணும் தறுதலை இல்லை. எல்லாம் சரியாப் போயிடும்'' என்றாள் லக்ஷ்மி. ஏதோ

கோபாலையரகத்துக் காரியம் அதிகம் கெட்டுப் போய்விடாது என்கிற எண்ணம் அவளுக்கு.

''எல்லாம் சரியாப் போகணும்; அப்பத்தான் ஊருக்கு க்ஷேமம்.'' இவ்விதம் எல்லோரும் சேர்ந்து ஒருமிக்கக் கிராமத்தின் நலத்துக்காகக் கவலைப்பட்டுவிட்டு அவரவர் வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

# 17
# ஒன்று போனால் ஒன்று

வாஸ்தவத்தில் சுப்புவுக்கு ஒன்று இல்லாவிட்டால் ஒன்றுக்கு விசாரப்பட வேண்டுமென்று ஜாதகத்தில் ஏதாவது வக்கிர கிரகத்தின் பலன் இருக்கத்தான் வேண்டும். இல்லா விட்டால், அவள் கவலைப்பட்டு வாடியதற்கு, அவள் ஆசைப் பட்டதற்கு மேலாகவே எல்லாம் வெகு நறுவிசாக நடந்து கொண்டு வரும்போது, நடுவில் இது மாதிரி மனத்துக்குச் சஞ்சலம் நேருமா?

நாராயணன் மாப்பிள்ளையாக வந்ததில் அவள் அடைந்த ஆனந்தம் சொல்லத் தரம் அல்ல. அம்மாஞ்சியின் பிள்ளை என்பது ஒன்றுக்காகவே சந்தோஷம் அவளுக்கு எவ்வளவோ? அது மட்டும் அல்லாமல் மாப்பிள்ளைக்கு அழகும் குணமும் படிப்பும் விசேஷமாகப் பொருந்தியிருக்கும்போது கேட்க வேண்டுமா? காமாக்ஷி இறந்துபோனது, கோபாலன் குடும்பக் கவலையற்று யோகியாக இருப்பது ஆகிய எல்லாவற்றையும் ஒருங்கே மறந்துபோய் அவள் ஆனந்த சாகரத்தில் முழுகிக் கிடந்தாள். அவளை முழுதும் அப்படியே இருக்கவிடாமல், நாராயணன் தன் கல்யாணத்தில் தன் ஆப்த நண்பனான தர்ம ராஜுவும் தன்னோடு கூடவே பந்தியில் உட்கார்ந்து சாப்பிட வேண்டுமென்று பிடிவாதம் பிடித்துப் பெரிதும் வருத்தத்தை உண்டுபண்ணி விட்டான்.

தர்மராஜுவுக்கு ஆசார உபசாரமாகச் சாப்பாடு பண்ணி வைக்க எல்லாரும் தயார்தான். ஆனால் அவனை பந்தியில் உட்கார வைத்துக்கொள்வதைத்தான் ஒருவரும் ஒப்புக்கொள்ள வில்லை. 'ஆள் கண்ணுக்குச் சிவப்பாய்ச் சுத்தமாக இருந்தாலும் அவன் தாழ்ந்த ஜாதியானாயிற்றே; அவனைக்கூட வைத்துக் கொண்டு உண்பது ஜாதிப்பிரஷ்டமான செய்கை ஆகாதோ?' இதுமாதிரி அம்மாஞ்சியே நினைத்தார். போலீஸ் உத்தியோ

கத்தில் அவருக்கு ஜாதி ஆசாரம் பார்க்க முடிந்ததில்லை. யார் யாருடனோ எங்கெங்கோ சாப்பிடும்படி எவ்வளவு சமயங்களில் நேர்ந்திருக்கிறது. இருந்தாலும் கிராமத்தில் அதுமாதிரி செய்வதை அவரும் ஒப்புக்கொள்ளவில்லை. 'நாராயணன் எப்போதும் தர்மராஜுவோடு ஒன்றாக இருப்பவன்தான். ஆனாலும் இடத்துக்குத் தகுந்தபடி மாற்றிக்கொள்ள வேண்டாமா?' என்று நினைத்தார்.

நாராயணனோ என்றால், 'இதுமாதிரி வெளி வேஷங்கள் எதற்கு?' என்று கக்ஷி பிடித்தான். 'இவ்வளவு நாளும் மதுரையில், இப்போதும் பட்டணத்து ஹாஸ்டலில் என்னோடு கூடவே அவன் இருக்கவில்லையா? கிராமம் என்றவுடன் மட்டும் என்ன வித்தியாசம்? எதற்காக மாற்றிக்கொள்ள வேண்டும்? இங்கு மாற்றிக்கொண்டு விட்டால் அங்கே இருப்பது இல்லை யென்று ஆகிவிடுமா? அப்படி ஜாதியில் என்ன இருக்கிறது? எத்தனையோ பிராமணப் பிள்ளைகளைவிட அவன் சுத்தமாக இருக்கிறான். அவன் இருதயமும் பரிசுத்தமாக இருக்கிறது.' – இவ்வாறு அவன் தர்க்கம் செய்தான்.

'ஜாதி என்று ஒரு கட்டுப்பாடு இருக்கும்போது அதைப் பாராட்டாமல் எப்படி இருக்கிறது? ஏதோ தீராவிட்டால் பாதகம் இல்லை என்று வைத்துக்கொண்டால் அதையே ஆசார மாகச் செய்துகொள்ளலாமா? அது பாவம் அல்லவா?' என்று எடுத்துச் சொல்லியும் அவன் கேட்பானென்று தோன்றவில்லை.

'ரொம்ப எல்லாம் தெரிந்தவன்தாண்டா' என்று அவன் தந்தை அவனோடு வாதாடிப் பொறுமை யிழந்து கோபிக்கத் தொடங்கினார். அவனுக்கு இருந்த பிடிவாதத்தில் அவர் கோபத்தை அவன் லக்ஷ்யம் செய்திருப்பானோ என்னவோ? நல்ல வேளையாகத் தர்மராஜுவே விஷயத்தை ஒருவாறு ஊகித்துக் கொண்டு தனக்காக எல்லோரும் மனஸ்தாபப்பட விரும்பாத வனாக ஒரு வகையில் நிலைமையைச் சரிசெய்தான்.

அவ்வளவு பெரியவர்கள் மத்தியில் தனக்கே உட்காரச் சம்மதம் இல்லை என்று கண்டித்துச் சொல்லிவிட்டான். நாரா யணனும் தானும் தனித்து வேண்டுமானால் உணவருந்தலாம் என்று ஏற்பாடு செய்துகொண்டு, மாடியில் சின்ன அறையில் தங்களுக்கு மட்டும் தனியே பரிமாறச் செய்து சாப்பிட்டான்.

அவ்விதம் அவன் சிநேகிதன் கல்யாணத்தில் பங்கெடுத்துக் கொண்டதால் ஏதோ ஒரு விதத்தில் இருவருக்கும் திருப்தியாக

நிறைவேறிற்று. அவர்களோடு ஹாஸ்டலில் இருப்பவனானாலும் ஞானத்தின் கணவன் கோவிந்தராஜன் அந்தக் கோஷ்டியில் சேர விரும்பவில்லை. 'நம் சொந்த இடத்தில்கூடத் தர்மராஜு வோடு சமமாக எதற்காக இருப்பது?' என்று அவன் அவர்களை விட்டு விலகியே இருந்தான். தாங்கள் எவ்விதத்திலும் மேல் என்பதை உணர்த்துவதற்காகவாவது அவ்விதம் காண்பிக்க வேண்டாமா?

சுப்புவுக்கு, 'அந்த மட்டும் பந்தியில் உட்கார்ந்து ஊரார் சிரித்து வம்பளந்து ஜாதிப்பிரஷ்டம் செய்யும் வரைக்கும் விஷயம் வளராமல் போயிற்றே' என்று சமாதானம் தோன்றி னாலும், 'ஜாதி ஆசாரத்தை விடுவதாவது!' என்று இருந்தது. அதுமாதிரி நாராயணனைத் தறுதலையாகப் போகும்படி விடக் கூடாது, கண்டிக்கவேண்டும் என்று அம்மாஞ்சியிடமும் தர்மாம்பாளிடமும் தனித்து வற்புறுத்திச் சொன்னாள். ஊரெல் லாம் தெரிந்து போகும்படி விஷயத்தைப் பெரிதுபண்ண அவளுக்கு இஷ்டம் இல்லை. அப்படி இல்லாவிட்டால் அவளே நாராயணனைக் கூப்பிட்டு வைத்து, கண்டித்துப் பிரசங்கம் செய்து உபதேசிக்கமாட்டாளா? அம்மாஞ்சியின் பிள்ளைதானே? அவளுக்கு அவ்வளவுக்குச் சொந்தம் இல்லையா?

இவைகள் அவ்வளவும் ஏதோ கசுமுசு என்று ரகசியமாக நடந்தது என்றாலும் மகாலக்ஷ்மிக்குத் தெரிந்துதான் இருந்தது. 'வீட்டில் ஒருவரும் ஒப்புக்கொள்ளாததை அவர் செய்யலாமா? சந்திரனிடத்தில் களங்கம் இருப்பதுபோல் அவர் குணத்திலும் இது ஒரு தோஷமா?' என்று நினைத்து அவள் சங்கடப்பட்டாள். அதைப்பற்றி அவனோடு பேசி அவன் மனத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிற ஆசை அவளுக்கு மிகுதியாக இருந்தது. ஆனால் அவ்வளவுக்குத் துணிவு வேண்டாமா? இப்போதுதானே அவள் அவன் மனைவியாகியிருக்கிறாள்? அவனோடு சகஜமாக அவள் பழக ஆரம்பித்த பிறகு, அவள் அவனிடம் பேசி இவைகளையெல்லாம் சரிபண்ணிக்கொள்ளலா மென்று நினைத்தாள்.

இவ்விதம் நினைத்துச் சமாதானம் செய்துகொண்டாள். அப்புறம் அவனோடு என்ன பேசுவது? எப்படிப் பேசுவது என்பது பற்றின சிந்தனைகளிலேயே அவள் ஏதேதோ இன்பக் கனவு கண்டுகொண் டிருந்தாள்.

நாராயணனும் தன் கொள்கைகளையும் எண்ணங்களையும் அவளிடம் தெரிவிக்க வேண்டுமென்று நினைத்தான். அவள் அவைகளைத் தெரிந்து பின்பற்றி நடந்து, தனக்கு எல்லாவிதத்திலும் சரியான வாழ்க்கைத் துணைவியாக இருக்கவேண்டுமென்பது அவன் விருப்பம். அதற்கு என்ன செய்வது என்பதைப்பற்றி அவன் எண்ணமிட்டுக்கொண் டிருந்தான். 'அவள் சிறு பெண்; என்னை அவள் நன்கு தெரிந்துகொள்ள இன்னும் கொஞ்சம் போக வேண்டும். பிறகுதான் என்னை அநுசரித்து நடக்கும் சக்தி ஏற்படும். அதுவரைக்கும் அன்பும் ஆதரவுமாக அவளுக்கு லேசாக விஷயங்களை விளக்கிப் போதித்து வர வேண்டும்.' இவ்விதம் தீர்மானித்த பிறகு, தனது இல்வாழ்க்கை லக்ஷ்ய வாழ்க்கையாக நடக்கப்போவது பற்றி அவனும் இன்பக் கனவுகள் கண்டான்.

நாணம்மாவுக்கு விஷயம் தெரிந்ததற்கு அடையாளமாக ரகசியம், ரகசியம் என்றே பார்த்தவரிடமெல்லாம் சொல்லிப் பெரிது பண்ணிக்கொண் டிருந்தாள்.

அவள் மகன் சங்கரனுக்கு - அதாவது மீனுவின் கணவனுக்கு - நாராயணன் புதுமாதிரி ஒன்றைக் கிளப்பி, வீட்டில் எல்லோரும் அவனை இப்படியும் அப்படியுமாகப் பேசும்படி செய்துகொண்டதில் ஒருவாறு மிகுந்த திருப்திதான். மாப்பிள்ளைகள் மூவரில் தான் ஏதோ குறைவாக இருக்கிறதாக அவனுக்குத் தோன்றி, அவர்கள் தன்னைக் குறைவாய் நடத்துவதாக வேறு தீர்மானித்துக்கொண் டிருந்தான். சாரதாவின் கணவன் பெரிய பண்ணைக்காரன்; அந்தக் கௌரவம் அவனுக்கு. நாராயணனே கேட்கவே வேண்டாம்; எல்லாம் பொருந்தியவன். நடுவில் தனக்குத்தான் படிப்போ பணமோ விசேஷமாகக் கிடையாது; அதனால் தன்னை வேட்டகத்து மனுஷ்யர்கள் உதாசீனமாக நடத்துகிறார்களென்று எண்ணினான்.

அது மாதிரி நினைக்கத் தொடங்கின பிறகு, 'வேண்டாத பெண்டாட்டி கால் பட்டால் குற்றம், கைபட்டால் குற்றம்' என்று அவனுக்குத் தவறுகள் தோன்றுவதற்குக் கேட்பானேன்?

பாலு சாவதானமாக அவனிடம், "நீங்கள் பட்டணம் போவீர்களா, அத்திம்பேரே? நானும் வருகிறேன். எனக்கு அங்கிருக்கும் சமுத்திரத்தைப் பார்க்கணும்னு ஆசையாய் இருக்கு" என்று கேட்டான். நாராயணன் ஏதோ சென்னைக் கடற்கரையின் அழகைப்பற்றிச் சொல்வதைக் கேட்டு, அவன்

அவ்வாறு கேட்டான். ஏதோ சிறு பையன், ஒரே ஊரில் இருப்பதால் தன்னோடு போய் வரலாமென்கிற நினைப்பில் சொல்லுகிறான் என்பதை விட்டுவிட்டுத் தான் 'இன்டரி'ல் தோல்வியுற்றதைச் சுட்டிப் பரிகசிக்கிறான் என்று எடுத்துக் கொண்டான். பிறகு கேட்க வேண்டுமா அவன் கோபத்துக்கு? ஒரு பதிலும் கூறாமல் தன் முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டான். அதைப் பார்த்த பாலு மேல்கொண்டு பேச வில்லை.

மனைவியினிடத்திலேயே இது மாதிரி எவ்வளவோ சிறு குற்றங்கள் தோன்றினவண்ணந்தான் இருந்தன அவனுக்கு. தன் குறைவுக்காக அவளுக்கே தன்னிடத்தில் அலக்ஷ்ய பாவந் தான் என்று தீர்மானித்து வைத்திருந்தான். இவ்விதமெல்லாம் அவனுக்கு ஒவ்வொருவரிடமும் தனித்தனியே தவறு தோன்றிக் கொண்டிருக்கும்போது அவன் கல்யாணத்தில் கலகலப்பாகப் பங்கெடுத்துக்கொள்வது எப்படி? அவன் உம் என்று முகத்தை முழநீளம் வைத்துக்கொண் டிருந்தது யாரையுமே அவனிடம் அதிகம் நெருங்கவிடாமல் செய்தது. சகஜமாக வார்த்தை யாடும் நாராயணனிடம் அவர்கள் அதிகம் பேசினார்கள். 'அவ னுக்கு ஏதோ பிரமாதப்படுகிறது; நாம் யாருக்கும் லக்ஷ்ய மில்லை' என்று வேறு நாராயணனிடத்திலே அவனுக்குப் பொறாமை ஏற்பட்டு, அவனைத் தாறுமாறாக நடக்கச் செய்தது. மனைவியிடம் கோபத்தைக் காட்டி, வேளைக்குச் சாப்பிடாமல் கண்டபடி நடந்துகொண்டு, அவளையும் கல்யாண வைபவத்தில் தாராளமாகக் கலந்து, தமக்கையுடனும் தங்கையுடனும் முழுதும் சந்தோஷமாக இருக்க முடியாமல் செய்துவிட்டான். குழந்தையி லிருந்தே மீனா வெகு அடக்கமாக இருப்பவள்; மனத்தில் உள்ளதை அவசரமாக நிதானமின்றி வெளியிட்டு விடமாட்டாள். இப்போது கணவன் நடந்துகொள்ளும் மாதிரியினால் மனம் குன்றி வருந்தினாலும், அதைச் சிறிதும் பிறர் அறியா வண்ணம் மறைத்து வந்தாள்.

இப்போது நாராயணன் நடத்தையில் எல்லோரும் குற்றம் கண்டுபிடித்துக் குறை கூறவே, சங்கரனும் அதில் சேர்ந்து கொண்டான். மனைவியிடம், "படிச்ச கர்வத்தில் எதை வேண்டுமானாலும் செய்யலாமென்று இருக்கிறான். என்றைக்குமே அவன் சுபாவம் எனக்குத் தெரியும். அவனுக்கு ஊரில் உள்ள குடியானப் பிள்ளைகளெல்லாம் சிநேகம். எப்போதும் இதே

மாதிரிதான். யாரோடு வேண்டுமானாலும், என்ன வேண்டு மானாலும், சாப்பிடுவான். இவர்கள் இப்பத்தான் கண்டு பிடிச்சுக் கஷ்டப்படுகிறார்களாக்கும்'' என்றான். அந்த அவதூறைக் கேட்க அவளுக்கு வெகு கஷ்டமாக இருந்தது; ஏதோ தப்பிதம் என்றாலும் அதைப் பெரிது பண்ணுவதைக் கேட்கப் பிடிக்குமா? அவன் அவள் தங்கையின் புருஷன் ஆகி விட்ட பிறகு அவனைக் குற்றம் கூறுவதும் அவளுக்குச் சங்கட மாகத்தானே இருக்கும்? அதிலும் தன் கணவனே அதுமாதிரி சொல்வதைக் கேட்க அவளுக்குப் பின்னும் வருத்தம் ஏற்பட்டது. ஆனால் அதை வெளிக்காட்டிக்கொள்ள முடிய வில்லை. அவனுக்கு அவளிடத்தில் கோபந்தான் வரும் என்று, அவள் தன் உணர்ச்சிகளை மறைக்கவேண்டி யிருந்தது.

இவ்விதம் மீனாவின் தாம்பத்திய வாழ்க்கை ஒரு தினுசாக அமைந்திருந்தது. சாரதாவும் அவள் கணவனும் ஒருவித வம்பை யும் வளர்த்தாமல் எல்லாவற்றையும் சகஜமாக ஏற்று நடந்து கொண்டு போனார்கள். அவர்கள் கணவனும் மனைவியும் அவ்வளவு ஒன்றின மனசாக வெகு அடக்கமாக இருந்தார்கள். சாரதா புக்ககம் சென்று சில வருஷங்கள் ஆகியும் இன்னும் குழந்தை யைக் காணோமே என்கிற ஒரு குறைதான் எல்லோருக்கும்.

'இந்தப் பெண் இப்படித் தவறாமல் ஸ்நானம் செய்துண் டிருக்கே. என்ன பாவமோ, தோஷமோ? ஜாதகம் பார்த்து ராமேசுவரமாவது போய், பரிகாரம் பண்ண வேண்டாமா?' – இது மாதிரி விசாரம் சுப்புவுக்கு ஆரம்பத்தில் இருந்தது. பாவம், அவளுக்குத்தான் ஒன்று போனால் ஒன்று என்று கவலை ஏதாவது வந்து முளைத்துக்கொண் டிருக்கிறதே!

இவ்விதம் அவள் கவலைகள் தனித்துச் சமுத்திர அலைகளைப் போலத் தொடர்ந்து வந்தவண்ணம் இருக்கும்போது, விவாக மாகிக் கணவன் வீடு சென்ற குழந்தைகளின் மனச் சந்தோஷத் தைப்பற்றிச் சிந்தித்து அறிய முயல அவளுக்கு நேரம் ஏது? அவர்களாகவே தங்கள் புத்தி சாமர்த்தியம் கொண்டு எந்த இக்கட்டையும் சமாளித்துக்கொள்ள வேண்டுமேயல்லாது, அந்த வீட்டில் பெரியவர்களின் உதவியையோ அநுதாபத்தையோ எதிர்பார்த்துக் காரியங்களைச் சுலபமாகச் சமாளித்துப் போவ தென்பது நடவாத விஷயம்.

அவர்கள் தந்தை ஒரு விதத்தில் சுயநலமாக ஒன்றையும் காதில் வாங்கிக்கொள்ளாமல் தம் மன நிம்மதியையே பெரிதாக

நினைத்துச் சும்மா இருந்தார். அத்தையோ தன் போக்கில் கவலைகளை வளர்த்து அதற்காகக் கஷ்டப்பட்டுக்கொண் டிருந்தாளே தவிர, குழந்தைகளின் வாழ்க்கை இன்பத்தையோ துன்பத்தையோ சிறிதும் அறியவில்லை. கோபாலையர் ஒன்றையும் மேற்போட்டுக் கொள்ளாததைச் சுயநலம் என்று சொன்னால், தன் போக்கில் விசாரத்தை வளர்த்துத் தவிப்பது சுப்புவின் தனிச் சுயநலமாக இருந்தது. மொத்தத்தில் அவ்விருவர் நிலையும் குழந்தைகளுக்கு ஆதரவு அளிக்கும் விதமாக இருக்க வில்லை.

## 18
## கிராம வாழ்க்கை

"இந்த ஜாதி மதச் சண்டை விலகினால்தான் இந்தியாவுக்கு நன்மை ஏற்படும். இவ்வளவு வேற்றுமைகள் நம்முள் இருக்கும் வரைக்கும் நம் நாடு விடுதலை அடைந்து சுதந்தரம் பெறுவ தென்பது சாத்தியம் இல்லை. 'எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம்' என்று ஆக வேண்டும். அப்போது தான் நாட்டுக்கு க்ஷேமம்" என்று காங்கிரஸ் வாதிகள் அடிக்கடி பேச்சுக்கள் நிகழ்த்துவதையும், பத்திரிகைகளில் எழுதிவருவதை யும் படித்தும் கேட்டும் நாராயணன் அவைகளைப்பற்றித் தீர்மான மான அபிப்பிராயங்கள் கொண்டிருந்தான். வேறு எந்தத் தேசத்திலும் இல்லாத இந்த ஜாதி வேற்றுமை நம்மவர்களைப் பெரிதும் பிரிக்கிறது. தேச விடுதலைக்காகக்கூட ஒன்று சேர்ந்து பாடுபட முடியாதபடி மிகவும் பாதிக்கிறது. அதை ஒழிக்க நம்மால் ஆனதைச் செய்யவேண்டும் என்று நினைத்தான். கலாசாலை விவாதக் கூட்டங்களிலெல்லாம் இதுபற்றிப் பேசி வகுப்புவாதங்களிலுள்ள தீமைகளை எவ்வளவோ தெரிந்து கொண்டும் இருந்தான். தர்மராஜு தன் பிரிய சிநேகிதன் என்பதற்காக மட்டும் அவனைச் சமமாக நடத்த வேண்டும், வித்தியாசம் காண்பிக்கக்கூடாது என்று அவன் எண்ணவில்லை, பொதுவாகவே தாழ்ந்த ஜாதியார் என்று சொல்பவரிடத்தில் ஒரு சகஜபாவம் அவனுக்கு இருந்தது. அவர்கள் வாழ்க்கையைப் பற்றி முழுதும் தெரிந்துகொள்ள அவனுக்கு ஓர் ஆவலும் இருக்கத்தான் இருந்தது. தானப்பாளையத்து விவசாயிகளிட மாவது நெருங்கிப் பார்த்து அவர்கள் வாழ்க்கையின் போக்கை முழுதும் அறிந்துகொண்டு அவர்கள் நிலையை உயர்த்துவதற்கு

வேண்டிய பிரயத்தனங்கள் செய்தால் என்ன என்று நினைத்தான். ஏட்டுச் சுரைக்காயாக அறிவை வைத்துக் கொள்ளாமல் நேரிலேயே விஷயங்களைக் கிரகித்துக்கொள்ளச் சந்தர்ப்பம் இப்போது இருக்கும்போது அதை நழுவ விடுவானேன்?

அதற்காகவே அவன் தர்மராஜுவோடு லீவு நாட்களில் கிராமத்து நிலபுலன்களைச் சுற்றி வந்து அங்கே நடக்கும் வேலைகளையெல்லாம் சுவனித்துப் பார்த்து வந்தான். கிராமத்திலேயே பிறந்து வளர்ந்தவனுகையால் தர்மராஜுவுக்கு விஷயங்கள் அதிகமாகத் தெரிந்திருந்தன. அந்த விவசாயிகள் அவனுடன் தாராளமாகப் பழகினுர்கள். நாராயணனிடத்தில் அவ்வளவு சகஜமாக இல்லை. அவர்கள் காலையிலிருந்து, வெயிலோ மழையோ வயல் வெளியில் நின்று வேலை செய்து பாடுபடுவதையும், உச்சிப் பொழுதுக்கு மரநிழலில் தாயோ மனைவியோ பரிவோடு அளிக்கும் சோற்றை உண்டு, சிறிது சிரம பரிகாரம் செய்துகொண்டு திரும்பவும் வேலையில் ஈடுபடுவதையும், அஸ்தமித்ததும், 'இன்றை வேலை செம்மையாக முடிந்துவிட்டது' என்கிற திருப்தியோடு வீடு திரும்புவதையும் பார்த்தபோது அந்த வாழ்க்கையிலும் ஒரு நிம்மதியும் இன்பமும் இருக்கின்றன என்று நாராயணனுக்குத் தோன்றிற்று.

''ஏன் தர்மராஜு, இந்த வாழ்க்கைக்கு என்ன பழுது சொல்லுகிறுய்? வெகு ஆரோக்கியமான வாழ்க்கையாக அல்லவோ காணப்படுகிறது? உடலுக்கு அன்றன்று திறந்த வெளியில் வேண்டிய அளவுவேலையும், அதற்குத் தகுந்த அளவு குளிர்ந்த மரநிழலில் சிரமபரிகாரமும் வெகு ஆனந்தமாக அல்லவா இருக்கும்போல் இருக்கின்றன? பாடுபட்டதன் கூலியோ மாமூல் பிரகாரம் கிடைத்துவிடுகிறது. மனிதனுக்கு அதற்கு மேலும் வேண்டுவதென்ன?'' என்றுன்.

''பிறத்தியாரின் மரத்தடி வாழ்க்கையைச் சுலபமாக உயர்வென்று சொல்லிவிடலாம். நமக்கு வேண்டியிருக்கின்றனவே அன்றுடம் எவ்வளவோ தேவைகள்? அவைகளுக்கு எங்கே போகிறதாம்? இதுமாதிரி எளிய வாழ்க்கை நடத்துவதைப் பார்க்கும்போது நாமும் இப்படி இருக்க வேண்டும் என்று ஆசை கொள்ளுகிறேமே. நம்முடைய தேவைகளை ஒரே அடியாக விட்டுவிட வேண்டியதுதான். தெரியுமா?'' என்றுன் தர்மராஜு ஏளனமாக.

''அவைகளெல்லாம் எதற்கு? வயிற்றுக்கு உணவும், உடலுக்கு வேலையும் வேண்டிய அளவு அந்த அந்த வேளைக்குக் கிடைத்துவிட்டால் நாள் முழுதும் வேலை செய்து ஆனந்தமாக இருப்பதற்கு என்ன தடை?'' என்ருன் நாராயணன்.

''போடா போ; அந்த உணவுக்கும், ஓய்வுக்குந்தான் நமக்கு எவ்வளவோ வேண்டியிருக்கிறதே. இவர்களைப்போல மோர்த்தண்ணீரும் சாதமும் சாப்பிட்டு விட்டு, மரத்தடியில் கிடக்க நம்மால் முடியுமா? ஒரு வேளைச் சாப்பாட்டுக்கு ஒன்று குறைந்தால் உயிரே போய்விடாதா?'' என்ருன் தர்மராஜு.

''நீ என்ன சொன்னுலும் இதற்குப் பழக்கப் படுத்திக் கொண்டுவிட்டால் இதில் எவ்வளவோ சுகம் இருக்கிறதாகத் தான் எனக்குத் தோன்றுகிறது'' என்ருன் நாராயணன் விடாமல்.

''பழக்கப்படுத்திக் கொண்டால் என்கிருயே; அந்தப் பழக்கம் லகுவில் வந்துவிடாது. ஒரு விதமான நாகரிக சௌக்கியத்திலே பழக்கப்பட்டுப் போன பிறகு எளிய வாழ்க்கை வாழ்வது லேசிலே சாத்தியமாகுமா? அப்படியும் இவர்களிடம் ஒருவருக்கொருவர் பொருமை, போட்டி கிடையாதா? வேறு விதத் தொல்லைகள்தாம் இல்லை என்ரு நினைக்கிருய்? எவ்வளவோ உண்டு. பூமி விளைந்து வராமல் போகாதா? செழித்து வளர்ந்த பயிர், அல்பாயுசுலே மாண்டுபோகிறவர் களைப் போல, பலன் எடுக்கும் முன்னே பாழாகிப்போகாதா? இவர்கள் மூலதனங்களான ஆடுமாடுகளுக்கு ஆயிரம் ஆபத்து வராதா? பெண்டு பிள்ளைகளால் எவ்வளவோ சிரமம் ஏற் படாதா? இயற்கை அன்னையின் தயவிலே வாழ்கிற இவர்களுக்கு மழை பெய்தும் பெய்யாமலும் ஏற்படுகிற துன்பம் எண்ணத் தொலையாது. திடீர் திடீரென்று நிற்க நிழலில்லாமலும், உண்ணச் சோறில்லாமலும் போய்விடும். பட்ட பாட்டுக்குப் பலன் இல்லாமல் போனுல் அப்போது தெரியும் அந்தத் துக்கம்! இதோ பெரியவனுக இருக்கிருனே, இந்தக் குடியானக் கிழவன்; அவனோடு பேசிப்பார். நீ உத்தியோகஸ்தன் மகன்; பட்டணங் களிலேயே இருந்துவிட்டாய். உனக்குத் தெரியாது, கிராம விவசாயிகளுடைய கஷ்டம்'' என்ருன் தர்மராஜு.

இப்படி அவர்கள் பேசிக்கொண்டே வரும்போது, ''நம்ம எசமான் சின்ன மருமவப் பிள்ளைங்களா? வாங்க சாமி. இதாரு, மேலப்பாளையத்து ராஜாங்களா! எங்கே, இப்படி

வந்தீங்க? முள்ளும் கிள்ளுமா இருக்குமே; காலுலே ஒண்ணும் போட்டுக்காமே வந்திருக்கீங்களே. இப்படி இந்த வழியா வாங்க'' என்று கிழவனே அவர்களுக்குத் தான் வேலே செய்து கொண்டிருக்கும் இடத்துக்குப் பரிவோடு வழி காட்டினுன்.

''என்னப்பா, இந்த வருஷம் நெல்லு விளைச்சல் எப்படி? கண்டு முதல் ஆகுமா?'' என்று தர்மராஜு அவனைக் குசலப் பிரச்னம் செய்தான்.

''சாமி புண்ணியத்துலே பருவமழை யெல்லாம் சரியாக இருந்துதுங்க. நம்ம பூமித் தாயிக்கி வஞ்சனே உண்டுங்களா? அப்போ நல்லாச் செழிச்சு வளர்ந்து ஒண்ணுக்கு ரெண்டாப் பலன் கொடுக்கக் காத்துக்கிடக்க மாட்டாளா?'' என்றுன் அவன். கண்களில் நன்றி தோன்ற நாலு புறமும் பெருமையோடு அந்தப் பரந்த வயல்வெளியைச் சுற்றிப் பார்த்துக்கொண்டே அவன் பேசினுன்.

''உன் பாடு அப்போ யோகந்தான்னு சொல்லு'' என்றுன் தர்மராஜு.

''போன வருசம் விளேச்சலில்லாமே போனதிலே ஐயா பட்ட கடனே இந்த வருசம் அடைச்சுடலாம்னு நம்பிக்கை தானுங்க. நம்ம மாப்பிள்ளே ஐயா வந்தது, எல்லாம் சுவிச்சமா யிருக்குது. ஒண்ணுதான் குறைங்க. ஐயா என்ன சொன்னுலும் காதுலே வாங்கிக்க மாட்டேங்கருரு. இவ்வளவு கஷ்டம் வாணும்; நம்ம வயலிலே ஒரு கிணறு வெட்டிப்புட்டா மழையில்லாமே போகிற சமயம் இறைச்சாவது அரை வவுத்துக் கஞ்சிக்குப் பயிராக்கிக்கலாம். அது சொன்னு, அவரு காதுலே ஏறல்லே. நானும் எத்தனேயோ காலமாச் சொல்லி வறேன், சாமி; நீங்களாச்சியும் ஐயாவுக்குச் சொல்லிச் செய்யச் சொல் லுங்களேன்'' என்றுன் அவன், நாராயணனேப் பார்த்து. அவன் ஏதோ இந்தமட்டும் வயல்வெளிகளேப் பார்வையிடு கிருனே, ஏதாவது தான் சொல்வதை நடத்த முயல்வானே என்கிற நம்பிக்கை அவனுக்கு.

''சொன்னுல் ஐயா ஏன் கேட்கமாட்டேன் என்கிருர்? அவருக்கு ஏதாவது நஷ்டமாகுமா?'' என்று கேட்டான் நாராயணன்.

''அவரு லாப நஷ்டம் பார்த்து ஏதாச்சியும் செஞ்சாத் தானே? அவர்பாட்டுக்குச் சும்மான்ணு இருக்கிருரு? வயல் பக்கமேகூட ரொம்ப வராரா என்ன? அடிக்கடி எசமான்

பார்வை பட்டால்ல பூமி நல்லா விளையும்? ஆளுங்களெல்லாம் சுறுசுறுப்பா வேலே செய்வானுங்க? அதொண்ணும் கிடையாது. செஞ்ச வேலேக்குச் சந்தோஷமும் இல்லே, செய்யாததுக்குக் கோவமும் இல்லேன்னு எப்படி? எதுவோ இப்போ கொஞ்சம் செலவளிச்சாப் போதும். மானம் பாத்த பூமி பாருங்க; என்னென்னிக்கும் கிணறு இருந்தா நல்லதுதானே? பக்கத்து நிலத்துலே கணபதி ஐயா கிணறு வெட்டினுரு; இப்போ ரொம்ப நல்லா இருக்குதுங்க. கரும்பாட்டம் தண்ணி. போன வருசம் மழையில்லாமே ஊரெல்லாம் காஞ்சு போனதுக்கு அவுகளுக்குச் சுமாராப் பலன் கிடைச்சுது. இறைக்கக் கூலி குடுத்துப் பணம் செலவளிச்சாலும் கொஞ்சமாவது நம்முதூன்னு சாப்பிட நெல்லுக் கிடைச்சுது பாருங்க'' என்று பெரிய பிரசங்கம் செய்தான். ''ஏன், கணபதி அண்ணு செய்திருக்கும் போது இவரும் பண்ணக்கூடாது? நான் விசாரிக்கிறேன்'' என்ருன் நாராயணன்.

''எப்படியாச்சிம் செய்யும்படி சொல்லுங்க சாமீ. அதுக்குத்தான் உங்களண்டை சொன்னது. ஐயா வெளேஞ்சதை வச்சுக்கிட்டு, குத்தகைக்காரங்க குடுத்ததை வாங்கிக்கிட்டுத் தர்மமா வாழுரு. அது போதுமா? விவசாயிங்க அப்பப்போக் கஷ்டப்படாமே இருக்கிற வளியும் தேட வேண்டாமா? தனக்கும் நஷ்டமாகாமே அவுகளுக்கும் சாதகமாப் பாக்க வேணுமா?'' என்று பெரிதாக நியாயம் ஓதினுன் அவன்.

''கணபதி அண்ணு கெட்டிக்காரர்; எல்லாத்தையும் நன்ருகப் பார்த்துக்கருர்போல் இருக்கு. இவரால் அவரைப் போல முடியுமா?'' என்று நாராயணன் தர்மராஜு வோடு சொல்வதைக் கேட்டுவிட்டு, ''ஐயோ அப்பா, அவரு கருமித் தனத்தை! அவராட்டம் இருக்க வேணுமுங்க, ஆளுகளிடம் நல்லா வேலேயை வாங்கிக்கிட்டுக் கூலிக்கு வயித்துலேயும் வாயிலேயும் அடிக்கற மனுஷன்னு அவரு. ஆனு இவருதான் இப்படி ஏளேங்க வவுத்தெரிச்சுலேக் கொட்டிச் சேத்து வைக்கணும். பெரிய மவன் இருக்கிருரே, அவரு ஒரே நாளிலே ஊதிட்டுப் பூடுவாரு!'' என்ருன் அவன் பரிகாசமாக.

''அவன் அவ்வளவு ஊதாரிச் செலவு பண்ருனு?'' - இது நாராயணன், தர்மராஜு இருவரும் ஏக காலத்தில் கேட்டது.

''அதை ஏன் கேக்குறீங்க? அவரு ஷோக்கும் அவர் பொம்பளேங்களேச் சுத்திண்டு அலேயறதும்! என்னிக்கு நம்ம

சேரிப் புள்ளேங்களண்டே உதை வாங்கிக்கப் போருரோ? நம்ம எசமானுடைய தங்கமான குணத்துக்குத்தான், அவரு தம்பி தான்னுக்கூட நம்ம ரெண்டாவது மருமவப் பிள்ளே அதுமாதிரி இல்லாமே இருக்காரு, பெரியவங்க புண்ணியத்துலே'' என்று சொல்லி அவன் நாலு புறமும் திரும்பிப் பார்த்தான். ''இப்பக் கூட நீங்க வாரத்துக்குச் செத்த முன்னுடி இந்த வளியாப் போனுரு அவரு. ஆம்புள்ளேங்க வயல்லே வேலே செஞ்சுக்கிட்டு இருக்கையிலே இவருக்குச் சேரியிலே என்ன ஜோலீங்கறேன்? பாப்பார ஜாதியிலே பொறந்தூட்டு இப்படிக் கெட்டுப் போக வாணும். என்னமோ எங்களண்டை அளக்கருரு. புள்ளேயெ அடக்கத் தெரியல்லே'' என்று அவன் மேலும் மேலும் சொல்லிக் கொண்டு போவதைக் கேட்டுக்கொண்டு அங்கே நிற்பது சரி யில்லே என்று தர்மராஜுவும் நாராயணனும் எண்ணினவர் களாய் மெள்ள அவ்விடம் விட்டுத் திரும்பினுர்கள்.

''நம்மவர்கள் இப்படி ஜாதி ஆசாரம் பேசுகிருர்களே? இதைக் கேட்க எப்படி இருக்கிறது?'' என்ருன் நாராயணன் தர்மராஜுவிடம்.

''எல்லாம் படிப்பு இல்லாததன் விளேவுதான். நல்ல அறிவு வளர்ச்சிக்கு நல்ல படிப்பு வேண்டாமா? சௌக்கிய மாகத் தின்றுவிட்டு நாள் முழுவதும் சும்மா இருக்கணும்னு இது மாதிரி எல்லாந்தான் புத்தி போகும்'' என்ருன் தர்மராஜு.

''இருந்தாலும், என்னப்பா இது? வீட்டிலே கிளிபோலப் பெண்டாட்டி இருக்க, இப்படியா அலேகிறது? அந்தப் பெண்ணுக்கு மனசு எப்படி நொந்து கிடக்கும்? காந்தி சொல்லி யிருக்காரே, நம்ம ஹிந்துப் பெண்கள் பொறுமைக்கு அவ தாரம்னு. அது எவ்வளவு சரியா இருக்குப் பாரு. இவனேச் சகிச்சுண் டிருக்கிறதுக்கு அவளுக்கு எவ்வளவு பொறுமை வேணும்! முதலில் பிராமண சமூகத்தைன்னு சீர்திருத் தணும் போலே இருக்கு!'' என்ருன் நாராயணன். வாஸ்த வத்தில் அவனுக்கு, 'இதுமாதிரியும் கெட்ட காரியங்கள் செய்ய லாமா?' என்றுதான் ஆத்திரம் பொத்துக்கொண்டு வந்தது. அவனே நேரில் பிடித்து நிறுத்திப் பெரிதாகப் பிரசங்கம் செய்து, அவன் செய்கைக்கு அவனே தலே குனியும்படி செய்யவேண்டு மென்று இருந்தது. ஆனுல் அதுமாதிரியெல்லாம் செய்துவிட முடியுமா? ஊரில் உள்ளவர்களின் நடத்தையை யெல்லாம் கண்டிக்க அவனுக்கு அதிகாரம் யார் கொடுத்திருக்கிருர்கள்?

மீனுவின் கணவன் சங்கரனிடம் அரைகுறையாகப் பேச்சு எடுக்கப் பார்த்தபோது அவன் அதைக் கேட்கத் தயாராக இல்லாததுடன், ''இது மாதிரி விஷயங்களில் நீ தலையிட வேண்டிய அவசியம் இல்லை. நாங்கள் பார்த்துக்கொள்ளு வோம்'' என்கிற பாவனையில் பேச்சைக் கத்தரித்துவிட்டான். 'அண்ணுவின் தவறுகளைத் தம்பியிடம் சொல்வதில் என்ன பயன்?' என்று நாராயணனும் அதைப் பற்றி அவனோடு பேசும் எண்ணத்தைக் கைவிட்டான்.

'ஜாதியிலோ அந்தஸ்திலோ நமக்குக் கீழ்ப்பட்டவர்களிடந் தான் நாம் ஏதாவது சொல்லவோ, செய்யவோ முடியுமா, என்ன? சமமாக இருப்பவரிடம் நட்பு இருந்தாலல்லது வாய் திறக்க முடியாது போலும்' என்று நினைத்தான்.

''தன்னைக் காந்தியாகவே நினைத்திருக்கிறான். புத்தரைப் போல் உபதேசத்துக்குக் கிளம்பிவிட்டான். எங்கண்ணு எப்படிப் போனால் இவனுக்கு என்ன? இவன் யார், அவனைப்பற்றிப் பேச?'' என்று சங்கரன் தன் மனைவியிடம் தனிமையில் இறைந் ததைக் கேட்டிருந்தால், நாராயணனுக்கு எப்படி இருந்திருக்கும்? அவன் நல்லெண்ணத்திற்குப் பலனு இது? பாவம், மீனு 'உங்கண்ணு திருந்தி நடந்தால் உங்களுக்குத்தானே நன்மை? அதைத்தானே அவன் சொல்ல வருகிறான்?' என்று தனக்குத் தானே நினைத்துக்கொண்டாளே ஒழிய, வாய் விட்டுச் சொல்ல வில்லை. அவள் சொல்லியிருந்தால் தங்கை புருஷனுக்குப் பரிந்து பேசுகிறதாக எண்ணி, அவளிடத்தில் அவனுக்கு வரக்கூடிய கோபம் புயல் வேகத்தில் இராதா?

கிணற்றுச் சங்கதியை மாமனாரிடம் பேசி ஏற்பாடு பண்ணுவது பெரிய சிரம சாத்தியமான காரியமாகத்தான் இருந்தது. அவர் ஒன்றிலுமே மாறுதலை விரும்பாத பெருத்த சநாதனியாகக் காணப்பட்டார். ''ஆட்களின் பேச்சுக்குக் காது கொடுத்தால், அவன்கள் ஏதாவது கிளப்பிண்டுதான் இருப் பன்கள். இவ்வளவு நாளும் இருந்த பூமிதானே? இப்போது புதிதாக எதற்குச் சீர்திருத்தம்? இதனலெல்லாம் ஒரு நன்மையும் புதிதாகக் கிட்டிவிடாது'' என்பது அவர் வாதம். கிணறு எடுப்பதில் வாஸ்தவமாக அவருடைய ஆக்ஷேபங்கள் என்ன என்ன என்று நாராயணன் அவரைப் பல விதத்தில் கேட்டும் சரியான பதிலொன்றும் அவரிடமிருந்து கிடைக்க வில்லை; ஆனல் அதற்கான ஏற்பாடுகளுக்கு மட்டும் அவர்

தயாராக இல்லை; அது தெளிவாக இருந்தது. நாராயணன் பார்த்தான். உண்மையான ஆக்ஷேபங்கள் இருப்பதாகத் தெரிய வில்லை என்று ஏற்படவும், தானே காரியத்தை மேற்போட்டுக் கொண்டு அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வதில் இறங்கி விட்டான்; கிணறு தோண்டச் சரியான பிரதேசம், அதன் அளவுகள் - இவைகளுக்கு யார் யாரைக் கலந்துகொண்டு என்ன என்ன செய்ய வேண்டுமோ அவைகளைச் செய்து அந்த வேலையைத் துவக்கிவிட்டான்.

மாப்பிள்ளையே கிளம்பிவிட்டபோது என்னசெய்வது என்று தான் கோபாலையர் சும்மாச் சகித்திருந்தார். ஒரு மாறுதலையும் விரும்பாத அவருக்கு அது அவ்வளவாக மனத்துக்கு உகந்த காரியமாக இல்லை.

அவன் கோடை விடுமுறை முடிந்து கல்லூரியைச் சேரப் புறப்படு முன் கிணற்றின் வேலை அநேகமாக முடிந்துவிட்டது என்றே சொல்லலாம். அதில் விவசாயிகளுக்கு உண்டான சந்தோஷம் சொல்லத் தரம் இல்லை. எசமானின் சின்ன மருமகப்பிள்ளையை ஒரே தோத்திரமாகச் செய்தார்கள் அவர்கள். நம் கிருஷ்ணனும் அவைகளை ஒன்று விடாமல் கேட்டு வந்து மகாலக்ஷ்மியின் காதில் ஓதிவந்தான். அவள் அவன் பெருமைகளில் மனம் பூரித்து மகிழ்ந்து போனாள்.

## 19

## கணவனும் மனைவியும்

மகாலக்ஷ்மிக்கு நாராயணனிடத்தில் அளவிட முடியாத ஆசை ஏற்பட்டிருந்தது. ஆனால் அத்தனை அன்பிலும் அவர்கள் கல்யாணமாகி, அவன் கிராமத்தில் இருந்த இரண்டு மாதத்தில் அவன் விருப்பப்படி கோயில் பூங்காவனத்திலும் குளிர்ந்த மந்த மாருதம் தவழும் குளக்கரையின் சுற்றுப்புறத்திலும் உலாவிவர என்னவோ அவளுக்குச் சம்மதம் இல்லை. விவாகமான புதுத் தம்பதிகள் அது மாதிரி அவ்வளவு சகஜமாகப் பழகலாமா? இன்னும் அவள் தமக்கை சாரதாவும் அவள் புருஷனும் பேசிக் கொண்டு யாரும் பார்த்ததில்லையே; அப்படியிருக்க நேற்றுக் கல்யாணமான அவர்கள் எல்லோரும் பார்க்க ஊர் சுற்று வதாவது! ஊரிலுள்ளவர்கள் சிரிக்க மாட்டார்களா? அகத்தில் அத்தைதான் என்ன நினைப்பாள்? இவ்விதம் பல ஆக்ஷேபங் களினால் அவள் அவன் அழைக்கும்போதெல்லாம் உடன் செல்ல

மறுத்து வந்தாள். ''அடி அசடே, சாயங்காலத்தில் வீட்டிற் குள்ளேயே அடைந்து கிடப்பார்களா? காற்றுடச் சற்று வெளியே போய்வந்தால் என்னவாம்? வா என்று அவன் வற்புறுத்தி ஆசையுடன் அழைப்பதற்கு, ''நம்ம தெரு மனிதர்கள் பார்த்திருக்கவா? நன்னாருக்கு! அதெப்படி முடியும்?'' என்று அவள் சொல்லுவாள். தன்னை இவ்வளவு துணிச்சலான காரியம் செய்யும்படி தூண்டுகிறானே என்று அவளுக்கு இருந்த ஆச்சரியந்தான் அந்தப் பதிலில் வெளிப்பட்டது.

''நாம் இருவரும் கணவனும் மனைவியும் ஆகிவிட்ட பிறகு இதற்கெல்லாம் யோசனை செய்வார்களா? யார் பார்த்தால் என்ன? நாம் செய்வதொன்றும் ஓர் இளம் பெண் அயலானோடு போவது போன்ற அடாத செய்கை அல்லவே?'' என்று அவன் கட்சி பிடிப்பான்.

வீட்டுக்குள் அவனிடம் தனிமையில் பேசுவதற்கே அவள் மிகுந்த நாணம் அடைந்து வந்தாள். அது ஒருவருக்கும் தெரியக் கூடாது என்று அவள் நினைத்தாள். பாலு பல சமயம் ரகசிய மாக அவளைத் தொடர்ந்து வந்து பார்த்து, எல்லாரிடமும் பகிரங்கப்படுத்தும்போது அவளுக்குப் பிராணனே போவது போல் இருந்தது. அதற்காக அவனைக் காதைப் பிடித்துத் திருகிக் கண்டிக்க வேண்டுமென்றுகூட ஆத்திரப்பட்டாள்.

''நீ இப்படியெல்லாம் அநாவசியத்துக்கு வெட்கப்பட லாமா? நான் நாளைக்குச் சமூக சேவையில் ஈடுபடும்பொழுது நீயும் அல்லவா என்னோடுகூட எல்லா இடங்களுக்கும் வந்து, எல்லோரிடமும் எவ்வளவோ பேசிச் செய்யவேண்டி யிருக்கும்?'' என்று அவன் சொன்னதற்குக்கூட, 'அப்போது பார்த்துக் கொள்ளுவோம். அப்படியும் அது நம் ஊரார் முன்னிலையில் இராதே? மேலும் அவர் சொல்வதுபோல் பேசுவதற்கும் சேவை செய்வதற்கும் நமக்கு என்ன தெரியும் சமூக விஷயங்கள்?' என்று அவள் தனக்குள்ளேயே கேட்டுச் சமாதானம் செய்து கொள்ளுவாள்.

''நீ இப்படி வெட்கப்படுவதாயிருந்தால் பார்; நான் நாளையிலிருந்து என்ன செய்யப் போகிறேன் தெரியுமா? எல்லார் முன்னிலையிலும் உன்னைக் கட்டியணைத்து நிறுத்திக் காண்பிக்கப் போகிறேனாக்கும்!'' என்று அவன் விளையாட்டாக அவளைப் பயமுறுத்தும் பாவனையில் சொன்னால், எங்கே அவன் வாஸ்தவத்திலேயே அப்படிச் செய்துவிடுவானோ என்று

அவள் திகில் அடைந்து போனாள். ஆனால் அந்தப் பயத்திலும் அவன் அவ்விதம் சொல்லும்போது தன்னை அறியாமல் ஓர் உடல் பூரிப்பு அவளுக்கு ஏற்படத்தான் ஏற்பட்டது. அவள் நெஞ்சம் நீரில் மிதக்கும் சிறு மீனென உள்ளுக் குள்ளேயே துள்ளிற்று. இரண்டு மாத விடுமுறையை அவன் கழித்து ஊருக்குப் புறப்படுகிறான் என்றபோதுதான் அவன் கூட இருந்த நாட்கள் எவ்வளவு இன்பமயமாகச் சென்றன என்பதை அவள் உண்மையில் உணர்ந்தாள். அவனைப் பிரிந்து தன்னால் இருக்கமுடியுமா என்றுகூட அவளுக்குச் சந்தேகம் தோன்றிற்று. அவன் போன பிறகு அந்த வீட்டிலும் அந்த மனுஷ்யர்களிடத்திலுமே அவளுக்குச் சுவாரசியம் குறைந்து விடும்போல் இருந்தது.

தான் படிக்கப் பட்டணம் போகும் முன் (இப்பொழுது அவன் பட்டணத்துக் கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் இருக்கிறான்.) அவள் மதுரையில் தன் பெற்றோரிடம் இருந்துகொண்டு, அவ் விடத்துப் பள்ளியில் சேர்ந்து படிக்கவேண்டுமென்று அவன் இஷ்டப்பட்டான். தானப்பாளையத்துப் படிப்பும் அவளுக்கு முடிந்துவிட்டது. மேலும் கிராமத்தைவிட்டு அவளை வெளியில் அழைத்து வந்து வெளி உலகம் அவளுக்குத் தெரியும்படி செய்ய வேண்டாமா? ஒன்றும் தெரியாத கிணற்றுத் தவளையாக அவன் மனைவி முழுதும் இருந்துவிடக் கூடாதல்லவா?

முதலில் இதைக் கேட்டதும் சுப்புவுக்கு அவ்வளவாகச் சரியென்று தோன்றவில்லை. வயசு வர இருக்கும் பெண்ணை வீட்டை விட்டு அங்கும் இங்கும் அனுப்புவதாவது என்றுதான் தோன்றியது. ஆனால் நாராயணன் பிடிவாதமாக இருந்தான். அம்மாஞ்சியும் தர்மாம்பாளும் வேறு, "அன்னிய இடமா என்ன? நம்ம ஆம்தானே? ஞானமும் அவளும் சேர்ந்து படிக்கட்டும். நாராயணன் சொல்வதும் நியாயந்தான். கிராமத்துப் படிப்புப் போதுமா? இன்னும் கொஞ்சம் மேலே படிக்கட்டுமே என்று தீர்மானமாகச் சொன்னதன் பேரில் சம்மதித்து, மகாலக்ஷ்மியை அங்கே அனுப்ப இசைந்தாள்.

பாலுவால் மகாலக்ஷ்மியை விட்டுப் பிரிந்திருப்பது சாத்திய மாகாது போல் இருந்தது. அவர்கள் இருவரும் இணைபிரியாது இதுவரைக்கும் ஒன்றாக இருந்தார்கள். அவன் விளையாட்டுக் களுக்கோ, பாடம் படிப்பதற்கோ அவள் இல்லாவிட்டால் அவன் யாரிடம் உதவிக்குப் போவான்? அவன் குழந்தை மனத்தில்

தாங்க முடியாது ஏற்படும் இன்ப துன்பங்களை யாரிடம் அவன் அந்தரங்கத்தில் சொல்லிச் சமாதானமோ சந்தோஷமோ அடைவான்? தாயின் ஆதரவற்ற அவனுக்குச் சகோதரிகளை விட்டால் வேறு யார் இருக்கிறார்கள்? அதிலும் மகாலக்ஷ்மி அவனுக்கு நேர் மூத்தவள். அதனால் அவர்களிடையே அதிக மான பாசம் இருந்தது. அவரவர்கள் போக்கில் இருக்கும் அத்தையும், தந்தையும் மட்டும் இருக்கும் அந்த வீட்டில் மகாலக்ஷ்மியின்றி அவன் தனித்து எப்படி இருப்பான்?

மகாலக்ஷ்மியாலும் அவனை விட்டுச் செல்வது முடியாது போல் இருந்தது. 'நான் இல்லாவிட்டால் பாலு என்ன பண்ணுவான்?' என்று அவளும் விசாரப்படத் தொடங்கினாள்.

நாராயணன் அதற்கும் ஒரு வழி கண்டுபிடித்து விட்டான். அவனும் ஏன் மதுரையில் அவளுடன் வந்திருந்து அங்கேயே படிக்கக் கூடாது? அவன் தந்தை வேறு யாரும் அல்லவே! அவர்கள் அம்மாஞ்சிதானே? இந்த ஏற்பாடு சுப்புவுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. 'ஒரே அருமை மகனை அசல் வீட்டில் நாதியற்றவனைப்போல் வளரவிடுவதாவது!' என்ற பெருத்த ஆட்சேபம் அவளை வாட்டிற்று. ஆனால் மகாலக்ஷ்மி புறப்படும் முன் பாலு அடக்க முடியாமல் கத்திக் கதறினதைப் பார்க்கவும், அம்மாஞ்சியே அவனும் வரட்டுமென்று முடிவாகச் சொல்லி விட்டார். அவனும் அம்மாஞ்சி அகத்தில் இருந்துகொண்டு அங்கேயே பள்ளிக்கூடம் போவதென்று நிச்சயமாயிற்று.

முதல் முதலாக மகாலக்ஷ்மி புக்ககம் போகிறாள். எங்கோ வீட்டை விட்டு வெகு தொலைவு சென்று விடுவது போல் இருந்தது அவளுக்கு. பிரியும்போது வீட்டில் எல்லோருக்குமே ஒரு விதத்தில் மிகுந்த வருத்தமாகத்தான் இருந்தது. நாராயணன் ஒருவாறு தன் இஷ்டத்தை நடத்திக்கொண்டாலும், அதைப் பிறர் மனம் நோகாதவாறு செய்தது மீனுவுக்கு மிகவும் உயர்வாகத் தோன்றிற்று. பிறரைக் குறை கூறி அவர்கள் மனங் கசந்துபோகாமல், நடக்க வேண்டியவற்றுக்கு யோசனை கூறி நடத்திக்கொண்டு போவதில் தனி நயம் இருப்பதாக அவளுக்குப் பட்டது. சரியானாலும், தவறானாலும் புருஷன் இதுமாதிரிக் காரியங்களைச் சாவதானமாகக் கொண்டு செலுத்தினால் அவன் மனப்படி அவனைப் பின்பற்றி என்னதான் செய்யக்கூடாது? எப்படியும் மனைவி, கணவன் சொற்படி நடக்க வேண்டியவள்தானே? அவள் கடமையை இன்பமயமானதாகச்

செய்யும் சக்தி இதுமாதிரிக் கணவனிடத்தில் இருக்கிறதாக அல்லவா தெரிகிறது? அவள் கணவன் சங்கரனுனல் அவளிடத்தில் தவறு கண்டுபிடித்துக் கூறித் துன்புறுத்து வானே தவிர, இருவர் மனமும் சந்தோஷமாக ஒத்துப் போகும்படி நடத்திக்கொண்டு போவானு? மாட்டான். அப்படிப்பட்டவர்களை என்னவென்று சொல்லுகிறது? அவர்கள் தங்கள் மனத்தைத் தெளிந்து அறிந்து வெளியிடத் தைரிய மில்லாத கோழைகள். அதனுல்தான் தங்கள் மனத்தில் உள்ளதைப் பிரித்துச் சொல்லிப் பிறர் அதைப் புரிந்து ஏற்று அநுசரித்து நடக்கும்படி செய்துகொள்ளாமல் தாங்களும் வருந்திப் பிறரையும் வருத்துகிருர்கள்.

இவ்விதம் அவள் மனம் நாராயணனையும், தன் கணவனையும் ஒப்பிட்டுப் பார்த்து நாராயணனிடம் உயர்வான மதிப்புக் கொண்டது. அவள் ஏதோ வயசு சென்றவள்போல், மகாலக்ஷ்மியிடம் அவள் புறப்படுமுன் கண்களில் நீர் ததும்ப, "மகாலக்ஷ்மி, உனக்கு நல்ல அதிர்ஷ்டம் இருக்கு. அம்மாஞ்சி நாராயணன் உனக்கு அகமுடையானுக வாச்சிருக்கான். நீ நன்ருக இருக்கப் போறே. எனக்கு அதுலே ரொம்ப சந்தோஷம்" என்று ஆசீர்வாதம் செய்து விடைகொடுத்தாள்.

## 20
## மகாலக்ஷ்மியின் மேல்படிப்பு

மகாலக்ஷ்மியும் பாலுவும் போன பிறகு குழந்தைகள் யாரும் இல்லாமல் வீடு வெறிச்சென்று போனதில் சுப்புவுக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. கிருஷ்ணனே, "என்னம்மா, இப்படி வீட்டை வச்சுக்குவாங்களா? குழந்தைகளையெல்லாம் அனுப்பிச் சூட்டுப் பெரியவங்கமட்டும் சும்மாக் குந்திக்கிட்டு இருந்தா நல்லாவே இல்லேங்களே! சின்னம்மாளும் பாலுவும் இல்லாமே எனக்கு வேலே மேலேயே ஒட்டம் இல்லீங்க" என்று சதா அங்கலாய்த்த வண்ணம் இருந்தான். முன்பு தமக்கை புக்ககம் சென்றபோது மீனுவுக்கு, அவ்வளவாகத் தெரியவில்லை. இரண்டொரு நாளைக்கு ஒருவாறு வெறிச்சென்று இருந்தது. பிறகு விளையாட்டிலும், இன்னென்றிலும் எல்லாம் சரியாகி விட்டது. இப்போது பாலுவும் மகாலக்ஷ்மியும் இல்லாதது அப்படி இல்லை. உள்ளூர், அதிலும் ஒரே தெரு. புக்கக மானதனுல், அடிக்கொரு தரம், அதாவது ஒரு நாளைக்கு நூறு

நடை அவள் பிறந்தகம் வந்த வண்ணம் இருப்பாள். அவர்கள் பேச்சிலும், விளையாட்டிலும் அவளும் ஒருத்தியாகப் பங்கெடுத்துக்கொள்ளுவாள். அதற்காக அவள் கணவன் ஏதாவது கோபித்துச் சொன்னாலும் அவள் அதைப் பொருட் படுத்தினதில்லை. இப்போது அவர்கள் இருவரும் இல்லாத வீட்டில் அவளுக்குப் பொழுதே போகவில்லை. அவளுடன் சரியாகப் பேச யாரும் இல்லை. அத்தை அவள் போக்கில் இருப்பாளே தவிர, தம்பியின் மகளை அன்பாய் அழைத்து வைத்து அவள் அந்தரங்கங்களை விசாரித்து ஒரு வார்த்தை பேச மாட்டாள். தந்தையோ கேட்க வேண்டியதில்லை; தம் அறையில் சாய்வு நாற்காலியில் சாய்ந்து ஏதாவது புத்தகம் பார்த்துக்கொண்டோ அதுவும் இல்லாவிட்டால் நித்திரா தேவியின் வசப்பட்டோ இருப்பார். அவர் குழந்தைகளிடம் தனித்து ஒரு வார்த்தை என்றைக்கும் பேசினதே இல்லை.

அவள் அகத்துக்கு வந்த சமயங்களில் கிருஷ்ணன்தான் சற்றுச் சற்றுப் பேசி வீட்டில் மாப்பிள்ளை முதலானவர்களைப் பற்றி விசாரிப்பான். அவனிடத்தில், அவள் ஒன்றும் அந்தரங்கத்தைச் சொல்லிக்கொள்ளாவிட்டாலும், அவளிட மிருந்து வெளிவரும் இரண்டொரு சொற்களாலேயே அவள் முழுதும் சந்தோஷமாக இல்லை என்பதை அவன் ஒருவாறு ஊகித்திருந்தான்.

இரண்டாம் முறையும் சங்கரன் 'இன்டரி'ல் தோற்றுப் போய்விட்டான். அதனால் கல்லூரிப் படிப்பை நிறுத்தி விட்டான். 'நல்லாப் படிச்சு வேலை பாக்கற வயசுலே, சும்மா இருந்தா எப்படி? அது புத்தியே கெட்டுப் போக வைக்காதா? அவுங்க அண்ணன் மாதிரி திரும்பிடாமே இருக்கணுமே!' என்கிற கவலை கிருஷ்ணனுக்கு ஏற்பட்டது; 'நம்ம ஐயா சும்மா இருப்பாரு; ஒண்ணும் செய்ய மாட்டாரு. நம்ம அம்மாஞ்சி கிட்டையாவது சொல்லி ஏதாவது உத்தியோகமாவது பார்க்கப் படாதா? இவரைப்போல் ஒண்ணு ரெண்டு பாஸ் செய்தவங்க ஊரிலே வேலையிலே அம்பது நூறுன்னு சம்பாரிச்சுக்கிட்டுச் சௌக்கியமா இருக்காங்களே' என்று எண்ணமிட்டான்.

சுப்புவிடம் அதுபற்றி அவன் அரைகுறையாகப் பேச்சுக் கொடுத்தபோது, "நன்னருக்கு, கிட்ட இருக்கும் ஒரு குழந்தையையும் எங்காவது அடிச்சு விரட்டவா? அம்பதும் நூறும் சம்பாதிச்சு என்ன வெடியும்? எங்கோ போய்க்

குழந்தைகள் ஒண்டியாத் திண்டாடறதுதான் மிஞ்சும்'' என்று அவள் அதைக் காதுகொடுத்துக் கேட்டுக்கொள்ளவில்லை. 'ஏதோ குழந்தைகள் அருகிலேயே இருக்கவேண்டும், தாங்கள் நினைத்தபோது பார்க்கும்படி' என்ற நினைவு ஒன்றுதான் அவளுக்கு. அவர்கள் தங்கள் வாழ்வில் சந்தோஷமாக இருக்கிறார்களா என்கிற யோசனையே அவளுக்கு இல்லை. 'அம்பதும் நூறும் சம்பாதிப்பது பெரிதில்லைதான். மீனுவும் இல்லாமல் வீட்டில் இருப்பதும் முடியாதுதான். ஆனாலும் குழந்தைகள் நன்மையைப் பார்க்க வேண்டாமா? பெரியவங்க சௌகரியத்தையேயா சதா நினைத்துக்கொண்டிருப்பது? சங்கரன் சுபாவமே ஒரு மாதிரி. கலகலப்பு இல்லாமே, தானே யோசிச்சுக்கிட்டு இருக்கிற சுபாவமா இருக்கு. அதுக்குச் சதா ஒரு வேலையும் இல்லாமே வீட்டோடு குந்திக்கிட்டிருந்தா சரியா வருமா?' என்று கிருஷ்ணன்தான் விசாரப்பட்டான். 'நாமாவது மகாலக்ஷ்மியையும் பாலுவையும் பார்த்து வரும் சாக்கில் மதுரைக்குப் போய் அம்மாஞ்சியிடம் சங்கதியைச் சொல்லி, சங்கரனுக்கு உத்தியோகமாவது சம்பாதிக்க வழி பண்ணுவோம்' என்று நினைத்தான்.

இது மாதிரி அவன் தீர்மானித்து, மதுரை போய் வருவதைப்பற்றிய நினைவாகவே இருந்தான். உத்தியோகம் சம்பாதிப்பது கிருஷ்ணன் நினைத்தபடி அவ்வளவு எளிதாகவா இருக்கிறது? அதற்குச் செய்யவேண்டிய சடங்குகள் எவ்வளவோ இருக்கின்றனவே. உத்தியோகத்தை விரும்புகிறவர்கள், அலுத்துச் சலித்துப் போகும்படி, மனுப் போட்டுவிட்டு, அலைந்து, வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் எல்லாரையும் ஒருமிக்கப் பார்த்து எவ்வளவோ செய்யவேண்டியிருக்கிறது. ஆனால் இவைகளில் ஒன்றும் கிருஷ்ணனுக்குத் தெரியாது. கடையில் சாமான் வாங்கி வருவது போல் உத்தியோகத்தைச் சம்பாதித்துக் கையில் கொடுத்துவிடலாமென்று அவன் மனக்கோட்டை கட்டிவிட்டான். அதற்காக மதுரை சென்று, குழந்தைகளைப் பார்க்கும் ஆவலுக்கும் மேலாக அம்மாஞ்சியைக் கண்டு பேசும் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துத் துடித்துக்கொண்டிருந்தான்.

அவன் யோசனைகளை அறியாத சுப்பு, ''வீட்டில் யாரும் இல்லை. வயல் வேலைகள் தொடங்கிவிட்டதால் ஆட்கள் எல்லோரும் வயல்வெளிக்குப் போய்விடுகிறார்கள்; வீட்டில்

பசுமாடுகள் கன்று போட இருக்கின்றன. ஆள்காரன்கள் இல்லாமல் இருக்கக்கூடாது.''- இது மாதிரி ஒன்று போனால் ஒன்றாகக் காரணம் சொல்லி அவனைப் போகவிடாமல் செய்து கொண்டிருந்தாள்.

இப்போதெல்லாம் எதிரகத்து லக்ஷ்மிக்கு முன்போலக் கோபாலையர் அகத்தைக் கவனித்த வண்ணம் இருக்க முடிவ தில்லை. வீட்டில் பெண்கள் பிள்ளை பெற வந்தார்கள். பிள்ளை களின் குழந்தைகளான பேரக் குழந்தைகளைக் கவனிக்க வேண்டி யிருந்தது. இத்தனைக்கு மத்தியிலும் அவள் நாணம்மாளை மட்டும் கவனிக்கத் தவறவில்லை. அப்படி அவள் கவனித்துப் பார்த்துச் சொன்னதற்குச் சரியாக இப்போதெல்லாம் நாணம்மாள் பாடு யோகந்தான். குழந்தைகள் யாரும் இல்லாமையால் பேய் போலத் தனியாக இருந்து தவிக்கும் சுப்புவுக்கு, அவ்வளவாக அது தெரியாமல் இருக்கும்பொருட்டு, அடிக்கடி வந்து பேசிவிட்டுத் திரும்பிப் போகும்போது வெறுங்கையுடன் போகாமல் சாமானோடு சென்றுகொண் டிருந்தாள் அவள். அதாவது நல்லதாகக் கண்ணில்பட்ட மளிகைச் சாமானோ, ருசியாக அமைந்த சமையல் வகையோ, தின்பண்டமோ, எதுவானாலும் தங்கள் வீட்டுக்கு வேணு மென்கிற அளவு கொண்டுபோய்க்கொண் டிருந்தாள்.

தன்னை யாராவது புகழ்ந்துரைத்துவிட்டால் வீட்டில் இருப்பதைச் சந்தோஷத்தில் வாரிச் சுப்பு கொடுத்துவிடுகிறாளே, அப்படி இருக்கும்போது சிலாகிப்பாக ஒரு வார்த்தை சொல்லி விட்டுத் தன் வீட்டுக்கு வேணுமென்கிறதைக் கொண்டுபோக நாணம்மாளுக்குத் தெரியாதா? அப்படித்தான் ஆகட்டும்; யாருக்குக் கொடுத்துவிடுகிறார்கள்? அவர்கள் பெண்ணுக்குத் தானே?

இது மாதிரி காரணங்களால் தங்கள் வீட்டு வேலையையும் குறைத்துக்கொண்டு செலவையும் குறைத்து மிச்சப்படுத்து வதில் அவள் கண்ணும் கருத்துமாக இருந்தாளே தவிர, தன் பிள்ளைகள் நேர்மையாக இருந்து, நெடுகிலும் நன்றாக வாழ்வ தற்கு என்ன செய்ய வேண்டும் என்பதை அவள் சிந்திக்கவில்லை. அவள் அல்ப புத்திக்கு அந்தத் தீர்க்க திருஷ்டி இருந்ததாகத் தெரியவில்லை.

அவள் கணவருக்குப் பிள்ளைகளிடத்திலும் வீட்டு விஷயத்திலும் தனியே ஒரு சுதந்தரமும் இல்லை. அவரும்

மனைவியின் குறுகிய நோக்கத்தை அநுசரித்தே விஷயங்களைக் கிரகித்துத் தமக்குப் பிற்காலம் பிள்ளைகள் சொத்தை வைத்துக் கொண்டு கௌரவமாக வாழவேண்டாமா என்பதைச் சிந்திக்காமலே நாட்களைக் கடத்திச் சென்றார். அவ்விதமின்றி ஆழ்ந்து சிந்திப்பவரா யிருந்தால் தம்முடைய மூத்த மகனைக் கண்டித்துத் திருத்த உபாயங்கள் தேடியிருக்க மாட்டாரா? பூனை, கண்ணை மூடிக்கொண்டு உலகம் அஸ்தமித்துவிட்டதாக நினைத்துக்கொள்ளுவதுபோல் தாம் அதுபற்றிப் பேசிக் கவலையை வெளிக்காட்டாதிருந்தால், ஊராரும் கவனித்துத் தூஷணை சொல்லமாட்டார்கள் என்கிற சாமர்த்தியத்தைக் கையாண்டு வந்தார். ஊரார் பேசவில்லை என்பதற்காக விஷயம் நேர்மையானதாகப் போய்விடுமா? நாம் ஒழுங்காக நடந்துகொள்வது பிறருக்காகத்தானா, நமக்காகவே இல்லையா என்று அவர் எண்ணிப் பார்ப்பவராகவே தெரியவில்லை.

இங்கே இவர்கள் இப்படி நாட்களைக் கழித்து வந்தபோது, மதுரையில் அம்மாஞ்சி வீடு சென்ற மகாலக்ஷ்மியும் பாலுவும் எப்படி இருந்தார்கள்? அவர்களுக்கு நாட்கள் வெகு ஆனந்தமாகச் சென்றுகொண்டிருந்தன. அம்மாஞ்சி டிப்டி சூப்ரெண்ட் ஆனதால் சிறிய காம்பவுண்டுக்கு நடுவில் இருந்த சிறிய பங்களா ஒன்றில் தனியே வசித்துவந்தார். இட்ட வேலைகளைக் கை கட்டிச் செய்ய ஒரே சேவகர்கள் மயமாக இருந்தது. குழந்தைகள் செய்ய வீட்டு வேலை என்பதாக என்ன இருக்கும்?

அவர்கள் சந்தோஷமாகக் கவலையற்றுப் பள்ளிக்கூடம் போய் வந்து, சிரிப்பும் விளையாட்டுமாகக் காலம் கழித்து வந்தார்கள்.

'மீனாக்ஷி பெண்கள் பாடசாலை'யில் ஞானமும் மகாலக்ஷ்மியும் சேர்ந்து படித்துவந்தார்கள்; பாலுவும் சிறு பையன் என்பதால் பெண்கள் பள்ளிக்கூடமாக இருந்த போதிலும் அதற்கே போய்வந்தான். அம்மாஞ்சி சிறிய மோட்டார் ஒன்றை இப்போது வைத்திருந்தார். அதில் அவர்கள் பள்ளி செல்லும் போது, 'டிப்டி சூப்ரெண்ட்' வீட்டுச் சிறுவர்கள் என்று அவர்களுக்கு விசேஷக் கௌரவம் கொடுத்து வாத்தியாரம்மாள் முதல் யாவரும் நடத்தினார்கள்.

கிராமத்தில் படித்தவளான மகாலக்ஷ்மி ஆங்கிலத்தில் கொஞ்சம் குறைவாக இருந்தாள். இதற்காக, ஒரு வகுப்பு மேலே படித்து வந்த ஞானம் அவளுக்கு அப்போதப்போது

சந்தேகங்களை விளக்கிச் சொல்லித் தருவாள். இதுமாதிரி ஞானம் ஆசிரியையாகவும் மகாலக்ஷ்மி மாணுக்கியாகவும் இருக்கும் நேரங்களில் அம்மாஞ்சி பார்த்துவிட்டால், "என்னடி, உனக்கு ரொம்பத் தெரிந்துவிட்டது, அவளுக்குச் சொல்லிக் குடுக்க ஆரம்பிச்சூட்டே? ஊமைக்கு உளறுவாயன் சண்டப் பிரசண்டனு?" என்று கேட்டுக் கேலி செய்வார். "சரிதான், ஞானம் என்னதான் சொல்லித் தந்திருக்காள் பார்ப்போம். என்ன மகாலக்ஷ்மி? உத்தியோகத்துலே, கலெக்டர் பெரிதா, பில் கலெக்டர் பெரிதா?" என்று ஒரு கேள்வியைப் போடுவார்.

'பில் என்று ஒரு வார்த்தை கூட இருக்கிறதே அதுதான் பெரிதோ?' என்று மகாலக்ஷ்மிக்குப் பலத்த சந்தேகம் ஏற்படும் போது அவருக்குச் சிரிப்புத் தாங்காது வரும். இது மாதிரி அந்தப் பெண்களை வேடிக்கை செய்வதில் அவருக்கு உத்ஸாகம். "ஆமாம், பிரமாதமாக விழுந்து விழுந்து தேச சரித்திரமும், இன்னொன்றும் படிக்கறேளே. நம்ம ராஜாங்கத்தில் இப்போது யார் மந்திரியாயிருக்கா, வெள்ளைக்காரனு நம்மவனு? சொல்லுங்கள், பார்ப்போம்" என்று ஒரு சமயம் அவர் கேட்டபோது, "நம்மவர்கள்தான் அப்பா; காங்கிரசில் சேர்ந்தவர்களே கவர்ன்மென்டை நடத்துகிறுர்கள்" என்ருள் ஞானம்.

"அடே, அப்படியா!" என்று ஆச்சரியப்படுகிறவர் போலச் சொல்லிவிட்டு, "நீ என்ன சொல்றே, மகாலக்ஷ்மி?" என்ருர்.

"ஆமாம், காங்கிரஸ்காராதான்; தெரியுமே. இப்பக்கூடக் காங்கிரஸ் மந்திரி ஒருவர் இந்த ஊருக்கு வரப் போருர். மீனுக்ஷியம்மன் கோவிலைப் பறையாளுக்குத் திறந்துவிடப் போருர். அவர் எங்க பள்ளிக்கூடத்தைக்கூடப் பார்க்க வரப் போறதாக எங்க வாத்தியாரம்மா சொன்னுள். அவரை வரவேற்க எங்களுக்கெல்லாம் பாட்டுக்கூடச் சொல்லித் தந்திருக்கா" என்ருள் மகாலக்ஷ்மி.

"அடி சக்கே! இப்ப முன்னைப்போல இல்லை. ரொம்ப எல்லாம் தெரிஞ்சு போச்சு. பலே கெட்டிக்காரப் பெண்களாய்ப் போய்விட்டேள். பார்த்துக்கோடி, உனக்கு என்ன தெரிகிறது? உன் பெண்ணையும் மாட்டுப் பெண்ணையும் பாரு. என்னவெல்லாம் தெரிஞ்சிண்டிருக்கா" என்று கூறி மனைவியை வம்புக்கு இழுத்தார்.

"நீங்க படிக்க வச்சிருக்கேள்; தெரிஞ்சுண்டிருக்கா. என்னை ஆர் பள்ளிக்கூடம் அனுப்பிச்சாளாம்?" என்பாள் தர்மாம்பாள்.

"குறைப்படுவானேன்? இப்போ அனுப்பறேன் போறையா?"

"ஆகட்டும்; பால்யம் திரும்பட்டும். அது கிடக்கு. வாஸ்தவமாகத்தான், மீனுக்ஷியம்மன் கோவிலுக்குள்ளே பள்ளு, பறையனை யெல்லாம் விடப்போருளாமே? அதென்ன கூத்து?"

"கூத்தென்ன? சாமி நமக்கு மட்டுந்தானு? அவாளுக்கும் வேண்டாமா?"

"அவாளுக்குச் சாமி இல்லாமே என்ன? எவ்வளவோதான் இருக்கு. நம்ம கோவிலுக்கு வந்தாத்தானு? வீணுக்கு அவாளை இழுத்து வந்து கோவிலை எதுக்காகத் தீட்டாய் அடிக்கிறது? நம்மவர்களே இது மாதிரி அக்கிரமம் செய்யலாமா?" என்ருள் தர்மாம்பாள்.

"சாமிக்குக்கூடவா தீட்டு? நீ தேவலையே; தீட்டைப் போக்கிக்க அவருக்குச் சக்தி கிடையாதா? அவரும் நம்மைப் போலக் கையா லாகாதவரா?"

"உங்க விளையாட்டு இருக்கட்டும். நிஜமாகவே இந்தக் காங்கிரஸ்காரா பறையனையெல்லாம் கூட்டிவந்து கோவிலை அசுத்தமாக்கினு மத்த ஜாதிக்காரா கோவிலுக்குப் போகாமே இருந்துவிடறதூன்னு எல்லாரும் பேசிண்டிருக்கா. அப்படித் தான் வந்து முடியப்போறது. நமக்குக் கோவில்கூடப் போச்சு" என்ருள் தர்மாம்பாள்.

"ஆனு நீ சாமியை வேண்டாம்னு வச்சுடப் போறையா, என்ன? நித்தியம் போகிற உன்னைப் பாக்காமே மீனுக்ஷிக்குன்னு கண் பூத்துப் போகும்? அதுன்னு எனக்கு விசாரமாயிருக்கு!" என்று அம்மாஞ்சி மனைவியைப் பரிகசிக்கும் தோரணையில் சொன்னுர்.

"நான் கோவிலுக்குப் போறதை நீங்க ஒண்ணும் சொல்லிக் காட்ட வேண்டாம். மீனுக்ஷிக்குக் கண் பூத்துப் போகாமே எனக்குப் பதிலா உங்களைப் பார்க்கட்டுமே. நீங்கதான் என்னேடு ஒரு நாள் கோவிலுக்கு வராவிட்டாலும், அந்தப் பள்ளன்களையும் பள்ளிகளையும் இழுத்துண்டு முன்னுடி போகப் போறேளே. பிராமண ஜன்மம் எடுத்தூட்டு அந்தக் காரியம் வேண்டாம் உங்களுக்கு. ஆமாம், யார் வேணுமானுல் போகட்டும்; நீங்க பேசாமே இருங்கோ வீட்டுலே" என்ருள் தர்மாம்பாள்.

''அது முடியுமா? உத்தியோகம்னு போயிடும்? கூட்டம் கூடுகிற இடத்துலே போலீஸ்காரன் நின்னுகணுமே. சாமிக்கு ஜாதி கிடையாது. அவர் சண்டாளனுகக்கூடப் பிறந்திருக்கார். நம்ம பாட்டை நாம் பாத்துக்குவோம். வயத்துப் பிழைப்புப் போனு, அதற்குச் சாமி என்னமாவது ஒத்தாசை பண்ணு வாரா?'' என்றூர் அம்மாஞ்சி.

உத்தியோகத்தை இழக்கும்படி தர்மாம்பாள்தான் சொல்லுவாளா? 'கோவிலேத் தீட்டா அடிச்சு இவாளுக்கு என்ன வரப்போறது? நமக்கு மீனுக்ஷியம்மனின் தரிசனம் போச்சு' என்றுதான் அவள் வருந்தினுள்; அவளுக்கு அரசாங்கத்தின் செய்கை அர்த்தமற்றதாகப் பட்டது. தன்னைப் போன்றவர்களுக்குச் சாமி தரிசனம் செய்ய முடியாமல் போவது தவிர அதில் வேறென்ன சாதகம் இருக்கிறது என்றே அவளுக்குத் தோன்றிக்கொண் டிருந்தது.

## 21
## மந்திரி விஜயம்

சென்னையிலிருந்து மந்திரி ஒருவர் மதுரைக்கு விஜயம் செய்து, ஆண்டவனைத் தரிசிக்க முடியாமல் தடுக்கப்பட்டிருந்த ஹரிஜனங்களை மீனுக்ஷி கோவிலுக்குள் அழைத்துச் செல்லும் சீர்திருத்தமான நன்மையை நிறைவேற்றி வைத்தார். அது காறும் மீனுக்ஷியும் அவள் கோவிலும் தங்களுக்கே சொந்தமாக நினைத்திருந்த அவ்வூர் வாசிகள் சிலருக்கு அது மிகவும் அக்கிரமமான செய்கையாகத் தோன்றியது.

மதுரையின் சிறப்பு முழுதும் அதன் கோவில்தான் அல்லவா? வருஷத்தில் பன்னிரண்டு மாதங்களில் திருவிழா இல்லாத மாதமே கிடையாது. ஒவ்வொரு விழாவுக்கும் அருமையான விசேஷம். பாண்டிய ராஜனின் ஒரே புதல்வியான மீனுக்ஷிதான், பாண்டிய நாட்டின் அரசி. சுந்தரேசுவரர்க்குக் கூட அவள் கணவர் என்கிற மதிப்புத்தான். கோவில் பூஜாக் கிரமங்களிலெல்லாம் இந்தத் தனிச் சிறப்பு நன்கு வெளிப்படும். அம்பாளுக்குத்தான் முதல் நைவேத்தியம், முதல் தீபாராதனை பிறகுதான் ஈசுவரனுக்கு. ஈசுவரியின் பள்ளியறைக்குத்தான் ஸ்வாமி வருவார். மற்றக் கோயில்களைப்போல், ஸ்வாமியின் பள்ளியறைக்கு அம்பாள் செல்வதில்லை; அர்த்த ஜாம பூஜை

முடிந்து பள்ளியறைக் கதவைச் சார்த்தின பிறகு, அன்றுட வரவு செலவுக் கணக்குகளை அரசிக்கு ஒப்பிப்பதும் முக்கியமான சடங்குகளில் ஒன்று. அந்தப் பாதி ராத்திரியிலும் அர்த்தஜாம தீபாராதனைக்காகக் காத்திருக்கும் பக்தகோடிகளுக்குக் கணக்கில்லை. சினிமாக் கொட்டகையின் வாசலில் கூடும் கூட்டத்துக்கு மேலாகவே ஜனங்கள் குழுமியிருப்பார்கள். தூக்கம் விழித்துத் தீபாராதனை பார்த்துவிட்டு, மீனாக்ஷியின் அன்றைத் திவ்விய அலங்காரத்தையும், அவளது நெற்றியில் வைரத் திலகம் ஜொலித்த ஜொலிப்பையும் அதிசயித்து வர்ணித்த வண்ணம் வீடு திரும்புவார்கள். கோயில் உத்ஸவங்களில் ஜனங்களுக்கு அலுப்போ சலிப்போ தோன்றுது. நரியைப் பரியாக்கின கதையும், ஈசுவரன் பிட்டுக்கு மண் சுமந்து அடிபட்ட வைபவமும் எவ்வளவு தடவை பார்த்தாலும் கேட்டாலும் தெவிட்டாதவை. மீனாக்ஷி சுந்தரேசுவரரின் விவாக மகோத்சவத்தைப் பற்றியோ சொல்லவேண்டியதே இல்லை. திருமணச் சிறப்பைப் பாட்டாகவும் கதையாகவும் ஜனங்கள் பாடியும் சொல்லியும் இன்புறுகிறார்கள். மீனாட்சியின் உடன்பிறந்தவரான கள்ளழகர் சீர் வரிசைகளுடன் மலை மீதிருந்து இறங்கி ஆற்றோடு வரும் வைபவமும், அவர் ஊர் வந்து சேருமுன் முகூர்த்தம் தப்பிவிடுகிறது என்பதற்காக மீனாக்ஷியின் மணம் முடிந்துவிட்ட சமாசாரம் கேட்டுக் கோபித்துக்கொண்டு அவர் திரும்பிப் போய்விடுகிறதும் எல்லோருக்கும் வெகு சுவாரசியம் நிறைந்த கதை. தம்மைப் போலவே ஸ்வாமிகளையும் பாவித்து சந்தோஷப்படுவது மாந்தர் இயற்கையல்லவா? மீனாக்ஷியின் கல்யாண விருந்தின் சிறப்பே எல்லோரையும் கேட்கத் திணற அடித்துவிடும். ஈசுவரனே குண்டோதரனைச் சிருஷ்டி செய்து சாப்பாட்டைக் காலி செய்து, தன் மானத்தைக் காத்துக்கொண்டதாகக் கதை. 'சமைத்த உணவை உண்ணக்கூட மாப்பிள்ளைக்கு நாதியைக் காணோமே. இவ்வளவுக்கு அநாதையான ஒரு மருமகனை அடைந்துவிட்டோமே!' என்று மீனாக்ஷியின் தாய் காஞ்சனமாலை வருந்தி, மாப்பிள்ளையான ஜகதீசுவரனைக் குறைவாக நினைத்தது பிரசித்தமல்லவா?

கடவுளிடத்தில்கூடச் செல்வத்துக்குத்தான் மதிப்பு. செல்வமில்லாத மாப்பிள்ளை சர்வேசுவரன் என்றாலும் குறைவுதான். பொருட் செல்வம் காரணமாகப் பெண்களுக்கு ஏற்படக்கூடும் உயர்வைக் காணவேணுமானால் மதுரைக் கோயிலை

விட்டால் வேறு இடம் வேண்டியதில்லை. அவ்விடத்தில் சுந்தரேசுவரருக்கு எவ்வளவோ சக்திகள் இருந்தும் மீனாக்ஷிக்குத் தான் பிராதான்யம். ஏன்? ராஜ்யம் அவளுடையதல்லவா? கோயில் பிராகாரங்களில் கட்டித் தொங்கும் கூடுகளில் இருக்கும் கிளிகளும் 'மீனாக்ஷி, மீனாக்ஷி!' என்றே கத்திக்கொண் டிருக்கும். சுருங்கச் சொல்லுமிடத்து மதுரை என்றாலே மீனாக்ஷியின் பிரதாபமே முன் வந்து நிற்கும்.

கோயிலைச் சுற்றியே ஊரும், அம்பாளைச் சுற்றியே ஜனங்களின் வாழ்க்கையும் அமைந்திருக்கின்றன. அவ்விடத்தில் கடை கண்ணிகள்கூடக் கோவில் பிராகாரங்களிலே இருந்ததால் அவர்களின் அன்றாடக் காரியங்களும் மீனாக்ஷியைத் தரிசித்தவண்ணமே தான் நடந்துகொண் டிருந்தன.

இவ்விதம் மீனாக்ஷிமயமாக வாழ்க்கை நடத்தியவர்களுக்கு இப்போது இந்தத் தீண்டாதாரின் ஆலயப் பிரவேசம் பெரிதும் கலவரத்தைக் கொடுத்தது என்றால், அதில் தவறொன்றும் சொல்லுவதற்கு இல்லையல்லவா? காந்தி சொல்லும் நியாயம்-அதாவது, 'நம்மில் சிலருக்குக் கோயில் இல்லை என்று விலக்கினோமானால் ஹிந்து மதத்துக்கே பலம் குறைந்து போகிறது' என்கிற வாதம் - அவர்களுக்குப் புரியவில்லை. ஏதோ தங்கள் சொந்த உரிமைச்சொத்துக் கொள்ளை போகிறது என்கிற எண்ணந் தான் அவர்களிடம் மேலோங்கி நின்றது. அவர்கள் காந்திஜியையும், அவரைப் பின்பற்றி நடக்கும் காங்கிரஸ்காரர்களையும் ஒன்றாகக் குறைகூறித் தூஷித்து வந்தார்கள். அதைத் தவிர அவர்களால் செய்ய முடிந்தது வேறொன்றும் இல்லை.

இவ்வளவு அபிப்பிராய பேதங்களின் மத்தியிலும் வெற்றிகரமாகவே கோவிலுக்குள் ஹரிஜனங்களை அழைத்து வந்துவிட்டு, அதுபற்றி அங்கங்கே பேச்சுக்களும் நிகழ்த்திச் சென்றார், காங்கிரஸ் மந்திரி. போகும் முன் பார்வையிட்டுச் சிலாகித்துச் சென்ற இடங்களில் மீனாக்ஷி பெண் பாடசாலையும் ஒன்று. அவரை வரவேற்றுப் பாட்டுக்களும் நடனங்களும் வெகு திறமையாக நடத்தினார்கள் அங்குள்ள மாணவிகள். மகாலக்ஷ்மியும், ஞானமும் அவைகளில் முக்கியமான பங்கெடுத்துக்கொண்டு எல்லாரும் சிலாகிக்கும்படி ஆடியும் பாடியும் காட்டினார்கள் என்று நாம் சொல்ல வேண்டியதில்லை. பள்ளிக்கூடக் காரியதரிசி மகாலக்ஷ்மியையும், ஞானத்தையும் கொண்டு, வந்த மந்திரிக்கும் அவர் மனைவிக்கும் புஷ்ப மாலை அணியச் செய்வித்து, மந்திரி

செய்திருக்கும் தியாகத்தையெல்லாம் குழந்தைகளுக்கு எடுத்துச் சொன்னுள்.

காங்கிரஸ்காரர்களைப் பற்றிச் சொல்வதென்றுல் அவர்கள் சர்வ பரித்தியாகத்தை யல்லாது வேறு என்ன சொல்லக் கிடக்கிறது? அவ்வளவிலும், அவர் மனைவியும் பர்த்தாவுக்கேற்ற பதிவிரதையாகப் பங்கெடுத்துக்கொண்டு உடன் உழைத்ததைச் சொன்னபோதுதான் அந்தப் பள்ளிப் பெண்களுக்குப் பெரு வியப்பு உண்டாயிற்று. கணவரோடு அவளும் துணிக் கடை மறியல் செய்திருக்கிருள்; உப்புச் சத்தியாக்கிரகம் செய்திருக்கிருள்; அதற்காக மாதக் கணக்கில் சிறைவாச தண்டனை வேறு அநுபவித்திருக்கிருள்.

இவைகளையெல்லாம் கேட்டபோது, ஒரு பெண்பால், தனக்காகவோ, தனது குடும்பத்துக்காகவோ அல்ல, பொது ஜனங்களின் நன்மையை உத்தேசித்தே இவ்வளவு சிரமங்களும், கணவரைப் பின்பற்றி அநுபவித்திருக்கிருள் என்றுல் எவ்வித உயர்வுதான் தோன்ருது? அவர் நமது நாட்டுக்கே மந்திரி. அப்படிப் பட்டவரின் மனைவியாக இருந்தும், காதிலோ கழுத்திலோ நகை எதுவும் அணியாமல், தூய கதராடை உடுத்து, கண்களில் அன்பு ததும்பச் சாந்தமாய், அவர்களைப் புன் முறுவலோடு பார்த்தது எல்லாச் சிறுமிகளின் உள்ளத்தையும் ஒருங்கே கவர்ந்தது. அவர்கள் அவளைப்போல் இருக்க, மனத்துக்குள் மிகுந்த ஆசை கொண்டார்கள்; தங்களையும் அதுமாதிரி எல்லோரும் புகழ வேண்டுமென்று விரும்பினுர்கள்.

மந்திரி மனைவிக்கு மகாலக்ஷ்மி மாலை அணிந்தபோது, "இந்தச் சுந்தரமான குழந்தை யார் வீட்டுப் பெண்?" என்று அவள் கேட்டுத் தெரிந்துகொண்டு, "உன் ரூபத்துக்குத் தகுந்த குணமும் உன்னிடம் இருக்கும் என்று உன் பரந்த விழிகளே சொல்லுகின்றன. நீயும் உன் கணவனும் நல்ல தேசத் தொண்டர்களாக ஆகுங்கள்" என்று அவள் ஆசீர்வாதம் செய்வது போலச் சொன்னுள்.

காங்கிரஸ் மந்திரி செய்த பிரசங்கமும் அதுதான். "நீங்கள் தாம் இனி வரப்போகும் இந்திய மக்கள். தேசத்தின் முன்னேற்றம் உங்களிடந்தான் இருக்கிறது. பெண்கள் எதையும் உருவாக்கும் சக்தி படைத்தவர்கள். அவர்கள் தங்கள் புருஷர்களையும் தேச சேவையில் ஈடுபடுத்தி நாடு உய்ய வழிதேட வேண்டும்" என்று அவர், அவர்களுக்குச்

சொல்லிச் சென்றார்; மகாலக்ஷ்மியின் மனத்தில் ரிஷி பத்தினியின் வாக்குப்போல மந்திரி மனைவியின் சொற்கள் ஆழப் பதிந்தன; அது அப்படியே பலித்துவிடுவது போலவும் அவளுக்குத் தோன்றிக்கொண் டிருந்தது. அவள் நாராயணன் மனவிருப்பப் படி நடக்க ஆசைகொண் டிருக்கிறாள்; தேச சேவைதான் அவன் விரும்பி ஏற்கும் செய்கையாக இருக்கிறது. அப்படி இருக்கும் போது அவள் வாழ்க்கை தேசத் தொண்டாற்றுவதாக அமை யாமல் வேறு எவ்விதம் அமையும்?

ஆனால் ஞானத்துக்கு அதுமாதிரி முடியாது. கணவன், மனைவி இருவரும் மனமொத்துத் தேசசேவை செய்வதென்பது அவளுக்குச் சாத்தியம் அன்று. அவள் கணவன் கோவிந்த ராஜன் காங்கிரஸ் கொள்கைகளுக்கு முற்றும் விரோதமாக இருப்பவன். அவர்கள் வீணுக்குத் தேசத்தை இரண்டு செய்வதாக நினைத்திருந்தான். 'பிரிட்டிஷாரின் ஆளுகையில் சண்டை சச்சரவின்றி நிம்மதியாக உத்தியோகம் வகித்து வருகிறோம். அதற்கே விபத்து வந்துவிடும், நம்மவர்கள் கையில் ஆளுகையின் பொறுப்புக் கிடைத்தால். நாம்தாம் யாதவ சேனைபோல் ஒருவருக்கு ஒருவர் பொறுக்காது மயிர் பிடித்துச் சண்டைசெய்து சாகிறோமே. இப்போது வகுப்புத் துவேஷம் தாங்க முடியவில்லை. இன்னும் பூரண சுதந்தரம் கிடைத்துவிட்டால் ஜனத்தொகையில் குறைவான எண்ணிக்கை யுள்ளவர்கள் முன்னோர்களைப் பின்பற்றி வானப்பிரஸ்தம் போக வேண்டியதுதான். யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக்கொள்வதற்கு ஒப்ப, இவர்கள் ஏன் இதுமாதிரி சேவைகளுக்குக் கிளம்புகிறார்களோ?' என்று அவன் எண்ணினான். அவன் வீட்டில் தேசத்தொண்டு என்று ஒன்று இருப்பதாகப் பேசுபவரே இல்லை.

அவன் தந்தை தம் உத்தியோகத்துக்கும் பொதுத் தொண்டுக்கும் வெகு தூரம் என்பதாகக் கருதி அதுபற்றிச் சிந்திப்பதுகூட இல்லை. ஊரெல்லாம் அமர்க்களப்படும்போது கூட அவர் சாதகமாகவோ பாதகமாகவோ அதுபற்றிப் பேசித் தமது அபிப்பிராயத்தைச் சாதாரணப் பேச்சிலும் வெளியிட்ட தில்லை. அந்த வம்பு நமக்கு எதற்கு என்கிற பாவனையில் விலகியிருந்தார்.

அவன் தாயோ காங்கிரஸ் என்றாலே தரித்திரம் என்று நினைப்பவள். 'லக்ஷ்மீகரமாகப் பட்டுப்பட்டாடை உடுத்துப்

பொன்னும் பூஷணமுமாக இராமல் இதென்ன தரித்திரக் கோலம்!' என்று ஒரேயடியில் ஆடை அலங்காரமற்ற காங்கிரஸ் வாழ்க்கையை இகழ்ந்தாள். தியாகம் என்கிற சொல்லே அவளுக்கு அருவருப்பாக இருந்தது. தமது க்ஷேமத்தை உத்தேசித்துப் பரிகாரங்கள் செய்வதையும், வைதிகர்களை வரவழைத்துச் சாப்பாடு போட்டுத் தானங்கள் வழங்குவதையும் அவள் ஒப்புக்கொண்டிருந்தாள். அதுமாதிரி தானதருமங்கள் இகத்துக்கும் பரத்துக்கும் நன்மை பயக்கக்கூடியவை என்று நமது சாஸ்திரங்கள் கூறியிருக்கின்றன. அவைகளைவிட்டு இந்தப் புது மாதிரியான சேவைகளும் தியாகங்களும் அவள் காதாலும் கேட்க விரும்பாதவை. 'ஊர் எப்படிப் போனுல் நமக்கென்ன? அதைச் சரிபண்ண நாமா கடமைப்பட்டிருக்கிறோம்? நம்மால் முடியத்தான் முடியுமா? நம்மை அண்டியிருப்பவர்களுக்கு நம்மாலானது கொடுத்து உதவி, அவர்கள் மனசு குளிர்ந்து வாயார வாழ்த்துவது போதாதா?' என்று நினைத்தாள். அவ்விதமே தன்னைத் தேடிவந்து யாசிக்கும் பெண்களுக்கு ஏதாவது பணமோ காசோ கொடுத்து, அவர்கள் வாழ்த்துக்களை எதிரிலேயே கேட்டு, தன்னைப்பற்றி உயர்வாக நினைத்து வந்தாள்.

இவ்விதம் புக்ககத்தில் அவ்வளவு பேரும் இருக்கும்போது ஞானம்மட்டும் தேச சேவை என்று ஒன்றைத் தனியே நினைக்க முடியுமா? நினைத்துத்தான் அவளுக்கு விசேஷமாக என்ன செய்யத் தெரியும்? தெரிந்தாலுமே நமது மாதர்களுக்கு, தனியே தங்கள் மனப்போக்குப்படி செல்ல அவ்வளவுக்குச் சுதந்தரம் வந்துவிடவில்லையே!

# 22
# ஆலயப் பிரவேசம்

**கோ**யிலுக்குள் ஹரிஜனங்களை அழைத்துச் செல்வது என்பது சில சிறு கிராமங்களிலும் பரவிற்று. இதுகாறும் கேள்வி முறையற்று ஏகாந்தத்தை அநுபவித்து வந்த தானப்பாளையத்து ஈசுவரனுக்கும் அந்தக் காற்று அடித்து யோகம் பிறந்துவிட்டது. அவருடைய நிலைக்கு யோகமென்று சொல்லாமல் வேறென்ன சொல்லுகிறது? தரிசிக்க வருவாரற்று, குருக்கள் மனம் இரங்கிச் செய்யும் பூஜையையும் நைவேத்தியத்-

தையும் தவிர, அர்ச்சனை செய்து தேங்காய் உடைத்துக் கர்ப்பூர ஆரத்தி செய்வார் இல்லாமல் அவரும் அம்பிகையும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துச் சதா மௌனத்தில் இருப்பது தவிர வேறு ஒன்றும் இன்றி இருந்தார்கள். வௌவாலைத் தவிர அந்த நிசப்தத்தைக் கலைக்க நந்தி முதலான அவர் சுற்றுவட்டத் தெய்வங்களுக்கும் தைரியம் இல்லாததால்தான் அவ்வாறு கற்சிலைகளாக இருந்தார்களா என்ன என்று நினைக்கும்படி இருந்தது. பக்தர்களுக்கு ஏற்பட்டிருந்த பஞ்சத்தில் ஏகாந்தத் துக்கும் நிசப்தத்துக்கும் குறைவில்லாமல் இருந்தது, அவ்விடத் தில். இவ்விதம் சேவிப்பாரற்றிருந்த நிலை போவதோடு, அவர் தரிசனத்துக்காக அடிதடி சண்டை நிகழுகிறதென்றால் அதற்கு யோகமென்று சொல்லாமல் வேறென்ன சொல்லுகிறது?

மேலப்பாளையத்துக் காங்கிரஸ்வாதிகள் சிலர் தங்களூர்ப் பள்ளர்களையும் கை தூக்கிவிட்டு, தாங்களும் பேர் பெற்றுக் கொள்ளும் உத்தேசத்தில், அந்தச் சுற்றுவட்டத்து ஈசுவரன் கோயிலான தானப்பாளையத்துக் கோவிலுக்குள் அவர்களை அழைத்துச் செல்ல ஏற்பாடுகள் செய்துவிட்டார்கள். இது காறும் அந்தச் சோமேசுவரைப் போலவே நிம்மதியாகத் தங்களூரில் கோயில் ஒன்று இருக்கும் நினைவே இன்றி இருந்த தானப்பாளையத்து அந்தணர்களை இந்த விஷயம் பரபரப்படையச் செய்தது. 'இதென்ன அக்கிரமம்? ஊர்ப்பள்ளர்களையெல்லாம் கோயிலுக்குள் அழைத்துவரப் போகிறார்களாமே! அதைத் தடுக்க வேண்டாமா?' என்று வேகம் கொண்டார்கள். எல்லோரும் ஒன்று கூடி, ஆலயப்பிரவேசம் செய்ய ஏற்பாடுகள் செய்திருப்பவர்களிடம் சென்று, ''அதுமாதிரி செய்யக்கூடாது; அது சரியல்ல'' என்று சொல்லிப் பார்த்தார்கள்.

''நம்மோடு, நமது தேசத்தில் பிறந்த ஒரு வகுப்பாரை நாமே தள்ளிவைத்துத் தாழ்வு படுத்தி நடத்துவது சரியல்ல. சகலருக்கும் பொதுவான ஈசுவரனையும் அவர்களுக்கு இல்லாமல் செய்வது, நாம் இதுகாறும் செய்துவந்த மகத்தான பாவம். அதைத் தவிர்க்க, காந்தி மகான் நமக்கு வழி காண்பித்த பிறகும் நாம் சும்மா இருக்கலாமா? உங்களுக்குச் சரியாகத் தோன்றா விட்டால் நீங்கள் இதில் சேர வேண்டாம்; அவ்வளவுதான். நீங்கள் என்றும் தவறாமல் கோயிலுக்குப்போய் வருகிறவர்கள் அல்ல. ஆகையால் இதனால் உங்களுக்கு இடைஞ்சலும் இல்லை'' என்று அவர்கள் சொல்லிவிட்டார்கள்.

''அவர்கள் அவ்விதம் சொல்லுகிறார்கள் என்பதற்காக நாம் பேசாமல் இருக்கிறதா? நாம் அன்றுடம் கோயிலுக்குப் போகா விட்டாலும் எது வேணுமானாலும் நடக்க இடம் தரலாமா? கோபுரவாயிலே மிதிக்கட்டும்; காலே முறித்துப் போடலாம்'' என்று சிலர் கச்சம் கட்டினார்கள்.

நாணம்மாளின் கணவர் போன்ற சில வயது சென்ற அநுபவஸ்தர்கள், ''சண்டை சச்சரவுகள் எதற்கு? அவர்கள் வந்துபோன பிறகு ஒருவருக்கும் தெரியாமல் ரகசியத்தில் சம்பு ரோக்ஷணம் செய்துவிடுவோம்'' என்று யோசனே சொன்னார்கள். மற்றவர்களுக்கும் அதுவே ஏற்றுக்கொள்ளக்கூடிய யோசனே யாகப் பட்டது. இதுகாறும் சமாதானமாக வாழ்ந்து வந்த தானப்பாளேயத்து வாசிகள் திடீரென்று மாறிச் சண்டைபோடும் தைரியத்தைப் பெற முடியவில்லே.

'என்னதான் இருந்தாலும் ஊர்ப்பள்ளர்களேயெல்லாம் கோயிலுக்குள் புகவிட்டுக் கோயிலேயும் அதன் பரிசுத்தமான சுற்றுப் பிரதேசத்தையும் பாழடிப்பதாவது!' என்கிற ஆத்திரம் அவர்களுக்கு இருந்தும், 'ஒரு நாளேச் சம்பவந்தானே? நித்தியப் படி நடக்கப்போவதில்லேயே; பார்த்துக்கொள்வோம்' என்று சமாதானம் செய்துகொண்டார்கள். தாங்களே அன்றுடம் ஸ்வாமிதரிசனம் செய்யாதிருக்கும்போது அந்தச் சேரிப் பறையர் கள் மட்டும் இதே சாக்கில் அன்றுடம் ஸ்வாமி சேவிக்கக் கிளம்பி விடுவார்களா என்ன என்கிற நம்பிக்கை அவர்களுக்கு. 'சம்பு ரோக்ஷணத்தைச் சிரத்தையாகச் செய்வித்துக் கோயிலே மறுபடி யும் புனிதமாக்கிக் கொண்டால் போகிறது' என்று ஒருவாறு நிம்மதி அடைந்தார்கள்.

'ஊர் இப்படிக் கெட்டுப் போக ஆரம்பிச்சுடுத்தே. நம்ம புருஷாளெல்லாம் இப்படிக் கையாலாகாமே இருக்காளே! பள்ளன்களெல்லாம் கோவிலுக்கு வந்தா, கோவிலோடு போகுமா? நம்ம குளமும் நந்தவனமும் என்ன ஆறது?' என்று அவ்வூர் ஸ்திரீகள் விசாரப்பட்டார்கள். 'ஸ்வாமி தரிசனத்துக்கு வருகிறவர்கள் குளத்து ஸ்நானத்துக்கும் வந்துவிட்டால்?' என்கிற கவலே அவர்களுக்கு. அரச மரத்தைப் பிடித்த பிசாசு அதனடிப் பிள்ளேயாரையும் பிடித்து ஆட்டின மாதிரி கண்டவர் களெல்லாம் கோயிலுக்கு வருவதோடு, குளத்தையும் நாசம் செய்வதென்று வந்துவிட்டால் அப்புறம் என்ன இருக்கிறது? அவர்கள் இதுகாறும் ஆனந்தமாக அநுபவித்து வரும் ஜலக்

கிரீடைக்கு அல்லவா மோசம் வந்துவிடும்? அவரவர்கள் வீட்டில் பெண்கள் சும்மா இராமல் தங்கள் புருஷர்களை, "நன்னுப் பேசாமே இருக்கேள்! ஏதாவது கோர்ட்டு நாட்டுக்கு எழுதிப் போட்டு இதைத் தடுக்க வழி பார்க்கப்படாதோ? கண்டவா ளெல்லாம் கோவிலேயும் குளத்தையும் சுத்த ஆரம்பிச்சா நாங்கள்ளாம் எங்கே போய்க் குளிக்கறதாம்? மடியா ஆசாரமா என்ன காரியம் செய்யறதாம்? புருஷர்களா லக்ஷணமா, தடுக்கப் பார்க்காமே எது நடந்தாலும் பேசாமே இருக்கிறதா?" என்று ஓரேயடியில் கடிந்துகொண்டார்கள்.

"எதுக்கு எழுதிப் போடறது? ராஜாங்கமே செய்கிற அநியாயம் இது. வேலியே பயிரை அழிச்சா என்ன செய்கிறது என்கிற சங்கதியா, அவாளேன்ன இது மாதிரி உத்தரவு போட்டிருக்கா, எவனோ இரண்டு மேலப்பாளையத்துக்காரன்கள் பேர் பெத்துக்கறத்துக்காகக் கிளம்பியிருக்கான்கள். பண்ணிட்டுப் போகட்டும். எல்லாம் ஒரு நாளத்திய வாழ்வு.. பிறகு நாம் வேணுமென்கிறது செய்துகொள்ளலாம். எந்தப் பயலும் அந்த வழி நாடாமே பாத்துக்க நம்மால் முடியாதா? நம்மை எதிர்க்கும் தைரியம் நம்ம ஊர்ப் பள்ளனுக்குக் கிடையாது" என்று சமாதானம் சொன்னார்கள்.

எதுவானாலும் நிம்மதி நிறைந்த அவ்வூரார் வாழ்க்கையில், அசைவற்ற குளத்து நீரில் போட்ட கல்லைப்போல, இந்த ஹரிஜன ஆலயப்பிரவேசம் பெருத்த கலவரச் சுழல் வளையங்களை உண்டுபண்ணிற்று. 'எந்தப் பாவியோ சும்மா இராமல் நமக்கு இப்படித் தீங்கிழைக்கக் கிளம்பியிருக்கிறானே!' என்று அவ்வூர் வாசிகள் வருந்தினார்கள். ஹரிஜனங்களைக் கடவுளின் சந்நிதிக்கு அழைத்து வரும் நாளன்று, ஊரார் யாரும் அந்தப் பக்கமே போவதில்லை என்று தீர்மானித்துக் கொண்டார்கள். அவர்கள் ஆயுளில் அன்றுதான் அவ்வூர்ப் பெண்கள் தேக அசௌக்கியமோ, வேறு வீட்டு அசந்தர்ப்பமோ இல்லாமல் இருக்கும் போது முதல் முதல் அவர்கள் கிராமத்துச் சுகவாழ்க்கையின் தனி அம்சமான குளத்து நீரில் அமிழ்ந்து நீராடுவதை விட்டுக் கிணற்றடியில் தண்ணீர் இழுத்து விட்டுக்கொண்டு ஸ்நானம் செய்தார்கள். அதற்காகக் காங்கிரஸ்காரர்களை மனமாரச் சபிக்கவும் சபித்தார்கள்.

சிறுவர்கள் முதல் பெரியோர் வரைக்கும் யாரும் கோவில் பக்கமோ, குளப்பக்கமோ போவதில்லை என்ற திடசங்கற்பத்

தோடு அவ்வூர் அந்தணர்கள் இருந்தார்கள். வாஸ்தவம்; ஆனால் நாணம்மாளின் மூத்த மகன் சுப்புணி, குடியானவர்களில் கொஞ்சம் மேல் அந்தஸ்துள்ள சிலருடன் சேர்ந்து கோயிலுக்கு வரப்போகும் காங்கிரஸ்காரர்களையும் அவர்கள் அழைத்துவரப் போகும் ஹரிஜனங்களையும் உள்ளே விடாமல் தடுக்கும் உத்தேசத்தில் அதிகாலையிலேயே கோபுர வாசலில் சென்று காத்திருந்தான்.

பிராமணர்களைக் காட்டிலும் மற்ற ஜாதியார்தானே இந்த ஆலயப் பிரவேசத்தை அதிகம் வெறுத்தார்கள்? ஆகையால் கிராமத்தில் வசித்த சில சுத்த சைவர்களான குடியானக் குடும்பத்தவர்களும் தானப்பாவையத்து ஆலயப்பிரவேசத்தை அடியோடு விரும்பவில்லை. அதை எதிர்த்துப் போராடத் தீர்மானித்தார்கள். அதற்காகக் கோபுர வாசலை முற்றுகையிட்டு முன்னேற்பாட்டுடன் வந்து கூடினார்கள். சிலர் சமயத்துக்கு உபயோகித்துக் கொள்ளக் கைத்தடியும் தயாராக வைத்திருந் தார்கள்.

நாணம்மாளின் மகன் சுப்புணி சும்மா வேலையின்றி ஊர் சுற்றி அலைபவன். உடலில் வாலிபத் திமிர் உள்ளவன். இவர் களைக் கண்டு தானும் விளையாட்டாக அந்தக் கோஷ்டியில் சேர்ந்துகொண்டான். அவனுக்குச் சொந்தத்தில் கோவிலைப் பற்றியோ அதில் குடிகொண் டிருக்கும் ஈசுவரனைப்பற்றியோ ஒரு விதமான பக்தி விசுவாசமும் இல்லாவிட்டாலும், ஏதோ கூட்டம், சச்சரவு இவைகளில் ஓர் உத்ஸாகம் இருந்தது. அதற்காகவே அவன் அவர்களோடு சேர்ந்துகொண்டான். கூட்டத்தைப் பெரிதாக்கிப் பக்கபலம் சேர்த்துக்கொள்ளுவதே நோக்கமாக இருந்த அந்தக் கூட்டத்தவர்களும் அவனைத் தடை யின்றித் தங்களுடன் சேர்த்துக்கொண்டார்கள். கோவிலுக்குள் நுழைய வருகிறவர்களிடம் நயத்திலேயே பேசித் திரும்பிப் போகும்படி செய்யும் உத்தேசத்தில் தங்களுக்குள் சிலரைப் பேச்சாளராகவும் \ அவர்கள் தேர்ந்தெடுத்திருந்தார்கள். அடி தடி அமர்க்களமின்றி கூட்டத்தைக் கலைத்துத் திருப்பிவிட வேண்டும் என்பது அவர்கள் எண்ணம். வீணுக்கு அடிபட்டு, போலீஸ் கோர்ட்டுக்கு நடவாமல் சமாதானமாகப் போவது தான் நல்லதென்று நினைத்தார்கள்.

அவ்வாறே அவர்கள் காலையிலிருந்து கோபுர வாசலில் வந்து கூட்டம் கூடிக் காத்திருந்தார்கள். பகல் பத்து நாழிகை

சுமாருக்குத் தானப்பாளையத்திலும் அதன் சுற்றுப் புறத்துக் கிராமங்களிலும் இருக்கும் சில பள்ளர்கள், என்றும் இல்லாதபடி காலை ஸ்நானம் செய்து, திருநீறு பூசிச் சற்று வெளுப்பான ஆடை உடுத்து, காங்கிரஸ் தொண்டர்கள் சிலர் தேசீயக் கொடி பிடித்து முன்னே வர, அவர்களைப் பின்தொடர்ந்து வந்து சேர்ந்தார்கள். 'மகாத்மா காந்திக்கு ஜே!' என்கிற தாரக மந்திரமோ அல்லது யுத்த கோஷமோ - அது கூட்டம் முடியும் விதத்தை அல்லவா பொறுத்திருக்கிறது? - அதை விடாமல் கோஷித்தும் வந்தார்கள்.

அவ்விதம் வந்தவர்களை எதிர்கொண்டு சென்று அதைத் தடுக்கும் கட்சிக்காரர்கள் சிலர். எதிராளி மனத்தில் நியாயம் படும்படி எடுத்துப் பேசினார்கள். ''கோவிலுக்குள் நுழைந்து அநியாயமாகக் கடவுளின் கோபத்துக்கு ஆளாகாதீர்கள். அவரவர்கள் ஜாதி ஆசாரத்தைத் துறந்து செய்யும் காரியம் எதுவானாலும் அது ஒருவருக்கும் நன்மையைத் தராது. ஏதோ ஜன்மாந்தரத்தில் செய்த பாவத்தின் பலனாகத்தான், இந்தத் தாழ்ந்த பிறவி இப்போது கிடைத்திருக்கிறது. மறுதடவையாவது நல்ல பிறப்பாகக் கிடைக்கவேண்டாமா? இது மாதிரியான அடாத செய்கைகளினால் உய்ய வழியில்லாமல் செய்துகொண்டு விடாதீர்கள்'' என்று அவர்களிடம் பிரசங்கம் செய்தார்கள்.

ஏற்கனவே 'தவறான காரியம் செய்கிறோமோ?' என்று சந்தேகத்தோடு தயங்கிக்கொண்டே வந்த சில பள்ளர்களுக்கு இந்தப் பிரசங்கம் அந்தச் சந்தேகத்தைப் பலப்படுத்தித் திரும்பி விடும் எண்ணத்தையும் கொடுத்தது. எவ்வளவோ சொல்லி ஒன்று சேர்த்துக் கூட்டத்தை அழைத்து வந்திருக்கும் தேச பக்தர்கள் இது மாதிரி எளிதில் அவர்கள் திரும்பிச் சென்றுவிட விடுவார்களா? ''உங்களை, ஆண்டவனைத் தரிசிக்க விடாமல் செய்யும் உபாயம் இது. வேறொன்றும் இல்லை. வீணுக்குத் தயங்காதீர்கள். ஜாதியாவது இன்னொன்றாவது? எல்லாரிடத்தும் ஒன்றாய் இருக்கும் சிவனுக்கு அந்த வித்தியாசம் உண்டா? இல்லை. வெறும் வார்த்தைகளைக் கேட்டு மிரண்டு போகாதீர்கள்'' என்று தைரியம் சொல்லிக் கூட்டத்தை நடத்தப் பார்த்தார்கள்.

இதைக் காணச் சிலருக்குத் தங்களை மீறி உள்ளே சென்று விடுவார்களோ என்கிற பயம் ஏற்பட்டது. தங்கள் கைத் தடியைக் காண்பித்துப் பயமுறுத்தத் தொடங்கினார்கள்.

நாணம்மாளின் மகனும் பயமுறுத்துகிறவர்களோடு சேர்ந்து, ''என்னடா பறப் பசங்களா, என்ன துணிச்சல்? இன்னிக்கு இந்தக் காங்கிரஸ்காரன்கள் இரண்டு பேரும், பக்கபலமாகப் போலீசும் இருக்கிற தெம்பா? அவர்கள் போன பிறகு நாளையும் பின்னையும் எங்களிடந்தானேடா கைகட்டி நிக்கணும்? எல்லாம் கிடக்க எங்களுடைய ஆண்டவன் தரிசனம் எதுக்கடா உங் களுக்கு? நீங்கள்ளாம் நுழைஞ்சு அசுத்தமாக்குகிறதா? தெய்வம் பொறுக்குமா?'' என்று கர்ஜித்தான்.

இதைக் கேட்ட அவர்கள் ஊர்ப் பள்ளன் ஒருவன், ''ஏன் சாமி, உன்னைப் பொறுக்கிற தெய்வம் எங்களைப் பொறுக் காதா? எங்க பொம்பளைங்களைக் கெடுத்துத் திரியற நீ எங்களைப் போலத்தானே? உன்னை அந்தச் சாமி ஏத்துண்டால் எங்களையும் ஏத்துக்காமே என்ன பண்ணும்?'' என்ருன். இதைக் கேட்டு அவன் கூட இருந்தவர்கள் சிலர் சிரித்தார்கள். அதைப் பொறுக்காத சுப்புணி, ''என்னடா! யாருன்னு தெரிஞ்சுண்டு பேசு. நாளைக்குக் கூலிக்கு வரும்போது தெரியப்போறது'' என்ருன் கோபமாக.

''என்ன பண்ணுவே? கூலி இல்லாமே பண்ணிப் புடுவையோ? அதையும் பார்க்கலாம். உன் வண்டவாளத்தை யெல்லாம் வெளியிட்டு ஊர் சிரிக்கவச்சு, அந்தப் பாப்பார ஜாதியே உன்னை ஜாதியை விட்டு விரட்டப் பண்ணமாட்டமா?'' என்று அவன் பின்னும் ஏளனமாகப் பேசினுன்.

சுப்புணிக்குக் கோபம் ஜ்வாலையாகக் கிளம்பிற்று. பக்கத்தில் நின்ற தங்கள் கட்சிக்காரன் ஒருவன் கையிலிருந்த தடியைப் பிடுங்கி, துடுக்காகத் தன்னைப் பேசினவன் தலையை நோக்கி ஓங்கி ஒரு போடு போட்டான். அவன் அந்த அடிக்குச் சாமர்த்தியமாக விலகிக்கொள்ளவே அவன் பக்கத்தில் இதை எதிர்பாராதது நின்றிருந்த இரண்டொருவர் தோளிலும் கழுத்திலும் அந்த அடி விழுந்தது. அடிக்குத் தப்பிய ஆசாமி சும்மா இராமல் நாணம்மாளின் மகனைச் சிண்டைப் பிடித்து நாலு உலுக்கு உலுக்கிக் கீழே தள்ளினுன்.

இதற்குள் கூட்டத்துக்குக் காவலாக வந்திருந்த சாத்தூர்ப் போலீசைச் சேர்ந்த போலீசு ஜவான்கள் சிலர் கலவரத்துக்குக் காரணமாக இருந்த இருவரையும் உடனே கைதுசெய்து அப்புறப்படுத்தினுர்கள். சாத்தூர்ப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லவேண்டி 'பஸ் ஸ்டாண்டை' நோக்கி நடத்திச்

சென்றார்கள். போலீசுக்குப் பயந்த மற்றவர்கள் தங்களையும் எங்கே ஸ்டேஷனுக்குக் கடத்திக்கொண்டு போய்விடுவார்களோ என்கிற பயத்தில் மெள்ள அவ்விடம் விட்டு நழுவிவிட்டார்கள். அதன் பிறகு வேறு இடையூறின்றி ஹரிஜனங்களை வெற்றிகரமாக ஆலயத்துள் நடத்திச் சென்று தீபாராதனை முதலியவை செய்து ஈசுவர தரிசனம் செய்வித்துத் திரும்ப அழைத்துச் சென்றார்கள், தேசத் தொண்டர்கள்.

சிவபெருமானது ஏகாந்தத்தைத் திடீரென்று கலைத்து, அவர் காலடியில் இவ்வளவு அமர்க்களம் நடந்தும் அந்தச் சர்வேசுவரன் ஒன்றையும் கவனியாமல் கண்களை மூடிக் கற்சிலையாகவேதான் இருந்தார். தடபுடலாக ஊர்ப் பள்ளர்களுக்கு இவ்வளவு நாளுமில்லாமல் இன்று புதிதாகத் தரிசனம் கொடுத்ததற்கு அவர் மட்டும் ஒரு வித்தியாசத்தையும் அடைந்தவராகத் தெரியவில்லை.

இந்த அடிதடி சமாசாரம் வெகு வேகமாக ஊர் முழுதும் பரவிப் பிராமணத் தெருவையும் அடைந்தது. நாணம்மாள் வீட்டையும் எட்டிற்று. 'அவர்கள் மகனுக்கு அடியாம், உதையாம்! போலீசார் கைது செய்துகொண்டு போகிறார்களாம்.' நாணம்மாள் என்னவோ ஏதோவென்று வயிற்றிலும் வாயிலும் அடித்துக்கொண்டு மகனுக்கு என்னவென்று பார்த்து வர ஓடும்படி கணவரைத் துரத்தினாள்.

அவர் வாயுவேகத்தில் கிளம்பி, பிள்ளை இருக்குமிடம் வந்து சேர்ந்தார். போலீஸ் ஜவான்கள் இருவர் நடுவில் திருதிருவென்று விழித்து நிற்கும் பிள்ளையைப் பார்க்கவே, அவருக்கு ஆத்திரமும் துக்கமும் கலந்து எழுந்தன. "அட பாவி! நீ எங்கேயடா இதில் போய் மாட்டிக்கொண்டாய்?" என்று தலையில் அடித்துக்கொண்டார். அந்தப் போலீஸ் சேவகனைப் பார்த்து, "அப்பா, இவனுக்கு ஒன்றும் தெரியாது. இவனை விட்டுவிடுங்கள். இருக்கிற காலிப் பசங்கள் இவனையும் இழுத்துக் கொண்டு போயிருப்பார்கள்" என்று கெஞ்சினார்.

"போலீசு லாக்கப்பிலே போடப்போகிறோம். அங்கே வந்து இன்ஸ்பெக்டர் ஐயாகிட்டச் சொல்லி இட்டுக்கிட்டு வாங்க" என்று அவர்கள் சொல்லிவிட்டார்கள்.

'தெரிந்தவர்களைக் கலந்து ஏதாவது செய்யவேண்டு மென்பதை உணர்ந்த கணபதி சாஸ்திரி, பிள்ளைக்குக் கவலைப் படும்படியான அடியொன்றும் இல்லை என்பதைத் தெரிந்து

கொண்டு வீடு திரும்பினர். 'நம் மனுஷ்யரான அம்மாஞ்சியிடம் சென்று பெரிய வழக்காகப் பதிவாகாமல் பிள்ளையை விடுவிக்க வழி பண்ண வேண்டும்; வேறு செய்வதற்கில்லை' என்று நிச்சயித்தவராய் மதுரை போவதற்கு ஆயத்தமானர்.

தம்முடன் வரும்படி கோபாலையரை அழைத்ததற்கு, "திடீரென்று கிளம்புவதாவது! அதெப்படி முடியும்? உங்களுக்கென்ன அம்மாஞ்சியைத் தெரியாதா? நான் எதற்கு?" என்று சொல்லிவிட்டார்.

'சமயத்தில் ஒன்றுக்கும் உதவாத மனுஷ்யன்' என்று தமக்குள்ளேயே வைதுகொண்டார். போலீசு ஒருபுறம் அவர் மகனையும், ஊர்ப் பள்ளர்களில் சிலரையும் இட்டுக்கொண்டு சாத்தூர் போனதும் கணபதி சாஸ்திரியும் மதுரைக்குப் புறப்பட்டார்.

நாணம்மாள், வருகிறவர்கள் போகிறவர்களிடமெல்லாம், "ஊர் எப்படிக் கெட்டுப்போனல் இவனுக்கென்ன? ஊரிலே பெருத்த பெரியவாளெல்லாம் சுகமாப் பேசாமே இருக்கல்லியோ? இவன் மகாப் பெரியவனே? இவனுக்குத்தானே கோவிலும் சாமியும் தனியா வச்சிருக்கு? அந்தச் சாமிக்கே விசுவாசமில்லையே. தனக்காகப் பாடுபட்டவனைத்தானே அடிபட வச்சிருக்கார்? கலிகாலத்திலே நல்லவனுக்குக் காலமா? சாமியுமாச்சு, பூதமுமாச்சு! சாமி தலையிலே இடிதான் விழப்படாதோ!" என்றெல்லாம் பிரலாபித்தாள். பிள்ளை ஏதோ ஊரின் க்ஷேமத்துக்காகப் பாடுபட்டு அநியாயமாக ஆபத்தில் சிக்கிக்கொண்டு விட்டதாகச் சொல்லிப் புலம்பினுள்.

"ஆமாம், நன்னருக்கு. இவ மாமாலம்! முழுப் பூசணிக்காயைச் சோத்திலே மறைக்கப் பார்க்கிறுள். இவ பிள்ளையை ஊரில் ஒருத்தருக்கும் தெரியாதாக்கும். அவன் காலாடியாத் திரிஞ்சு அடிபட்டா, அதுக்கு என்னவோ பெரிசா அளக்கருளே! அவன் என்னிக்கோ நம்ம ஊர்ப் பள்ளர்கள் காலாலே உதைபடத்தான் இருந்தான். இந்த மட்டும் அதிருஷ்டம். எந்தப் பள்ளன் வீட்டு வாசலிலோ அடிபட்டு விழுந்து கிடக்காமே அந்த மட்டும் கோபுர வாசலிலே நேர்ந்தது" என்று எதிரகத்து லக்ஷ்மி அண்டை அயலாரிடம் நாணம்மாள் பிள்ளைக்காகப் போடும் வேஷத்தைப்பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தாள்.

"கணபதி அண்ணு ஒண்டியாப் போறபோது, கோபாலனும் கூடப் போகப்படாதோ? சமயத்துக்கு இவன் இப்படித்தான்:

ஒத்தாசை செய்யமாட்டான். சம்பந்தியாத்துப் பிள்ளை இல்லையோ? அவர் ஏதானும் தப்பா நெனேச்சுக்க மாட்டாளோ? ஏதாவது நேர்ந்தா அது நமக்கும் சேர்ந்ததுதானே?'' என்று சுப்பு தன் தம்பியைக் குறை கூறிக்கொண் டிருந்தாள்.

சங்கரனுக்குத் தன் அண்ணாவின் போக்குத் தெரியுமாதலால் தப்பு இவன் பேரில் இருந்து, ஏதாவது சிறைத் தண்டனை கிடைத்துவிடுமோ என்கிற கவலையும், பெருத்த அவமானமும் தோன்றின. மாமனார், தகப்பனாரோடு கூடச் சென்று அவரால் ஆன ஒத்தாசையைச் சமயத்தில் செய்யக்கூடாதா? தன்னிடத்தில் அவருக்கு மதிப்பு இருந்தால் தனக்காக இது செய்ய மாட்டாரா? அவர் தன்னை மதிக்கவில்லை. அது நன்கு தெரிகிறது என்று அவரிடம் கோபம் கொண்டான்.

அந்தக் கோபத்தை அவன் யாரிடம் எவ்விதம் காண்பிப்பான்? கோபாலையர் நிமிர்ந்து நோக்கிப் பேசினாலல்லவா, அவரிடம் தன் உணர்ச்சியைத் தெரிவித்துப் பேசவோ, காரியத்தில் காட்டவோ முடியும்? அவனுக்கு வந்த ஆத்திரத்தில் கோபாலையரை மட்டும் அல்ல, அவர்கள் வீட்டில் எல்லாரையும் ஒன்று சேர்த்து மீனாவிடம் தனிமையில் கண்டபடி வைது தீர்த்தான்.

## 23
# அழகுக்கு உவமை

கோடை விடுமுறைக்கு நாராயணனும் தர்மராஜுவும் பட்டணத்திலிருந்து மதுரை வந்திருந்தார்கள். தன்னோடு சில தினங்கள் தங்கி, பிறகு கிராமத்துக்குச் செல்லலாமென்று நாராயணன் தர்மராஜுவைத் தன்னோடு வீட்டில் நிறுத்திக் கொண்டான். அவனும் மகாலக்ஷ்மியுடன் வேட்டகத்துக்குப் போவானாதலால் நண்பர்கள் இருவரும் ஒன்றுசேர்ந்தே போகலாமென்று ஓர் உத்தேசம் இருந்தது.

மாப்பிள்ளை கோவிந்தராஜனைக் கூட அழைத்துவரும்படி நாராயணனுக்கும், கட்டாயம் வரும்படி கோவிந்தராஜனுக்கும் தனித்தனியே அம்மாஞ்சி கடிதம் போட்டிருந்தும், அவன் இல்லாமலேதான் நாராயணன் வந்திருந்தான். ''ஏண்டா, மாப்பிள்ளை வரவில்லையா?'' என்று தர்மாம்பாளும் அம்மாஞ்சியும் கேட்டதற்கு, ''அவன் நேராக ஊர் போக வேண்டுமாம். வர முடியாதாம். சொல்லிவிட்டான்'' என்றான் நாராயணன்.

"மதுரை தாண்டித்தானே திருநெல்வேலி போகவேண்டும்? வழியில் பத்து நாள் இருந்துவிட்டுப் போகப்படாதா? நீ சொல்லலையோ?" என்ருள் தர்மாம்பாள்.

"நான் சொன்னுல் அவன் கேட்டால்தானே? அம்மா நேராக வரும்படி கடிதம் போட்டிருக்காளாம். அப்பா எதிர் பார்ப்பாராம். அப்புறம் என்ன பண்ணுகிறது?" என்ருன் நாராயணன்.

"நான் கடிதம் போடலையா? அதற்கு ஒன்றும் மதிப்புக் கிடையாதா?" என்ருர் அம்மாஞ்சி.

"அவன் நம்முடன் சகஜமாக இருக்கிறவன் இல்லை அப்பா. அதனுலேயே அவன் வரவில்லை" என்ருன் நாராயணன். 'ஒருவர் வீட்டுப் பெண்ணை மணந்துகொண்டுவிட்டு, பிறகு அவர்களிடம் சகஜமாயில்லாமல் இருப்பது என்பது உண்டா?' என்று அம்மாஞ்சி தாமே வியந்துகொண்டார். கலகலப்பு மனுஷ்யரான அவருக்கு இந்தப் போக்கு விநோதமாக இருந்தது.

தர்மாம்பாளுக்கு நாராயணனிடம் கோபம் வந்தது. "எப்படியாவது அழைத்து வருவானு? அவன் வரவில்லை என்று சொல்லிக் கவலையற்றுத் தர்மராஜுவை இழுத்து வந்து நிற்கிருனே. ஒத்த வயசுப்பிள்ளை; ஒருமுறைக்கு இரு முறை யாக வற்புறுத்திக் கூப்பிட்டால் வராமல் இருப்பானு? அவ்வளவு தான் இவன் அக்கறை" என்று குறை கூறினுள்.

தர்மராஜு நல்ல பிள்ளை என்பதாக அவனிடம் அவளுக்குப் பிரியந்தான். நாராயணனுடைய நண்பன் என்பதால் அவனை ஜாதி வித்தியாசம் பாராமல் வீட்டுப்பிள்ளையைப் போலவே நடத்திவந்தாள். இருந்தும் இப்போது மாப்பிள்ளை இல்லாமல் அவன் வந்திருப்பது அவளுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. ஒரு வேளை இவன் வரப்போவது தெரிந்துதான் மாப்பிள்ளை வர மறுத்துவிட்டானே என்றுகூட அவள் சந்தேகித்தாள். 'அவனை எதற்காக நிறுத்தி வைத்துக்கொண்டு இந்தச் சிராட்டல் இப்போது? அவனேடு ஹாஸ்டலில் முழுக்க முழுக்க இருந்தானே: போதாதா? இன்னும் கூடவே இருக்க ஆசையாக இருந்தால் இவனும் கிராமத்துக்குப் போகட்டுமே. இவனுக்கும் தங்கி யிருக்கக் கிராமத்தில் வேட்டகந்தான் இருக்கிறதே!' இவ்வாறு அவளுக்குப் பிள்ளையினிடத்தில் விதம் விதமாகத் தவறு தோன்றிக்கொண் டிருந்தது.

ஞானத்துக்கும் கணவன் வராதது பெருத்த ஏமாற்றந் தான். அவள் அவனுக்கு யாரும் அறியாமல் கடிதம் வேறு போட்டிருந்தாள். அவனைப் பார்க்கத் தனக்கு இருக்கும் ஆவலை யெல்லாம் தெரிவித்திருந்தாள். 'அண்ணு எதற்காக வனுக் கட்டாயப்படுத்தி அழைத்து வருவது? நம்முடைய அன்பழைப் புக்கு அவராக வரவேண்டாமா?' என்று அவளுக்கு இருந்தது. இது விஷயத்தில் தாயைப்போல் சகோதரனைக் குறை கூற அவளுக்கு மனம் இல்லை. அவள் கணவனுக்குத் தானுகவே அவளைப் பார்க்க ஆசை இல்லாவிட்டால் பிறர் எதற்காகக் கட்டாயப்படுத்துவது? கட்டாயத்தின் பேரில் ஏற்படும் அன்பும் அன்பாகுமா? மகாலக்ஷ்மி அழைத்திருந்தால் நாராயணன் போகாமல் இருப்பானு? அதற்குத் தடை செய்கிறவர்கள் யாரா யிருந்தாலும் அவர்களிடம் அவனுக்குச் சினம் மூண்டு எழாதா? ''அம்மா நேராக வரச்சொல்லுகிருள், போகிறேன்'' என்று அதற்கு ஒரு வருத்தமும் தெரிவியாமல் சாதாரணமாக எழுது கிருரே.' - இவ்விதம் எண்ணிப் பெருத்த மனத்தாங்கலாக இருந்தது அவளுக்கு.

மகாலக்ஷ்மிதான் நாராயணன் வருகைக்கு வேறுவித எண்ணங்களின்றிச் சந்தோஷப்பட்டவள். கோவிந்தராஜன் வராததைக் குறித்து அவளுக்குப் பெரிதாக ஒன்றும் தோன்ற வில்லை. அவள் இப்போது எவ்வளவோ தெரிந்துகொண் டிருக் கிருள். முன்போல ஒன்றும் அறியாத கிராமத்துப் பெண் அல்ல அவள். வயசு வேறு, கணவன், காதல் இவைகளை அவளுக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறது. கணவனிடத்தில் இப்போது அவளுக்குத் தனி ஆசையும் அன்பும் பொங்கித் ததும்புகின்றன. அவன் இஷ்டம் எதுவோ அதன்படி நடக்கத் தயாராயிருந்தாள். அவன் அவளை மேலும் படிக்கவேண்டுமென்று நினைத்தால் அவள் படிப்பாள். வேண்டாமென்ருல் நிறுத்திவிடுவாள். அவளைக் கைப்பிடித்து எங்கே அழைத்துச் சென்ருலும் ஒரு வார்த்தையும் மறுத்துக் கூருமல் உடன் செல்வாள். அதற்கு மாருக அவன் அவளைப் படி தாண்டாப் பத்தினியாக விட்டுக் குள்ளேயே அடைந்துகிடக்கும்படி சொன்னுலும் அப்படியே செய்வாள். அவன் தாய் தந்தையர்களிடம், பார்வதி பரமேசுவரர்களைப் போல அவளுக்கு விசேஷ பக்தி, விசுவாசம், அவன் விரும்பும் விதமெல்லாம் இருந்து அவனைத் திருப்தி செய்யப் பெரிதும் ஆசை கொண்டாள்.

முன்னெல்லாம் தர்மராஜுவிடம் வெட்கப்பட்டுத் தலை குனிந்திருப்பவள், இப்போது கணவன் விரும்புகிறுன் என்பதற்காக அவனுடன் சகஜமாகப் பேசிப் பழகினுள். கிராமத்தில் இருந்தபோது இருந்த அநாவசிய வெட்கமும் பயமும் அவளை விட்டு அவள் அறியாமலே எங்கோ சென்றுவிட்டன. 'நாமா அவ்வளவு அசடாக இருந்தோம்?' என்றுகூடச் சில சமயம் அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

எல்லா வகையிலும் அவள் பிறைச்சந்திரனைப்போல் வளர்ச்சி பெற்று வருவதைக் கண்டு நாராயணன் பூரித்துப் போனுன். அவன் தன் மனத்தில் கற்பனைசெய்த ஆசைநாயகியாகவே அவள் எல்லா விதத்திலும் ஆகிவந்தாள். மங்கைப் பருவத்தின் அடிப்படியில் காலை வைத்திருந்த அவள் சௌந்தரியம் மிகுந்த கவர்ச்சியை அளிப்பதாக இருந்தது. வண்டு போலச் சுழலும் கண்களால் அவள் அவனைப் பார்க்குந்தோறும் அவன் இருதயத்தையே அவை வலையிட்டு அவனிடம் இழுத்துச் செல்வதுபோல் இருந்தது. தந்தப் பாவையென அவள் உலாவி வரும்போது அவன் கண்கள் தாமாகவே அவளைப் பின்தொடர்ந்து என்ன முயன்றுலும் திருப்ப முடியாமல் அவள் அங்க அசைவுகளில் பதிந்து நின்றன. நிலவொளிபோன்ற அவள் முக காந்தி, கண்களையும் மனத்தையும் ஒருங்கே குளிரச் செய்தது.

ஞானமும் அழகிதான். பருமன் என்று தூஷணை சொல்ல முடியாத இரட்டை நாடிச் சரீரமும், குறுகுறுத்த கண்களும், பரந்த முகமும், சிவந்த மேனியும், கறுத்து அடர்ந்த கூந்தலும் உள்ளவள்தான். ஆனுலும் மகாலக்ஷ்மியின் தோற்றத்திலுள்ள மனேரம்யமான சௌந்தர்யத்துக்கு ஈடுபடுத்திக் கூற முடியுமா? மகாலக்ஷ்மியின் கடல்போல் நீண்டு அகன்ற கருவிழிகளின் சாந்தமான பார்வை மனச்சாந்தியோடு கூடின இன்பப் பெருக்கை அல்லவா பார்ப்பவர்களுக்கு அளிக்கிறது? அலைகடல் போல் அலைந்து கொந்தளிக்கும் இருதயமும், அந்தப் பார்வையால்தான் இழந்த நிதானத்தை அடைந்துவிடக்கூடும். அது துஷ்டர்களையும் கெட்ட நினைவை ஒழித்து நல்வழிப் படுத்திவிடுமென்று தோன்றியது.

தங்களை விசேஷமாக நிலைக்கண்ணுடிமுன் நின்று பார்த்துப் பார்த்து அலங்கரித்துக்கொள்ளும் சாமர்த்தியம் பெண்களுக்கே உரியது. அந்த இயல்பு அவளுக்கும் இருக்கக்கூடும் என்றுலும், தன் அழகையே சதா நினைத்துச் செருக்குற்றிருப்பவளாக அவள்

காணப்படவில்லை. தான் அழகாயிருக்கிறோம் என்பதை அவள் அறிந்திருப்பதாகக்கூட அவள் நடந்துகொண்ட மாதிரியில் பிறர் அறிய முடியவில்லை.

தர்மராஜுவும் அந்தச் சௌந்தர்யத்தின் சக்தியை உணராமல் இல்லை. அவள் சாதாரணக் குடும்பத்துப் பெண்ணாகத் தோன்றாமல் அவன் படித்திருக்கும் புத்தகங்களில் உள்ள கதாநாயகிகளைத்தான் அவனுக்கு நினைவூட்டினாள்.

நாராயணனிடத்தில் இதைச் சொன்னபோது, ''நீ பெரிய ரசிகன் அப்பா!'' என்று விளையாட்டாகச் சொன்னான்.

''நான் வெறும் வார்த்தைக்குச் சொல்லவில்லை. நிஜமாகவே மகாலக்ஷ்மியைக் கிட்டத்தில் பார்க்கப் பார்க்க, 'கிங் லியரி'ல் வரும் 'கார்டீலியா'வின் நினைவுதான் மேலோங்குகிறது. கதையில் கார்டீலியாவின் குணந்தான் எவ்வளவு உயர்வானது! தந்தையின் அசட்டுக் கோபத்துக்காகவும் அவள் தன் நேர்மையான உணர்ச்சிகளை மாற்றிச் சொல்லவில்லை. உன் மனைவியையும் அது மாதிரியான சந்தர்ப்பமொன்றில் வைத்தால் அவ்வாறே நடந்துகொள்வாளென்று எனக்குத் தோன்றுகிறது'' என்றான் தர்மராஜு.

''அட, எவ்வளவு பெரிய புகழ்மாலையப்பா! மகாலக்ஷ்மியால் தாங்கி ஏற்கமுடியும் போல் தோன்றவில்லையே! அவளிடம் உடனே சொல்ல வேண்டாமா, இந்த ரசிகன் அவளுக்கு அளிக்கும் உன்னத ஸ்தானத்தை? ஆங்கிலக் கவிச்சக்கரவர்த்தியின் உயர்ந்த சிருஷ்டி ஒன்றோடல்லவா ஒப்பிட்டுவிட்டான்?'' என்றான் நாராயணன், சிநேகிதனைப் பரிகசிக்கும் தோரணையில்.

ஆனால் சிநேகிதன் அப்படி நினைத்துக் கூறினது உண்மையில் அவனுக்கும் சரியானதாகத் தோன்றிச் சந்தோஷத்தையே கொடுத்தது. அந்த உத்ஸாகத்தில் அவன், மகாலக்ஷ்மியும் ஞானமும் இருந்த அறைக்கு நண்பனை இழுத்துச் சென்று, ''இந்தப் புலவனுடைய வர்ணனைகளைக் கேட்டீர்களா? புத்தகத்தில் வரும் கதாநாயகியாக மகாலக்ஷ்மியை ஆக்கத் துணிந்துவிட்டான்'' என்று கூறிக்கொண்டே, ''அது சரிதானப்பா, மகாலக்ஷ்மியைத்தான் கார்டீலியா என்று சொல்லிவிட்டாய். ஞானத்துக்கு உவமை கூற யாரும் இல்லையா?'' என்றான் நண்பனைப் பார்த்து.

''நீ ஒன்றும் என்னைப் பரிகசிக்க வேண்டாம். கவிகளும் தாங்களாக ஒன்றையும் கற்பித்து விடவில்லை. உலக சிருஷ்டி

யில் உள்ளவைகளைத்தான் சித்திரித்துக் காண்பிக்கிறார்கள்: இல்லாததைக் கற்பிக்க அந்தக் கவிகளுக்கும் சக்தி கிடையா தாக்கும்'' என்றான் தர்மராஜு.

''நான்தான் நீ சொல்வதை ஒப்புக்கொண்டு விட்டேனே. அப்புறம் என்ன? ஆகையினால்தான் ஞானம் எந்தப் பாத்திர மாக வருகிறாள் என்று கேட்கிறேன்?'' என்றான் நாராயணன் விடாமல்.

''ஞானமா? அவளைக் 'காளரில்' என்று சொல்லக் கூடாதா? அவளுடைய சாமர்த்தியம் இவளுக்கும் இருக்கிறது அல்லவா?'' என்று ஞானத்தைப் பார்த்துக்கொண்டே சொன்னான் தர்மராஜு.

''என்னவோ அப்பா, உனக்குத்தான் குண வர்ணனை தெரிகிறது; நீ சொன்னால் சரிதான்'' என்று விளையாட் டாகவே அதை ஏற்கும் பாவனையில் சொன்னான்.

அந்தப் பெண்களும் சுருக்கி எழுதப்பட்டிருக்கும் ஷேக்ஸ் பியரின் நாடகங்களைப் படித்திருக்கிறார்களாகையால் அவர்கள் சொல்லும் கதாநாயகிகளைத் தெரிந்துகொண் டிருந்தார்கள். ''அது கிடக்கட்டும், அண்ணா! (அவர்கள் அவனை அவ்விதந் தான் அழைத்தார்கள்.) உங்களுக்குப் பிடித்த கதாநாயகி யார்? நீங்கள் மணக்கப்போகும் பெண் யார் மாதிரி இருக்க வேண்டும்? அதைச் சொல்லுங்கள்'' என்று இருவரும் சேர்ந்து கேட்டார்கள்.

''பார்த்தாயா? பெண்களுக்குத்தான் சரியானபடி கேட்கத் தெரிகிறது. வாஸ்தவத்தில் உன் மனைவி எப்படி இருக்க வேண்டும்? அதைக் கேட்கவே நான் மறந்து போனேன். முதலில் அதைச் சொல்லப்பா?'' என்றான் நாராயணன்.

''எனக்குப் பிடித்தவளா? முதலில் நான் மணப்பதாக இருந்தாலல்லவா அதைப்பற்றிச் சிந்திக்க?''

''அதென்ன அண்ணா, அவ்வளவு விரக்தி?'' என்றாள் ஞானம்.

''விரக்தியோ அல்லது அவன் மனோராஜ்யத்தின் ராணி புவியில் கிட்டமாட்டாள் என்கிற எண்ணமோ?'' என்றான் நாராயணன்.

''அப்படிக் கிட்ட முடியாத அழகியைத்தான் வருணிக் கட்டுமே; நாங்கள் காதால் கேட்கிறோம்; கிடைப்பாளா மாட்டாளா என்கிறதையும் பார்க்கிறோம்'' என்றாள் மகாலக்ஷ்மி.

"அடே, அப்பா! உங்களுக்குத்தான் என்ன வேகம்? நான் விவாகமே செய்துகொள்ளப் போவதில்லை யென்ருல், நான் மணக்க விரும்பும் பெண்ணைப்பற்றி நீங்கள் எவ்விதம் தெரிந்து கொள்ள முடியும்?" என்ருன் தர்மராஜா.

"ஏன் அப்படி? அதற்குக் காரணம் வேண்டாமா?" என்று அவர்கள் மூவரும் சேர்ந்து கேட்டார்கள்.

"என் படிப்பு முடிந்ததும் நான் ஏற்றுக்கொள்ளப்போகும் கிருகஸ்தாசிரமம், தேச சேவைதான். அதற்கும், மனைவி மக்களுக்கும் வெகு தூரம் அல்லவா? ஒருவன் இரண்டில் ஒன்றைத்தானே ஏற்க முடியும்?" என்ருன் தர்மராஜா.

"தூரமாவது! யார் சொன்னது? அவர்களும் பக்கத் துணையாகவன்ருே பாடு படுகிருர்கள்? நம் தலைவர்களின் மனைவிகளையும், பிள்ளை பெண்களையும் என்னவென்று சொல்வது?" என்ருன் நாராயணன்.

"அது மாதிரி எல்லாப் பெண்மணிகளாலும் இருக்க முடியுமா? அதிலும் எங்கள் ஜாதியில் பெண்கள் மிகவும் பிற் போக்காக இருப்பவர்கள். அரச வம்சத்தைச் சேர்ந்தவர்க ளென்று சொல்லிக்கொண்டு இன்னும் கோஷாவே நீங்காமல் பாதுகாப்புப் பண்டமாக இருக்கிருர்கள். அவர்களுக்குப் படிப் பும் இல்லை. அவர்களிடம் இது மாதிரியான முன்னேற்றத்தை எதிர்பார்க்க முடியாது."

"இது ஒரு காரணம் ஆகுமா, நீ விவாகம் வேண்டா மென்பதற்கு? நீ மணந்துகொண்டு உன் மனைவிக்குக் கல்வி புகட்டி முன்னுக்குக் கொண்டுவாயேன். உன் இஷ்டம்போல் உன் மனைவியை இருக்கச் செய்ய உனக்குச் சுதந்தரம் கிடையாதா?" என்ருன் நாராயணன்.

"நீ உங்கள் ஜாதிப் பெண்களை நினைத்துப் பேசுகிருய். அவர்கள் பள்ளி சென்று தனியே வித்தை பயிலாவிட்டாலும், வீட்டில் ஸம்ஸ்காரங்களோடு கூடின பெரியவர்களின் பரா மரிப்பில் வளர்வதால் சுபாவமாகவே சில விஷயங்களை அறிந் திருக்கிருர்கள். புது நாகரிகமும் அதன் போக்கில் உள்ளவை களும் தெரியாவிட்டாலும், பழைய ஆசாரங்களும், அதன் பண்பும் நன்கு தெரிந்திருக்கும். எங்கள் பெண்கள் அவ்வகை யான அறிவுக்கு எங்கே போவார்கள்? எங்கள் ஆண் பிள்ளை களுக்கே ஒன்றும் தெரியாதே. அப்புறமன்ருே பெண்களைப் பற்றிப் பேச? இப்போது சிறிது காலமாகத்தான் உத்தியோகம்

வேண்டி ஆங்கிலக் கல்வியாவது பயிலுகிறார்கள். இதற்கு முன் அவர்களுக்குப் படிப்பு ஏது?''

''போடா போ; நீ விவாகத்தை வெறுப்பதற்குப் போதுமான காரணமாக இது எனக்குத் தோன்றவில்லை.''

''எங்களில் தேசத்தொண்டு செய்பவர்களின் மனைவிகளை நீ பார்த்தால் அப்போது சொல்லுவாய். கணவன்மார் எதற்காகத் தடி அடியும் சிறைவாசமும் அநுபவிக்கிறார்கள் என்று அவர்களுக்குத் தெரியாது; சொன்னாலும் புரிந்துகொள்ளும் சக்தி இல்லை. 'ஏதோ கணவன் வீட்டோடிருந்து சுகமாயிராமல், அலைந்து துன்புறுகிறான். இந்தக் காந்தி ஒருவன் கிளம்பி தங்களுடைய ஐக்கிய தாம்பத்திய வாழ்க்கையைப் பாழ் பண்ணுகிறான்.' இதுதான் அவர்கள் அறிந்திருப்பது. அதற்காக அந்த மகானை வாயில் வந்தபடி திட்டுவதுதவிர அவர்களுக்கு வேறொன்றும் தெரியாது. அது மாதிரி எனக்கும் ஒரு மனைவி ஏற்பட்டு மகாத்மாவை வைய வேண்டுமென்று விரும்புகிறாயா?'' என்றான் தர்மராஜு. அவனுக்குத் தங்கள் இனத்துப் பெண்மணிகளின் நிலைமையைக் குறித்து மிகுந்த மனவருத்தம் இருந்தது.

''பொதுவாக உங்கள் பெண்கள் எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும். நீங்கள் மணம் செய்துகொண்டு உங்கள் மனைவியை எங்களிடம் அழைத்து வந்துவிடுங்கள். நாங்கள் அவளுக்கு எல்லாம் கற்றுக் கொடுத்துவிடுகிறோம்'' என்றாள் ஞானம். நாட்டுப்புறத்துப் பெண்ணாக இருந்த மகாலக்ஷ்மிக்கு அவள் எவ்வளவோ கற்றுக் கொடுத்துத் தயார் செய்திருக்கிறாள். அந்த எண்ணம் அவளுக்கு இருந்தது.

''ஓகோ, நீங்கள் எல்லாம் தெரிந்து கரைகண்டு விட்டதாக எண்ணமாக்கும்!'' என்று நாராயணன் பரிகாசமாகக் கூறினான்.

''கரையைக் காணாவிட்டால் என்னவாம்? எங்களுக்குத் தெரிந்த அளவுக்கு அவளையும் எங்களில் ஒருத்தியாகச் செய்கிறோமே'' என்று ஞானம் விட்டுக்கொடுக்காமல் பதில் சொன்னாள்.

''நம் ஊருக்குப் போனால், நான் உங்களுக்குப் பெண் பார்த்துத் தகுந்தவளாகப் பொறுக்கித் தருகிறேன்'' என்று உறுதி கூறினாள் மகாலக்ஷ்மி.

''இனி என்னடா? உன் பாடு யோகந்தான்! உனக்குப் பெண்ணைத் தேர்ந்தெடுத்துச் சரியானபடி பழக்கியும் கொடுத்து

விடுகிறார்கள் இவர்கள். நீ மனைவி வேண்டாமென்று இனிச் சொல்வதற்கில்லை'' என்றான் நாராயணன்.

''ஆமாம், இவர்கள் எனக்காக இவ்வளவும் செய்வதா யிருக்கும்போது, நான் தட்டமுடியுமா? உங்கள் சொல்படி நான் மணம் செய்துகொண்டு என் மனைவியை உங்களிடம் கொண்டு வந்துவிடுகிறேன். நீங்கள் அவளை உங்களைப்போல் செய்து விடுங்கள்'' என்றான் அவன்.

இதுமாதிரி பேச்சுச் சுவாரசியத்தில் விளக்கேற்றும் வரைக்கும் இருந்த அவர்கள் இருட்டிவிட்டதைக் கவனிக்க வில்லை.

''அம்மாஞ்சி மன்னி, உங்களெல்லோரையும் வையரா: சந்தியா காலத்திலே கை கால் அலம்பிப் பூஜை உள்ளுக்கு விளக்கு ஏத்தாமே, புருஷப் பிள்ளைகளோடு என்ன பேச்சு இந்தப் பெண்களுக்குன்னு, ஞானத்தையும், மகாலக்ஷ்மி அக்காவையும் கோவிக்கக்கரா'' என்று சொல்லிக்கொண்டே பாலு உள்ளே ஓடி வந்தான்.

''ஐயோ, மறந்தே போயிட்டேனே!'' என்று பரபரப்போடு உள்ளே எழுந்து சென்றாள் மகாலக்ஷ்மி; மாமியார் சொல்லும்படி வைத்துக்கொண்டோமே என்கிற வருத்தம் அவளுக்கு.

''இது சொல்ல மட்டும் நீ எங்கிருந்தடா வந்தே? இத்தனை நாழி எங்கே திரிஞ்சுண்டிருந்தே?'' என்று நாராயணன் பாலுவிடம் சற்றுக் கோபமாகச் சொன்னான்.

''வாசல்லேதான் பம்பரம் விளையாடிண்டிருந்தேன். ஊரிலிருந்து கணபதி மாமா வந்திருக்கா; அம்மாஞ்சி மாமாவை அவசரமாகப் பார்க்கணுமாம். மாமா இன்னும் ஆபீஸிலிருந்து வரல்லே. 'நாராயணன் என்ன பண்ணறான்? வெட்டி வம்பளந்துண்டு; வந்தவரை விசாரிக்கப்படாதா'ன்னு அம்மாஞ்சி மன்னி'' என்று பாலு தர்மாம்பாளின் கோபத்தைக் குறிக்கும் இன்னொரு சொல்லையும் சொல்லிவைத்தான்.

''ஆமாண்டா, சரிதான்; எல்லாம் தெரியும்; சும்மா இரு'' என்று அவனை அதட்டிவிட்டு, ''அவரெங்கே இப்போ வந்தார்? அதுவும் அப்பாவைப் பார்ப்பதற்கு. அவர் பிள்ளை சுப்புணி ஏதாவது தப்புத் தண்டாவிலே மாட்டிண்டுட்டானோ?'' என்று சொல்லிக்கொண்டே நாராயணன் அவசரமாக எழுந்தான்.

''ஆமாம், அத்திம்பேரோடே அண்ணா சுப்புணியைப் போலீசிலே பிடிச்சுண்டு போயிருக்காளாம். அதுதான் ஏதோ

பெரிசா வருத்தப்பட்டு அம்மாஞ்சிமன்னி கிட்டே சொல்லிண்டிருந்தார்'' என்றான் பாலு.

''அது மாதிரிதான் ஏதோ வரும்னு எனக்குத் தெரியும்'' என்று நாராயணனும் தர்மராஜுவைப் பார்த்துச் சொல்ல, இருவரும் எழுந்து வந்திருப்பவரை விசாரிக்கச் சென்றார்கள்.

தர்மாம்பாள் கோபித்துக்கொண்டதாகப் பாலு சொன்ன சொற்கள் தர்மராஜுவின் மனத்தை உறுத்தின. போகும் போதே, 'நாம் அந்தப் பெண்களிடம் அதிகமாகப் பேசி இருந்து விட்டோமோ? அது ஒருகால் நாராயணனின் தாய்க்குப் பிடிக்க வில்லையோ?' என்கிற சந்தேகம் அவனைப் பலமாகத் தாக்கத் தொடங்கிற்று.

உண்மையில் அந்தப் பெண்களின் தோற்றத்திலும் பேச்சிலும் அவனுக்கு ஒரு கவர்ச்சி ஏற்படத்தான் ஏற்பட்டது. அது ஒருகால் தவறோ என்று அவன் மனத்தினுள்ளே ஆராயத் தொடங்கினான்.

# 24
# வாதமும் பிரதிவாதமும்

கணபதி சாஸ்திரியிடமிருந்து சமாசாரம் தெரிந்து கொண்டபோது நாராயணனுக்கும் தர்மராஜுவுக்கும் மிகுந்த வேடிக்கையாகத்தான் இருந்தது. 'பெரிய பெரிய மகாநாடுகளுக்கு எதிரொலி மகாநாடு என்று தங்கள் தங்கள் ஊரில் சிறு சிறு கூட்டம் நடத்துகிறார்களே; அதுபோலப் பெரிய கோவிலான மீனாக்ஷியம்மனின் ஆலயப் பிரவேசத்துக்கு எதிரொலிப் பிரவேசமா இது? வெகு அழகு! யாருக்குப் பொழுது போகாமல் இதுமாதிரி கிராமத்தில் சண்டை சச்சரவுகளை வரவழைக் கிறார்கள்?' என்று நினைத்தார்கள்.

''எல்லாம் உங்களூர் ரங்கராஜனைச் சேர்ந்தவர்களின் காரியந்தான் அப்பா'' என்று தர்மராஜுவிடம் குறை கூறினார், கணபதி சாஸ்திரி: 'எல்லாம் உன் போன்றவர்களால் வரும் தொல்லைதான்' என்று தர்மராஜுவையே தப்புச் சொல்வது போல் இருந்தது அது.

''எதுவானாலும், சுப்புணி இதில் எப்படி மாட்டிக் கொண்டான்? கோவிலையும் சாமியையும்பற்றி அவனுக்கு எங்கிருந்து அக்கறை அவ்வளவு திடீரென்று வந்தது?'' என்று

நாராயணன் கேட்டதற்கு, "என்னவோ, போதாத காலந்தான் போயேன். நம்ம ஊர்க் கோவிலேன்னு தோணியிருக்கு; நாலு பசங்களோடே சேருகிற உத்ஸாகம் வேறே. வரவன்கள் வந்தூட்டுப் போகட்டும், நாம் சம்புரோக்ஷணம் செய்துகொள்ள லாம்னு சொல்லி, ஊரெல்லாம் ஏற்பாடா நான் வச்சிருந்தேன். இவன் என்னடான்னு எங்கேயோ கிளம்பியிருக்கான். எனக்கே தெரியாது. இப்போ அகப்பட்டுண்டு முழிக்கிறது" என்றார் கணபதி சாஸ்திரி.

"பிற்பாடு சம்பிரோக்ஷணம் செய்கிறது என்கிறேனே, அதென்ன? அது மாதிரி செய்வது சரியே அல்ல; பள்ளர்களைக் கோவிலுக்குள் அழைத்து வந்ததன் முக்கியத்வமெல்லாம் போய் விடாதா? ஈசுவரனைத் தொழ அவர்களுக்கும் உரிமை உண்டு என்று காண்பிக்கிறது போக, பின்னும் மோசமாக அல்லவா ஆகி விடுகிறது விஷயம்? அவர்கள் தாழ்ந்தவர்கள் என்று வற் புறுத்திக் காண்பிக்கிற மாதிரின்னு ஆகிறது, அவர்களை உள்ளே விட்டதற்காகச் சம்புரோக்ஷணம் பண்ணுவது? இதைக்காட்டி லும் என்றும் போலச் சும்மா இருக்கலாமே" என்றான் நாராயணன்.

"பின்னே என்னப்பா செய்கிறது, இப்படி அநியாயம் நடந்தா? நமக்கோ எதிர்த்துச் சண்டைபோட முடியாது. இது மாதிரி சமாதானமாகத்தான் செஞ்சுண்டு போயாகணும், நமது சாஸ்திரத்தை மீறப்படாதூன்னு பார்த்தா" என்றார் கணபதி சாஸ்திரி.

"நமது சாஸ்திரம் என்ன சொல்லுகிறது? நம்மவர்களையே விலக்கச் சொல்லியா?" என்றான் நாராயணன்.

"சண்டாளனாப் பிறந்தா விலக்கித்தானே ஆகணும்? என்ன பண்ணறது? என்னவோ இந்த ஜன்மத்திலே நேர்மையா இருந் தான்னா வருகிற ஜன்மத்திலாவது கடைத்தேற வழி உண்டாக லாம். அதை விட்டுவிட்டு இப்படி வீணாப் போறான்கள்" என்றார் கணபதி சாஸ்திரி, அவர்களுக்காக வருந்திக்கொண்டு.

"சண்டாளன்னு ஒரு ஜாதியா? அவரவர்கள் செய்கையினால் தான் பிராமணனும் சண்டாளனும் ஏற்படுகிறார்கள் என்று வேதமே கூறுகிறதாகச் சொல்லுகிறார்களே" என்றான் தர்மராஜு நடுவில்.

"அதெல்லாம் இப்போது மத்த ஜாதியானெல்லாம் ஸம்ஸ் கிருதம் படிச்சு வேதத்துக்கு அர்த்தம் பண்ணுகிற குதர்க்க

மப்பா. பிராமணனைத் தவிர அந்தத் தேவபாஷையை வேறொருவன் படிக்கப்படாதுன்னு சொல்லி இருக்கு. அதை எவன் கேட்கிறான்? இந்தக் காலத்தில் எல்லாரும் படிச்சுத் தோணின அர்த்தம் பண்ணிக் குட்டிச்சுவராக அடிக்கிறான்கள்'' என்றார் கணபதி சாஸ்திரி. அவர் குரலில் சற்று ஆத்திரம் தொனித்தது.

''அது சரி, அண்ணா. பிராமணன்தான் படிக்கணும் என்கிறீரே. என்னைப்போல் ஆங்கிலம் பயில்பவனை விட்டு விடுங்கள். நீங்கள் படிச்சிருக்கேளா?'' என்று ஒரு கேள்வி போட்டான் நாராயணன்.

''ஏதோ கொஞ்சம் பார்த்துத்தான் இருக்கிறேன். முழுக்க யார் படிச்சிருக்கா? அது அவ்வளவு சுலபமா?'' என்றார் கணபதி சாஸ்திரி.

''அப்பவானா உங்களுக்கு அதைப்பற்றிப் பேச என்ன வாய் இருக்கு? முழுதும் படிச்சிருந்தான்னா அதுலே சொல்லியிருக்கிறது சரியாகத் தெரியும்?'' என்றான் நாராயணன்.

''நாமே படிக்கணுமா? பெரியவாள் சொன்னாப் போராதோ?''

''பெரியவாள் அவா சௌகர்யத்துக்கு ஏற்றபடி சொல்லி யிருந்தா?'' என்றான் நாராயணன், அவருடன் கட்சியாடும் எண்ணத்தில்.

''சிவ சிவ! நன்னாருக்கு உன் விதண்டாவாதம்! அப்போ, வேதமே அந்தக் காலத்துக்குத் தகுந்தபடி எழுதினதுன்னு சொல்லுவேபோல இருக்கே'' என்றார் கணபதி சாஸ்திரி. அவருக்குத் தாம் வந்த காரியத்தின் நினைவில் இதுமாதிரி பேச்சுக்கள் பேசக்கூடப் பிடிக்கவில்லை. என்னடா இவர்கள் சும்மா இராமல் வம்புக்கு இழுக்கிறார்களே என்று இருந்தது.

''அப்படியும் சொல்லக்கூடியதுதான். அப்போது நமது நாடு இருந்த நிலைமைக்குத் தகுந்தபடி சில விஷயங்கள் சொல்லியும் இருக்கும்; யார் கண்டது?'' என்றான் நாராயணன்.

''வேதத்தைப் போய் அது மாதிரியெல்லாம் பேசாதே. மகா பாபம். அது ஈசுவரனைப்போல் அநாதியானது. அது ஏற்பட்ட காலமே ஒருவருக்கும் தெரியாது. ஈசுவரன் முதலா? வேதம் முதலா? அதையே அறிந்தவர்கள் இல்லை. எதுவோ அது கிடந்தாட்டுப் போறது. அப்பா எப்போ வருவார், தெரியுமா? இப்போது நமக்குள்ளே விவாதம் எதுக்கு?'' என்றார்

கணபதி சாஸ்திரி: அவருக்குத் தம் பிள்ளையைப்பற்றின கவலையில் இது மாதிரி பேச்சுக்களைத் தொடர்ந்து பேசக்கூட மனம் செல்லவில்லை. அதை அறிந்துகொண்ட நாராயணனும், "அப்பவானு அர்த்தம் பண்ணுகிறவாதான், அந்த அந்தக் காலத்தை ஒட்டி அர்த்தம் பண்ணி வருகிறார்கள் என்று தோன்றுகிறது. இல்லாவிட்டால், மூக்கைப் பிடிச்சுண்டு வீட்டோடு சாஸ்திரம் ஓதிண்டிருக்கவேண்டிய பிராமணன், நீச பாஷையைக் கத்துண்டு, 'ஹாட்டும் பூட்டும்' போட்டுண்டு வெளியே கிளம்பி, இதோ எங்கப்பாவைப்போல் போலீசு உத்தியோகம் பண்ணுவனு?" என்று, போலீஸ் உடையுடன் உள் நுழையும் தந்தையைப் பார்த்துக்கொண்டே விளையாட்டாகச் சொன்னான்.

"யாரு, வெங்கிட்டுவா? வாப்பா. உனக்காகத்தான் காத்திருக்கேன். உன் பிள்ளை ஏதோ உத்தியோகம் பண்ணுவதைப் பத்தியே தர்க்கம் பண்றான். எதுவானாலும் நீ இப்போ டிப்டி சூபரிண்டெண்டா யிருப்பது என் நல்ல காலம்" என்று கணபதி சாஸ்திரி, அம்மாஞ்சியை வரவேற்றுக்கொண்டே சொன்னார். முன்பின் அறியாமல் அவர் வந்திருப்பது அம்மாஞ்சிக்கு ஆச்சரியமாக இருந்தது. வந்திருப்பவரை வரவேற்று க்ஷேம சமாசாரம் கேட்டுவிட்டு அவர் வந்த சங்கதியை விசாரிக்கத் தொடங்கினார் அம்மாஞ்சி. முழுதும் கேட்டுக்கொண்டதும் அவர் போலீஸ் பாணியில், "கூட்டம் எத்தனை மணிக்கு நடந்தது? யார் யார் வந்தார்கள்? என்ன என்ன நடந்தது? முதலில் வைதவர் யார், அடித்தவர் யார், அடி எவ்வளவு பலம்?" இது மாதிரி ஒவ்வொன்றாகப் பல கேள்விகள் அடுத்தடுத்துக் கேட்கத் தொடங்கிவிட்டார்.

கணபதி சாஸ்திரி பதில் சொல்ல முடியாமல் திணறிப் போனார். அவர் கலாட்டா நடந்த இடத்தில் இருக்கவில்லை; அதனால் விவரம் தெளிவாகத் தெரியவில்லை. மேலும் பிள்ளையின் பேரில் குற்றம் வரக்கூடாது என்னும் எண்ணத்தில் விஷயத்தைச் சொல்வதானால் உள்ளதை உள்ளபடியே சொல்ல முடியாது.

அவர் எப்படிச் சொல்வதென்று தவிக்கும் தவிப்பைக் கண்டு அம்மாஞ்சிக்கு உள்ளுக்குள் சிரிப்பு வந்தாலும் அதை வெளிக்காட்டாமல், "உங்களுக்குத் தெரிந்ததை அப்படியே சொல்லுங்கள்; பிறகு நான் பார்த்துக்கொள்ளுகிறேன்" என்று

தைரியப்படுத்திக் கேட்டுக் கொஞ்சம் கொஞ்சமாக ஒருவாறு நடந்தது முழுவதையும் தெரிந்துகொண்டார். 'கேசாகப் பதிவர்குமுன் அதை ஒரு விதமாகத் தீர்த்துச் சுப்புணியை அழைத்து வந்துவிட வேண்டும்; இல்லாவிட்டால் போலீஸ் கோர்ட்டுக்கும் வீட்டுக்கும் மாதக்கணக்கில் அலையவேண்டி வரும்; விசாரணைக்கும் சாட்சிகளுக்கும் தயார் செய்துகொண்டு, வீண் பணச் செலவு வேறு. மேலும் விஷயம் பகிரங்கமான பிறகு என்னைப் போன்ற போலீஸ் அதிகாரி போலீஸுக்கு எதிராக, வெளி மனிதர்களுக்காகத் தலையிடவும் முடியாது.' - இவ்வளவையும் சிந்தித்துக் காலதாமதம் செய்யாமல் உடனே தம்மிடம் வந்ததற்காகக் கணபதி சாஸ்திரியை மெச்சிவிட்டு அவரையும் அழைத்துக்கொண்டு உடனேயே சாத்தூர்ப் போலீஸ் ஸ்டேஷனை நோக்கித் தம் காரிலேயே கிளம்பிவிட்டார்.

''இரவுப் போஜனத்துக்கு எங்களுக்காகக் காத்திருக்க வேண்டாம். வர முடிந்தால்தான், இல்லாவிட்டால் காலையில் தான்'' என்றும் சொல்லிப் போய்விட்டார்.

பிறகு தர்மராஜுவும் நாராயணனும் தங்களுக்குள் விவாதிக்கத் தொடங்கினார்கள். 'கிராமங்களிலிருந்துதான் சீர்திருத்தங்களும் ஒற்றுமை உணர்ச்சியும் கிளம்பிப் பரவவேண்டும். அப்போதுதான் அவைகள் மாருமல் நிலைத்து நிற்கும்; வாஸ்தவம். ஆனால்! கிணற்றுத் தவளையாக உலக அறிவு அற்றிருக்கும் அவர்களுக்கு முதலில் அந்த அறிவைப் புகட்டி, பிறகன்றோ இத்தகைய சீர்திருத்தங்களை அமலுக்குக் கொண்டுவரப் பார்க்க வேண்டும்? நமது நாட்டின் அடிமை நிலையையும், நாடு சுதந்தரம் பெற நாம் ஒன்று சேரவேண்டியதன் அவசியத்தையும், அவர்கள் மனத்தில் தெளிவாகப் படுமாறு எடுத்துச் சொல்லி, அதற்கான காரியங்கள் இன்ன இன்னவை என்பதையும் அவர்கள் ஒப்புக்கொள்ளும் விதத்தில் சொல்லி, காரியங்கள் நடத்தினலல்லவா, அவர்களும் ஒன்று சேர்ந்து அதைச் செய்வார்கள்? எல்லோரும் ஒன்றுசேர்ந்து செய்யும் போது, அடிதடி, கலவரத்துக்கு ஆஸ்பதம் ஏது? அப்போது காந்தி மகானின் மனமும் நம் ஒற்றுமை இன்மையைக் கேட்டுப் புண்படாமல் இருக்கும். நம்மவர்கள் அவசரத்தில் கிளம்பிவிடுகிருர்கள். தாங்கள் தனியாக நாட்டுக்கு ஏதாவது செய்ய வேண்டும் என்கிற வேகத்தில், முழுதும் விஷயத்தைத உட்புகுந்து பாராமல் கிளம்பிவிடுகிருர்கள். அதன் பலன் விபரீதமாகிறது.

இவ்விதம் அவர்கள் எல்லாம் தெரிந்தவர்களாகப் பேசித் தீர்மானித்துக்கொண்டிருக்கும்போது, ''ஏண்டா, அப்பாதான் சாப்பாட்டுக்கு வரப்போவதில்லை. அவர் சோத்துலே மண்ணைப் போட என்னமாவது வந்துவிடுகிறது. நீங்களாவது காலத்துலே சாப்பிட்டுவிட்டுப் பிறகு பேசப்படாதோ?'' என்று தர்மாம்பாள் அவர்களைச் சாப்பிட அழைத்தாள்.

''அப்பா அநேகமாக ராத்திரியே திரும்பிவிடுவார் அம்மா. போலீஸுக் கேஸ் ஆகாமே பார்க்க வேணும்னு போனதும் காரியம் முடிஞ்சாகணுமே; அப்புறம் அங்கென்ன வேலை? உடனே புறப்பட்டால், கார்தானே? நாம் படுக்குமுன் கூட வந்துவிடலாம். போலீஸிலே மாட்டிண்ட அந்தப் பிருகஸ்பதியைப் பார்த்தூட்டுத் தூங்குவோம்'' என்றான் நாராயணன் விளையாட்டாக.

''எல்லாம் சரியானுத்தான் போச்சு. இல்லாதபோனு தாணம்மாள் உங்கப்பாவைத் தூத்தக் கிளம்பி விடுவா'' என்றாள் தர்மாம்பாள்.

''ஆமாம், இவா பிள்ளை இருக்கிற ஒழுங்குக்கு அது வேறேயா? போது போகாமே வலுச்சண்டையிலே மாட்டிண்டா, ஏதாவது பண்ண முடிஞ்சாத்தான் பண்ணுவாளா? இல்லாத போனாலும் பிராணனை விடுவாளா?'' என்றான் நாராயணன்.

''உனக்குத் தெரியாது. அவ பொல்லாத வம்புக்காரி. வெறுமனே என்னைக் கண்டா அவளுக்கு ஆகிறதில்லை. உத்தியோகஸ்தன் பெண்டாட்டின்னு நான் ராங்கியாக இருக்கிறதாகச் சுப்புவண்டே குத்தம் ஏத்திண்டு இருக்கா. பிள்ளை ஜெயிலுக்குப் போகாமே இவர் பார்த்துக்கலேன்னு மண்ணை வாரி இறைச்சுத் திட்டுவள்.''

''அதுக்கானு இவா பிள்ளை சும்மா இருக்கிறதுக்கு என்னவாம்? கூட்டம் கூடுகிற இடத்திலெல்லாம் தானும் ஒருவனாக நின்று சண்டை போடுவானேன்? கோவிலைப் பத்தி இவனுக்கு ரொம்ப அக்கறையாக்கும்!'' என்றான் நாராயணன் விடாமல்.

''இருந்தாலும் இந்தக் காங்கிரஸ்காரானும் இந்த அக்கிரமம் பண்ண வேண்டாம். கோவிலுக்குள்ளே பறையனை விட்டு இந்தக் காந்திக்குத்தான் என்ன மோக்ஷம் கிடைக்கப் போறது? ஏற்கனவே நம் ஜாதி கெட்டுப் போச்சு. பிராமணனிடம் மத்த ஜாதியானுக்கும் மதிப்புப் போச்சு. சுயராஜ்யம்

வரத்துக்குன்னு இன்னதுதான் செய்கிறதுங்கறது கிடையாதா? ஜாதி விட்டு ஜாதி கல்யாணமும், கோவிலுக்குள்ளே பறையனை விட்டுத் தீட்டா அடிக்கறதும் சுயராஜ்யத்துக்கு என்ன அவசியம்?" என்று ஆலயப் பிரவேசத்தை நிந்திக்கத் தொடங்கினுள் தர்மாம்பாள்.

"அம்மா, எனக்குத் தெரியாது. எவ்வளவோ யோசித்துத் தான் இந்தச் சீர்திருத்தம் ஆரம்பமாயிருக்கிறது. அந்நிய ஆட்சி ஏற்படுவதற்கு முந்தி ஏற்பட்ட சாஸ்திரம், இந்த ஜாதி வித்தியாசம். பாபம் செய்தவன் ஏழேழு ஜன்மத்துக்குக் கடைத் தேற மாட்டான். அவன் வம்ச பரம்பரையாகத் தாழ்வாகப் போய்விடுகிறுன். அவனுக்கு நமது சாமியிடமும், நம் மதத்துக் குள்ளும் இடம் கிடையாது. இது மாதிரி, பெருந் தவறுகள் பண்ணுமல் இருக்கவேண்டி பயமுறுத்தி வைத்திருந்தார்கள். இப்போது இதர தேசங்களிலிருந்து வேறு மதத்தவர்கள் வந்து, நமது அரசையும் கைப்பற்றின பிறகு அந்தப் பழைய ஆசாரத் தையே விடாமல் பின்பற்றி நடப்பது நமக்குத்தான் கெடுதலை விளைவிக்கிறது. பெற்ற தாயே பிள்ளையை விலக்கினுற்போல் நமது மதத்தில் அவர்களுக்கு இடமில்லை என்று சொல்வதும், ஈசுவரனிடம் பிரார்த்தித்துக்கொள்ள அவர்களுக்கு உரிமை கிடையாது என்று பண்ணுவதும் பெரும் கெடுதலாக முடிகிறது. அவர்களைப் பிற மதத்தில் போய்ச் சேர வைத்துவிடுகிறது. அதனுல் நமது மதத்துக்குப் பலம் குறைந்து, ஒற்றுமை நீங்கி, தேசத்திற்கே கெடுதலாகிறது. தங்களைக் கடைத்தேற்றிக் கொள்ள வழியில்லாமல் ஒரு மதம் ஒரு சமூகத்தாரையே பாழ் பண்ணினுல், அவர்கள் வேறு எவ்விதத்திலாவது உய்ய வழி தேடமாட்டார்களா? தங்களைக் கடைத் தேற்றிக்கொள்ளும் ஆசை நியாயமாக எல்லாருக்கும் இருக்கத்தானே இருக்கும்? அதற்காகப் பிற மதத்தைத் தழுவுகிறவர்களை நாம் குற்றங்கூற முடியுமா? இனிமேலும் அதுபோல நேராமல் இருப்பதற்குத் தான் ராஜாங்கமே ஒன்றுகூடி யோசித்து இந்த ஆலயப் பிரவேசத்தை மேல்போட்டுக்கொண்டு நடத்துகிறது." -இவ்விதம் அம்மாவுக்கு விளக்கிச் சொல்லிப் பெரிய பிரசங்கம் செய்தான் நாராயணன்.

அவன் இவ்விதம் பிரித்துச் சொன்னதனுல் அவளுக்கு ஒன்றும் தெளிவு ஏற்பட்டுவிட்டதாகத் தெரியவில்லை. "ஜாதியும் மதமும் நாமாக உண்டு பண்ணறதா? அதுவான்னு

ஏற்பட்டிருக்கு? தோணினபடியெல்லாம் மாத்திண்டே போகலாமா?'' என்றுதான் தர்மாம்பாள் அவன் பிரசங்கத்துக்குப் பதில் சொன்னாள்.

''அண்ணா, அம்மாகிட்டே உன் பிரசங்கமெல்லாம் பிரயோஜனப்படாது. இந்தக் காரியத்திலே அவளுக்குக் காந்திகிட்டேயே அசாத்தியக் கோபம். நித்தியம் சாயங்காலம் கோயிலுக்குப் போக முடியல்லேன்னா அவளுக்கு அது வருத்தமாகத்தானே இருக்கும்?'' என்றாள் ஞானம், தாயை லேசாகப் பரிகசித்துக்கொண்டு.

''இவளைப் போகவேண்டாம்னு யாராவது சொல்றாளா, என்ன?'' என்றான் நாராயணன்.

''ஆமாம், தனியாச் சொல்லவேறே வேணுமாக்கும்! தீண்டாதாளையெல்லாம் உள்ளே விட்டால் நாம் எப்படிப் போறது?''

''ஏன், அவா பாட்டுக்கு வந்துவிட்டுப் போறா; நாமும் போனால் என்னவாம்?'' என்றான் நாராயணன்.

''ஐயோ, போருமே உன் பேச்சு. கண்டதையெல்லாம் தின்னுண்டு பக்கத்திலே வந்தாலே சகிக்கல்லே. அவாளும் போயிண்டு, நாமும் போறதாவது? ரொம்பத்தான் அழகு!'' என்றாள் தர்மாம்பாள் ஆத்திரத்தோடு.

''சாமி தரிசனத்துக்குன்னா, அவாளும் கண்டபடி அசுத்தமா வருவாளா? மாட்டாள். சுத்தமாயிருக்கக் கத்துக்கொடுத்தா அவாளும் நமக்கு மேலாகவே சுத்தமாயிருப்பா'' என்றான் நாராயணன்.

''இப்போது நான் மட்ட ஜாதியான் அல்லவா? என்னை நீங்கள் உங்களில் ஒருவனைப்போலவே பாவிக்கவில்லையா?'' என்றான் தர்மராஜு நடுவில்.

''நன்னாருக்கு அண்ணா, நீங்க எதுக்கோ எதையோ உவமை சொல்றது! உங்களை மட்டம்னு யாரும் சொல்லமாட்டா. அம்மாவுக்கு, நாராயணனுக்கும், உங்களுக்கும் வித்தியாசம் கிடையாது'' என்றாள் ஞானம், அவன் தன்னைக் குறைவாகச் சொல்லிக்கொள்வதைத் தடுத்து. தாங்கள் அவனை அவ்விதம் நினைக்கவில்லை என்பதை அவள் இதனால் வற்புறுத்தினாள்.

''எதனால் அப்படி என்கிறதைத்தான் சொல்ல வருகிறேன். வேறொன்றும் இல்லை. வெகு நாளைப் பழக்கமல்லவா, காரணம்? மேலும் நான் உங்கள் ஆசாரத்தையே கொண்டாடி வருகிறேன்.

அதுபோல் அவர்களும் சுத்தமாயிருக்கக் கற்றுக்கொண்டு விட்டால், அப்புறம் நமக்கு ஒரு வித்தியாசமும் தோன்ருது'' என்ருன் தர்மராஜு.

என்ன சொன்னுலும் தர்மாம்பாள் மனத்துக்கு ஒன்றும் ஒப்புக்கொள்ளக் கூடியதாக இல்லை. 'தர்மராஜு அவர்களுடன் இன்று நேற்றுப் பழகுகிருனு?' நாராயணனும் அவனும் சிறு வயசு முதல் ஒன்ருக வளருகிருர்கள். பிராமணப் பிள்ளைகளைக் காட்டிலும் ஆசாரசீலமா யிருக்கிருன். அவனைப் பார்க்கிறவா யாரும் அவனை வேறு ஜாதியாளுக நினைக்கவே மாட்டார்கள். அப்படியும் அவன் என்ன பறையனு? அவன் தங்கள் வீட்டில் ஒன்ருகப் பழகுவதும், கோவிலுக்குள் கண்ட கண்ட பறையன் களை விடுவதும் ஒண்ணுகப் போகுமா? வீட்டையும் கோவிலையும் ஒண்ணுகவா பார்க்கிறது? ஈசுவரன் சன்னிதியில் வீட்டைக் காட்டிலும் பரிசுத்தமா யிருக்க வேண்டாமா?' என்றுதான் அவளுக்குத் தோன்றிக்கொண் டிருந்தது.

'பாமர மக்களின் மனத்தில் படும்படி சீர்திருத்தங்களை விளக்கிக் கூறி நடத்திச் சென்ருல், காரியம் இனிது நிறைவேறி விடும்' என்று நாராயணனும் தர்மராஜுவும் நினைப்பதற் கொப்ப, அவ்விதம் படவைப்பது என்பது எளிதில் சாத்திய மாகக் கூடியதல்ல. உலக அநுபவமும் அறிவும் மட்டுமல்ல; தவசிகளின் சக்தி போன்ற தவச்சக்தியும் இருந்தாலல்லவா, பிறர் மனத்தில் படவைத்து, அவர்களை மாற்றி, நம் எண்ணப் படி நடத்திச் செல்ல முடியும்! அத்தகைய சக்தியை அடைய எல்லாராலும் முடியுமா?

## 25

## சுப்புணியும் தர்மராஜுவும்

அவர்கள் வெகுநேரம் விழித்திருந்தும் அம்மாஞ்சி முதலானவர்கள் வரவில்லை. 'ஒருவேளை போன காரியம் சித்தி யாகவில்லையோ?' என்று அவர்கள் சந்தேகித்துக்கொண்டே தூங்கிப்போனுர்கள். ஆனுல் காலையில் படுக்கையை விட்டு எழுந்திருக்கும் முன்பே அம்மாஞ்சி வந்துவிட்டதன் அடையா ளங்கள் தெரிந்தன. ஆட்கள் ஜருராய் வேலையில் ஈடுபட் டிருப்பதும், வாசலில் கார் தயாராகக் காத்திருப்பதும், ஏன்; எல்லோருடைய பரபரப்புமே, வீட்டு எஜமானன் வீட்டில் இருக்கிருர் என்பதை அறிவுறுத்தின.

நாராயணனும் தர்மராஜுவும் எழுந்து வந்தபோது அம்மாஞ்சி காபி சாப்பிட்டுவிட்டுப் புறப்படத் தயாராகிக் கொண்டிருந்தார். கணபதி சாஸ்திரியும் விபூதி அணிந்து, சந்தியாவந்தன ஜபத்தை முடித்துவிட்டுத் தாமும் அவருடன் காபி அருந்திக்கொண் டிருந்தார். அவர் மகன் சுப்புணி ஒரு புறத்தில் குறிச்சியில் உட்கார்ந்து, நாலுபுறமும் கண்களைச் சுழற்றி வெற்று நோக்குடன் பார்த்துக்கொண் டிருந்தான். அவன் முன்பும் காபி தயாராக வைத்துத்தான் இருந்தது.

"இரவு, எப்போது வந்தீர்கள்? நாங்கள் வெகு நேரம் விழித்திருந்து பார்த்தோம்; நீங்கள் வரவில்லையே?" என்று கேட்டான் நாராயணன்.

"காரியம் முடிய நாழிகை யாகிவிட்டது. அங்கேயே படுத் திருந்து, விடியற்காலையில்தான் புறப்பட்டு வந்தோம்" என்றார் அம்மாஞ்சி.

"நாழிகையானாலும, காரியம் சௌகரியமாக முடிஞ்சுதே; அதைச் சொல்லப்பா. சமயத்திலே நீ இருந்தையே. நீ இல்லா விட்டால், நான் என்ன பண்ண முடிந்திருக்கும்? தெய்வந்தான் உன்னை இங்கே வச்சுது. நீ பிள்ளை குட்டியோடு நன்னா இருக் கணும்!" என்று கணபதி சாஸ்திரி அம்மாஞ்சியை வாழ்த்தினார்.

"ஏன், ரொம்பக் கஷ்டமாப் போச்சா?" என்று நாராயணன் கேட்டதற்கு, "அகப்பட்ட கேசை விட்டுவிடப் போலீசாருக்கு மனம் இல்லை. என்ன என்னவோ சொல்லிப் பார்த்தான் வெங்கிட்டு. அவா கேக்கற வழியா இல்லே, கடைசியிலே ஒன்னு சொன்னான்; அது மந்திரமா வேலை செஞ்சுடுத்து" என்றார் கணபதி சாஸ்திரி.

"என்ன மந்திரம் அது? சித்தே சொல்லுங்கோ கேட்போம்" என்றான் நாராயணன். தர்மராஜுவும் அதைக் கேட்க ஆவலாய் நின்றான்.

"சின்னக் கிராமமான தானப்பாளையத்துலேகூட எதிர்ப்பு இல்லாமே, ஆலயப் பிரவேசம் வெற்றிகரமாக நடந்தது என்று ரிபோர்ட் செஞ்சு, பேபரிலே வந்தா நல்லதா? அதில்லாமல் அடிதடியும், போலீஸ் கேசுமாப் போச்சுன்னா யாருக்கு என்ன கௌரவம்? இதை எடுத்துச் சொன்னான் வெங்கிட்டு. உடனே வழிக்கு வந்துவிட்டா. அதுக்கு முன்னே ஜாமீன்லேகூட விட யோசனை பண்ணினவர்கள் லேசாகவே, பதிவு பண்ணிக்காமே எல்லாரையும் விடுதலை பண்ணிப்பிட்டா. இனிமே இதுமாதிரி

கலாட்டா பண்ணுதிங்கோன்னு மட்டும் எச்சரித்து அனுப்பினு: அவ்வளவுதான்'' என்றார் கணபதி சாஸ்திரி.

''தேவலேயே, பேபரில் வருவதுதானு முக்கியம்? நமக்காகவே சரியாக நடக்கணும் என்கிறது கிடையாதா?''-நாராயணனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''பாதியும் இப்படித்தான். நடப்பது ஒன்று; வெளிவருவது வேறொன்று. பத்திரிகைச் சமாசாரம் அப்படியே நம்புவதற்கில்லாமல் இருக்கிறது'' என்று சொல்லிக்கொண்டே அம்மாஞ்சி, ''நான் கொஞ்சம் வேலையாகப் போயிட்டு வறேன். நீங்கள் இரண்டு நாள் இருந்தூட்டுப் போகலாம்'' என்று கணபதி சாஸ்திரியிடம் சொல்லிவிட்டுக் கிளம்பினுர்.

''ஊரிலே அவ கவலைப்பட்டுப் போவள், போயாகணும்'' என்று கணபதி சாஸ்திரி சொன்னதற்கு, ''யார் கிட்டவாவது சொல்லி அனுப்புங்கள். இல்லாவிட்டால் சுப்புணியே நேரில் போய் அம்மாவுக்குத் தெம்பு சொல்லட்டும். நீங்கள் ரெண்டு நாள் இருந்து, குழந்தைகளும் லீவுக்குக் கிராமத்துக்கு வருவா, அவாளையும் அழைச்சுண்டு போகலாம்'' என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டுப் போனுர்.

கணபதி சாஸ்திரி அவ்விதமே சுப்புணியை அனுப்பலாமென்று பார்த்ததற்கு அவன் முன்னுடி போக மறுத்துவிட்டான். அவனும் மதுரைக்கு அடிக்கடி வருகிறவனு? இல்லை. ஆகையால் இருந்து போக ஆசைப்பட்டான். பிறகு என்ன பண்ணுகிறது? ஒரு போலீஸ் சேவகனிடம் சமாசாரம் சொல்லி அனுப்பிவிட்டு அம்மாஞ்சி விருப்பப்படி இரண்டு நாள் தங்கி, அப்புறமே பானு, மகாலக்ஷ்மி, நாராயணன, தர்மராஜு எல்லோரும் சேர்ந்து ஒன்றுகப் போகலாமென்று நின்றுவிட்டார். இவ்வளவு செய்திருக்கும் வெங்கிட்டுவின் சொல்லைத் தட்டக்கூடாதென்ற எண்ணம் அவருக்கு.

சுப்புணிக்கு ஊர் சுற்ற ஆசை. அவ்வளவுதான். கோயில் குளம், கடைத்தெரு இது மாதிரி சுற்றியலைந்த நேரம் போக, வீட்டிலிருந்த வேளைகளில், தர்மராஜுவும் நாராயணனும் மகாலக்ஷ்மியோடும் ஞானத்தோடும் கட்டுப்பாடின்றி, தாராளமாகப் பேசிச் சிரித்துப் பொழுது போக்குவதை, ஒருவித ஆவலோடும் அதிசயத்தோடும் பார்த்து வந்தான். கிராமத்துச் சிறு பெண்கள் இவ்விதம் வாலிபர்களிடம் பழகுவதை அவன் பார்த்ததில்லை அல்லவா?

நாராயணன், வீட்டுப்பிள்ளை; போகட்டும். தர்மராஜுவும் இவ்வளவு பழக்கமாக இருக்கிறனே அவர்களிடம்! அது தான் அவனுக்குப் புதிதாகத் தோன்றிற்று. அவனுக்கும் அவர்கள் மத்தியில் வந்து அந்தப் பேச்சுக்களில் கலந்துகொண்டு தர்மராஜுவைப்போல் தாராளமாயிருக்க மிகுந்த ஆசை ஏற்பட்டது. ஆனல் அவர்கள் பேச்செல்லாம் படிப்பு சம்பந்தமாகவும், காங்கிரஸ் கட்சி, காங்கிரஸ் தலைவர்கள், இவைகளைப் பற்றியுமே முக்காலும் இருந்ததால், அதில் அவன் எப்படிக் கலந்து கொள்ளமுடியும்? ஏதாவது அந்த விஷயம் அவனுக்குத் தெரிந்திருந்தால் அல்லவா அது சாத்தியமாகக் கூடும்? மொத்தத்தில் அந்தப் பெண்கள் இருக்குமிடத்தில் இருக்க அவனுக்கு வெகுவாக மோகம் உண்டாயிற்று. அவர்கள் ரூப சௌந்தரியத்தைக் கண்களால் பருகிக்கொண்டே இருக்க அவனுக்குப் பெரிதும் ஆசையாக இருந்தது. அவர்களை விழித்து விழித்துப் பார்த்தவண்ணம் உட்கார்ந்து பெரும்பாலும் பொழுது போக்கினன்:

''என்ன, சுப்புணியண்ணு, இப்படி முழிக்கறேளே. அக்காவையும் ஞானத்தையும் எதற்கு அப்படிப் பார்க்கிறேள்?'' என்று பாலுகூட அதைக் கவனித்து எல்லார் மத்தியிலும் கேட்டு அவனைத் தலைகுனியச் செய்தான். அதற்குப் பிறகு அவனல் முழுதும் அவர்களைப் பாராமல் இருக்க முடியவில்லை.

அவன் அதுமாதிரி இருந்தது அவர்கள் களங்கமற்று, சிரிப்பும் விளையாட்டுமாக இருப்பதைக்கூட ஒரு விதத்தில் தடை செய்யத்தான் செய்தது. ஏதோ ஒரு கல்மஷம் அந்தப் பார்வையில் இருந்துகொண்டு, அவர்கள் வித்தியாசம் பாராட்டாமல் இருந்துவருவதைத் தடுத்தே விட்டது. தர்மாம்பாளுக்கும், கணபதி சாஸ்திரியின் எதிரில் தர்மராஜுவை வீட்டுப் பிள்ளையைப்போல் நடத்த முடியவில்லை. அவர்கள் வருகையால் எல்லாருக்குமே ஒருவகைச் சிரமம் ஏற்படத்தான் ஏற்பட்டது; அவர்கள் தங்கினது இரண்டே தினந்தான் என்றாலும், அந்தக் குறுகிய காலத்திலும், அவர்கள் சகஜமாகப் பழகி உத்ஸாகமாக இருந்ததை ஒரு விதத்தில் அது அடியோடு கெடுத்துவிட்டது என்றே சொல்லவேண்டும்.

எல்லாருமாக ஊருக்குப் புறப்பட்டபோது அவர்கள் உத்ஸாகத்தைப் பின்னும் கெடுப்பதைப்போல் நாராயணனல் அவர்களுடன் போக முடியாமல் போய்விட்டது. ஞானத்தைக்

கொண்டுவந்து விடும்படி ஸப்-ஜட்ஜ் வீட்டிலிருந்து, இவர்கள் சௌகரியத்தைக் குறித்து ஒரு வார்த்தை கேளாமல் அரசாங்க உத்தரவுபோல் உத்தரவு பிறந்தது. அதற்கு வேண்டிய சாமான்களைத் தயாரித்துச் சேகரிக்க வீட்டுப் பிள்ளையாகிய நாராயணன் உதவி அவசியம் வேண்டுமென்று தர்மாம்பாள் அவனை நிறுத்திக் கொண்டாள்.

"பாலுவும் மகாலக்ஷ்மியும் கணபதி அண்ணுவோடு போகட்டும். பத்து நாள் அங்கே இருந்துவிட்டு, கோபாலன், சுப்பு எல்லாருமாக வந்து ஞானத்தைப் புக்ககம் கொண்டு போய் விடலாம்" என்று ஏற்பாடாகக் கணபதி சாஸ்திரியிடம் சொல்லியனுப்பினர் அம்மாஞ்சி. "மாப்பிள்ளை சங்கரனையும் மீனுவையும் அனுப்பத் தவறாதீர்கள்" என்றும் வற்புறுத்திச் சொல்லியனுப்பினர்.

நாராயணனுக்கு வருத்தந்தான்: விடுமுறை நாட்களில் கிராமத்துக்குச் சென்று வசித்து, கிராமத்தின் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டுமென்று அவன் பெரிதும் விரும்பினன்; அவன் ஏற்கப்போகும் தேசசேவை முக்கியமாகக் கிராமச் சீர்திருத்தம் அல்லவா? அவனுக்குச் சொந்தமான கிராமம் ஒன்றும் இல்லை. அவன் மாமனுருடைய கிராமத்து ஏழை மக்களுடனுவது நன்கு பழகி, அவர்கள் முன்னேற்றத்துக்கு என்ன என்ன செய்யவேண்டுமென்பதைத் தெரிந்துகொண்டு அதைச் செய்யவேண்டுமென்பது அவன் எண்ணம். அதற்கு விடுமுறை நாட்களை விட்டால் வேறு அவகாசம் ஏது?

போன வருஷம் அவன் விடுமுறை நாட்களைக் கிராமத்தில் கழித்ததிலேயே எவ்வளவோ தெரிந்துகொண்டிருந்தான். தங்கள் நன்மையை விரும்புகிறவன் அவன் என்பதாக அந்தக் கிராமத்து ஜனங்களும் அவனிடம் அன்பும் மரியாதையும் காட்டத் தொடங்கியிருந்தார்கள். அதைத் தொடர்ந்து விருத்தி செய்துகொள்ள வேண்டாமா?

இதுமாதிரி நினைத்து, இப்போது அவன் வேட்டகம் போக முடியாமல் போனதற்கு வருந்தினன். 'என்ன பண்ணுகிறது? ஞானத்தைப் புக்ககத்தில் விட்டு வந்த பிறகு நாட்கள் இருந்தால்தான்' என்று சமாதானம் செய்துகொண்டான். மகாலக்ஷ்மிக்கு அவன் வராமல் ஊருக்குப் போக மனம் வருமா? லீவு இரண்டு மாதத்தையும் - முன்பு அவன் விரும்பியபடி - தடுத்து எதுவும் சொல்லாமல், கோயில் குளங்களென்று உலாவி

வந்து உல்லாசமாகப் பொழுது போக்கலாமென்று அவள் நினைத்திருக்கவில்லையா? தங்கள் ஊரிலுள்ள குளிர்ந்த தென்றலோடு கூடின குளக்கரையின் பரிசுத்தமான காற்றையும், பூக்கள் மலர்ந்து மணம் கமழும் நந்தவனத்தின் அழகையும் அவனுடன் சேர்ந்து அநுபவிப்பதில் எவ்வகை இன்பந்தான் ஏற்படாது! இதுமாதிரி எண்ணி அவள் ஆவலாகக் காத்திருந்ததற்கு அது இல்லை என்று ஆகுமானால் மனம் ஏமாறத்தானே ஏமாறும்?

அதற்காக ஊருக்குப் போகாமல் இருந்துவிடவும் அவளுக்கு மனம் இல்லைதான். அகத்தில் எல்லாருடனும் இருக்க ஆசையும், ஊரைப் பார்க்க ஆவலும் இருக்கத்தான் இருந்தன. பிறந்த ஊரும் அவ்விடத்து மனிதர்களும் என்றைக்கும் விருப்பமானவர்கள் அல்லவா? அது ஒன்றுக்காகத்தான் அவள் போகச் சம்மதித்தாள்.

பாலுவுக்கு என்ன? 'குட்டிக்கும் நாய்க்கும் குடிபோகச் சந்தோஷம்' என்று அவன் தயாராகக் கிளம்பிவிட்டான். அவர்கள் எல்லாரையும் காரில் ஏற்றி அனுப்பிவிட்டுக் காரியங்களில் முனைந்தாள் தர்மாம்பாள். பெண்ணைக் கணவனிடம் கொண்டு போய்விடச் சாமான்கள் சேகரிப்பதென்றால் எவ்வளவோ இருக்கும் அல்லவா? அதில் அவளுக்கு இருந்த பரபரப்பில் ஞானத்தைக்கூடச் சும்மா இருக்க அவள் விடவில்லை. அவள் செய்யக் கூடிய, விரிப்புக்குப் பூப்போடுவது போன்ற கைவேலை ஏதாவது இருந்தால் அதை உடனே செய்யும்படி துரிதப்படுத்திக்கொண்டிருந்தாள். அதனால் ஞானத்துக்கு, மகாலக்ஷ்மியின் பிரிவை நினைக்க முடியாமலும், மறுபடியும் இதுபோலத் தாங்கள் சேர்ந்து கவலையின்றி உத்ஸாகமாக இருப்போமா என்றுகூடச் சிந்தித்துப் பார்க்க நேரம் இல்லாமலும் செய்துவந்தாள்.

மதுரையிலிருந்து தானப்பாளையம் சுமார் ஐம்பது மைல் தூரம் இருக்குமாதலால், இரண்டு மணி தேச காலமாவது காரில் செல்லவேண்டித்தான் இருந்தது. வழி நெடுகிலும் சுப்புணி, மகாலக்ஷ்மியையே வைத்த கண்வாங்காமல் பார்த்துவந்தான். அது அவளுக்கு மிகுந்த அருவருப்பாக இருந்தது. 'அவனோடு கூட ஏன் புறப்பட்டோம்?' என்றுகூடத் தோன்றிற்று. தர்மராஜுவோடு பேசக்கூட அவளால் முடியவில்லை. வண்டிக்குள் அவர்கள் பக்கமே முகத்தைத் திருப்பாமல் சாலையின் பக்கங்களையே பார்த்து வந்தாள்.

தர்மராஜுவும் அவள் மனத்தில் இருந்ததை ஒருவாறு ஊகித்துக்கொண்டான். சுப்புணி மகாலக்ஷ்மியைப் பார்க்கும் பார்வைக்கு அவனை மென்னியைப் பிடித்துக் கீழே இறக்கித் தள்ளுவோமா என்றுதான் அவனுக்கு ஆத்திரம் பொத்துக் கொண்டு வந்தது. அவன் மகாலக்ஷ்மியோடு பேசவில்லையா, அவளைப் பார்க்கவில்லையா? இவன் பார்க்கும்போதுமட்டும் அவனுக்கு ஏன் அவ்விதம் கோபம் வருகிறது? மகாலக்ஷ்மிக்கும் அது பிடிக்கவில்லை; நன்கு தெரிகிறது. ஏன்? அந்தப் பார்வையில் ஏதோ கல்மஷம் இருக்கவேண்டும். அதுதான் அதை அவர்கள் வெறுப்பதற்குக் காரணம். இதிலிருந்தே, தன் மனம் அவ ளிடத்தில் பரிசுத்தமான அன்போடு இருக்கிறது என்று ஏற்படு கிறதல்லவா?

இவ்விதம் நினைக்கவுமே அவன் பெரிதும் ஆறுதல் அடைந் தான். எங்கே தனக்கு அவளிடத்தில் தகாத விதத்தில் ஆசை வளருகிறதோ என்று அவன் தனக்குத் தானே இந்தப் பத்து நாட்களாக வருந்தித் தவித்துக்கொண் டிருந்தான். இப்போது சுப்புணியின் செய்கையால் அது இல்லை என்று ஆகிறது. அதா வது அவளிடத்தில், 'அவள் அழகுக்கும், குணத்துக்கும், நண்ப னுடைய மனைவி என்பதற்காகவுமே தனக்கு நியாயமான அன்பு ஏற்பட்டிருக்கிறது; அவ்வளவுதான் என்று' தன் உணர்ச் சியையே அவன் பிரித்து அறிந்துகொள்ள உதவியது போலத் தோன்றிற்று, சுப்புணியின் செய்கை.

கடைசியில் ஊர் சேர்ந்து அவர்களை வீட்டில் இறக்கித் தானும் கிராமத்துக்குச்' செல்ல விடை பெற்றுக்கொள்ளும் போது, ஒருவித நிம்மதியுடனும் உத்ஸாகத்துடனும் எல்லோ ரிடமும் சொல்லிக்கொண்டு, பிரத்தியேகமாக மகாலக்ஷ்மி யிடமும் விடைபெற்றுச் சென்றான். "நீங்கள் மதுரை போகு முன் ஒரு நடை வந்து பார்க்கிறேன்" என்று அவளிடம் சொன்னபோது அதில் தனித் தெம்பும் குதூகலமும் தென் பட்டன:

' அவனுடைய நேர்மையான இருதயம் தகாத ஆசைகளை நினைத்துத் திகிலடைந்திருந்தது. தன்னை மீறித் தவறான வழியில் சென்றுவிட்டாலோ என்று அவன் கஷ்டப்பட்டுப் போனான். அப்படி இல்லை என்று அவனுக்கே தோன்றியபோது இருதயத்தை அழுத்தியிருந்த பெரும் சுமை தானாகவே நீங்கினால் போன்ற நிம்மதி அவனைப் பெரிதும் ஆசுவாசப் படுத்திற்று.

மகாலக்ஷ்மியையும் பாலுவையும் வரவேற்க அத்தை, கிருஷ்ணன், மீனு இவர்கள் ஆவலாகக் காத்திருந்தார்கள். குழந்தைகளைப் பார்த்து மாதக் கணக்கில் ஆகிவிட வில்லையா? அதனால் பார்க்கவேண்டும் என்கிற ஆர்வம் அதிகமாயிருந்தது.

அவர்கள் தகப்பனார்கூட வழக்கத்துக்கு மாறாக அவர்கள் வருகைக்காக வாசலுக்கே வந்துவிட்டாரென்றால் பாக்கியுள்ள வர்களைப்பற்றிச் சொல்லுவானேன். குழந்தைகள் இருவரும் அவர்கள் கொஞ்ச நாள் பாராதிருந்ததற்கு நன்கு வளர்ந்திருந் தார்கள். அதிலும் மகாலக்ஷ்மியிடம் ஏற்பட்டிருந்த சோபை எல்லோருக்கும் விசேஷமாகப் புலப்பட்டது. இரவில் மொட்டா யிருந்து விடிந்தெழுந்து பார்க்கும்போது மணங்கமழ மலர்ந் திருக்கும் மலரெனச் சொல்லும்படி இருந்தாள் அவள். மலரின் மென்மையான சௌந்தரியமே அவளிடத்தில் இப்போது காணப்பட்டது.

எல்லோரும் ஒரே ஆனந்தத்தில் முழுகினார்கள். அத்தைக்குப் பாலுவிடம் சமாசாரம் விசாரித்து மாளவில்லை. அவனுக்கும் சொல்லித் தீரவில்லை. மகாலக்ஷ்மியும் மீனுவும் ஒருவரை ஒருவர் அன்போடு பார்த்துக்கொண்டார்கள். பொது வாகச் சிறிது பேசியிருந்த பிறகு தனித்துச் சாவகாசமாகப் பேசிக்கொள்ள அவர்களுக்கு எவ்வளவோ இருந்தன. அதற்காக அவர்கள் தனியிடத்தைத் தேடிச் செல்ல எண்ணினால் அதில் தவறு என்ன?

"ஞானத்தைப் புக்ககம் கொண்டுவிடப் போறானுமே அம்மாஞ்சி? நல்ம எல்லாரையும் வரச் சொல்றானும். கணபதி யண்ணா சொல்றானே; என்ன பண்ணப் போறே? வீட்டுக்கு யார் காவல் இருக்கப்போறா?" என்றெல்லாம் சுப்பு ஆரம்பித்து விட்டாள். குழந்தைகளோடு கூடவே அவளுக்கு விசாரப் படுவதற்கும் விஷயங்கள் வந்து சேர்ந்துவிட்டன. கோபாலையரும், "இன்னும் பத்து நாள் பொறுத்துத்தானே போகவேண்டும்? பார்த்துக்கொள்ளுகிறது" என்று அவர் சுபாவப்படி, அவள் சொன்னதை காதில் வாங்கிக்கொள்ளாமல் ஏனோ தானோவென்று பதில் சொன்னார்.

## 26
# சுப்புணியின் குறும்பு

மகாலக்ஷ்மிக்கு மீனுவிடம் சொல்ல எவ்வளவோ விஷயங்கள் இருந்தன. பள்ளிக்கூடத் தோழிகளைப் பற்றியும், வாத்தியாரம்மாக்களைப் பற்றியும் பேசுவதென்றால் இன்றைக்கெல்லாம் பொழுது போதுமா? எந்தப் பெண் எப்படி இருப்பாள், வகுப்பில் யார் அதிக புத்திசாலி, யார் யாருக்குப் படிப்புத் தவிரப் பாக்கி விஷயங்களில் மூளை விசேஷமாகச் செல்லுகிறது, யாருக்கு யாரிடத்தில் பொறாமை, சிநேகம்....? - இவ்வாறு பெண்களைப்பற்றிப் பேசினாள். வாத்தியாரம்மாக்களின் ரூபம், தனித்தனி குண விசேஷம் இவைகளைப் பற்றியும் அவள் பேசினாள். எல்லாவற்றையும் மீனு ஆச்சரியத்தோடு கேட்டு வந்தாள்.

'மகாலக்ஷ்மிக்குத்தான் எவ்வளவு விஷயங்கள் தெரிகின்றன! என்னவெல்லாம் பேசுகிறாள்? எவ்வளவுக்குப் புத்தி பிரகாசிக்கிறது? நம் தங்கையைப் போன்ற கெட்டிக்காரப் பெண் உலகில் உண்டா?' என்று மீனு பிரமித்துப் போனாள். அவள் ஆங்கிலம் படிப்பதும், உலக சரித்திரம், பூகோள சாஸ்திரம் முதலிய பள்ளிக்கூடப் பாடங்களைப்பற்றிப் பேசுவதும், நமது தேசத்தின் இப்போதைய நிலைமையைத் தெரிந்துகொண்டிருப்பதும் அவளுக்குப் பெரிய அதிசயமாக இருந்தன. 'எல்லாரிடமும் பெருமை அடித்துக்கொள்ளும் அளவுக்கு அல்லவா இவள் புத்தி விசாலமடைந்திருக்கிறது?' என்று அவள் பிரமித்துப்போனாள். மகாலக்ஷ்மி தான் கற்றறிந்த விஷயங்களைப் பேசுந்தோறும் அவள் தன் அகன்று மலர்ந்த கண்களில் மகிழ்ச்சி தோன்ற வாய் திறந்து கேட்டுவருவாள்.

'இவ்வளவு உயர்வாக அறிவு வளர்ச்சியும் உடல் வளர்ச்சியும் ஒருங்கே பெற்ற மகாலக்ஷ்மி என்ன பாக்கியந்தான் செய்திருக்கிறாள்!' என்று தானே வியந்து சந்தோஷப்பட்டுக் கொள்வாள். வீட்டில் அம்மாஞ்சி, அம்மாஞ்சி மன்னி, ஞானம் இவர்கள் அவளிடம் தாய் தந்தை சகோதரிகளுக்கும் மேலாக வன்றோ அன்பாய் இருக்கிறார்கள்போல் இருக்கிறது?' என்பதை நினைக்கும்போது தன் புக்ககமும் அவள் நினைவுக்கு வரத்தான் வந்தது.

மனைவியின் உத்தரவுக்கு உட்பட்டு நடப்பது தவிர வீட்டு விஷயத்தில் வேறொன்றும் வாய் திறவாத மாமனார், நாட்டுப் பெண்களிடம் நயமாகவே வேலை வாங்கிக்கொண்டு ஒரு காசும் செலவாகாமல் சிக்கனமே நினைவாகக் குடித்தனத்தை நிர்வகிக்கும் மாமியார், காலாடியாக ஊர் சுற்றி அலையும் மைத்துனன், அவனுக்காக வேண்டிச் சதா வருந்திக் கண்ணீர் வடிக்கும் ஓர்ப்படி, தன்னிடத்திலேயே ஏதாவது குற்றம் குறைகள் கண்டவண்ணம் இருக்கும் கணவன், இவர்களிடையே அவள் வாழ்க்கை நடைபெற்றது. கல்வியறிவு, விஷய ஞானம் என்கிற பேச்சே அவ்விடத்தில் இல்லை. தன்னுடைய இத்தகைய வாழ்வுக்கும் மகாலக்ஷ்மியினுடைய வாழ்வுக்கும் எத்தனை வித்தியாசம்! நீர் நிறைந்த செழிப்பான பூமிக்கும், மணல் பரந்த பாலைவனத்துக்கும் உள்ள வேறுபாடன்றோ காண்கிறது? புத்தி வளர்ச்சிக்கு வேண்டுமென்கிற அன்பான சூழ்நிலையும், சாதனங்களும் அவளுக்குக் கிட்டியிருக்கின்றன. தனக்கோ வீட்டிலுள்ளவர்களின் குறுகிய நோக்கத்தை அநுசரித்து நடப்பது தவிர, வேறு நல்ல அநுபவங்களுக்கு வழி இல்லை.

இவ்விதமாக நினைத்தபோது அவளுக்குத் தன் தங்கையிடமே பொறாமை ஏற்படலாம் அல்லவா? ஆனால் மீனாவின் மனம் அன்பு நிறைந்தது. உடன்பிறந்தவர்களிடம் அவளுக்குள்ள வாஞ்சை, பொறாமைக் குணத்துக்கு இடம் அளிக்கவில்லை.

'மகாலக்ஷ்மிக்காவது இவ்விதம் எல்லாம் பொருந்தி அமைந்திருக்கிறதே' என்றுதான் அவள் திருப்தி கொண்டாள். மகாலக்ஷ்மி ஊரிலிருந்த அந்தக் கொஞ்ச நாளிலும் பிரியாமல் அவளோடு கூடவே இருக்க ஆசைப்பட்டாள். அவள் விரும்பிய அளவுக்கு அவளால் அவ்விதம் செய்ய முடியவில்லை. அவள் இருந்து போவதாக வந்திருக்கும்போது, அவளை உடனே வரும்படி மாமியாரிடமிருந்தோ கணவனிடமிருந்தோ, ஆள் வருவதும், அவள் வருவதாகச் சொல்லிப்போகும் சமயத்துக்கு அவளால் வரமுடியாமல் இருப்பதும் அதை நன்கு வெளிப்படுத்தின.

'மகாலக்ஷ்மி இருக்கும் வரையிலும், மீனுவும் ஆத்துலே வந்திருக்கட்டுமே' என்று சுப்பு சொன்னதற்கு, ஏதேதோ காரணம் கூறி, முடியாதென்று சொல்லிவிட்டாள் நாணம்மாள். "நன்னாருக்கு, இவ மாமியார் அதிகாரம்" என்று ஆத்திரத்

தோடு சொல்லிக்கொள்ளுவது தவிர, சுப்புவால் அதை எதிர்த்து மாற்ற முடியவில்லை. நாணம்மாளின் சொல்லுக்கு மேல் சொல்வதென்பது அவனால் முடியுமா?

"அப்புறம் அவர்கள் ஏதாவது சொல்லுவார்கள். நான் வந்து போய்க்கொண் டிருக்கிறேன். அது போதும்" என்று மீனுவே சொல்லிவிட்டாள். 'பத்து நாள் அங்கே தான் இருக் கிறேன் என்று சொல்லிக்கொண்டு வர இந்தப் பெண்ணுக்குத் துப்புக் கிடையாது. இப்படிச் சாதுவாக இருந்தால் என்ன பண்ணுகிறது?' என்று மீனுவைக் குறைகூறிக்கொண்டு தன் கையாலாகாத் தனத்தைப் புரிந்துகொள்ளாமல் இருக்கப் பார்த்தாள் சுப்பு.

மீனு தன்னோடு இருக்கும்போது மிகுந்த சந்தோஷமாகவும் உத்ஸாகமாகவும் காணப்பட்டாலும், ஏதோ அவள் முழுதும் அவ்விதம் இல்லை என்பதை மகாலக்ஷ்மி தெரிந்துகொண் டிருந் தாள். 'என், அப்படி?' அதுதான் அவளுக்கு விளங்கவில்லை. வெளிப்படையாகக் கேட்கவும் தயங்கினாள். மீனுவாகச் சொல்லிக்கொள்ளா திருக்கும்போது தான் கேட்பது அவள் மனத்தைப் புண் செய்துவிடுமோ என்கிற பயந்தான் அவள் தயக்கத்துக்குக் காரணம். மீனுவின் இருதயம் அவ்வளவுக்கு மிருதுவானது. சற்று வீசியடிக்கும் காற்றின் வேகத்தையும் தாங்காத மலரென, அது வாடிவிடும் என்பதை உடன்பிறந்து வளர்ந்த மகாலக்ஷ்மி அறியாளா?

குறிப்பாலேயே தெரிந்துகொள்வதுதான் மேல் என்று நினைத்துச் சும்மா இருந்தாள். அவர்கள் ஊரிலிருந்து வந்த இரண்டொரு நாட்களில் ஒரு நாள் சாயங்காலம், மீனு, மத்தி யான்னம் வந்தவள், புக்ககம் போகப் புறப்பட்டாள். சகோதரி கள் இருவரும் அதற்காக வேண்டி வாசல்புறம் வந்தபோது, மகாலக்ஷ்மிக்குத் திடீரென்று ஓர் எண்ணம் உதயமாயிற்று. 'கொஞ்சதூரம் தனிமையில் இருவருமாகப் பேசிக்கொண்டே போய்வருவோமே. அப்போது ஏதாவது வார்த்தை வளர்ந்து, அவள் நம்மிடம் மனத்தில் உள்ளதைச் சொன்னாலும் சொல்ல லாம்' என்று நினைத்தாள்.

உடனே, "வா, சற்றுக் காற்றாடக் குளத்துப் பக்கம் போய் வருவோம்" என்று தமக்கையைக் கூப்பிட்டாள்.

"குளத்துக்கா? இப்பவா? கையை வீசிக்கொண்டா போகிறது? யாராவது என்னவாவது சொல்லுவார்களே!"

என்று அவள் பதறிக் கூறி, ''இரு, சிறு குடமாவது கொண்டு வருகிறேன்; தண்ணீர் கொண்டுவருகிற பாவனையில் போவது தவறில்லை'' என்று அவள் குடமெடுத்து வர உள்ளே செல்லப் பார்த்தபோது. ''பிறந்த ஊரில் யாருக்கடி பயப்படுகிறது? குடம் ஏதுக்கு? சும்மாப் போய்வரலாம், வா'' என்று தடுத்துக் கூறினுள் மகாலக்ஷ்மி.

''என்னவோ அம்மா, நம்ம ஊரிலே யாரும் செய்கிற வழக்கம் இல்லை, பாரு. அதற்குத்தான் சொல்லுகிறேன்'' என்று சமாதானமாக மழுப்பினுள் மீனு. அவள் மாமியாரோ, கணவனேதான் அவ்வாறு நினைப்பார்கள். அதிலிருந்து ஏதாவது இடைஞ்சல் நேரக்கூடும். மகாலக்ஷ்மியோடு சேரவே கூடாது என்று அவர்கள் சொன்னுலும் சொல்லுவார்கள் என்கிற தன் பயத்தை அவள் எவ்விதம் வெளியிட்டுச் சொல்லுவாள்? அவள் சொல்லாவிட்டாலும் அவள் எதிர்பார்க்கும் குற்றச் சாட்டு அவள் புக்ககத்தவர்களிட மிருந்துதான் என்று மகாலக்ஷ்மி ஒருவாறு ஊகித்துக்கொண்டாள். அவள் அத்திம்பேர் சங்கரனே அவளுடன் சகஜமாகப் பேசவில்லை. அவனுக்குத் தன்னை ஏதோ பிடிக்கவில்லை என்று அதிலிருந்து மகாலக்ஷ்மிக்குத் தெரியவில்லையா? தன் சந்தேகத்தை மீனு அறியக்கூடாது என்பதற்காகத்தான் அதுபற்றி அவள் பேசவில்லை.

''சரி, குளத்துக்கு வேணு போக வேண்டாம். தேங்காய் பழம் எடுத்துக்கொண்டு கோவிலுக்குப் போய்விட்டு வருவோமே. நம்ம ஊர்க் கோவிலைப் பார்த்து எவ்வளவோ நாள் ஆகிறது. பள்ளன்களையெல்லாம் விட்ட பிறகு கோவில் என்னமாயிருக்கு, பார்க்க வேண்டாமா?'' என்ருள் மகாலக்ஷ்மி.

''என்னமாய் இருக்கிறதென்ன? அப்படியேதான் இருக்கு. ஆனு, அந்தப் பக்கம் யாரு போரு? சம்புரோக்ஷணம் செஞ்சப்புறம்னு போகணும்? அதுகூட இன்னும் நடந்தாகல்லே. எங்க மாமனர் வரத்துக்காகக் காத்துண்டிருக்கா; இனிமேல்தான் நடக்கணும்'' என்ருள் மீனு.

''சம்புரோக்ஷணம் செய்யாமப்போனு நமக்கென்ன? போய்த்தான் பார்த்து வருவோமே'' என்று மகாலக்ஷ்மி வற்புறுத்திக் கூப்பிடத் தொடங்கினுள்.

''தீட்டாயிருக்கிற சாமிக்கு அர்ச்சனை பண்ணித் தேங்காய் உடைக்கமாட்டா. நாம் போனுல் தப்பாகப் போனுலும் போயிடும். எங்காத்துலே ஏதாவது கோவிச்சுண்டாலும்

கோவிச்சுக்குவா'' என்று மீனுவின் ஆக்ஷேபம் வெளிவந்தது. இப்போது தெரிகிறதல்லவா அவள் பயப்படுவது யாருக்காக என்று?

''நாம் போறது அவர்களுக்குத் தெரிவானேன்? அப்படியுந் தான் அதென்ன அத்தனை பெரிய தவறு?'' என்று மகாலக்ஷ்மி கேட்டாள்.

''தெரியாமல் போகாது; யாராவது பார்ப்பா; சொல்லுவா. முதலில் எங்க மச்சினனே திண்ணையில் இருப்பன், பார்ப்பன். மதுரையிலிருந்து வந்தது முதல் அவன் எங்கும் வெளியில் போவதைக் காணோம்'' என்றாள் மீனு.

''போடி நீ, எதற்கெடுத்தாலும் ஏதாவது ஆக்ஷேபம் சொல்லிக்கொண்டு. நீ வராட்டால் போ; நான் போயிட்டுத் தான் வரப்போறேன். எனக்குப் பார்க்கணும்னு இருக்கு'' என்று மகாலக்ஷ்மி பிடிவாதமாகச் சொல்லிக்கொண்டு கிளம்பினாள். முதலில் அவள் மீனுவோடு தனித்து உலாவி வருவதற் காகத்தான் பேச்சை ஆரம்பித்தாள். இப்போதோ அவளுக்கே கோவிலைப் பார்க்கவேண்டுமென்று தோன்றிற்று.

தான் தீர்மானமாகக் கிளம்பியே விட்டால், மீனு வேறு வகையின்றித் தன்னைப் பின் தொடருவாளோ என்று அவள் நினைத்து, அதுமாதிரி கிளம்பியிருந்தால் அவள் ஏமாந் திருக்க வேண்டியதுதான். ஏனெனில் மீனு, ''தனியாகப் போகாதே, பாலுவை வேணுமானால் கூட்டிண்டு போ'' என்று தான் சொன்னாளே தவிர, தான் வரவில்லை.

''தனி என்ன? யாரும் பிடிச்சுண்டு போயிடமாட்டா. அஸ்தமிக்க இன்னும் பொழுதிருக்கு. எவ்வளவோ பேர் தண் ணிக்காகக் குளத்துக்குப் போயிண்டுதான் இருக்கா. பாலு விளையாட்டிலே இருக்கான். அவனை எதற்குக் கூப்பிடுகிறது? நான் நிமிஷமா வந்துடுவேன். அத்தை கிட்டக்கூடச் சொல்ல வேண்டாம்.'' இப்படிச் சொல்லிவிட்டு அவள் அப்படியே கோவிலை நோக்கிக் கிளம்பிவிட்டாள்.

மீனுவுக்கு அவளோடு போய்வர ஆசைதான். அவள் தனி யாகப் போகிறாளே என்றும் இருந்தது. ஆனாலும், 'மாமி யாரோ கணவனோ பார்த்து ஏதாவது சொன்னால்?' என்பதற் காகவே அவள் பின்தங்கினாள். மகாலக்ஷ்மி போன பிறகு அவள் அரைமனத்தோடு வீட்டுக்குச் செல்லவும், வாசல் திண்ணையில் அவள் நினைத்தபடி அவள் மைத்துனன் சுப்புணி

இருந்தான். மகாலக்ஷ்மி போவதையும் இவள் வீட்டுக்கு வருவதையும் கவனித்துப் பார்த்தவண்ணம் இருந்தான்.

'நல்ல காலம்! நாம் மகாலக்ஷ்மியோடு போகாமல் நின்றோம். இல்லாவிட்டால் இவன் கட்டாயம் அகத்தில் சொல்லுவான். சம்புரோக்ஷணம் ஆகாத கோவிலுக்குப் போனது தெரிந்து, மாமியாரே ஏதாவது சொல்லக்கூடும்' என்று நினைத்துத் தங்கையோடு போகாமல் போனோமே என்றிருந்த வருத்தத்தைக் குறைத்துக்கொண்டாள் மீனு.

வாசலில் நின்ற சுப்புணி அவள் போவதையும் இவள் வருவதையும் பார்த்ததோடு சும்மா இருக்கவில்லை. மகாலக்ஷ்மி தனித்து எங்கே போகிறாள்? அதைத் தெரிந்துகொள்ள நினைத்தான். அவனுக்கு அவளைப் பின் தொடர்ந்து சென்று பார்க்க வேண்டும்போல் இருந்தது. அவன் சிறைவாசத்தை எட்டிப் பார்த்து வந்ததிலிருந்து, ஒரு வாரமாக வெளியில் எங்கும் செல்லவில்லை. ஏதோ வெட்கமோ, என்னவோ? அவன் வழக்கமாகச் செல்லும் சேரிப்பக்கங்கூடத் தலைகாட்டவில்லை.

இப்போது மகாலக்ஷ்மி மட்டும் போவதைப் பார்த்து, 'அவள் எங்கே போகிறாள், என்ன செய்யப்போகிறாள்?' என்று பார்த்து வர அவனும் மெதுவாக அவளைப் பின்தொடர்ந்தான். பலர் குளத்துக்கும், வயல்வெளிகளுக்கும் போய்க்கொண்டும் வந்துகொண்டும் இருந்த அந்தச் சந்தி நேரத்தில் அவன் போவதைத் தனியே கவனிக்க யார் இருந்தார்கள்? அப்படியும் அவன் அவர்கள் தெரு வழியே போகவில்லை; குடியானத் தெருவுக்குள் புகுந்து, அதன் வழியாகக் குளத்தை அடைந்தான்.

மகாலக்ஷ்மி புறப்பட்டதைப் பார்த்த எதிர்வீட்டு லக்ஷ்மி கூட, "எங்கேடியம்மா போறே? குளத்துக்கா?" என்று கேட்டாள்.

"இல்லே மாமி; கோவில் வரைக்கும் போகலாம்னுட்டு.." என்று மகாலக்ஷ்மி பதில் சொன்னதற்கு, "கோவிலுக்கா, அங்கே யாரும் போறதில்லையே! சம்புரோக்ஷணம் ஆகாமே தேங்காய் உடைச்சு அர்ச்சனை பண்ண அங்கே யார் இருக்கா?" என்றாள் லக்ஷ்மி.

"சும்மாப் பார்த்தூட்டு வரத்தான் மாமி. ஆத்துலே பொழுதுபோகல்லே; அதுக்குத்தான். காத்தாடப் போயிட்டு வருவோம்; நீங்க வறேளா?" என்று மகாலக்ஷ்மி கேட்டதற்கு, "இல்லேடிம்மா. உள்ளே மாட்டுப்பொண் சமைக்க அடுப்பு

மூட்டியிருக்கா. குழந்தைகளை நான்தான் பாத்துக்கணும்: அர்ச்சனை பண்ணுமே சும்மாப் போறத்துலேதான் என்ன? நீ வேணுமானுச் சிறு பெண். ஊருக்கு வேறே போயிடுவே. பார்க்கணும்னுல் பார்த்துட்டு வா. நான் என்னிக்கும் இங் கிருக்கறவதானே'' என்று சொல்லி லக்ஷ்மி அவளை அனுப்பி விட்டாள்.

அவளுக்குச் சமவயசில் தோழிகளாயிருந்த சில பெண்களும் அவரவர்கள் கணவர்கள் வீட்டில் இருந்ததனுல் அவளைத் தெருவில் பார்த்தும் அவளோடு சேர்ந்து புறப்படவில்லை.

அவள் குளத்தை அடைந்தபோது ஒருவர் குளித்துக் கொண்டும், தண்ணீர்மட்டும் கொண்டுபோக வந்த சிலர் குடத் தில் நீர் மொண்டுகொண்டும் இருந்தார்கள். மகாலக்ஷ்மி அங்கே அவர்களைப் பார்த்துத் தயங்கி நிற்கவில்லை. ஜனசந்தடி யற்ற கோவிலுக்குள் அஸ்தமித்த பிறகு போக அவளுக்குப் பயமாக இராதா? பொழுது சாய்ந்துவிடும் முன்பே பார்த்து விட்டுத் திரும்பிவிடுவோம் என்கிற உத்தேசத்தில் நந்தவனத் துள் நுழைந்து கோவிலை நோக்கிச் சென்ருள். நந்தவனத்தின் மேற்குப்புறத்தில் செவ்வரளிச் செடிகள் காடாக வளர்ந்து கொத்துக் கொத்தாக இலை தெரியாது பூத்துக் குலுங்கி நின்றன. 'ரோஜாப் புஷ்பம் என்ன? அரளியும் நிறையப் பூத்திருக்கும் போது அழகாகத்தான் இருக்கிறது!' என்று எண்ணமிட்டுக் கொண்டே அவள் அதைத் தாண்டிச் சென்று கோவிலை அடைந்தாள்.

பிராகாரத்தைக் கடந்து கர்ப்பக்கிருகத்துள் நுழைந்த போது, அங்கே நிலவிய நிச்சப்தம், அவளுக்கு அச்சத்தை விளை வித்தது. 'கோவில் குருக்களும் பூஜைசெய்ய வருவதில்லையா என்ன? நைவேத்தியங்கூட இல்லாமல் சாமியைப் பட்டினி போடருளா? நம்மவர்களுக்கு ஒன்றுமே கிடையாதுபோல் இருக்கு. இவர்கள் ஆசாரத்தில் பறையன் மிதித்த கோவிலை மிதிக்கக்கூடாதென்ருல், சம்புரோக்ஷணத்தை உடனேயே செய்ய மாட்டார்களா?' என்றெல்லாம் எண்ணமிட்டுக் கொண்டே, அங்கே தனியே தாமதிக்கவும் பயந்து, சாவதான மாக ஈசுவரனைப் பிரார்த்தித்து நமஸ்கரிப்பதற்குப் பதிலாக, அவசரத்தில் அரைகுறையாக நமஸ்காரத்தைச் செய்து வெளியே விரைந்து வந்தாள். நல்ல காலம். அவள் தேங்காய் பழம் ஒன்றும் கொண்டுவரவில்லை. எடுத்து வந்திருந்தால் அதை

உடைத்து நிவேதனம் செய்ய அங்கே யாரும் இல்லை. நாமாக உடைத்து, சாமி காலடியில் வைத்துச் செல்வோம் என்பதற்கும், அவளுக்கு அவ்விடத்தில் தாமதித்து நிற்கவே பயமாக இருந்தது. 'சர்வேசுவரனுக்கே தனக்கு வேண்டியதை நடத்திக் கொள்ளச் சக்தி இல்லையா? தன்னை மனிதன் அவமதித்து நடத்தும்படி விட்டிருக்கிறானே?' என்று வருந்திக்கொண்டு அவசரமாக அந்தத் தனியிடத்தை விட்டு வெளிவந்து கோபுரவாசலை அடைந்தாள்.

'மனிதன் கொண்டாடிக் கடவுளுக்கு என்ன ஆகவேண்டும்? அவரைச் சதா தியானித்து, வழிபட்டு, மனிதன்தான் உய்ய வழி தேடிக்கொள்ளுகிறானே தவிர, அதனால் அவருக்குத் தனியே உயர்வு என்ன?' என்னும் தத்துவத்தை அறியும் சக்தி அநுபவமற்ற சிறு பெண்ணான அவளுக்கு எங்கிருந்து வரும்?

கோபுர வாசலிலிருந்து நந்தவனத்தின் புறமாக வெளி வந்து குளத்திலிருந்து செல்லும் பாதை வழியே அவள் வீடு செல்ல வேண்டும். அதற்காக அவள் வேகமாக வந்துகொண்டிருந்தபோது எதிரில் சுப்புணியைக் கண்டு திடுக்கிட்டுப் பிரமித்துப் போனாள்.

அவள் கோவில் பக்கம் செல்வது கண்ட அவன், ஏதோ ஓர் எண்ணம் தூண்டத் தானும் அவள் பின்னாலேயே உள்ளே நுழைந்திருந்தான். அவள் சாமியைத் தரிசித்துவிட்டு அவசரமாக வெளிவருவதற்கும், அவன் கோபுரவாசலுக்கு வருவதற்கும் சரியாக இருந்தது.

ஒரு நிமிஷம் திடுக்கிட்டுத் தயங்கினாலும் உடனே சமாளித்துக்கொண்டு அவனைப் பாராதவள்போலவே அவள் வெளிச் செல்லத் தொடங்கினாள். சுப்புணிக்கும் என்ன செய்வதென்று தெரியவில்லை. இருந்தாலும், 'அவள் போய்விடுவாள்போல் இருக்கிறதே; அவளைச் சும்மா போகவிடுகிறதா?' என்கிற எண்ணத்தில், ஏதாவது சொல்லி அவளை நிறுத்தும் உத்தேசத்தில், "என்ன மகாலக்ஷ்மி, என்னைத் தெரியாதவள்போல் திரும்பிப் பாராமல் போகிறாயே?" என்றான்.

இதற்கு அவள் என்ன பதில் சொல்லுவாள்? அவன் ஏதாவது பேசக் கிளம்பிவிடப் போகிறானே என்கிற பயத்தில்தானே அவள், அவ்விதம் வேகமாக நழுவிக்கொண்டிருக்கிறாள்? அப்படியும் அவன் இப்போது ஏதோ கேட்டுவிட்டான். அவள் ஏதாவது

சொல்லியாக வேண்டும். "இங்கே யாரையும் காணும். தனியே எதற்காக நிற்கிறது?" என்று சொல்லிக்கொண்டே அவள் நடந்தாள்.

"தனி எப்படியாகும்? குழந்தை முதல் பழகிய நான்தான் இருக்கிறேனே!" என்று அவன் திரும்பவும் சொன்னான்.

"என்ன இருந்தாலும் யாரும் இல்லாத இடத்தில் தனித்து நின்று பேச நமக்குப் பழக்கம் போதாது. நான் வருகிறேன்" என்று அவள் அலக்ஷ்யமாகக் கூறுவதுபோல் கூறி நடந்தாலும், அவள் நெஞ்சம் படபடவென்று அடித்துக்கொள்ளத் தொடங்கிற்று: 'இங்கே ஒருவரையும் காணுமே; இந்தத் துஷ்டன் என்ன செய்வானே, தெரியவில்லையே!' என்கிற திகில் அவளையும் அறியாமல் அவள் இருதயத்தைப் பற்றிக்கொண்டது.

"தர்மராஜுவானல் இப்போ பேச மாட்டாயா? என்னைக் கண்டுதானே இவ்விதம் ஒதுங்கிப் போகிருய்? எனக்கும் எவ்வளவோ பேசத் தெரியும்" என்று சொல்லிக்கொண்டு, அவன் அவள் செல்வதைத் தடுக்கும் உத்தேசத்தில் அவள் கிட்ட வந்து வழிமறித்து நின்றான்.

மகாலக்ஷ்மி நடுநடுங்கிப் போய்விட்டாள். தோட்டத்துக் காவற்காரனைக்கூடக் காணுமே; அவள் என்ன செய்வாள் பாவம்! ஒரு சிறு கத்தல் அவளை அறியாமலே கிளம்பிற்று. எதிரில் மறைத்து நின்ற அவனை விட்டு விலகி, பக்கத்திலிருந்த சிறு இடைவெளி வழியாக நழுவி ஓடிவிட யத்தனித்தாள் அவள்.

"அவ்வளவு சுலபமாக என்னிடமிருந்து தப்பமுடியாதாக்கும்!" என்று கூறிக்கொண்டே அவளை நிறுத்துவதற்காக அவன் அவள் கையைப் பிடிக்கப் பார்த்தான்.

அவன் வரும்போது இவ்வளவு தூரம் தகாத விதமாக நடந்துகொள்ள நினைத்து வரவில்லை. அவளைத் தனியே அருகில் பார்க்கவே ஸ்திரீ லோலனுன அவன் சுபாவப்படி அவ்வாறு தானுகவே நடக்கத் தோன்றிவிட்டது.

'ஐயோ! அவன் அவளைப் பிடித்துவிடுவானு என்ன?'-அவள் பெரிதும் திகிலடைந்துபோனுள். அவன் கைக்கு எட்டாதபடி அவள் எவ்விதம் ஓடித் தப்பித்துக்கொள்வாள்? அதைச் சிந்திப்பதற்கு வேண்டிய புத்தி நிதானம் வேண்டாமா? அவள் நெஞ்சும் மார்பும் அடித்துக்கொள்ளும் வேகத்தில் மூச்சன்றே நின்றுபோகும்போல் இருக்கிறது!

தயாபரனான சர்வேசுவரன் தீனர்களை ரக்ஷிக்கச் சமயத்தில் தோன்றுவார் அல்லவா? அந்தச் சமயத்துக்கென்று அவர்கள் ஊர்ப் பள்ளன் ஒருவன் அங்கே வந்து சேர்ந்தான். வந்தவன் சும்மா இராமல், "ஏன் சாமி, உன் விளையாட்டை யாரிடம் காட்டறே? தள்ளி நில்லு. இப்பத்தானே அவுங்க தயவிலே ஜெயிலுக்குப் போவாமே தப்பி வந்தே? அதுக்குள்ளே அது மறந்து பூட்டுதா? அவுங்களாண்டையே வாலாட்டாதே" என்று அவன் சுப்புணியை ஓர் அதட்டுப் போட்டுத் தள்ளிக்கொள்ளச் செய்து, மகாலக்ஷ்மியிடம், "உன் பாட்டுக்குப் போம்மா, தாயி" என்றான் பணிவாக.

அவளும், பெற்றோம் பிழைத்தோம் என்று அந்தப் பள்ளனுக்குத் தனது நன்றியைத் தெரிவிப்பதற்குக்கூடத் தயங்கி நிற்காமல், படபடத்த இருதயத்துடன் ஒரே ஓட்டமாக ஓடி நந்தவனத்தைத் தாண்டி வெளியே வந்தாள்.

சர்வாந்தர்யாமியான அந்தச் சூரிய பகவானே, சுப்புணி அவளிடம் நடந்துகொண்டதற்குக் கண்கள் சிவக்கக் கோபித்துக் கொண்டு விட்டானா என்ன? என்று சொல்லும்படி ஆகாயம் முழுவதும் ஒரே சிவந்த ஒளி பரந்து நின்றது. அந்த ஒளியோடு சேர்ந்து, பூத்துக் குலுங்கின அந்தச் செவ்வரளிக் காடும் பூமி தேவியின் கொழுந்துவிட் டெரியும் கோபக் கனலெனக் காட்சி அளித்தது.

'அந்தப் பள்ளன் அங்கே எப்படி வந்தான்? நமது நல்ல காலம், ஈசுவரனின் அருள். நம் ஊர்ப் பள்ளர்களைக் கோவிலுக்குள் அநுமதித்ததிலும் நன்மை இருக்கிறதா என்ன? இல்லாவிட்டால் அவன் அங்கே கோபுர வாசல் வரைக்கும் வரத் துணிந்திருப்பானா?'-இவ்விதம் எண்ணமிட்டுக்கொண்டே மகாலக்ஷ்மி வீடு சென்றாள்.

வாஸ்தவத்தில் அந்தப் பள்ளன் சாமியைத் தரிசித்து விட்டுச் செல்லத்தான் அவ்விடம் வந்தான். இன்னும் சம்புரோக்ஷணம் ஆகவில்லை என்பதால், அதற்குமுன் அந்தச் சக்தி வாய்ந்த பார்ப்பாரக் கடவுளை ஒரு முறை தரிசனம் செய்ய அவனுக்கு ஏதோ தோன்றிற்று. அதற்காகவே அவன் ஒருவரும் பாராதிருக்கும்போது சேரி வழியாக வந்து நந்த வனத்துள் நுழைந்து கோபுர வாசலை அடைந்தான். அவன் வந்த சமயம் மகாலக்ஷ்மிக்குத் துணை புரியும்படியான நல்ல சந்தர்ப்பமாக வாய்த்தது. அவன் அவ்விடத்துப் பள்ளன்.

அவனுக்கு மகாலக்ஷ்மியையும் சுப்புணியையும் வெகு நன்ருகத் தெரியும்.

அவனை அவ்விடத்தில் அந்தச் சமயத்தில் எதிர்பாராத சுப்புணியும், அவளிடம் தான் அடைந்த அவமானத்தில் அவனோடு அங்கே நிற்கப் பிடிக்காது மௌனமாக வந்த வழியே திரும்பிச் சென்றுவிட்டான்.

அவன் இதுமாதிரி நடக்குமென்று நினைக்கவில்லை. இந்த விஷயத்தைப் பிறர் அறிந்தால் என்ன சொல்லுவார்கள்? மகாலக்ஷ்மி சும்மா இருப்பாளா? தன் பேரில் குற்றம் சுமத்தமாட்டாளா? இப்போதுதானே அம்மாஞ்சியின் தயவால் அவன் நன்மை அடைந்திருக்கிருன்? தன் தாய் தந்தையரே இது தெரிந்தால் தன்னிடம் கோபம் அடையக்கூடும். ஆனல் அவன் தவருக என்ன செய்துவிட்டான்? அவளிடம் பேசினது தப்பா? அவள் ஒன்றும் அப்படிக் கோஷாவாக இல்லையே? தர்மராஜுவிடம் அவள் தாராளமாக நடந்துகொள்ளவில்லையா? இவ்வாறு எண்ணமிட்ட வண்ணம் நடந்தான்.

## 27
## ஊர் வம்பு

வீடு சென்ற மகாலக்ஷ்மி ஒருவரிடமும் ஒன்றும் சொல்லவில்லை. அவள் தனியே யாரிடம் எப்படிச் சொல்லிக் கொள்வாள்? நடந்ததைப்பற்றி நினைக்கவே அவளுக்கு பிடிக்கவில்லை. என்னதான் பெரிதாக நடந்துவிட்டது? சுப்புணியைத் தனியாகப் பார்க்க நேர்ந்ததில் அவள் பயந்து போய்விட்டாள். அவன் வேண்டுமென்று கெடுதலாக ஒன்றும் நினைத்திருக்கமாட்டான். அவன் தாழ்வான குணம் அவளுக்குத் தெரியுமாதலால் அந்த ஞாபகத்தில் அவள் தவருக நினைத்துப் பயந்து போனுள்; இனிமேலும் ஏதாவது இதுமாதிரி நேரப்போகிறதா? இல்லை. இதற்காக வீணில் மனத்தை வருத்திக்கொள்வானேன்? இத்தகைய காரணங்களால் அவள் அதைப்பற்றி நினைக்கவோ பேசவோ விரும்பவில்லை. 'அத்தையிடமோ, மீனுவிடமோ சொல்வதில்தான் என்ன சாதகம்? அத்தை எப்படி எடுத்துக் கொள்ளுவாளோ தெரியாது. வீனுக்கு நாணம்மாளோடு மனஸ்தாபம் வரக்கூடும். மீனுவோ கட்டாயம் வருந்துவாள். அவள் புக்ககத்தவர்களைப் பற்றி ஏற்கனவே அவர்கள் சரியான மனிதர்கள் இல்லையோ என்பதாக அவளுக்கு ஒரு குறைதான்.

இது வேறு தெரிந்தால் அவள் மிகுந்த மன வருத்தப்பட்டுப் போவாள். ஆகையால் இங்கே யாருக்குமே தெரிய வேண்டாம்.' - இப்படி நினைத்து அவள் வாய் திறக்கவில்லை.

சுப்புணி, தானே தன் அசட்டுத்தனத்தை எதற்கு வெளியிட்டுக்கொள்ளப் போகிறான்? அதனால் நடந்த விஷயம் யாருக்குமே தெரியாமல் போயிருக்க வேண்டியதுதான். அப்படிக்கு இல்லாமல், அந்தப் பள்ளன் அதைப்பற்றிச் சேரியிலே தன் மனிதர்களிடம் பேசியிருக்கிறான். அது காற்றுவாக்கில் பிரயாணம் செய்துவந்து, யார் யாரோ ஆட்கள் மூலமாகப் பிராமணத் தெருவையும் அடைந்திருக்கிறது; அதன் விளைவாக இரண்டு நாளைக் கெல்லாம் ஸ்திரீகள் குளத்தில் குளிக்கும்போது பின் வருமாறு அவர்களுக்குள் சம்பாஷணை நடந்தது:

''இந்த அக்கிரமத்தைக் கேட்டையோ? நாணம்மாள் பிள்ளை சுப்புணி, வரவர மோசமானுன் போறான்போலே இருக்கு! இத்தனை நாளாச் சேரிப் பெண்களோடு தன் விளையாட்டை வெச்சுண்டிருந்தான். இப்போ நம்ம பெண்களண்டே கூடன்னு காட்ட ஆரம்பிச்சுட்டான்?'' என்றாள் ஒருத்தி.

''அதென்ன கூத்து? யாரை, என்ன பண்ணிப் பிட்டான்?'' என்று எல்லாப் பெண்டுகளும் ஒரு முகமாகக் கேட்கத் தொடங்கினார்கள்.

''நல்ல காலமா, ஒண்ணும் பண்ணிப்பிடல்லே. நம்ம கோபாலையராத்துப் பெண் மகாலக்ஷ்மி இருக்காளோன்னோ, அவ குளத்துக்குத் தனியாப் போயிருக்கா. இவன் அதைப் பார்த்தூட்டு எதிரே போய் வழி மறிச்சிருக்கான். எதுக்குத்தான் அதுமாதிரி செஞ்சானோ? யதேச்சையா நம்ப பள்ளனொருத்தன் அங்கே எங்கேயோ போனானாம். அவனைப் பார்த்தூட்டு மெள்ள நழுவி விட்டான் ஆசாமி. அவ்வளவுதான்'' என்றாள் முதலில் சமாசாரம் சொன்னவள்.

''குளத்துலே, சிறிசு இவளுக்குத் தனியா என்ன? அப்படியெல்லாம் போகலாமோ? இதெல்லாம் என்ன காரியம்?'' என்றாள் ஒருத்தி.

''ஸ்நானத்துக்குக்கூட அவாத்துலே யாரும் அதிகமா வரக் காணமே. இவ மட்டும் எதுக்குப் போறா?'' என்றாள் இன்னொருத்தி.

"என்னிக்கு இவ்வளவு கூத்தும்?" என்று கேட்டாள் எதிர்வீட்டு லக்ஷ்மி.

"இரண்டு நாளைக்கும் முன்பாம். அதுவும் அஸ்தமித்த பிறகாம்."

"அதைச் சொல்றேளா? அவ குளத்துக்குப் போகல்லே, எனக்குத் தெரியும்; அஸ்தமிச்சுடவும் இல்லே. கோவிலுக்குப் போயிட்டு வறேன்னு எங்கிட்டச் சொன்னு; என்னைக்கூடக் கூப்பிட்டா. எனக்குத்தான் காரியம் இருந்தது, போகவில்லே" என்றாள் லக்ஷ்மி.

"கோவிலுக்கு மட்டும் எதுக்குத் தனியாப் போறது? அந்தப் பக்கம் பள்ளன்கள் நடமாட்டம் இருந்ததும் நல்லதாப் போச்சுப்போலே இருக்கு? இல்லாவிட்டால் ஏதானும் நேர்ந்திருக்குமே!" என்றாள் ஒருத்தி.

"இந்தச் சுப்புணிதான், இப்படிக் கெட்டலைவனோ? அவனைச் சரியா இருக்கச் செய்ய ஒருத்தராலும் முடியாதா? அப்பா, அம்மா இப்படித்தான் பேசாமே இருப்பாளோ? நாணம்மாவுக்கு வாய் கிழியறதே! இப்பத்தானே போலீசுலே மாட்டிண்டு தலை தப்பினது தம்பிரான் புண்ணியம்னு வந்திருக்கான்? அதுக்குள்ளேயா இப்படி?" என்றாள் லக்ஷ்மி. அவளுக்கு நாணம்மாளையும் அவள் பிள்ளையையும் குற்றங் கூறச் சந்தர்ப்பம் கிடைத்தால் விடுவாளா?

"இருந்தாலும் பொம்மனாட்டிக்கு அடக்கம் வேணும்னு வச்சுக்கோ. எதுக்காக ஒத்தரும் போகாத கோவிலுக்கு இவ தனியாகப் போறது? ரெண்டு எழுத்தும் வாசிச்சு, கிராமத்தையும் விட்டுப் போயிட்டா, ஏதோ பிரமாதமாத் தெரிஞ்சமாதிரிதான் நினைப்பு. அசாத்தியத் தைரியம் எதுக்கும். ஏதாவது தப்பு நேர்ந்தால் புருஷனுக்கு என்ன? பொம்மனாட்டி ஜன்மத்துக்கு அப்படியா?" என்றாள் பட்டண வாசத்தையும் அவர்கள் படிப்பையும் ஒருங்கே வெறுக்கும் ஒருத்தி.

"அப்படி மகாலக்ஷ்மி ஒண்ணும் தலை கீழாக நிக்கல்லே; எத்தனையோ அடக்கமும் சமத்துமாத்தான் இருக்கா; நான்தான் எதிராத்துலே இருந்து பார்த்துண்டே இருக்கேனே" என்றாள் லக்ஷ்மி, மகாலக்ஷ்மிக்குப் பரிந்துகொண்டு. அவள் கட்சியில் பேச உறவு மனுஷ்யர்களோ, பிறரோ இல்லாதிருந்தமையால் லக்ஷ்மிக்கு அவ்விதம் பேசத் தோன்றிற்று.

"என்ன சமத்தோ? அந்த மேலப்பாளையத்துப் பிள்ளை யாண்டானோடு பேசுவது நன்னாவேதான் இல்லை. அவன் நல்ல வயசுப் பிள்ளை இல்லையா? கோபாலையர் பெண்ணு மட்டும் அல்லாமே, வேறே யாரானுமானு, இதுக்குள்ளே ஊர் சிரிச்சிருக்கும். எதுவும் பணக்காரான்னு சரியாப் போறது. என்னவோ சொல்லுவாளே, பணக்கார அவிசாரி பந்தியிலேன்னு. அது சரியாத்தான் இருக்கு."

"தெரிஞ்சவாளோடே பேசறது பட்டணங்களிலே சகஜந்தான். அதைப் பெரிய தப்பாச் சொல்லப் படாது. அந்தப் பிள்ளையும் ரொம்ப அடக்கமாகத்தான் இருக்கான்."

"வெளிக்கு அடக்கமாயிருந்தூட்டா ஆயிடுத்தா? உள்ளுக் குள்ளே யார் எப்படியோ, யார் கண்டது? எதுக்கும் பெண்கள் இருக்கிற அடக்கத்துலே இருக்கணும். கடந்து அலையப்படாது. வெளியூருக்குப் போயிட்டு வந்தூட்டா நம்ம பெண்களுக்கு எல்லாம்னு போயிடறது? வாசலிலே நின்னு வரவா போறவா லக்ஷ்ய மில்லாமே அட்டகாசம்னு பண்ணக் கிளம்பிவிடுகிறதுகள்?" என்றாள் ஒருத்தி, லக்ஷ்மியின் பெண்களுக்கும் சேர்த்து இருக்கட்டுமென்று. அவர்களும் கிராமத்துக்கு வந்தால் உள்ளுக்குள்ளேயே அடைந்து கிடப்ப தில்லை என்பதை அவள் சுட்டிக் காட்டினாள்.

"என்ன இருந்தாலும் இதர இடங்களில் தாராளமாக இருக்கப் பழகிவிட்ட பிறகு கிராமத்துக்கென்று தனிவேஷம் போட வருமா? வாசல் திண்ணையில் சிறிசுகள் வந்து உட்காரக் கூடாதென்கிற கிராமத்துச் சம்பிரதாயத்தை அவர்களால் முழுதும் அப்படியே அனுசரிக்க முடியுமா?" என்றாள் ஒருத்தி.

"ஆமாம், அதெல்லாம் வெறும் பூதஞ்சி. அதற்காக நம்ம ஊர்ப் பெண்கள் யாரும் கெட்டுப்போகமாட்டா. வெளியூர்ப் பெண்களெல்லாம் தப்பாத்தான் இருப்பா என்று இருக் காக்கும்?" என்றாள் லக்ஷ்மி.

"என்ன இருந்தாலும் புருஷன் எதிரே நின்னு நெளிச்சா ஒரு சமயம்போல் இருக்குமா? தப்பு வரத்தான் வரும். சுப்பு இருந்தாலும் மருமாள்களைக் கொஞ்சம் அடக்கத்தான் வேணும். அவளுக்கு இந்தச் சமாசாரம் தெரியாமலே இருந்தாலும் இருக்கும். அவ காதுலே போட்டு வைக்கணும். அவளா கட்டும், அவள் தம்பியாகட்டும், குழந்தைகளை ஒரு வார்த்தை சொல்றதில்லை. இஷ்டப்படி விட்டிருக்கா" என்றாள் ஒருத்தி.

"கோபாலையர் என்னத்தைத்தான் கவனிக்கிறார்? வீட்டுக் குள்ளே அடைஞ்சு என்னதான் பண்ணுவரோ? ஆத்துச் சங்கதியா, ஊர் விஷயமா, ஒண்ணைக் காதுலே போட்டுக்கக் காணம். கோவிலிலே பறையனைவிட்டு ஊர் இவ்வளவு ரெண்டு பட்டுதே; என்னவானும் தலையிட்டு விசாரிச்சாரோ? ஊருக்குப் பெரிய மனுஷ்யன் இப்படி இருந்தா ஊருக்கு க்ஷேமம் எங்கிருந்து வரும்? நாம்தான் பணம் இருக்குன்னு கௌரவம் வைக்கிறோம். அவர் அதுக்குத் தகுந்தபடி துளியானும் நடந்துக் கணுமே; கிடையாது. அவர் அந்தஸ்துலே இன்னொருத்தர் இருந்தா இப்படியா_கிராமம் கேள்வி முறையத்துக் கிடக்கும்? எவ்வளவோன்னு கெடுபிடியா, நன்னு இருக்கும்" என்றாள் ஒருத்தி ஆத்திரமாக.

"அவர் பெரிய வேதாந்தி மாதிரி இருக்கார்" என்று இன்னொருத்தி அதற்குச் சமாதானமாகப் பதில் சொன்னாள்.

"அவருக்கு விரக்தி ஏற்பட்டிருந்தா, சந்நியாசம் வாங்கிண்டு போறதுதானே? எதுக்குக் குடும்பத்துலே இருந்துண்டு கவனிக்காமல் இருக்கிறது? இவராலே ஊரேன்னு கெட்டுப்போறது? 'எது நடந்தாலும் கோபாலையர் அவர் பாட்டுக்குச் சும்மா இல்லையா? நமக்குமட்டும் பாடு படறதுக்கு என்ன தனியாக் கூழைக் கரைச்சுக் கொட்டி வைச்சிருக்'கூன்னு எல்லாரும் பேசாமே இருக்கா? பள்ளனெல்லாம் குளத்துப் பக்கம் தாராளமாக நடமாட ஆரம்பிச்சுட்டான். நாம் இருக்கச்சேகூடக் கண்டபடி போயிண்டிருக்கான்கள். இதுக் கெல்லாம் ஒரு புருஷா காதுலே போட்டுக்கக் காணமே? இதெல்லாம் எதுலேதான் கொண்டுபோய் விடப்போறதோ?" என்று அங்கலாய்த்தாள் ஒருத்தி.

"மத்தியான்னத்துலே, குளத்துலே இறங்கிக் குளிக்கக் கூடக் குளிக்கறான்கள் என்னுன்னு சொல்று?"

"இப்போ மத்தியான்னமா இருக்கும். கொஞ்ச நாள் போனா அவாளுக்குத்தான் குளம்னுகூட ஆயிடும், நம்ம புருஷா இப்படி விசாரமத்து இருந்தா."

"நல்லது பழகாது. கெட்டது நிமிஷமா வந்துடும்; கோபாலையரைப் பார்த்துச் சோம்பல் பட ஊரில் இருக்கிறவா ளெல்லாம் நன்னாக் கத்துண்டூட்டா. இன்னமே என்னதான் நடக்காது? காந்தி ஒத்தன் ஏழைகளைக் கைதூக்கிவிடக் கிளம்பி யிருக்கான். அதுலே எல்லாருக்கும் துணிச்சல் வேறே

வந்தூட்டுது. நம்மை விரட்டிவிட்டு அவாளே ஊரைச் சொந்த மாக்கின்டாலும் கேக்கறவா யாரு? முன்னே பிராமணனுக்கு இருந்த மரியாதைக்கும் இப்போ இருக்கிறதுக்கும் எவ்வளவு வித்தியாசம்?'' என்ருள் ஒரு பெரியவள்.

இந்தப் பேச்சில் மகாலக்ஷ்மியைச் சொன்னது மட்டில்தான் லக்ஷ்மிக்குத் தவருகப் பட்டது. பாக்கி விஷயங்கள் அவளும் முற்றும் ஒப்புக்கொள்ளுகிறவைகளே. அவள் பொழுது விடிந்தால் கணவரையும் பிள்ளைகளையும், ''எதிர் வீட்டுப் பிராமணனைப் பார்த்துக் கெட்டுப் போகாதீங்கோ. வயல் வரப்புகளைக் கவனிச்சுச் சரியாப் பண்ணுங்கோ. அந்தப் பிராமணனுக்கு எதோ அதிருஷ்டம், ஜன்மாந்தரத்துலே நல்ல பூஜை பண்ணியிருக்கான்; தானுகவே எல்லாம் நன்னு நடந்துண்டு போறது. அதுமாதிரி எதிர்பார்த்தா எல்லாருக்கும் நடக்காது. நம்ம காரியத்தை நாம்தான் பார்க்கணும்; சோம்பல் படப் படாது'' என்று எடுத்ததற்கெல்லாம் எச்சரித்துக்கொண் டிருப்பவள்.

கோபாலையரிடத்தில் எல்லாருக்கும் மனஸ்தாபந்தான். அவரை மாற்றும் வகைதான் ஒருவருக்கும் புலப்படவில்லை.

இவ்விதம் எல்லா ஸ்திரீகளுக்கும் தெரிந்த விஷயம், நமது நாணம்மாவுக்கோ சுப்புவுக்கோ எட்டவில்லையா என்ருல், நாணம்மாள் காதில் விழுந்தும் விழாதவள்போல் பாவனை செய்து வந்தாள். அவ்விதம் இருப்பதுதான் நன்மை என்பது அவள் எண்ணம். 'சொந்த மனுஷ்யர்களுடைய பொல்லாப்பு வராமே இருக்கணும்னு, விஷயம் தெரிஞ்சதாகவே காட்டிக்கொள்ளாமல் இருப்பதுதான் சாமர்த்தியம். பேச்சுக்கு இடமில்லாமே அப்படியே அடங்கிவிடும்' என்று தீர்மானித்திருந்தாள்.

அதன்படி வீட்டிலே தனிமையில்கூட அவள் அந்தப் பேச்சை எடுக்கவில்லை. 'நம் பிள்ளை அசடுதான் என்ருலும் இந்தப் பெண்களும் அடக்கமில்லாமல்தான் இருக்கிருர்கள்' என்பது அவள் எண்ணம். இருந்தும் இரண்டைப்பற்றியும் அவள் வாய் திறக்கவில்லை. அவள் மனம்போல நடப்பவர்கள் தானே அவள் வீட்டார்? அதனுல் யார் காதுக்கும் விஷயம் எட்டினதாகவே அந்த வீடு சம்பந்தப்பட்ட மட்டில் தெரிய வில்லை.

சுப்புவுக்கு ஊரெல்லாம் அமர்க்களப்படவிட்டுத்தானே எதுவும் தெரிகிற வழக்கம்? அவளோ, வயசாகி விட்டது

என்பதற்கு வேண்டி, குளத்துக்கோ வேறு இடத்துக்கோ போவ தில்லை. அவள் தம்பிக்கும் ஊருக்குந்தான் சம்பந்தமே கிடையாது. வீட்டுக்கு ஊர் வம்பைக் கொண்டுவரக் கூடியவர் கள் யாரும் இல்லை. அவளுக்கு வம்பிலே சுவாரசியம் இருந்தால் அல்லவோ ஊரார் தாமாக அவளைத் தேடி வந்து வம்பை வளர்த்துவிட்டுப் போவார்கள்? அது இல்லாமல் இருக்கும் போது ஊர்ப் பேச்சுத் தானுக வந்து காதில் விழுமா என்ன? ஆகையால் எத்தச் சங்கதியும் எல்லோருக்கும் தெரிந்து பழசாகப் போன பிறகுதான், நாணம்மாள் மூலமாகவோ, வேலைக்காரக் கிருஷ்ணன் மூலமாகவோ அவளுக்கு எட்டுகிற வழக்கம்.

ஆனால் இந்தச் சமாசாரத்தை அவளிடம் தெரிவிக்க வேண்டு மென்று கர்ம சிரத்தை கொண்ட சிலர் அதைச் சாமர்த்திய மாகத் தாங்களே வந்து சொல்லி அவள் காதில் படவைத்தார் கள். மகாலக்ஷ்மியைக் கண்டித்து அடக்கவேண்டுமென்பது சில ஸ்திரீகளுடைய தீர்மானமான அபிப்பிராயம். 'அவள் படித்துப் பட்டணத்துப் பெண்ணுக இருந்தால் என்ன? அதற்காக அந்த மேலப்பாளையத்து ராஜுவோடு கண்டபடி பழகுகிறதா? அதனுல் தான் இதுமாதிரியெல்லாம் நேருகிறது' என்று தொனிக்கும் படியும் சொல்லிப் போனுர்கள்.

சுப்புவுக்கு, 'இதென்ன, விஷயம் பெரிதாயிருக்கிறதே' என்று தூக்கிவாரிப்போட்டது. 'சுப்புணியின் போக்கிரித்தனம் இவ்வளவு தூரத்துக்கு வருமோ? நாணம்மாவும் அவாத்துக் காரரும் இப்படித்தான் அவனே அடக்காமே விட்டிருப்பாளோ? அம்மாஞ்சி காதுலே பட்டால் என்னமா இருக்கும்? இப்பத் தானே ஜெயிலுக்குப்போகாமே பார்த்துச் செஞ்சிருக்கான் அம்மாஞ்சி? அதுக்குள்ளே அது மறந்துபோச்சா? போயி ஒரு மண்டு சுப்புணியை, அவம்மாவை, ஏன் கணபதி அண்ணுவைக் கூடத்தான் சண்டைப் பிடித்துவிட்டு வரவேணும்'' என்று ஆத்திரம் துடித்தது அவளுக்கு. கோபாலனிடம், ''கேளுடா இந்த அக்கிரமத்தை'' என்று தான் கேள்விப்பட்டதைச் சொல்லி, ''இதுக்குப் பேசாமே இருக்கலாமோ?'' என்று கோபமாகச் சொன்னுள்.

''பேசாமே இராமே என்ன பண்றது? எதையாவது கேட்டா நமக்குள்ளே விரசமாப் போயிடும். சும்மா விட வேண்டியதுதான். ஆத்திரப்பட்டுப் பிரயோஜனம் இல்லை'' என்று கூறிவிட்டார் அவர்.

'இவன் ஒன்றுக்கும் கையாலாகாதவன். எதுக்கும் இப்படியா மர மாம்பழமா இருப்பா? இப்படி இவன் இருந்தா யாருக்குத்தான் பயம் இருக்கும்? யாருதான் என்ன தப்புத் தான் பண்ணமாட்டா?' என்று சுப்புவுக்குத் தம்பியிடம் தாங்க முடியாத வெறுப்பு வந்தது. தானுகப் போய் நாணம்மாவிடம் கேட்டுத் தன் ஆத்திரத்தைத் தணித்துக் கொள்ளவும் துணிவு ஏற்படவில்லை. 'அவள் எப்படி எடுத்துக் கொள்ளுவளோ? என்னத்தையெல்லாம் பதிலுக்குச் சொல்லுவளோ? அவளுக்குச் சரியாச் சண்டைபோட யாரால் முடியும்?' இந்த யோசனைகள் வந்த பிறகு அவள் தைரியமாக நாணம்மாவைப் பார்த்துக் கேட்பதெப்படி? யோசனைகளுக்கு இடம் கொடுத்த பிறகு கோபந்தான் நம்மையும் மீறி எப்படி வரும்?

ஆனுல் இவ்வளவு யோசனைகளும் ஒன்று சேர்ந்து, ஞானத்தின் சாந்திக்கல்யாணத்துக்காக அவர்கள் மதுரை புறப்படுமுன், சொன்னபடி அவர்களைப் பார்த்துப் போக வந்த தர்மராஜு-வோடு, மகாலக்ஷ்மி பேசிவிட்டு வரவும், ஆத்திரமாக அவள் பேரில் பாய்ந்தன. 'இப்படிக் கண்ட புருஷர்களோடு பேசினு, தப்பு வராமே என்னதான் பண்ணும்? அதுதான் சுப்புணிக்கும் துணிச்சல் இருந்திருக்கு. எல்லாம் இந்தப் பெண் அசடு வழியறத்துலே வருகிற தப்புத்தான்.' இதுமாதிரி நினைத்து அவளுக்கு மகாலக்ஷ்மியிடம் கோபம் அசாத்தியமாக வந்தது.

''ஏண்டி, அந்தப் பிள்ளையோடே என்ன பேச்சு?'' என்று அதட்டினுள்.

''நாம் ஊருக்குப் போகிறதை விசாரிக்க வந்தான், அத்தை!'' என்று மகாலக்ஷ்மி சொன்னதற்கு, ''ரொம்பத்தான் நன்னுருக்கு. அவன் உன்னை விசாரிக்கிறதும், நீ அவனுக்குச் சொல்றதும்! இது மாதிரியெல்லாம் பண்ணுதே. ஊரெல்லாம் சொல்ற சொல்லு, என் மானம் போறது'' என்ருள் அத்தை.

''பேசினு என்ன தப்பாம், அத்தை? அவரும் அவனும் அண்ணன் தம்பி மாதிரி பழகறவாளாச்சே'' என்ருள் மகாலக்ஷ்மி. அவளுக்கு அத்தையின் கோபம் புரியவில்லை.

''நன்னுருக்கு! அண்ணுவுமாச்சு, தம்பியுமாச்சு! அவன் ஏதோ ஜாதி. அவனைப் போய் இது மாதிரி சொல்றயே? லக்ஷணந்தான். பட்டணவாசத்துத் தோரணையெல்லாம் இங்கே சரியா வராது, தெரியுமா?''

"அதில்லே அத்தை. மாப்பிள்ளை அதுமாதிரி நினைக்கிற போது, நான் வித்தியாசமா இருந்தா அவருக்குக் கோபம் வரும்" என்றாள் மகாலக்ஷ்மி.

'என்னடி, மகாப் பெரிய அவர்! அவரை இங்கே யாருக்காவது தெரியுமா! மகாச் சீமையிலேருந்து வந்தவன். அவராம் அவர்! அவர் சொல்றதும், அதை நீ நடத்தறதும் ரொம்ப நன்னாருக்கு! ஊரெல்லாம் சிரிக்கிறது. அப்புறம் பேரு ஊருன்னு கட்டிப்புடுவா. அப்படி ஏதாவது வந்தூட்டா லேசிலே மாறுமா? பொம்மனாட்டி ஜன்மமாச்சே! அவன் சொல்றபடி நீ ஆடற பதிவிரதைத்தனத்தைப் பட்டணத்துலே வக்சுக்கோ; இங்கே வாண்டாம்" என்று அத்தை ஒரே அதட்டாக அதட்டினாள்.

'இதென்ன, அத்தைக்கு நம்மிடம் இப்படிக் கோபம் வருகிறதே!' என்று மகாலக்ஷ்மி புரியாமல் திகைத்தாள். தர்மராஜுவோடு பேசுவது அவ்வளவு தவறா? அவள் கணவன் விரும்புகிறபடி அவள் வெட்கப்படாமல் சாதாரணமாக நடந்து கொள்ளுகிறாள். அதில் தவறு ஏது? அவளுக்குத் தெரியவில்லை.

அவள் மனம் சந்தேகத்தில் கிடந்து உழன்றது. அந்தச் சந்தேகத்தை நிவர்த்தித்துக்கொள்ள அவள் யாரிடம் உதவிக்குப் போவாள்? குழந்தைகள் மனம் நோகாமல் அன்பாக வழி காட்டக் கூடிய தாயைத்தான் அவள் என்றோ இழந்துவிட்டாளே? அத்தைக்கு அவ்வளவுக்குப் பொறுமை ஏது? 'இந்தப் பெண் தாறுமாறாக நடந்து, தான் அதைத் திருத்தவேண்டும் என்னும்படி எதற்காக நேருகிறது?' என்றுதானே அவள் கஷ்டப்பட்டுப் போகிறாள்? அதற்குமேல் விஷயத்தை நிதானித்துத் தெளிந்து ஆராய்ந்துகொண்டு, புத்திமதி சொல்ல அவளுக்குச் சக்தி இல்லையே!

## 28

# அவமதிப்பு

**மீ**னாவிடம், "அத்தை சொல்லுகிறதைக் கேட்டயாடி? பெரிய தப்பு மாதிரி கோவிச்சுக்கறாளே!" என்று மகாலக்ஷ்மி வருத்தப்பட்டபோது, "அத்தை வார்த்தையை நீ பெரிசா எடுத்துக்காதே. அவள் இப்படித்தான் ஏதேதோ சொல்லுகிறாள். அவளுக்குத் தான் சொல்லுவதே சரியாகப் புரியற தோன்னுகூட எனக்குச் சந்தேகமா இருக்கு" என்று சமாதானம்

சொன்னாள் மீனா. 'நாம் அன்று மகாலக்ஷ்மி கூப்பிட்டபோது அவளோடு போயிருந்தால் இவ்வளவு வார்த்தைகளுக்கு இடம் வந்திராது. நம் பேரில் அது தப்பிதம்' என்று அவள் மனச் சாட்சி அவளைக் குறை கூறிற்று. 'அதனால் தானே சுப்புணி, மகாலக்ஷ்மியைத் தனித்துப் பார்க்க நேர்ந்தது? அதன் விளை வாகத்தான் அத்தை ஒன்றுக்கொன்று நினைத்துக் கோபித்துக் கொள்ளுகிறாள்', என்று நினைத்துத் தனக்குத் தானே வருந்தினாள் மீனா.

கிருஷ்ணனுக்குச் சுப்புணியின் சமாசாரம் தெரிந்தபோது அவன் தனக்குள்ளாகவே, 'இம்புட்டுக் கொளுப்பு ஏறிட்டுதா? தனியா அம்புட்டுக்கிடட்டும்; அப்போ என்ன நடக்கிறது பாப்பம். முன்னே உதைபட்டது பொய்யும், இப்போ மெய்யுமா ஆளுங்களை உட்டுப் பண்ணிப்புடச் சொல்றேன்' என்று கறுவினான்.

"என்னைத் துணைக்கு இட்டுப் போகாமே, எங்கும் நீ தனியாப் போவாதே தாயி" என்று மகாலக்ஷ்மியிடம் சொன்னான்.

அம்மாஞ்சி, கணபதி சாஸ்திரியிடம் நேரில் சொல்லி அனுப்பினதோடு நிறுத்திக்கொள்ளாமல் கடிதம் வேறு போட்டுக் கோபாலையர் அகத்தில் எல்லாரையும் வரச் சொன்னார்; சங்கரனையும் மீனாவையும் பிரத்தியேகமாக அழைத்தார். சங்கரனுக்கு, நாராயணனுடைய பெருமைகளைப் பார்த்துக் கொண்டு அங்கே போகப் பிடிக்கவில்லை. ஆனால் நாணம்மாளும் கணபதி சாஸ்திரியும் அம்மாஞ்சி செய்திருக்கும் உபகாரத்தை எண்ணி, "அவர் அழைக்கும்போது போகாதிருக்கப்படாது" என்று கண்டித்துச் சொல்லி அனுப்பி வைத்தார்கள்.

கிருஷ்ணனை முதலில் வீட்டுக்குக் காவலாக நிறுத்த உத்தேசித்தாள் சுப்பு. பொறுப்பாக இருக்கத் தானும் இல்லாமல், அவனும் இல்லாமல் வேறு ஆட்களிடம் வீட்டுக் காவலை ஒப்பித்துவிட்டுப் போகக்கூடாது என்ற எண்ணம் அவளுக்கு. ஆனால் கிருஷ்ணன் அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. "வீட்டை யாரோ தூக்கிண்டு போறாங்க" என்று சொல்லித் தானும் போகவேண்டும் என்பதில் பிடிவாதமாக இருந்தான். அவன் முன்பே சங்கரனுக்கு உத்தியோகம் சம்பாதித்துக் கொடுக்க அம்மாஞ்சியைப் பார்த்து வரவேண்டுமென்று ஆவலாக இருந் தான். சுப்பு, ஏதேதையோ சொல்லி நிறுத்தி வந்தாள். அம்

மாஞ்சியே அவனை அழைக்கும்போது அதுமாதிரி நிறுத்த அவன் விடுவானா?

சுப்பு கடைசியில் வேண்டா வெறுப்பாக ஒப்புக்கொள்ளும் படியாயிற்று. இவ்வளவுக்கும் ஞானத்தின் புக்ககத்திலிருந்து ஓர் அழைப்புக் கிடையாது. அவர்கள் வீட்டில் விசேஷம் நடக்கும்போது அவர்கள் அழைக்க வேண்டாமோ? 'ஆனால் நமக்கென்ன? அம்மாஞ்சி கூப்பிடுகிறான்; போகாவிட்டால் நன்றாயிராது' என்று நினைத்துத்தான் அவர்கள் கிளம்பினார்கள். திருநெல்வேலியில் தங்கி இருக்க அவர்களுக்குச் சாரதாவின் அகம் இல்லையா? அவளையும் பார்த்து எவ்வளவோ நாள் ஆகி விட்டனவே!

ஒரு விமரிசையும் இல்லாமல் விசேஷம் நடந்ததில் தர்மாம்பாளுக்குக் குறை இல்லை. வர வர இந்த நாளில் இந்தக் கல்யாணத்தை யாருமே செய்கிறதில்லை. ஏதோ சிலர்தாம், வைதிகமாக இருப்பவர்கள் சாஸ்திரத்தை விடாமல் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஸப் ஜட்ஜ் சம்சாரம் காட்டின அவமரியாதைதான் அவளுக்குப் பொறுக்க முடியவில்லை. தனக்கு ஏதோ இருதயப் படபடப்பு என்று படுக்கையில் படுத்துக்கொண்டு, வந்தவர்களை 'வா' என்று அழைக்கும் சிரமத்தைக் கூட அவள் வைத்துக்கொள்ளவில்லை. அவ்வளவுக்குப் 'பெரிய உடம்பு' என்கிற பாவனையில் அவள் இருந்தாள். வெறும் நாளில் அவர்கள் வீட்டுச் சாப்பாட்டுச் சம்பிரமத்தைப்பற்றி அவள் எவ்வளவோ பெருமை அடித்துக்கொள்வதைத் தர்மாம்பாள் கேட்டிருக்கிறாள். அப்படி இருக்க, விசேஷத்துக்கென்று ஒரு தித்திப்புப் பக்ஷணங்கூட இல்லாமல் நடத்தினது வேண்டுமென்று அலட்சியம் செய்யும் எண்ணத்தினால் அல்லாமல் வேறு என்னவாக இருக்கும்? யார் யார் வந்திருக்கிறார்கள், என்ன என்ன செய்திருக்கிறார்கள்? ஒன்றையுமே ஒருவரும் பார்க்கவில்லை. அவள் எவ்வளவோ ஆசை ஆசையாகப் பார்த்துப் பார்த்துப் பெண்ணுக்குச் சீர் எடுத்திருக்க, அதைக் கவனிப்பாரே இல்லையென்றால் எந்த ஸ்திரீயின் மனத்துக்குத்தான் சமாதானமாக இருக்கும்? கல்யாணத்தின்போது இவர்கள் செய்த சீர் வகைகள் போதாது என்பதுபோல் நினைத்துப் பேசின சம்பந்தியம்மாள், இப்போது அவைகள் இன்ன இன்ன என்பதைக்கூடக் கவனித்துக்கொள்ளவில்லை. தான் பெருமைப்பட்டுக்கொள்ளும்படி சிலாகிப்பான சொல் தன்னையும் மீறி

வந்துவிட்டாலோ என்கிற பயந்தான் அவள் அவ்விதம் வாய் திறவாமல் இருப்பதற்குக் காரணம் என்று தர்மாம்பாள் நினைத்தாள். எல்லாவற்றுக்கும் மேலாக அம்மாஞ்சியை அவர்கள் செய்த அலட்சியந்தான் தர்மாம்பாளுக்கு மிகவும் பொறுக்க முடியவில்லை. தந்தையும் மகனும் சம்பந்தியம்மாளின் படுக்கையையே சுற்றி வந்து அவளுடனேயே பொழுது போக்கினார்கள். வந்திருப்பவர்களைத் திரும்பிப் பார்த்து ஓர் உபசாரம் செய்யவில்லையென்றால் தர்மாம்பாளுக்கு வயிறு கொதிக்காமல் என்ன செய்யும்?

'என்னதான் உடம்புக்குப் பிரமாதமாக வந்துவிட்டது? ஒரு தகுந்த மனுஷ்யன், வீட்டுக்கு வந்திருக்கும்போது இப்படித்தான் ஒருவர் தம் மனைவியின் காலடியில் வெட்கமில்லாமல் உட்கார்ந்திருப்பாரோ? பிள்ளைதான் ஆகட்டும், மாமனாரும் அவரைச் சேர்ந்தவர்களும் வந்திருக்கிறார்களே என்று துளியாவது எண்ணமில்லாமல் அம்மாவைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறானே! வேட்டகத்தவர்களைப் பண்ணும் அவமதிப்பு இவனைச் சேர்ந்தது ஆகாதா? அப்படியும் மாமனார் ஏதாவது சாமான்ய மனுஷ்யரா? தகுந்த உத்தியோகஸ்தர் அல்லவா? அத்தான் கோபாலையர் ஊரெல்லாம் மதிக்கும் பணக்காரர்; மாமனாருக்குச் சம்பந்தி வேறு. இவர்கள் வீட்டுக்கு நித்தியம் வருகிறவரா? அவரையுமா சேர்த்து அலட்சியம் செய்கிறது? நாராயணன்தான் ஆகட்டும்; பள்ளித் தோழன்; பரீக்ஷைகளில் முதல் முதலாகத் தேறி வரும் அவன் புத்திக்கு மதிப்பு அளிக்க வேண்டாமா? அப்படி என்ன இவன் அம்மாவை ரேழியில் தூக்கிப்போட்டுக் கிடக்கிறது? போட்டிருந்தாலுமே இவன் சுற்றி வந்து தாங்குவதால் போகிற உயிர் போகாமல் நின்றுவிடுமா?'

தனியே யாரைத்தான் குற்றம் சொல்லுகிறது? அம்மா, அப்பா, பிள்ளை மூவரிடத்திலுமே தர்மாம்பாளுக்குத் தப்புத் தோன்றிற்று. எவ்வளவோ சாதுரியமாகப் பேசிச் சபை நிறுத்தும் சம்பந்தியம்மாள், ஏதோ புதிதாகப் பார்க்கிறவர்களிடம் போல ஒன்றிரண்டு வார்த்தையோடு நிறுத்திக்கொள்ளுகிறாள். படுக்கையில் இருந்தாலும், வந்திருப்பவர்களை, 'சாப்பிட்டீர்களா?' என்று கேட்கும் வாய் வார்த்தைக்குப் பஞ்சமா? 'இந்தப் பெண் அகத்துக்கு வந்த முகூர்த்தம் என்னைப் படுக்கையில் தள்ளிவிட்டது' என்று ஞானத்தின் பேரில் குற்றம்

வேறு சொல்லுகிருளே! என்ன பொல்லாத்தனம்? தர்மாம்பா ளுக்கு எப்படி இருக்கும்? அவளுக்கு அருமையாய் ஒரே மகள்: எவ்வளவோ ஆசையின்பேரில் இவர்கள் பிள்ளைக்கு மேல் விழுந்து கொடுத்திருக்கிருள். அதற்குப் பலன் இதுவா?

அவர்கள் ஓர் அழைப்புக் கடிதம் போடாமல் இருக்கும் போது, இவ்வளவு பேரையும் தாம் அழைத்து வந்தது பிசகு என்று அம்மாஞ்சி உணர்ந்தார். நல்ல காலம், சுப்புவோ கோபாலனே இதையெல்லாம் அதிகம் தெரிந்துகொள்ளுகிற வர்கள் அல்ல. அவர்கள் கவனியாமல் ஒரு போக்காயிருப்பதும் இந்தச் சந்தர்ப்பத்தில் சௌகரியமாகவே இருந்தது. வேறு மனிதர்களானல் இருக்கும் நிலையைக் கவனித்துக்கொள்வதோடு, அதைப் பின்னும் பேசிப் பெரிதாக்கிவிட மாட்டார்களா? சாரதாவின் புக்ககம் அருகில் இருந்தது வேறு பெரிய நன்மை யாகப் போயிற்று. அவர்கள் வீட்டில் இரண்டு நாள் தங்கச் சந்தர்ப்பம் கிடைத்ததில் எல்லோருக்கும் மிகுந்த சந்தோஷம்: சாரதாவின் மாமனர், மாமியார், அவள் கணவன் உட்பட எல்லாரும், இந்த மட்டில் இவ்வளவு தூரம் வந்து தங்கள் வீட்டில் தங்கினர்களே என்று சந்தோஷம் மேலிட உபசரித் தார்கள்: கோபாலையர் வருவது அத்தி பூப்பது போல்வ தல்லவா? அதைக் கொண்டாடாமல் சும்மா இருப்பது எப்படி?

'ஒரு யோக்கியதையும் அற்ற கோபாலையருக்கு இவ்வளவு நல்ல சம்பந்தம் வாய்த்திருக்கிறதே!' என்று தர்மாம்பாளுக்குப் பொருமைகூடத் தோன்றத் தொடங்கிற்று. தன் சம்பந்தி களுக்கும் அவர்களுக்கும் உள்ள வித்தியாசம் தெளிவாகத் தெரிந்தது. அவள் மனசை அது உறுத்திற்று.

தர்மாம்பாள் அங்கலாய்த்துக் கொண்டபோது, "எல்லாம் நாமாகச் செய்துகொண்டது; என்ன செய்கிறது?" என்று அம்மாஞ்சி விரக்தியாகப் பதில் சொல்லிவிட்டார்.

'சம்பந்தியம்மாள் இருக்கும் மாதிரியைப் பார்த்தால் நம்முடைய பெண் கஷ்டப்படும்படி இருக்கும்போல் இருக் கிறதே! பிள்ளை இந்தக் காலத்துக்கு முற்றும் விநோதமாக, 'அம்மா கோதண்ட ராமனக' இருக்கிருனே! அவனும் அம்மா வோடு சேர்ந்துகொண்டு பெண்டாட்டியைப் படுத்தினல் என்ன செய்வது?' - தர்மாம்பாளுடைய இந்த விசாரங்களுக்கு யார் சமாதானம் சொல்ல முடியும்?

இவ்வித மனத்தாங்கலோடு ஞானத்தைமட்டும் விட்டுவிட்டு ஊர் திரும்பினார்கள் அவர்கள். 'குழந்தைகள் சேர்ந்திருக்கட்டும்' என்று அன்பாகச் சொல்லுவதற்குப் பதிலாக, ''நான் படுத்துண்டுட்டேன்; வீட்டுக்கு ஓர் ஆள் வேணும்; ஞானத்தை விட்டுவிட்டுப் போங்கள்'' என்று நாட்டுப் பெண்ணைத் தங்களிடம் நிறுத்திக்கொண்டாள் சம்பந்தி அம்மாள். மாப்பிள்ளை கோவிந்தராஜனும், ''அம்மாவைப் பார்த்துக்கொள்ளவேணும்! இருக்கட்டும்'' என்றுதான் சொன்னான்.

'நம் பெண் இவர்கள் வீட்டு வேலைக்காரியா?' என்று எண்ணினாள் தர்மாம்பாள். பெண் ஒரு வேலையும் செய்யாமல் சோம்பி உட்கார்ந்திருக்க வேண்டுமென்பது அவள் விருப்பம் அல்ல. ஆனாலும் அன்பாக ஒரு சொல்லின்றி, அவர்கள் சொல்லும் மாதிரிதான் அவளை வருத்தியது. பெண்ணிடம் வாஞ்சை சிறிதேனும் இருந்தால், தங்களிடம் மரியாதை துளியாவது இருந்தால், அவர்கள் இதுமாதிரி பேசுவார்களா? புதிதாகத் தங்கள் வீட்டுக்கு வந்திருக்கும் மாட்டுப்பெண்ணிடம் உண்மையில் எவ்வளவு உள்ளன்பு காட்ட வேண்டும்? இவர்கள் மேலுக்குக் கூட அதுமாதிரி இல்லையே! அவர்கள் வீட்டில் மகாலக்ஷ்மி எப்படி இருக்கிறாள், குழந்தையாக விளையாடிக்கொண்டு? அவள் கணவர் அவளிடம் தந்தைக்கும் மேலாகவன்றோ பிரியம் காண்பித்து நடத்துகிறார்? - இதுமாதிரி விஷயத்தைச் சீர் தூக்கிப் பார்த்து மனம் நொந்துபோனாள் தர்மாம்பாள்.

சுப்பு இந்த விஷயம் ஒன்றையும் அதிகம் கவனித்தவளாகத் தெரியவில்லை. சாரதாவுடன் அவர்கள் வீட்டில் ஆசார உபசாரமாக இரண்டு நாள் தங்கினது அவளுக்குப் பரம சந்தோஷம். சாரதாவின் மாமியார் வேறு, தாங்கள், குழந்தைகளின் ஜாதகங்களைப் பரிசோதித்துப் புத்திர பாவத்துக்குப் பரிகாரமாகச் செய்தவைகளையும் சொல்லக் கேட்டுச் சீக்கிரத்திலேயே அதற்குப் பலன் ஏற்படும் என்று பரம திருப்தி கொண்டாள்.

சாரதா புக்ககத்தில் சந்தோஷமாக இருப்பதைப் பார்த்த திருப்தியில், கிருஷ்ணன், தான் முக்கியமாக வந்த காரியத்தை மறந்துவிடவில்லை. சாரதாவும் மகாலக்ஷ்மியும் நன்றாக இருந்தால் போதுமா? மீனாவும் அவர்களைப்போல் சந்தோஷமாக இருக்க வேண்டாமா? எசமான் குழந்தைகள் எல்லாரும் நல் வாழ்வு வாழ்வதில்தானே அவனுக்குச் சந்தோஷம்?

அம்மாஞ்சியிடம் சங்கரனுக்கு வேலை பார்த்துக் கொடுக்கும்படி பெரிதாகச் சிபாரிசு செய்தான். "சின்னப் பிள்ளை படிச்சிட்டுச் சும்மா இருந்தா, புத்தி மழுங்கிப் போவாதா? கண்டபடி யோசனைதான் தோணுதா? நம்ம குளந்தைதானே கஷ்டப்படணும்? என்னவானும் பார்த்துப் பண்ணுங்கோ" என்று வேண்டிக்கொண்டான்.

அம்மாஞ்சிக்கும் சங்கரனை நெருங்கிக் கவனித்துப் பார்த்ததிலிருந்து அவன் இருக்கும் மாதிரி சரி அல்ல என்றுதான் தோன்றிற்று. அவன் ஒருவருடனும் கலக்காமல் சதா தனக்குத்தானே சிந்திப்பவனாகவும் காணப்பட்டான். அப்படி ஏதாவது வாய் திறந்தாலும் நிஷ்டூரமான சொற்களே அவனிடமிருந்து வெளிவருகின்றன என்பதையும் கவனித்துக்கொண்டார். அவ்விதம் அவன் இருப்பதற்கு, தன்னிடமே அவனுக்குத் தோன்றும் குறைவுகளே காரணம் என்று அநுபவம் நிறைந்த அவர் தெரிந்துகொள்வது கஷ்டமா? என்றுமே அந்தக் குழந்தைகளிடம் அவருக்குப் பிரியம் உண்டு. 'எதையும் மேல்போட்டுக்கொண்டு நடத்தாமல், தன் பாட்டில் இருக்கும் தந்தையால் அவர்களுக்கு என்ன ஆதரவு?' என்றும் நினைப்பவர். மீனாவிடம் வயசுக்கு மேற்பட்ட அறிவும் அடக்கமும் இருந்தன. இது அவரைப் பின்னும் அதிகம் கவர்ந்திருந்தது. அந்தக் குழந்தைக்கு நன்மையைச் செய்யவேண்டியது தம் கடமை என்று நினைத்தார்.

வேலையாளானாலும் கிருஷ்ணன் தெரிந்து சொல்கிறான். ஏதாவது 'வேலை வெட்டி' என்று இருந்தால், அதில் புத்தி சென்று, வேண்டாத குயுக்திகளுக்கும் இடம் கொடாமல் சரி பண்ணும். பிறரையும் தன்னையும் ஒப்பிட்டுப் பார்த்துத் தன்னிடத்தில் தோன்றும் குறைவுகளுக்குப் பிறரைக் குறைகூறி வெறுக்கும் கெட்ட சுபாவம் மாறித் திருந்தக் கூடும். ஆகையால் தம்மால் ஆன உதவியைச் சங்கரனுக்குச் செய்து போலீசில் ஏதாவது வேலை சம்பாதித்துக் கொடுக்கவேண்டும் என்று எண்ணினார்.

அவர் இலாகாவில்தானே அவருக்கு ஏதாவது செய்ய முடியும்? 'இன்டரி'ல் தோற்றுப்போன அவனுக்கு, ஒரு ஹெட் கான்ஸ்டேபிளோ, அதிகச் சிபாரிசில், முடிந்தால் ஒரு ஸப் இன்ஸ்பெக்டர் உத்தியோகமோதான் அவர் செய்யக்கூடியது. அதுவும் அவர் சொல்லுக்கு மேலதிகாரிகள் வைத்திருக்கும் மதிப்பினால் நடக்கக் கூடியது. சாத்தூர்போல அருகிலுள்ள

இடத்தில் இது மாதிரி ஒரு வேலை செய்து வைத்துவிடுவோம் என்கிற எண்ணத்தில் அதற்கு மனுப் போடும்படி சங்கரனிடத்தில் சொன்னபோது, அவன் அதைச் சரியாகவே ஏற்றுக்கொள்ளவில்லை. 'இவர் என்ன நமக்குத் தயவு காட்டுகிறது?' என்கிற தோரணையில் அலட்சியமாக இருந்தான். ''நீ ஊருக்குப் போய் அப்பா அம்மாவைக் கலந்துகொண்டு எழுதிப் போடு, போதும்; அதற்கு வேண்டிய காகிதங்களை மட்டும் கையோடு கொண்டுபோ'' என்று சொல்லி அவைகளை அவனிடம் கொடுத்தார்.

கிருஷ்ணனுக்கு அதைப் பார்த்தபோதுதான், தான் நினைத்த காரியம் அவ்வளவு எளிதல்ல என்பது தெரியவந்தது. 'வேலை செய்து வைக்கிறவர்கள் இருந்தால் வாங்கிக்கொள்ளுகிறவர்களுக்கு என்ன கசப்பு?' என்று அவன் இதுகாறும் நினைத்திருந்தான். 'அம்மாஞ்சி சிரமப்பட்டுப் பண்ணிவைத்தாலும் இவன் அதை ஏற்றுக்கொள்ள மாட்டான்போல் இருக்கிறதே!' என்கிற சம்சயம் இப்போதுதான் அவனுக்கு உதயமாயிற்று. 'ஊருக்குப் போயி அவுங்க அப்பா அம்மா மூலமாகத்தான் காரியத்தைச் சாதிச்சிக்கணும்' என்கிற தீர்மானத்துக்கு வந்தான்.

இவ்வளவும் கிருஷ்ணனுடைய முயற்சிகளாகவே இருந்தன. கோபாலையருக்கு யாதொரு சம்பந்தமும் இருந்ததாகத் தெரியவில்லை. ''வேலைக்குப் போவது நல்லதுதான்'' என்கிற தமது தெளிந்த அபிப்பிராயத்தைச் சொல்வதற்குமேல் தாம் அதுபற்றிச் செய்யவேண்டிய ஒன்றும் இருப்பதாகவே அவர் நினைக்கவில்லை.

## 29

## ஆசாரம் குலைந்தது!

பழம் வேண்டாம் என்கிற குரங்கு உண்டா? நாணம்மாளும் அவள் கணவரும் இதைக் கேட்கவும், ஒரு விநாடியும் தாமதிக்க விரும்பவில்லை. வேலையைச் சம்பாதித்துக் கொள்ளும் பிரயத்தனத்தில் உடனே இறங்கிவிட்டார்கள். ''ஸப் இன்ஸ்பெக்டர் வேலை பெரிய கலெக்டர் வேலையாக்கும்!'' என்று சங்கரன் முணு முணுத்ததற்கு, ''போடா, நீ படித்திருக்கிற படிப்புக்கு இதற்கு மேலே கிடைக்குமாக்கும்! பக்கத்தில் ஐம்பது, நூறு சம்பாதித்தாலும், வெளியிடத்தில்

ஆயிரம் ரூபாய் சம்பாதிப்பதற்குச் சமானம். யார் இந்த உத்தியோகம் தரா? என்னவோ அம்மாஞ்சி புண்ணியத்துலே கிடைச்சாத்தான். நம்ம நல்ல காலம், அவருக்கு மனசுலே தோணியிருக்கு. அதிகார தோரணையிலே போலீசு உத்தியோகம் சின்னதாயிருந்தாக்கூட லேசா? தானுக வருகிற சீதேவியைக் காலால் உதைக்கிறமாதிரி அதுக்குப் பண்ண வேண்டிய பிரயத்தனத்தைப் பண்ணுமே விடுவாளோ? கிளம்பு, அம்மாஞ்சியிடம் போவோம்'' என்று சங்கரனுக்குப் பேச இடம் கொடாமல் அடித்து, அவனை அழைத்துக்கொண்டு மதுரைக்குப் புறப்பட்டுவிட்டார் கணபதி சாஸ்திரி.

'அந்தமட்டும் நல்ல காலம்' என்று கிருஷ்ணனும் வேலை ஆகிவிட்ட மாதிரியே திருப்தி கொண்டான். நாணம்மாளும், கணபதி சாஸ்திரியும் முனையத் தொடங்கிவிட்டார்கள் அல்லவா? இனிச் சங்கரன் ஆக்ஷேபிப்பது ஏது?

தங்களோடு பத்து நாள் இருந்து போக வந்திருக்கும் நாராயணனைப் பார்த்துத் தன் கணவன் பொருமைப்பட்டுக் கண்டபடி மனத்தைப் புண்படுத்திக்கொள்ளாமல் சமயத்தில் விலகிச் செல்வது மீனுவுக்குப் பெரிதும் நன்மையாகத் தோன்றிக்கொண்டிருந்தது. நாராயணன் இப்போது பி. ஏ. யில் ராஜதானிக்கே முதல்வனுகத் தேறியிருக்கிற சங்கதி ஊரில் எல்லோருக்கும் தெரிந்திருக்கிறதல்லவா? அதற்கு அவனை ஊரார் பெருமையாக நினைத்திருக்கிறுர்கள். ஊரில் சின்னப் பரீட்சைகளிலேயே தேற முடியாமல் பிள்ளைகள் திணறிக்கொண்டிருக்கும்போது அவன் பெரிய பரீட்சையில் ராஜதானிக்கே முதல்வனுகத் தேறி மெடல் வாங்குகிறுனென்ருல் அவர்களுக்கு எப்படித்தான் அதிசயமாக இராது? பிருகஸ்பதியே மனித உருக்கொண்டு வந்துவிட்டால் எப்படியோ அப்படித்தான் இருந்தது அவர்களுக்கு. ஊர்க் குடியானவர்கள் முதல் அவனை வந்து பார்த்து அவன் பேச்சைக் கேட்க ஆவலாக இருந்தார்கள்.

'மாப்பிள்ளை சாமி' - அவனை அவர்கள் அவ்விதந்தான் அழைத்தார்கள் - சொல்லும் சொல்லுக்கு மாற்று இருக்குமென்றே அவர்கள் நினைக்கவில்லை. அவனிடத்தில் ஏற்பட்டிருந்த மதிப்பில், அவனுடைய வெறும் பேச்சும், செய்கைகளுங்கூடப் பெரிய விஷயங்கள் அடங்கினவைகளைப்போல அவர்களுக்குத் தோன்றிக்கொண்டிருந்தன. அதற்கு ஏற்றபடி அவனும்

அவர்களிடம் சிறிதும் கர்வமின்றிப் பழகிக்கொண்டு அவர்கள் பிரியத்தை மேலும் சம்பாதித்துக்கொண்டான். அவன் வயல், வரப்பு, தோட்டம், துரவு, இப்படியாகப் பார்வை இட்டுக் கொண்டு அவர்களிடம் சகஜமாகப் பேசும்போது அவர்கள் தாமாகவே தங்கள் அநுபவத்தினுல் அறிந்த செய்திகளை அவனுக்கு எடுத்துரைத்தார்கள்.

இதனுலெல்லாம், அங்கேயே பிறந்து அவர்களுடனேயே வளர்ந்தவன்போல் அவனுக்கு நில புலன்கள் சம்பந்தமான எவ்வளவோ நன்மை தீமைகள் தெரிய வந்தன. தர்மராஜு அவனைப் பார்க்க வந்த சமயங்களில் அவனையும், சில சமயம் மகாலக்ஷ்மியையும் கூடவே அழைத்துக்கொண்டு அவர்கள் இடங்களுக்கு அவன் வருவான். அப்போது, சீதையுடன் வரும் ராமலக்ஷ்மணர்களைக் கண்ட குகனைப்போல அவர்கள் புளகாங்கிதம் அடைந்தார்கள். தங்கள் எசமான் மகளான மகாலக்ஷ்மியின் கால் பட்ட பூமி நல்ல பலனை அளிக்கப் போகிறது என்றுகூடக் கோபாலையரின் குடியானவர்கள் எதிர் பார்த்துச் சந்தோஷப்பட்டார்கள். இதுகாறும் அவ்வூர்ப் பிராமண குடும்பத்தினர் யாரும் தங்கள் இருப்பிடத்தைத் தேடி வந்து வலுவில் சிநேக பாவத்தைக் காண்பித்தது கிடையா தாகையால், நாராயணனுடைய செய்கை அவர்களுக்குச் சொல்ல முடியாத உவகையை அளித்தது.

அத்தைக்குமட்டும் இந்தப் புகழ்ச்சியைக் கேட்கக் கட்டோடு பிடிக்கவில்லை. 'நாராயணன் தான்மட்டும் வயற்காடு சுற்றுவதை விட்டுவிட்டு மகாலக்ஷ்மியையும் இழுத்துக் கொண்டு போகிருனே; அதிலும் அந்த மேலப்பாளையத்துப் பிள்ளையோடு' என்று தவருக நினைத்தாள். 'ஏற்கனவே தர்மராஜுவும் மகாலக்ஷ்மியும் பழகுவதை ஊரார் தாறுமாருகச் சொல்லுகிருர்கள். அதற்கு மேலும் இடம் கொடுக்கிற மாதிரியன்ருே ஆகிறது? இந்தப் பெண்ணுக்குத்தான் தெரிய வேண்டாமா? நான் வரவில்லைன்னு சொல்லப்படாதா? நான் எவ்வளவோ கண்டித்துச் சொல்லியிருக்கிறேனே' என்று மகாலக்ஷ்மியிடமே கோபம் வந்தது.

இப்போதுதான் காமாட்சி இறந்துபோன துக்கம், தம்பி யோகியாக இருப்பதன் வருத்தம் எல்லாவற்றையும் விட்டு, 'குழந்தைகள் காரியங்களெல்லாம் எப்படி நடக்க வேண்டுமோ அவ்விதத்தில் செம்மையாக நடந்து வருகின்றன'

என்கிற திருப்தியோடு அவள் இருக்கிருள்: நாராயணன் பரீட்சையில் முதலாவதாகத் தேறினதற்கு அவனை ஊரே கொண்டாடுகிறது. சங்கரனுக்கு உத்தியோகம் ஆகப்போகிறது. சாரதாவுக்குப் பரிகாரங்களின் பலனுகச் சீக்கிரம் குழந்தை பிறந்துவிடும். இவ்விதம் குழந்தைகளுக்கு நடக்க வேண்டிய நன்மைகள் தாமாகவே நடக்கின்றன. 'என்னவோ காமாட்சி தான் தெய்வமாக இருந்து குழந்தைகளை நன்னு வச்சிருக்கா' என்று இப்போதுதான் அவள் நாணம்மாளிடம் சொல்லிச் சந்தோஷப்பட்டுக்கொண்டாள். 'பாலில் துளி விஷத்தைக் கலந்து பாலே முழுதும் கெடுத்துவிட்டாற்போல மகாலக்ஷ்மி இதுமாதிரி நடந்து எல்லாச் சந்தோஷத்தையும் ஒருங்கே போக்கடிக்கிருளே! இதற்கு என்ன செய்கிறது? நம் சொல்லேக் கேட்காத அடங்காபிடாரியாக இந்தப் பெண் இருக்கே. புருஷப் பிள்ளைகளுக்குச் சகலமும் தெரியுமா? ஊரார் தூத்து வார்கள்; இதுபோல நடக்கக் கூடாதுன்னு இந்தப் பெண் நாராயணனுக்குச் சொல்லவேண்டாமா? நாம் நிம்மதியாக இருக்க யாருமே விடமாட்டார்கள்போல் இருக்கிறதே!' என்று அவள் விசாரப்பட்டுத் துக்கித்துக்கொண் டிருந்தாள்.

நாராயணனிடமாவது சமயம் பார்த்து, "அப்பா, நீ இதுமாதிரி நடக்கிறது சுத்தமா நன்னு இல்லே; நீ யாரோடு வேணுமானுலும், எப்படி வேணுமானுலும் இரு. மகாலக்ஷ்மி யையும் அது மாதிரி இருக்கச் சொல்லாதே. பனமரத்தின் கீழ் நின்று பாலேக் குடித்தாலும் கள்ளென்றுதான் உலகம் சொல்லும்" என்று வற்புறுத்திச் சொல்லி மனத்தில் படவைக்க நினைத்தாள். நாராயணனிடத்தில் அவளுக்கு இருந்த மதிப்பும் பிரியமும் அவளே அதுமாதிரி ஹிதோபதேசம் செய்யவிடாமல் தடுத்தன.

ஒரு மாறுதலேயும் சகித்து ஏற்காத அவ்வூர் அந்தணர்களும் அவன் படிப்பில் இருந்த கௌரவத்தினுல்தான், அவன் புதுவித மாக மனைவியுடன், சில சமயம் தன் நண்பனேயும் சேர்த்துக் கொண்டு உலாவி வருவதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருந்தார்கள். இல்லாவிட்டால் பெரிய தகாத செய்கையென்று வாயில் வந்தபடி தூஷித்து நடுங்க அடித்துவிட்டிருக்க மாட்டார்களா?

நாணம்மாள்கூடச் சுப்புணிக்கு அம்மாஞ்சி செய்திருக்கிற உபகாரம், சங்கரனுக்குச் செய்யப்போகிற நன்மை ஆகியவைகளை

நினைத்துத்தான், சுப்பு, ''எல்லாம் நன்னுத்தான் இருக்கு. இந்தப் பொண்ணை இழுத்துண்டு இப்படி அலையருனே; அதுக்குதான் என்ன பண்றதுன்னு தெரியல்லே'' என்று அங்கலாய்த்துக் கொண்ட போதுகூட, ''எல்லாம் சிறு பிள்ளைத்தனம்; தானே சரியாகப் போயிடும். நம்ம பெண் சித்தே சமத்தா, கண்டிப்பாய் இருந்தா, தானே இதெல்லாம் ஓஞ்சு போய்டும்'' என்று சமாதானம் சொன்னுள்.

'எல்லாம் தானே சரியாகிவிடும்' என்று அவள் சொல்லும் போது சுப்புவுக்குத் தெம்பு வரும். பின்னேடு, 'நம்ம பெண் சமத்தைப்பத்திச் சொல்லுகிருளே' என்று கவலை உண்டாகும். மகாலக்ஷ்மிக்குப் புத்தி சொல்ல வேண்டுமே. அந்தப் பொறுப்பு அவளுக்கன்ருே ஏற்பட்டிருக்கிறது? கோபாலையரை எதிர்பார்ப்பதில் காரியம் இல்லை. அவளுக்கு அவரை எதற்கும் எதிர்பாராமலே பழக்கம் வேறுதான் ஆகிவிட்டதே.

கிருஷ்ணனிடம் தன் கவலைகளைச் சொல்லிப் பார்த்தபோது, ''குளந்தைங்க சந்தோசமா இருக்கிறதைக் கெடுக்காதீங்கம்மா. நம்ம சின்னம்மாளுக்கு ஒரு களங்கமும் கிடையாதுங்க. பால் கடல்லே உதிச்ச லச்சிமியாட்டங்களே; வீணு மனத்தை வருத்திக்கிடாதீங்க'' என்று சுருக்கமாகச் சொல்லிவிட்டான். அவன் மகாலக்ஷ்மிக்கு மனத்தில் படும்படி ஏதாவது சொல்லு வானே என்கிற நம்பிக்கையும் போயிற்று, சுப்புவுக்கு.

அவள் இதுமாதிரி மனப் போராட்டத்தால் தவித்துக் கொண்டிருக்க, அதைத் தூண்டிவிட வந்ததுபோல் இன்னென்று நடந்தது. ''நானே வந்துகொண் டிருக்கிறேனே. நீயும் மகா லக்ஷ்மியும் எங்களிடத்துக்கு வரக்கூடாதா? நீ முதலாவதாகப் பரீக்ஷை தேறியிருப்பதற்கு எங்கம்மா கூட உன்னைப் பார்க்கணும்னு சொல்ருங்க'' என்று தர்மராஜு நாராயணனை யும் மகாலக்ஷ்மியையும் தன் வீட்டுக்கு வரும்படி அழைத்தான். நாராயணனுக்கு அவன் சொல்வது நியாயம் என்றே தோன்றிற்று. அவன் அவ்வளவு நடை வருவதற்குத் தாங்கள் ஒரு தரமாவது போகவேண்டாமா?

ஊருக்குப் புறப்படுவதற்கு முந்தின நாள், மகாலக்ஷ்மி யையும் அழைத்துச் செல்வது என்று நிச்சயித்தான். மகாலக்ஷ்மிக்கோ அத்தை சம்மதிக்க மாட்டாள் என்கிற ஆக்ஷேபம். ''அத்தைக்குத் தெரிய வேண்டிய அவசியம் என்ன? நாம் இருவரும் எங்கெங்கோ சென்றுகொண் டிருக்கவில்லையா?''

என்று சொல்லி அவளைச் சமாதானப்படுத்திவிட்டான் நாராயணன். 'வயசானவர்களின் குருட்டு ஆசாரத்தில் ஏற்படும் ஆக்ஷேபங்கள் அவை. நாம் அவற்றைப் பொருட்படுத்த வேண்டிய அவசியம் இல்லை' என்பது அவன் எண்ணம்.

நண்பன் வீட்டுக்குச் சென்று வருவதில் ஒன்றும் தவறு இல்லைதான். ஆனால் கிராமத்தில், பிராமணன் தாழ்ந்த ஜாதியான் வீட்டுக்குள் படியேறிச் செல்வது, தான் மட்டுமல்லாமல் மனைவியையும் உடன் அழைத்துச் செல்வது, அதற்கும் மேலாக அவர்கள் கொடுத்த சிற்றுண்டிகளையும் புசிப்பது என்றால் பெரும் தவறாகாதா? நாராயணன் அவ்விதந்தான் செய்தான். அப்படிச் செய்தவன் அதை ரகசியமாகவாவது வைத்துக்கொண்டானா? அதுவும் இல்லை.

அவர்களோடு வந்த பாலு அகத்தில் எல்லார் முன்னிலையிலும், அத்தையிடமே அதைச் சொல்லி வைத்தான். புறப்படுவதற்கு முன் ஆக்ஷேப சமாதானங்கள் வேண்டாமென்று நாராயணன் நினைத்தானே தவிர, ஒருவருக்கும் தெரியக்கூடாதென்று அவன் நினைக்கவில்லை. அதனால் பாலுவிடம் முன்னெச்சரிக்கை எதுவும் செய்யவில்லை. ஏதோ தவறான காரியம் என்று அவன் எண்ணினாலல்லவா அதை மறைக்கப் பார்ப்பான்?

''எங்கடா, இத்தனை நாழி தொலைஞ்சு போனே?'' என்று அத்தை பாலுவைக் கேட்கவும், ''அக்காவோடேயும் அத்திம்பேரோடேயும் மேலப்பாளையத்துக்குப் போயிட்டு வறேன், அத்தை'' என்றான் பாலு.

''காலம்பர சாப்பிட்டது; மத்தியான்னத்துக்கு ஒண்ணும் பண்ணுமே இப்படி அலைஞ்சா உடம்புக்கு ஆகுமோ?'' என்று அவள் அவனைக் கோபித்துக்கொண்டாள்.

''தர்மராஜு ஆத்தில் என்ன என்னவோ பட்சணம் கொடுத்தா. நிறையச் சாப்பிட்டிருக்கேன்'' என்றான் பாலு.

''அவன் வீட்டிலே தின்பையோ? நன்னாருக்கே! ஏண்டி மகாலக்ஷ்மி, நீ கூடாதுன்னு சொல்ல மாட்டாயோ?'' என்று அத்தை சொல்வதற்குள், ''அவளுந்தான் சாப்பிட்டாளே'' என்றான் பாலு. அத்தைக்கு இதைக் கேட்க இடி இடித்தது போன்ற அதிர்ச்சி ஏற்பட்டது. அவள் ஸ்தம்பித்துப் போனாள்.

''சாப்பிட்டா என்னவாம்? நம்ம வீடுகளைப் போலச் சுத்தமா நன்னாத்தான் இருந்தது'' என்றான் நாராயணன்.

''ஏண்டா இப்படி அழிஞ்சு போறேள், பிராமண ஜன்மம் எடுத்தூட்டு? காதாலே கேக்க முடியலையே! என்னவோ நாராயணு, நீ இவ்வளவு படிச்சுட்டு இதுமாதிரி இருப்பேன்னு நினைக்கல்லே'' என்றாள் அத்தை. அவளுக்கு என்ன சொல்லுகிறது என்றே தெரியவில்லை. கோபமும் துக்கமும் கலந்து பொங்கி வந்தன.

''அத்தை, அதெல்லாம் ஒண்ணும் தப்பில்லை. வீணுக்கு வருத்தப்படாதீங்கோ. இந்தக் காலத்துலே ஜாதியெல்லாம் பார்த்துக் கட்டாது. பிராமணன் என்றால் ஒண்ணும் தனியா ஒசத்தி இல்லை; எல்லாரும் சமந்தான்'' என்றான் நாராயணன்.

''சமனுவது, மண்ணுவது! யாரு சொன்னு? நீ சின்னப் பிள்ளை; உனக்கு என்ன தெரியும்? இனிமே இதுமாதிரி செய்யாதே அப்பா; உனக்குப் புண்ணியம் உண்டு. நீ போனாலும் மகாலக்ஷ்மியை அழைச்சுண்டு போகவே போகாதே. நான் வயசானவ சொல்றேன் கேளு. புருஷனுட்டமா இல்லை, பொம்மனுட்டிக்கு. இது மாதிரி இருக்கப்படாது. தப்பாப் போயிடும்'' என்று அவன் மனத்தில் படவேண்டும் என்கிற எண்ணத்தில், வந்த கோபத்தை அடக்கிக்கொண்டு நிதானமாகச் சொன்னாள் சுப்பு.

''தப்பு எங்கிருக்கு? புருஷனுக்கு ஒண்ணு, பொம்மனுட்டிக்கு ஒண்ணு? அதொண்ணும் கிடையாது. நான் போகும் இடங்களுக்கு அவளும் வர வேண்டியதுதான். கணவனும் மனைவியும் ஒண்ணல்லவா? நமது சாஸ்திரம் அப்படித்தானே சொல்கிறது? நம்ம பதிவிரதைகளின் கதைகளெல்லாம் உங்களுக்குத் தெரிஞ்சதுதானே?'' என்றான் நாராயணன். அவள் ஒப்புக்கொள்ளும் ரீதியில் விஷயத்தைச் சொல்லவேண்டுமென்பது அவன் உத்தேசம்.

''ஆம்படையான் சொல்றதைப் பெண்டாட்டி கேட்க வேண்டியதுதான். அதற்காக நம்ம ஆசாரத்தை விடலாமா?''

''ஆசாரம் பார்த்து இனிமேல் கட்டாது, அத்தை. நாட்டுப் புறத்தில் இருந்துகொண்டிருக்கும் நீங்கள் நம்ம தேசத்தின் நிலைமை தெரியாமல் பேசறேள். இப்போதெல்லாம் பிராமணன், குடியானவன் என்கிற வித்தியாசம் கிடையாது. வச்சுண்டாலும் கட்டிவராது. இன்னும் கொஞ்ச நாளிலே எல்லாம் ஒண்ணாகவே போயிடப்போறது. அப்போ என்ன பண்ணப் போறேளாம்?'' என்றான் நாராயணன்.

"எதுவோ, இங்கே அதெல்லாம் சரியா வராது. அதுதான் எனக்குத் தெரியும். ஊர் சிரிக்கிறதைக் கேட்க என்னாலே முடியாது. இங்கே இருந்துண்டு அவன் வீட்டுக்குப் போகா திங்கோ; அதுதான் நான் கேட்டுக்கறேன்" என்றாள் அத்தை, வெறுப்பு மேலிட்டவளாய்.

"அப்பவானா அடுத்த தடவை அங்கேயே வந்து இறங்கி விடுகிறோம்" என்று பாதி விளையாட்டும் பாதி உண்மையுமாக, அத்தையைப் பயமுறுத்தும் பாவனையில் நாராயணன் சொன்னான்.

"ஆமாம் அத்தை, தர்மராஜுவோட அம்மா, அவன் கல்யாணம் பண்ணிக்காத்துக்கு வருத்தப்பட்டுண்டா; அதுக்கு அக்காவும் அத்திம்பேரும், அவாளே வந்திருந்து பெண் பார்த்து பண்ணிவைக்கிறதாகச் சொல்லிவிட்டு வந்திருக்கா" என்றான் பாலு, நடுவில் தானும் ஏதோ சொல்லும் உத்ஸாகத்தில்.

"நன்னாருக்கே! இவ பெண் பார்க்காட்டா அவன் பண்ணிக்கமாட்டானா?" என்று அத்தை ஆத்திரத்தோடு சொல்லவும், "அக்கா மாதிரின்னா அவனுக்குப் பெண் வேணுமாம். அவன்தான் சொன்னானே" என்றான் பாலு விடாமல்.

'ஏது, சமாசாரம் வெகுதூரம் போகிறதே' என்று அத்தையால் கேட்கவே முடியவில்லை. இந்த வார்த்தை ஊரார் காதில் விழுந்தால்? இப்படிப் புத்திகெட்டு அலையுமோ ஒரு பெண்? தனக்காகவும் தெரியாது, சொன்னாலும் கேட்கா விட்டால்! அவளுக்கு இன்னது சொல்வதென்றே தெரியவில்லை. நாராயணன் எதிரில் சிறிது அடக்கப் பார்த்த அவள் கோபம் அவன் அப்பால் போகவும், எல்லை மீறின கடல்போலப் பொங்கி வந்தது.

"ஏண்டி மகாலக்ஷ்மி, உன்னைப்போலப் பெண்டாட்டி வேணும்னா சொன்னான்? நீ பேசாமே கேட்டுண்டா இருந்தே? இதென்ன அக்கிரமம்! இப்படிக் கெட்டுப் போகப்படாது. யாருக்காவது தெரிஞ்சா என்னமா இருக்கும்? உனக்கும் அவனுக்கும் பேர் கட்டிக் காறி உமிழ மாட்டாளா? நம்ம குடும்பத்துக்கு இது மாதிரியெல்லாம் பேர் வரப்படுமோ?" என்றாள் ஆத்திரம் பொங்க.

மகாலக்ஷ்மிக்கு அத்தையின் கோபத்தை எப்படிச் சமாளிப்ப தென்றே தெரியவில்லை. பாலு சொல்லி வரும்போதே அவள் கேட்க முடியாமல் தவித்து நின்றாள். அவனை மேலும் மேலும்

சொல்லவிடாமல் தடுக்கும் உபாயமும் அவளுக்குத் தெரிய வில்லே.

'அவன் தப்பா ஒண்ணும் சொல்லல்லே, அத்தை. அவா ஜாதியிலே படிச்ச பெண் கிடையாதாம். அதுக்குச் சொன்னுன், அவ்வளவுதான்'' என்று சமாதானமாகச் சொல்லிப் பார்த்தாள் மகாலக்ஷ்மி.

''தப்பும் சரியும் உனக்கு ரொம்பத் தெரியும். வாயை மூடு. படிச்ச பெண்ணு? போருமே, நீ படிச்சுக் குட்டிச்சுவராப் போறது! நன்னுருக்கு. நானும் பார்க்கிறேன். உனக்கு நான் என்ன சொன்னுலும் காதுலே ஏறல்லே. இது நல்ல காலத்துக்கு இல்லே. அந்த மேலப்பாளேயத்தாளுேடே உன்னேச் சேர்த்து ஊரிலே பேசற பேச்சு ஏற்கனவே காது கொப்பளிக்கிறது. நீயும் அதுக்குச் சரியா மேலே மேலே பண்ணிண்டு போறயே. இப்படி இருக்கிறதுன்னு எங்க மூஞ்சியிலே முழிக்காமேதான் போகணும். ஆமாம், உனக்கும் எங்களுக்கும் சம்பந்தமில்லேன்னு வச்சுக்க வேண்டியதுதான். அகமுடையான் ஏதோ இருந்தாலும், பெண்டாட்டி அதைச் சரி பண்ணிண்டு போவா, பார்த்திருக்கு. நீ என்னடான்னு அவனுக்கு மேல் கிளம்பறயே. அவன் வீட்டுக்குப் போறதும் அவனுேடே பேசிச் சிரிக்கிறதும் வச்சுக்கறதா இருந்தா, நீ இனிமே இந்த வீட்டுக்கே வர வேண்டாம். ஆமாம்'' என்றுதான் சொல்லும் வார்த்தைகளுக்கு அழுத்தம் கொடுத்துக்கொண்டே சொன்னுள் சுப்பு.

அத்தை அவ்வளவு கடுமையாகத் தன்னேக் கோபித்துக் கொள்வது, மகாலக்ஷ்மிக்குத் தாங்கவே இல்லே. அவள் 'ஹோ'வென்று மாலே மாலேயாகக் கண்ணீர் பெருக அழுது விட்டாள். 'அசடு வழியறத்துக்கு அழுதா என்னவாம்?' என்று அத்தைக்குத் துளிக்கூட மனத்தில் இரக்கம் வரவில்லே. மகாலக்ஷ்மி ஏதோ தவறிவிட்டாளென்று முடிவுகட்டினவள் போல் அவளேப் பார்க்கவே பிடிக்காமல் ஆத்திரம் வந்தது சுப்புவுக்கு. 'எக்கேடு கெட்டு எப்படியோ போகட்டும்னு! காமாட்சி கண்ணே மூடிண்டு ஒண்ணேயும் பாராமே போயிட்டாளே. என் தலேயிலேன்னு எல்லாம் அனுபவிக்க எழுதியிருக்கு? கோபாலன் இருந்தும் செத்ததற்குச் சமானம். அவனுக்கு ஒண்ணுக்கும் பாத்தியம் இல்லே. அம்மாஞ்சியும் அம்மாஞ்சி மன்னியும் என்னதான் பண்ரு, பிள்ளேயைக் கண்ட படி போகவிட்டுட்டு? என்ன இருந்தாலும் பாலுவுக்கு இந்தச்

சகவாசம் கூடாது. நம்ம குடும்பத்துக்கு ஒரே பிள்ளை. அவன் கெட்டுப் போகப்படாது. சொன்னால் கேட்காத இந்தப் பெண் மகாலக்ஷ்மி ஒழிஞ்சு போகட்டும். பாலுவை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கணும். அவன் மதுரையிலே படிச்சது போதும். எல்லாம் உள்ளூரிலே வாசிக்கட்டும். பாலுவை அனுப்பக் கூடாது.' - இதுமாதிரி தீர்மானித்துவிட்டாள் அத்தை. கண்டிப்பாகக் காரியத்தில் செய்து காண்பித்தால்தான் நாராயணனுக்கும் மகாலக்ஷ்மிக்கும் தாங்கள் செய்கிற தவறு கொஞ்சமாவது உறைக்கும் என்கிற எண்ணம் அவளுக்கு.

திரும்ப அவர்கள் மதுரை புறப்படும்போது பாலுவை அவர்களுடன் அனுப்பாமல் நிறுத்திக் கொண்டாள். பாலு செய்த முரண்டும் பிடிவாதமும் இப்போது ஒன்றும் பலிக்க வில்லை. முன்பு அம்மாஞ்சி இருந்து சுப்புவைத் தாட்டியாக மறுத்துக் கூறி அழைத்துப் போனார். இப்போது அது மாதிரி செய்ய அவர்தாம் பக்கத்தில் இல்லையே!

இவ்விதம் தான் செய்தது சிறு பெண்ணான மகாலக்ஷ்மியின் மனத்தை எவ்வளவு புண்படுத்துகிறது என்பதை அத்தை சிறிதாவது நினைத்துப் பார்த்தாளா? பாலுவுக்குப் படிப் பில்லாமல் போய்விட்டால் அதனால் அவனது வருங்காலம் எவ்விதம் பாதிக்கப்பட்டுவிடும் என்பதையாவது எண்ணிப் பார்த்தாளா? அவளுக்கு அவ்வளவெல்லாம் நுட்பமாக விஷயங் களை ஆராய்ந்துகொண் டிருக்கப் பொறுமை ஏது? குழந்தை களின் சுகதுக்கங்கள், அவர்களின் நன்மை தீமைகள், இவை களைத்தானே தன் மனம்போல் தீர்மானித்து, அவ்வாறு நடப்பதற்குச் சந்தோஷித்தும், நடவாததற்கு வருந்தியும் அல்லவா அவள் காலம் தள்ளி வருகிறாள்? தான் நினைக்கிற படியே அவர்களுக்கு நன்மை பயக்கக்கூடியதைச் செய்கிறாளே தவிர, அவர்கள் அதை நல்லதாக நினைக்கிறார்களா என்பதை அவள் சிறிதும் நினைத்துப் பார்ப்பதே இல்லை.

மகாலக்ஷ்மி ஊருக்குப் புறப்படுவதற்கு முன் அத்தையின் போக்கை எண்ணி மன வருத்தம் தாங்காது மீனாவிடம் விம்மி விம்மி அழுதுவிட்டாள். மீனாவுக்கு அது தாங்கவே இல்லை. கண்களில் நீர் ததும்ப, மகாலக்ஷ்மியின் தலையைத் தன் தோளில் சாய்த்துக்கொண்டு, "வருத்தப்படாதேடீ என் கண்ணே, அத்தை போக்குத்தான் உனக்குத் தெரியுமே; அதுக்காக அழுவாளா?" என்று சமாதானம் செய்தாள்.

''என்னை ஒரேமட்டில் தப்பான்னு பேசறு. பாலுவைக் கூடன்னு அனுப்பாமல் நிறுத்திண் டிருக்காள்! இவளுக்குச் சொன்னுத் தெரியல்லே. கிராமத்திலே இதுமாதிரி இருக்கப்படா துன்னு, எனக்கு இடத்துக்குத் தகுந்தபடி பொய்வேஷம் போடத் தெரியாதுன்னு கோவிச்சுக்கிருர்; நான் என்ன பண்ணுவேன் சொல்லுடீ'' என்று விம்மினுள் மகாலக்ஷ்மி.

''நாட்டுப்புறம் பாரு. ஊரார் வம்பளப்பாங்கற பயந் தான் அத்தைக்கு. நாராயணன் அதைக் கொஞ்சம் தெரிஞ்சுக்கத் தான் வேணும்'' என்ருள் மீனு.

அத்தையைப் போலத் தன்னிடத்திலேயே தப்பு நினைக்கா விட்டாலும் மீனுவும் நாராயணன் கிராமத்தில் நடந்து கொள்ளும் மாதிரியை அவ்வளவாக விரும்பவில்லை என்பதைத் தெரிந்துகொண்டாள் மகாலக்ஷ்மி. 'நாராயணனிடம் அதை என்ன சொல்லிப் புரியவைக்கிறது? அவன் முரட்டுப் பிடிவாத மாக இருக்கிருனே. மேலும் இப்போது பாலு தங்களுடன் வராததற்கு அம்மாஞ்சி, மன்னி இவர்களிடம் என்ன காரணம் சொல்லுகிறது?' இவ்விதம் பல கவலைகளும் வருத்தங்களும் அவள் மனத்தை வாட்டி எடுத்தன.

''வருந்தாதே தாயீ, அத்தை கிடக்காங்க. எல்லாம் சரியாப்போகும்'' என்று சமாதானம் சொல்லி அனுப்பினுன் கிருஷ்ணன். அவனுக்குச் சுப்புவிடம் அசாத்தியக் கோபம். 'குழந்தை மனசை வருந்த வச்சு அனுப்புவாங்களா? இந்த அநியாயம் உண்டா? பெத்தவங்களுக்குன்னு புள்ளை அருமை தெரியும்?' என்று முணுமுணுத்தான். சுப்பு பிள்ளை பெருதவ ளாகையினுல்தான் இப்படி இருக்கிருள் என்று அவன் தீர்மானம் செய்துகொண்டான்.

இவ்வளவு அமர்க்களத்துக்கும் கோபாலையர் வாய் திறக்க வில்லை. அவர் யார் பக்கத்தில் பேசுகிறது என்கிற சந்தேகத்தி லேயே சும்மா இருந்துவிட்டார். அம்மாஞ்சி, பாலு வராததைத் தப்பாக எடுத்துக்கொள்ளாமல் இருக்கவேண்டும் என்ற எண்ணத்தோடு, முன் கூட்டியே, 'வீட்டுக்கு ஒத்தாசையாக, பாலு இருக்கவேண்டி யிருக்கிறது' என்கிற மாதிரியில் ஒரு கடிதம் மட்டும் எழுதிப் போட்டுவிட்டுப் பேசாதிருந்தார்.

# 30
# தர்மாம்பாளின் மனமாற்றம்

"ஏண்டா, பாலு வரவில்லையா? கோபாலன் கடிதத்தில் ஏதோ நொண்டிச் சாக்குச் சொல்கிறானே" என்று அம்மாஞ்சி நாராயணனைக் கேட்டதற்கு, "அத்தைக்கு அவன் நம்மோடு இருந்தால் ஜாதிப் பிரஷ்டனாகப் போய்விடுவான் என்கிற பயம் வந்துவிட்டதப்பா. அதனால் படிப்பு எக்கேடு கெட்டுப் போனாலும் போகட்டும் என்று நிறுத்திக்கொண்டு விட்டாள்" என்றான் அவன்.

"இத்தனை நாளும் இல்லாத பயம் இப்போது எங்கிருந்து வந்தது?" என்று அவர் மேலும் கேட்கவே, "அவன் என்னோடு தர்மராஜு வீட்டில் பக்ஷணம் சாப்பிட்டுவிட்டான். அது பெரிய தவறாகப் போய்விட்டது" என்றான் நாராயணன்.

"தர்மராஜு வீட்டிற்கு அவன் எங்கே போனான்? எப்படிப் பக்ஷணம் சாப்பிட்டான்?" என்றெல்லாம் விசாரித்து, நடந்தது முழுமையும் தெரிந்துகொண்டார் அம்மாஞ்சி. சுப்பு கோபம் அடைந்ததை நினைத்து அவருக்குச் சிரிப்புத்தான் வந்ததே தவிர அதற்கு மேல் ஒன்றும் அதற்கு முக்கியத்துவம் கொடுக்கத் தோன்றவில்லை. 'அவளுக்குத் தெரிந்த லக்ஷணம் அவ்வளவு தான்' என்று விட்டுவிட்டார்.

ஆனால் தர்மாம்பாளுக்கோ இந்த விஷயத்தை அவ்வளவு சுலபமாகத் தள்ளிவிட மனம் இல்லை. தங்கள் சகவாசத்தை அவர்கள் எவ்விதம் அவ்வளவு தாழ்வாக மதிப்பிடலாமென்று தோன்றியது. 'அப்படி ஏதாவது தோன்றினாலும் அதை வெளிப் படக் காண்பிக்க எவ்வளவு துணிவு வேண்டும்? நாம் என்ன, ஹோட்டலா வைத்திருக்கிறோம், வேண்டுமானால் இவர்கள் பிள்ளையை விடுவதற்கும், வேண்டாமானால் அழைத்துக்கொள் வதற்கும்? அம்மாஞ்சிதானே, என்ன பண்ணிப்பிடுவார் என்கிற தைரியமா? ஒவ்வொருத்தர் பெண்ணைக் கொடுத்துவிட்டு நடுங்க வேண்டி யிருக்கு. இவர்கள் தோணினபடி நடந்து காண்பிக் கிறார்கள். இவர்கள் வீட்டுப் பெண்ணையல்லவா நம் மகனுக்குக் கொடுத்திருக்கிறார்கள்? நம்மையும் அவனையும் சேர்த்து அவமதிக்கிறார்களே!' தனக்கு வரும் கோபத்தை அவர்களுக்கு எவ்விதம் தெரிவிப்பது என்று ஆத்திரம் வந்தது அவளுக்கு.

அவள் இப்போதுதான் தன் ஒரே அருமை மகளைப் புக்ககத்தில் விட்டு, அவர்கள் காண்பித்த அவமரியாதையைக் கண்டு வந்திருக்கிறாள். என்ன இருந்தாலும் பெண்ணைப் பெற்றவர்கள் தாழ்ந்துதான் போகவேண்டும் என்கிற நியதியில் ஒருவாறு அதைச் சகித்து வந்திருக்கிறாள். அதேபோல் இன்னொருவருக்கு அந்த நியாயம் இல்லை என்றால் மனம் கேட்குமா? நியாயமாகப் பிள்ளையைப் பெற்றோர்களாகிய தாங்கள் காண்பிக்கக்கூடிய அலட்சியத்தையோ கோபத்தையோ அவர்கள் பொறுத்துப் போகவேண்டியிருக்க, அவர்கள் தங்களிடம் அலட்சியமாக இருப்பதென்றால் சரியா?

அவள் மனக்கசப்பைக் காண்பிக்க, சுப்புவோ கோபாலையரோ பக்கத்தில் இல்லாததால், மகாலக்ஷ்மிதான் அதற்கு இலக்கானாள். தொட்டதற்கெல்லாம் இப்போது அவளிடம் கோபம் வந்தது தர்மாம்பாளுக்கு. அவள் மனிதர்கள்தாமே அவர்கள்? அவர்கள் செய்யும் தவறுகளுக்கு அவள்தானே ஒருவாறு பொறுப்பாளியாக வேண்டும்?

மகாலக்ஷ்மியிடமேதான் அத்தை கோபித்துக்கொண்டு இது மாதிரி செய்கிறாள் என்பது தர்மாம்பாளுக்குத் தெரிந்தால் அப்போது அவள் என்ன நினைத்து எவ்விதம் ஏற்பாளோ? ஆனால் அதைத் தெரிந்துகொள்வதற்கு அவளிடம் அதைச் சொல்லுவார் யார்?

தர்மராஜுவோடு மகாலக்ஷ்மி பழகும் விதம் கிராமத்தில் வம்பளப்பாயிருக்கிறது. அதற்குத்தான் அத்தைக்கும் அவளிடத்தில் தனியே வேறு கோபம் என்பது நாராயணனுக்கே கூடத் தெளிவாகத் தெரியாதே! அவன் காதில் படாதபடிதான் சுப்பு, மகாலக்ஷ்மியைத் தோன்றினபடி திட்டினாள். அதனால் அவனுக்கு மகாலக்ஷ்மி பேரில் ஆரோகணிக்கப்பட்டிருக்கும் குற்றச்சாட்டு முழுதும் தெரியாது. மகாலக்ஷ்மி தானாக அதை அவனிடம் சொல்ல வாய்கூசிப் பேசாதிருந்தாள். மனத்தாலும் நினைக்க முடியாத ஒன்றை, கல்மஷமற்றிருக்கும் அவனிடம் கூறி அவனையும் எதற்காக வருத்தத்திற்கு உள்ளாக்கவேண்டும்?

தேசத்தொண்டு செய்ய வக்கீல் தொழில்தான் இடைஞ்சல் இல்லாத சுதந்தரமான தொழில் என்று எண்ணிய நாராயணன் அதை ஏற்கத் தீர்மானித்திருந்தான். அம்மாஞ்சியும் அதற்குச் சம்மதித்தார். உத்தியோகத்திலுள்ள அடிமைத்தனம் அவருக்கும் சலிப்பைக் கொடுத்திருந்தது. தூரத்துப் பச்சை

கண்ணுக்குக் குளிர்ச்சி அல்லவா? வக்கீல் தொழில் சுதந்திர மான தொழில், நிறையப் பணமும் வரக்கூடியது என்பது அவர் அபிப்பிராயம். அதன்படி சட்டகலாசாலையில் சேர்ந்து படிக்கும்பொருட்டு நாராயணன் திரும்பப் பட்டணம் புறப்பட்ட போது, சேர்ந்து செல்வதற்காக வந்திருந்த தர்மராஜு, "மகாலக்ஷ்மிக்கு உடம்புக்கு என்னடா? வழக்கம்போல் சுறுசுறுப்போ உத்ஸாகமோ இல்லாமல் இருக்கிறுளே!" என்று கேட்டான். அவளைக் கவனித்துப் பார்த்ததில் அவனுக்கு அவ்வாறு பட்டதனுல் அவன் கேட்டான். ஜாதி வித்தியாசம் பார்க்காது அவனுடன் பழகுவதற்கு அத்தை கோபித்துக் கொள்கிறுளென்றும் பாலுவையும் அதற்காகத் தங்களுடன் அனுப்பவில்லை என்றும் நாராயணன் தான் எண்ணியிருந்ததைத் தர்மராஜுவிடம் சொல்லவில்லை. ஏன்? அது தெரிந்தால் தன்னுல் அவர்களுக்குள் மனஸ்தாபமா என்று அவன் வருந்தக் கூடும். அதற்கு இடம் கொடுக்கக்கூடாது என்று நினைத்துத் தான், "ஒன்றும் இல்லை; அவள் மட்டும் தனியாக இருக்கிறு ளல்லவா? ஞானமும் அவளும் எவ்வளவு ஒத்த சிநேகிதிகள்? ஞானம் இல்லாததுதான் உத்ஸாகக் குறைவுக்குக் காரணம். பாலு வேறு வராமல் நின்றுவிட்டான். கடைசி நிமிஷத்தில் அவன் அத்தைக்கு வீட்டில் அவன் இல்லாவிட்டால் முடியாது போலத் தோன்றிவிட்டது; நிறுத்திக்கொண்டுவிட்டாள். அதுவும் சேர்ந்துகொண்டது" என்று காரணம் கூறினுன்.

அதற்கு மேலும் அவள் பேரில் ஏற்றப்பட்டிருக்கும் பழிச் சொல் அவனே அறியாத சங்கதி. ஆகையால் அதுபற்றி அவன் சொல்லவோ சொல்லாமல் இருக்கவோ காரணம் எதுவுமில்லை: அதற்காக அவள் நெஞ்சம் புண்பட்டு வருந்துவது தெரிந்தா லும், ஏதாவது சமாதானங்கள் கூறி அவளுக்குத் தெம்பு அளித் திருப்பான். அதற்கும் வழியில்லாமல் மகாலக்ஷ்மி தானே மனத்துக்குள் வைத்துப் புழுங்கிக்கொண் டிருந்தாள். அவ்னிடங் கூடத் தன் வாயால் அதைச் சொல்லி ஆற்றிக்கொள்ள முடியாத கடும் சொற்களாக அவை அவளுக்குத் தோன்றிக் கொண்டிருந்தன.

நாராயணன் பட்டணம் போன பிறகு, வீட்டில் பொழுது போக்க ஒத்த வயசினர் யாருமின்றி, தாங்க முடியாத மன வருத்தம் நெஞ்சை அழுத்த கலகலப்பின்றி நடமாடி வந்தாள். பள்ளிக்கூடம் மட்டும் இல்லாதிருந்திருந்தால் அவள் எவ்விதந்

தான் அந்த நாட்களைக் கடத்தியிருப்பாளோ, அந்தச் சர்வேசுரன்தான் அறியக்கூடும்.

மாப்பிள்ளை கோவிந்தராஜனும் சட்டப்படிப்புக்காகத்தான் செல்லுகிறுனென்று தெரிந்து, அவன் சென்னை போகும்முன் மனைவியை அழைத்து வந்து தங்களிடம் விட்டு விட்டு, அவனும் சில தினங்கள் தங்கிவிட்டுப் போகும்படி, அம்மாஞ்சி எழுதினுர். 'அம்மாவின் தேக நிலை அதற்கு இடம் கொடுக்கவில்லை' என்று பதில் எழுதிவிட்டான் அவன். மனைவியைக் கொண்டுவந்து விடுவதுபற்றி ஒரு வார்த்தையும் அதில் சொல்லவில்லை. அவர்கள் எதிர்பார்த்தபடி தான் சில தினங்கள் தங்கிச் செல்லா விட்டாலும் மனைவியையாவது பட்டணம் போகும்போது வழியில் அழைத்துவந்து விடவும் இல்லை.

தர்மாம்பாளுக்குத் தாஞவது பெண்ணைப் போய்ப் பார்த்துக் கூட்டிவந்தால் என்ன என்று தோன்றிற்று.

"நீ எதற்காகப் போகிறது? அவனுக்கு எழுதினதற்கு மரியாதைக்குக்கூட, பெண்டாட்டியை அழைத்து வராததற்குக் காரணம் அவன் சொல்லவில்லை. அவள் சௌக்கியத்தைக்கூட நமக்குத் தெரிவிக்க வேண்டும் என்கிறதைக் காணேம். அவளைப்பற்றி ஒரு வரி இல்லை. அவளை நமது பெண்ணுக அவர்கள் நினைக்கவே இல்லைபோலல்லவா இருக்கிறது?" என்ருர் அம்மாஞ்சி கோபமாக.

"அதுக்காகப் பெண் எப்படியோ போகட்டும்னு விட்டு விடுகிறதா? நமது குழந்தை சுகப்படுகிருளா, கஷ்டப்படுகிருளா என்பதாவது நமக்குத் தெரியவேண்டாமா? போகாமலே வச்சா, அவா எப்படி நடத்திஞலும் கேள்வி முறை இல்லாமலே போயிடுமே?" என்ருள் தர்மாம்பாள்.

"ரொம்பவும் கஷ்டப்பட்டாளாஞல் அவளே தெரிவிக்க மாட்டாளா? அதஞலே ஏதோ இருக்கான்னு தெரிகிறது. நாம் இப்போ எதற்காகப் போகிறது? அவர்கள் உதாசீனத்தைப் பெற்றுக்கொண்டு மனசு துன்பப்படறத்துக்கா?" என்ருர் அம்மாஞ்சி.

"அப்படி நாம் விலகறது சரியா? அவாளுக்குப் பின்னும் நல்லதான்ஞ போகும்? பெண்ணை அடிச்சு உதைச்சாக்கூடக் கேள்வி முறை இல்லைன்னு ஆயிடும். அதெல்லாம் பார்த்துட்டுத்தான் வரவேணும். நீங்க வேணுமாஞல் உங்களைக் குறைச்சுண்டு போய் நிக்கவேண்டாம். நான்

போயிட்டு வறேன்'' என்று தீர்மானமாகச் சொன்னுள் தர்மாம்பாள்.

''அடிச்சு, உதைச்சா, சும்மா விடுவாளாக்கும்! யாராயிருந்தா என்ன, போலீசுலே பிடிச்சு வச்சுடமாட்டேனு?'' என்று உறுமினர் அம்மாஞ்சி.

ஞானத்தை அனுப்ப அவள் புக்ககத்தார் சம்மதிக்கவில்லை: ''நினேச்சபோது பிறந்தகம் போகும்படி மாமியாரைத் தெம்பும் திடனுமாக வச்சுக்கலேயே உன் பொண்ணு. நான் படுகிடையாகக் கிடக்கிறேனே; எனக்குச் செய்ய ஒருத்தர் வேண்டியிருக்கே. வீட்டை வேறே பாத்துக்கணுமே; என்ன பண்றது?'' என்று ஒரே வார்த்தையில் தீர்ப்பளித்துவிட்டாள் சம்பந்தியம்மாள். அவள் வார்த்தைக்கு மேல் அப்பீல் ஏது, அவர்கள் வீட்டில்?

'குதிரை தூக்கிப் போட்டதுமல்லாமல் குழியும் பறித்ததாம் என்பார்களே அது போலேன்னு இருக்கு? இவர்கள் மெனக்கட்டு இதற்காக வந்தவளோடு அனுப்பி வைக்காததுடன், அந்தப் பழியும் நம்ம பெண்பேரில்தானு? தேவலேயே! இவளுக்குச் சுசுரூஷையும் சாமான்யமாயில்லே. பக்கத்திலேயே நின்னுன்னு செய்யவேண்டி இருக்கு? என்னதான் உடம்பு, எழுந்திருக்க முடியாதபடி? பார்த்தால் ஒண்ணும் தெரியலேயே. பிடித்ததைச் சமைக்கச் சொல்லி ருசி பார்த்துச் சாப்பிடுகிருளே. கிட்டத்தில் நின்னு பார்த்துப் பார்த்துப் பரிமாறுவதற்குள்ளே தாவு தீர்ந்துபோகும் போலேன்னு இருக்கு? பணப் பெருமையும் ஜம்பமும் சொல்லி முடியலேயே. 'நர்சு' வச்சுச் செஞ்சுக்கப்படாதோ? நம் பெண்தானு அகப்பட்டாள், இவ்வளவு வேலேகளுக்கும்?' என்று ஆத்திரம் பொங்கி வந்தது தர்மாம்பாளுக்கு. அந்த ஆத்திரத்தில், 'உங்களுக்கு அடிமை வேலே செய்யவா பெண்ணேப் பெத்துவிட்டிருக்கேன்?' என்று கேட்டுவிட எண்ணினுள்.

''அம்மா, வீணுக்குக் கோபப்படாதே: பின்னுடி கஷ்டமாப் போயிடும். ஏதோ வியாதியாக இருக்கிருள்: எல்லாம் அந்தக் கோளாறுதான். வியாதி தெளிந்தால் சரியாகப் போகும்; வருத்தப்படாதே'' என்று தனிமையில் தாயை அடக்கிச் சமாதானம் செய்தாள் ஞானம்.

''என்னடீ, நீ சொல்லுகிறது? என் வயிறு கொதிப்பது எனக்குத் தெரியும். உன்னே எத்தனே அருமை பெருமையாக

வளர்த்தேன்? இவளுந்தான் முழுக்க முழுக்கப் பார்த்திருக் கிருளே. அப்படி யிருக்க, புழுக்கைபோல வேலை செய்ய வச்சிருக்காளே. உடம்பு இளைத்து ஓடாய்ப் போய்விட்டதே! இவளுக்கு இரண்டில் ஒன்று தீருவதற்குள் உன் உடம்பு என்ன ஆகுமோ, தெரியலையே!'' என்று அங்கலாய்த்தாள் தர்மாம்பாள்.

''அம்மா, அப்படி ஒன்றும் ஆகிவிடாது; கவலைப்படாதே. நீ நினைக்கிறபடி அவ்வளவுக்கு ஒன்றும் மோசம் இல்லை. ஒவ்வொரு சமயம் அருமையாகவும் இருக்கிருள். எல்லாம் குணக்கோளாறு. அதோடு வியாதி வேறு. நாமாக ஆசைப் பட்டுச் சம்பந்தம் செய்துகொண்டோம். கொஞ்சம் பொறுத் துப் போக வேண்டியதுதான்'' என்று அவள் சொல்லியபோது தன்னையே அவள் சுட்டிச் சொல்லுவதுபோல் இருந்தது, தர்மாம்பாளுக்கு. அவள்தானே ஸப் ஜட்ஜ் வீட்டுப் பிள்ளைக் குத் தன் மகளைக் கொடுத்துவிட ஒரே பிடிவாதமாக இருந்தாள்? மக்களுக்குச் சத்துரு மாதா பிதா என்பதற்கு ஒப்ப, தன்னாலேயே பெண்ணுக்கு இந்தக் கஷ்டம் நேர்ந்துவிட்டதா என்ன? ''அம்மா, அப்பாவிடம் போய்ப் பெரிதாகச் சொல்லாதே. அவர் ஏதாவது செய்ய வேண்டுமென்று கிளம்பிவிடப் போகிருர். அது இன்னும் ஏதாவது இக்கட்டில் கொண்டு போய் விடப்போகிறது'' என்று மேலும் தாயை எச்சரித்து அனுப்பினுள் ஞானம். 'ஆமாம், இப்படி நடுங்கினு ரொம்ப நல்லதுதான்' ஒன்று தர்மாம்பாள் கோபமாக நினைத்தாலும், அந்த எச்சரிப்பு அவளுக்கு அவசியம் வேண்டியிருந்தது; இல்லாவிட்டால் அவள் மனம் இருந்த கோப நிலையில் நேராக ஊர் போனதும் பெண்ணின் நிலைமையைச் சகிக்காமல் புலம்பித்தான் இருப்பாள். அது அம்மாஞ்சியைக் கொதித் தெழச் செய்திருக்கும். போலீஸ்காரரர் அல்லவா? அவ ருக்குச் சண்டை சச்சரவு ஒரு பொருட்டா? இரண்டில் ஒன்று தீர்த்துப் பெண்ணை வீட்டோடு கூட்டி வத்திருந்தாலும் வந்திருப்பார்.

அவ்வளவுக்கு வந்துவிடாமல் ஞானம் தன்னைத் தான் காப்பாற்றிக்கொண்டாளென்றே சொல்லவேண்டும்.

''பார்த்தாயா? நான் போக வேண்டாமென்று சொன் னேனே. போய் என்னத்தைச் சாதித்து வந்தாய்?'' என்று அம்மாஞ்சி கேட்டதற்கு, ''ஏதோ பார்த்துவிட்டாவது வந்

தேனே இல்லையோ; அதுதான்'' என்று நிறுத்திக்கொண்டாள் தர்மாம்பாள். ஞானத்தின் எச்சரிக்கை அவள் நினைவில் இருந்தது. என்ன கஷ்டமென்றாலும் பெண் வீட்டோடு வந்து விடுவதை எந்த இந்தியத் தாயும் அவ்வளவாக விரும்பி ஏற்கிற தில்லையல்லவா?

ஆனால் அப்படி அவள் தனக்கு வந்த ஆத்திரத்தையும் துக்கத்தையும் தனக்குள் அடக்கிக்கொண்டது மகாலக்ஷ்மிக்குத் தான் ஆபத்தாய் முடிந்தது. எத்தனைக்கு எத்தனை பெண்ணின் சிரமத்தைச் சொல்லாது அடக்கினாளோ, அத்தனைக்கு அத்தனை மகாலக்ஷ்மியிடம் அசூயையாக அது வெளிப்பட்டது. அவள் தங்கள் வீட்டில் பிறந்த வீட்டிலே இருப்பதுபோல் ஒரு வேலை வெட்டியும் இன்றி இருந்துவருவது அவளுக்குச் சகிக்கவில்லை. 'வேண்டாத பெண்டாட்டி கால் பட்டால் குற்றம் கை பட்டால் குற்றம்' என்பதுபோல், தொட்டதற்கெல்லாம் அவளிடம் எரிந்து விழுந்து கோபித்துக்கொண்டாள். அம்மாஞ்சியோடு அவள் சகஜமாகப் பேசினால், ''மாமனுருக்குச் சரியாக மட்டு மரியாதை இல்லாமல் என்ன பேச்சு?'' என்று அவள் கடிந்து சொல்வதைக் கேட்க மகாலக்ஷ்மிக்கே ஆச்சரியமாகப் போயிற்று. இவ்வளவு நாளும் இல்லாத இந்த மாறுதல் திடீரென்று எங்கிருந்து எதற்காக வந்திருக்கிறது? அவளுக்குப் புரியவே இல்லை. திக்பிரமைதான் கொண்டாள். எப்படி நடந்துகொண்டால் மாமியார் கோபியாமல் இருப்பாள் என்பதே அவளுக்கு இப்போது பெரிய பிரச்னையாகப் போய் விட்டது.

மெத்தென்று மலர் தூவின பாதையாக இருந்த அவள் வாழ்க்கை ஒரு நொடியில் ஒரே முள் நிறைந்ததாக மாறி விட்டதே! ஏன்?

மனிதர் மனம் ஸ்திரமற்று, எவ்விதமெல்லாம் மாறும் தன்மையுடையது என்பதை, பேதைப் பெண், அவள் என்ன கண்டாள்? ஊரில்தான் அத்தை அவளை வேண்டாதபடி பேசித் துன்புறுத்தினாள் என்றால், இங்கே வெகு அன்பாக இருந்த மாமியாரும் ஒரு நொடியில் இவ்விதம் மனம் மாறி இருக்கிறாளே; போதாத காலமா? அவள் மனம் வேதனையுற்று வாடிற்று. அவள் கஷ்டம் அவள் தாங்கும் அளவுக்கு மேலே போகிறதுபோலத் தோன்றிற்று. இவ்வளவோடு அவள் சிரமம் தீர்ந்துவிட்டதா?

இதற்கு மேலும் சிரமங்கள் வாழ்க்கையில் இல்லையா? இதையே அவள் பெரிதாக நினைத்துக் கஷ்டப்படுகிறாளே!

# 31
# சத்தியாக்கிரகம்

திடீரென்று உலக மகா யுத்தம் ஆரம்பமாயிற்று. அதில் இங்கிலாந்து நம்மைக் கேளாமலே இறங்கிற்று. 'எதற்காக இந்தியாவையும் அதில் சேர்த்துக்கொண்டீர்கள்? இந்தியாவுக்கு அதனால் என்ன லாபம்?' என்றெல்லாம் காங்கிரஸ், பிரிட்டிஷ் சர்க்காரைக் கேட்டது. அதற்கு அவர்கள் சரியான விடை ஏதும் அளிக்கவில்லை. அவ்வளவுதான். அது காறும் இருந்து வந்த காங்கிரஸ் மந்திரிசபைகள் உடனே ராஜீநாமாச் செய்து விலகிக் கொண்டன.

சட்டமறுப்பு இயக்கம் நாடெங்கும் வேகமாக ஆரம்பமாயிற்று. காங்கிரஸைச் சேர்ந்தவர்கள் சிறைக்குள் தள்ளப் பட்டார்கள். இது மாதிரி சம்பவங்களுக்கும் நமது கதைக்கும் சம்பந்தம் என்னவென்றால், சட்டக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த நாராயணனும் சட்டமறுப்பு இயக்கத்தில் சேர்ந்து சிறை சென்றதுதான். "நியாயத்தைக் கடைப் பிடிக்காது ஒரு சர்க்கார் நடத்தும் கல்லூரியில் நாம் சேர்ந்து எதற்காகப் படிப்பது? அது சரியல்ல. நாம் யாரும் காலேஜ் போகக்கூடாது. கலாசாலைகளைப் பகிஷ்காரம் செய்ய வேண்டும்" என்று அவன் கலாசாலை மாணவர்களையெல்லாம் ஒன்று கூட்டிப் பெரிய பிரசங்கம் செய்து, யாரும் கலாசாலை செல்வதில்லை என்கிற தீர்மானமும் நிறைவேற்றினான்.

அதன்படி மறுநாள் கல்லூரி வாசலில் நின்று கட்டுப் பாட்டுக்கு அடங்கி நிற்காது வரக்கூடிய மாணவர்களை உள்ளே போகவிடாமல் தடுத்தும் நின்றான். இந்தச் செய்கைக்குச் சர்க்கார் அவனைக் கைது செய்து ஆறு மாதச் சிறைத் தண்டனையும் விதித்தார்கள். சாதாரணக் கல்லூரி மாணவனாக இருந்தால், காலேஜில் தொடர்ந்து படிக்கவிடாமல் வெளியில் அனுப்புவதோடு நிறுத்திக்கொள்ளுவார்கள். இது சட்டக் கலாசாலை அல்லவா? இதில் வித்தை பயிலுகிறவர்கள் மாணாக்கர்கள் என்கிற சிறு பிராயத்தைக் கடந்தவர்கள். அதிலும் சட்டம் படிப்பவர்களே அந்தச் சட்டத்தை மீறலாமா? அவர்கள் அது மாதிரி பிரசாரம் வேறு செய்து கல்லூரியில்

கலகம் செய்வது ராஜத்துரோகக் குற்றம்: அதற்குத் தண்டனையும் கடுமைதான்;

இதுதான் நாராயணனுக்கு ஆறுமாதச் சிறைத் தண்டனை கிடைத்ததற்குக் காரணமாயிற்று. தர்மராஜுவுக்கோ நாராயணனுக்கு உதவியாக அவன் கூட இருந்ததற்கு ஒரு வருஷம் காலேஜ் பகிஷ்காரத்தோடு போயிற்று. நாராயணனை விடத் தர்மராஜுவுக்கு இவைகளில் ஆர்வம் குறைவா என்று கேட்டால், அல்ல; அதிகம் என்றுகூடச் சொல்லலாம். ஆனால் அவனுக்கு நாராயணனைப்போல் பேச்சு வன்மை இல்லை; கேட்போரைப் பிரமிக்க அடித்துத் தன் சொல்லை அப்படியே கிரகித்து ஏற்கும்படி செய்யும் திறமை இல்லை. ஆகையால் அவன் பின்னணிக்குப் போகவேண்டிய தாயிற்று. நாராயணனே கலகத்துக்கு முக்கிய காரணஸ்தனாகப் பார்ப்பவர்களுக்குத் தோன்றியது.

மேலும் தர்மராஜு, நாராயணனின் உத்ஸாகத்தைக் குறைக்கும் நோக்கத்தில் தன் உத்ஸாகத்தை வேண்டுமென்று குறைத்தும் காண்பித்தான். அவனுக்கு ஏதாவது கெடுதல் நேர்ந்துவிட்டால் அவன் வீட்டார் மிகவும் கஷ்டப்பட்டுப் போவார்களே. அவனுடைய தந்தை போலீஸ் உத்தியோகஸ்தர்: இவன் சர்க்காருக்கு விரோதமாகக் கிளம்புவதில் அவருக்கு எவ்வகை ஆபத்துக்கள் வரக் கூடுமோ? மகாலக்ஷ்மி வேறு வருந்தும்படி நேர்ந்துவிடுமே. ஏற்கனவே அவள் உறங்கிக் காணப்பட்டது அவனை உறுத்திக்கொண் டிருந்தது. நாராயணனுக்கு ஏதாவது இது மாதிரி விபத்து நேர்ந்துவிட்டால் அவள் எப்படித்தான் சகிப்பாள்? இவ்விதம் நினைத்துத்தான் நாராயணனுடைய ஆவேசத்தைக் குறைக்க முயன்றான். தனக்குக் காலேஜ் மறியல் செய்யும் விஷயம் அவ்வளவாகப் பிடித்த மில்லை என்றுகூடக் காண்பித்தான்.

"போடா பயங்கொள்ளி! ஒரு வருஷமோ, இரண்டு வருஷமோ காலேஜை விட்டு விலகி இருக்கும்படி நேர்ந்தால் தான் என்ன? இல்லை, சிறைவாசமே கிடைத்துவிட்டாலுந்தான் என்ன? நமது தேசத்துக்காக நாம் இந்தத் தியாகங்கூடச் செய்ய யோசித்தால் நாம் என்ன தேசத் தொண்டு செய்து புரட்டுகிறது?" என்று பிரசங்கம் செய்தான் நாராயணன்:

"தியாகத்தைப்பற்றி அல்லடா; நீ இதில் அதிகம் தலையிட வேண்டாம் என்கிறேன். உன் வீட்டவர்களை நினைத்துப் பார்.

உனக்குக் கஷ்டம் வந்தால் அவர்களுக்கு எவ்வளவு சிரமம்?'' என்றான் தர்மராஜு.

''வெகு அழகு. இவ்விதமெல்லாம் எண்ணினோமானால், அப்புறம் நாம் ஒன்று செய்தமாதிரிதான். ஒருவருக்கும் ஒரு சிரமமும் நேராமல் தேசத் தொண்டு செய்வதென்பது எங்காவது சாத்தியமா? அப்புறம் அதற்குத் தொண்டு என்று என்ன பெயர்? நீ தேவலையப்பா! உன் தியாக உணர்ச்சி ரொம்ப நன்றாயிருக்கிறது! ராஜ வம்சத்தைச் சேர்ந்தவன் நீ. தேசத்துக்காக உயிரைத் திருணமாக மதிக்க வேண்டும். அப்படிப்பட்டவன் இதுமாதிரி பேசுகிறாயே. இதற்கெல்லாம் இந்தப் பிரிட்டிஷ்காரர்கள்தாம் பொறுப்பாளிகள் அல்லவா? கத்தி எடுத்துப் போருக்குச் செல்ல வேண்டிய வீர ஜாதியாரைப் பேடிகளாக அடித்து விட்டார்களே. எனக்கு நீ பேசுவதைக் கேட்க எவ்வளவு வருத்தமாக இருக்கிறது தெரியுமா?'' என்றான். அவன் குரலில் உண்மையாகவே துக்கம் தொனித்தது.

''நான் என்னை நினைத்துச் சொல்லவில்லை. நான் எவ்வளவோ செய்யத் தயார்தான். எனக்காகக் கஷ்டப் படுகிறவர்களும் யாரும் இல்லை. உனக்குத்தான் சொல்லுகிறேன். உன் பெற்றோர்கள், உன் மனைவி இவர்கள் எவ்வளவு சிரமப் படுவார்கள், உனக்கு ஏதாவது நேர்ந்தால்? உன்னைக் கலா சாலையை விட்டு விலக்கினாலும் அவர்களுக்குக் கஷ்டமாகத்தானே இருக்கும்?'' என்றான் தர்மராஜு.

''அப்படி அவர்கள் இதற்கெல்லாம் வருந்துபவர்களாக இருந்தால், அவர்கள் எனக்குப் பெற்றோரும், மனைவியுமாக இருக்கத் தகுந்தவர்கள் அல்ல. நியாயமான ஒன்றுக்கு ஒருவன் பாடுபட்டுக் கஷ்டப்பட நேர்ந்தால் அதற்காக அவர்கள் வருந்தலாமா? எங்காவது ராஜபுத்திரன் மனைவியோ தாயோ அவன் யுத்தத்தில் மாண்டதற்காக வருந்தினதாக நாம் படித்திருக்கிறோமா? கேட்டிருக்கிறோமா? அவனை இழந்த துக்கம் அவர்களைத் துன்புறுத்தினாலும், அவன் எதற்காக மடிந்தான் என்பதில் அல்லவா அவர்களுக்குப் பெருமை? அப்படித்தான் என் தாய்தந்தையரும் மனைவியும் இருக்க வேண்டுமாக்கும்'' என்று பெரிய வீரனைப்போலப் பிரசங்கித் தான் நாராயணன். அவனைத் தடுத்துப் பேசி, மகாலக்ஷ்மி

வருத்தப்படுவாளே என்பதை வற்புறுத்தி, அவன் மனத்தில் பட வைக்க முடியுமா?

தர்மராஜுவுக்கு அது சாத்தியமாகத் தெரியவில்லை. தான் முனையும் காரியத்தில் நாராயணன் அவ்வளவு பிடிவாதமாக இருந்தான். அவனுக்கு அந்த வேலையில் உதவியாயிருப்பது தவிர வேறு வழியின்றிப் போயிற்று தர்மராஜுவுக்கு. அதன் பலனும் அவன் நினைத்துப் பயந்த விதமே முடிந்தது.

காங்கிரஸ் மந்திரி பதவியை ராஜீநாமாச் செய்து, கவர்னர் சர்க்கார் பதவி ஏற்கவுமே, 'மறுபடியும் தொல்லைகள் கிளம்பிவிட்டனவே' என்கிற கலவரம் போலீஸ்காரர்களுக்கெல்லாம் ஏற்பட்டுவிட்டது. அதாவது இனி அமைதி ஏது? காங்கிரஸ் மறுபடியும் அராஜகக் கட்சியாகக் கருதப்பட்டுவிடும். அதன் செய்கைகளைக் கவனித்து, பொழுது விடிந்தால் நம்மவரை அடித்து உதைத்துத் துன்புறுத்திச் சிறைக்கு அனுப்ப வேண்டியவன் போலீஸ்காரன். அதற்காகப் பொது ஜனங்களின் வெறுப்புக்கு ஆளாக வேண்டியவனும் அவன்தான். இந்தக் காங்கிரஸ், பதவி ஏற்பதும் விடுவதும் ஊருக்கு நன்மையோ கெடுதலோ, போலீஸ்காரன் பாடு திண்டாட்டந் தான். அது வெட்ட வெளிச்சமாக இருக்கிறது. போலீஸ்காரன் ஜனங்களுக்கு ஜன்ம விரோதியாகிவிடுகிறான்.

சத்தியாக்கிரகம் நடந்தபோது, பொதுஜனங்களின் உணர்ச்சியை மதித்து நடக்க முடியாத தங்கள் நிலைமைக்கு வருந்தின போலீஸ் உத்தியோகஸ்தர்கள் சிலரில் அம்மாஞ்சியும் ஒருவர். இப்படி அவர் பொதுவாகவே தம் நிலைமையைக் குறித்துக் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும்போது, நாராயணனே கலாட்டா செய்து சிறை சென்றுவிட்டானென்று கேட்டால் அவருக்கு என்னவாகத்தான் இராது?

அவனே வெளிப்படையாகப் பேசி எல்லோரும் அறியக் கலாசாலை மறியல் செய்திருக்கிறான். அதில் அவர் தலையிட்டு ஒன்றும் செய்ய முடியாது. அவர் மகன் காங்கிரஸ் மனப்பான்மை உள்ளவன் என்பது இப்போது பகிரங்கமாகிவிட்டதால், அவருக்கே சர்க்கார் ஏதாவது தொல்லை கொடுக்கக் கூடும். அப்படி நேரும்போது அவர் தம் உத்தியோகத்தை ராஜீநாமாச் செய்யவேண்டியது தவிர வேறு வழி இருப்பதாக அவருக்குத் தெரியவில்லை. தண்டனைக் காலம் முடிந்து மகன் திரும்பி வரும் மட்டும் சும்மா இருப்பதைத் தவிர

ஒன்றும் செய்வதற்கில்லை என்று அவர் யோசித்து முடிவுக்கு வந்தார். நாராயணன் முன் பின் யோசியாது கிளம்பினதற்கு அவனிடம் அவருக்கு வருத்தந்தான். அவனது தேசீயக் கொள்கை அவருக்குத் தெரியும். அதை அவர் தவருனதாகவும் நினைக்கவில்லை. அவரும் சர்க்கார் உத்தியோகத்தில் இராமல் இருந்தால் காங்கிரஸை ஆதரிப்பவராகத்தான் இருப்பார்.

என்ன இருந்தாலும் படிப்பை முடித்துத் தொழில் என்று ஒன்று தொடங்கிய பின்பு சுதந்தரமாகத் தேச சேவைக்குக் கிளம்புகிறதா? இப்படிப் படிப்பை அரைகுறையாக வைத்துக் கொண்டு, தன்னைப்போல் இருக்கும் மற்றவர்களையும் கலைத்துக் கொண்டு கிளம்புவதா? அது சரியல்லவே. அப்புறம் தொழி லென்றே ஒன்றும் இல்லாமல் வாழ்நாள் முழுதும் சோம்பித் திரியும்படி நேர்ந்துவிட்டால் என்ன செய்வது! உத்தியோகமே பார்த்து வந்து பழக்கமாகிப்போன அவருக்குச் சும்மா இருக்கும்படி நேருவதை நினைக்கவே பயமாக இருந்தது.

தர்மாம்பாளுக்கு அது மாதிரி யோசனை ஒன்றும் இல்லை. துக்கம் தாங்காது வந்தது. அவளுக்கு இருந்ததெல்லாம் ஒரு பெண்ணும் ஒரு பிள்ளையும். பெண்ணைப் புக்ககத்தில் சிறை யில் புகுத்தினதுபோல் புகுத்தி வெளியிட்டுச் சொல்லிக் கொள்ளக்கூட வகையில்லாமல் கஷ்டப்படுகிருள். அதேபோல ராஜதானிக்கே முதல்வனுகப் பரீக்ஷைகளில் தேறி ஊரே கொண்டாடின மகன் அரசாங்கத்துக்கு விரோதமாகக் கிளம்பிச் சிறையில் அடைபட்டுவிட்டான். அதையும் அவள் சொல்லிக் கொண்டு வருந்துவதற்கில்லையென்ருல் அவளால் தாங்க முடியுமா?

'எந்தப் பாவிகள் என் செல்வத்தைக் கண்டு கண்ணைப் போட்டார்களோ; எனக்குக் கஷ்டத்துக்குமேல் கஷ்டமாக வந்து குவிந்துவிட்டது. அவர்கள் ஏழேழு ஜன்மத்துக்கும் கஷ்டப்படமாட்டார்களா?' என்று மனமார எல்லாரையும் சபித்தாள்.

''நாணம்மாள் பிள்ளையை இரவுக்கு இரவாக ஓடிச் சென்று மீட்டு வந்தேளே; பிள்ளை சிறை சென்றிருப்பதற்குச் சும்மா இருக்கிறீர்களே; இதென்ன நியாயம்?'' என்று தன் கணவரைக் கடிந்துகொண்டாள். அவர் சொல்லும் காரணங்கள் ஒன்றும் அவளுக்கு நியாயமாகத் தோன்றவில்லை.

'இவர் முனைந்தால் எப்படியாவது சிறையிலிருந்து விடுவிக்க முடியாமலா போகும்?' என்று எண்ணிய அவளுக்கு அவர் சொல்லுவது ஒன்றும் காதில் விழவே இல்லை.

மகாலக்ஷ்மியிடம் அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. 'அதிருஷ்டம் கெட்டது!' என்று கடிந்து கொண்டாள். 'ஜம், ஜம்'னு பாஸ் செய்து வந்தவனுக்கு இதுமாதிரி படிப்பை நிறுத்தப் புத்தி தோணணும்னு, எல்லாம் இந்தப் பெண்ணோடே பாக்கியம் இல்லாமே வேறு என்ன?' என்று கோபம் ஏற்பட்டது.

தர்மராஜு மட்டும் அப்போது அவள் கண்களில் பட்டிருந்தானானல், அவனோடு சேர்ந்துதான் தன் மகன் கெட்டுப்போனான் என்று அவள் நினைத்திருந்ததற்கு அவனை என்ன வைது திட்டியிருப்பாளோ! ராமபாணத்துக்கும் மேல் பட்ட கடும் வெம்மைகொண்ட சொற்களாக அல்லவா அவை இருந்திருக்கும்?

நல்ல வேளை, அவன் இது நடந்து ஒரு மாதம் பொறுத்தே வந்தான்! நாராயணனை வேலூர்ச் சிறைக்கு அழைத்துச்சென்ற பிறகு, அவனை அங்கே சென்று பார்த்துவிட்டு அவனிடம் விடை பெற்றுக்கொண்டே அவன் ஊர் திரும்பினான்.

''இதுமாதிரி சிறை செல்வது பெருமை என்று நீ மகாலக்ஷ்மிக்கும் என் தாய்க்கும் எடுத்துச்சொல்லி வருத்தப் படாமல் இருக்கச் செய்யவேண்டும், தெரியுமா? ஆறு மாதம் நிமிஷமாகப் போய்விடும். பிறகு புகழோடு வந்து குதித்து விடுவேனென்று சொல்லு. நீயும் என்னோடு ஜெயிலுக்கு வராதது நல்லதுதான். அவர்களுக்கு நீ தெம்பு சொல்லலாம் அல்லவா? அப்பாவைப்பற்றிக் கவலை இல்லை. அவருக்கு இவைகளெல்லாம் பழக்கமான சங்கதிகள்'' என்று நாராயணன் சொல்லி அனுப்பினான்.

உண்மையில் நல்ல திட சரீரம் படைத்த இளம் காளையான அவனுக்கு ஆறு மாதக் கடுங்காவல் என்ன கெடுதலைப் பண்ணி விடும்? அவன் சொன்னபடி சுகமாகவே திரும்பி வருவான். நாட்டுக்காகச் சிறை செல்வது பெருமைப் படக்கூடியது அல்லவா? அவர்கள் சந்தோஷமே படுவார்கள்.

மகாலக்ஷ்மியாவது ஒருவாறு இந்த வகையில் எண்ணுவாள் எனலாம். சிறை சென்று கஷ்டப்பட்ட காங்கிரஸ் தியாகிகளையெல்லாம் அவள் உயர்வாக நினைத்திருக்கிறாளல்லவா? அது

மாதிரி நினைக்கவே நாராயணனும் அவளுக்குக் கற்றுக்கொடுத்து வந்திருக்கிறன். சிறைவாசம் அவன் தேகநிலையைப் பாதிக்காமல் இருக்கவேண்டும் என்ற ஒன்றுதான் அவளுடைய கவலை. அவன் சௌக்கியமாகத் திரும்பி வந்த பிறகு அவனுக்கு மேற்பட்டவர்கள் உண்டா? காந்தி மகாத்மாவின் அடிச்சுவட்டைப் பின்பற்றும் பாக்கியம் எல்லோருக்கும் கிடைக்குமா? 'எங்கள் பள்ளிக்கூடத்துக்கு விஜயம் செய்த காங்கிரஸ் மந்திரி மனைவியின் பெருமை எனக்குக் கிட்டுகிறதா? அவளை ஏதோ தெய்வப் பிறவியாக எண்ணி எல்லோரும் அண்ணுந்து பார்த்தோமே. எனக்கு இப்போது அந்தப் பதவி ஏற்படுகிறதா என்ன?' என்று அவள் மனம் நினைத்துத் திகிலும் சந்தோஷமும் மாறி மாறி அநுபவித்து ஒரு நிலையில் நில்லாமல் தவித்தது. தர்மாம்பாள் மட்டும் அவள் அதிருஷ்டத்தைக் குறை கூறி வசைமாரிகள் தொடுக்காதிருந்தால், அவள் கணவனின் சிறைவாசத்தை எவ்வளவோ மனச் சாந்தியுடன் பொறுத்திருப்பாள். தர்மாம்பாளின் போக்கு அதற்கு இடம் கொடுக்கவில்லை; தன்னையும் வருத்திக்கொண்டு மகாலக்ஷ்மியையும் வருத்தத்துக்கு உள்ளாக்கினுள் அவள்.

கோபாலையர் வேறு, நாராயணன் சிறை சென்றதைக் கேள்விப்பட்டு அது விஷயமாகக் கடிதம் எழுதிப்போட்டு விட்டுச் சும்மா இருந்தார். அது தர்மாம்பாளுக்குப் பொறுக்கவே இல்லை. ''இப்படி ஒரு பெண்ணைப் பெற்ற தகப்பன் இருப்பானே? விஷயம் கேட்கவும் ஓடிவரமாட்டானே? என்ன அதிசயம்!'' என்று அங்கலாய்த்தாள்.

''அவன் வந்து என்ன பண்ணப்போகிறன்?'' என்று அம்மாஞ்சி சொன்னதற்கு, ''என்ன பண்ணுகிறதா? நன்னருக்கு, நீங்க சொல்றது! அப்படி மனசு கேட்குமோ? பெண் என்னமா இருக்காளோ, மாப்பிள்ளையைத்தான் விடுவிக்க வழியுண்டா? இவைகளையெல்லாம் விசாரிக்கத் தோணுதோ? ஜெயிலிலேதான் என்னமாய் இருக்கான்? அதையாவது பார்க்கணும்னு இருக்காதோ?'' என்று அடுக்கினுள் தர்மாம்பாள்.

''அவனுக்கு அவ்வளவெல்லாம் தெரியாது. நான் பார்த்துக்குவேன்னு சும்மா இருப்பன்'' என்றார் அம்மாஞ்சி.

''நீங்கதான் சர்க்கார் உத்தியோகஸ்தர். நாராயணன் விஷயத்தில் ஒண்ணும் பண்ணமுடியாது என்கிறேளே;

இவராவது வந்து ஏதாவது செய்யப்படாதா? கண்ணுலே யாவது பார்த்து வரலாமே? இப்படி ஒரு மாமனுர் நம் பிள்ளைக்கு ஏற்பட்டாரே, ஒன்றுக்கும் உதவாமல். உங்களுக்கும், பிள்ளைக்கு வேறே பெண் கிடைக்காமல் போச்சே. அந்தச் சொல்லுங்கள். அவன் ஜெயிலிலே என்ன களியைத் தின்னுண்டு கிடக்கருனே? உடம்பு எப்படிப் போச்சோ? எனக்கு இங்கே இலையிலே உட்கார்ந்து சம்பிரமமாச் சாப்பிட வேண்டியே இருக்கல்லை. பார்த்து வந்து சொல்லு வாரையும் காணும்'' என்று புலம்பினுள் தர்மாம்பாள்.

''அரசாங்கக் கைதிகளுக்கு ஒரு குறையும் இல்லை. எல்லாச் சௌகரியமும் இருக்கும். நீ வீணுக்கு அலட்டிக்காதே'' என்று சமாதானம் சொன்னுர் அம்மாஞ்சி.

''இருந்தாலும் இப்படி நாதியத்த பெண் வரவேண்டாம். தங்கள் பெண் என்ற எண்ணமே இல்லையே அவாளுக்கு. சுப்பு என்னதான் செய்யரு? தாயில்லாக் குழந்தைகளைக் கவனித்துச் செய்கிற அழகு! என் வயத்தைத்தான் கொதிக்கிறது'' என்ருள் தர்மாம்பாள்.

''ஏண்டி, அந்தக் குழந்தை காதில் படப்போகிறது; பாவம், வீணுக்கு அதை வதைப்பானேன்?'' என்று மனைவியைக் கடிந்துகொண்டார் அம்மாஞ்சி.

''ஏன், அவளுக்குத்தான் தெரியட்டுமே, பிறந்தாத்த வர்கள் சவரணை, நீங்கள் என்ன அப்படி அவளைக் காப்பாத் தறது? என் பெண் செய்யாத வேலை செஞ்சுண்டு, கேட்காத வார்த்தை கேட்டுண்டு கஷ்டப்படறது. அதுக்குக் கேள்வி முறையைக் காணும். என்னவோ பெரிசாச் சொல்ல வந்துட்டேளே. திரும்பிப் பார்க்க மனுஷ்யர்களைக் காணும். சொன்னுத்தான் தப்பா? என்னை என்னவோ பயப்படச் சொல்றேளே; நன்னுத்தான் இருக்கு!'' என்று ஆத்திரப்பட்டு இரைந்தாள் தர்மாம்பாள்.

''நம்ம பெண் கஷ்டப்பட்டா, அதற்காக இன்னொருத்தர் பெண்ணையும் கஷ்டப்படுத்த வேணுமா? அது சரியில்லை. பிறந்தகத்திலும் கேட்பாரற்று, அகமுடையானும் ஜெயிலிலே இருந்தா, அந்தக் குழந்தையின் மனம் கஷ்டப்படாதோ? நாமும் சேர்ந்து அதை அதிகப்படுத்துவாளா? நமக்குத்தான் அதில் என்ன சாதகம்? ஏதோ தாயில்லாக் குழந்தை; நம்மை

விட்டாலும் அதற்கு யார்தான் இருக்கா?'' என்றார் அம்மாஞ்சி இரக்கத்துடன்.

''என்னைப் பொல்லாதவளாக அடிக்கறேளே; நான் படுத்தறேனா? என் வயிறு கொதிக்கறது. எந்தக் கஷ்டம் வந்தாலும் சும்மா பொறுத்துக்க வேணும்னு என் தலையில் எழுதியிருக்கு. வீட்டிலேகூட வாய் திறக்க வழி இல்லை; உடனொத்த பிராமணன், அந்த நாணம்மாள் அகமுடையான், பிள்ளை ஜெயிலுக்குப் போறான் என்கிறத்துக்குள்ளே ஓடி வல்லையா? அது மாதிரி வரத் தோணுதோ?'' என்று மேலும் புலம்பினாள் தர்மாம்பாள்.

''அந்தக் காலிப்பயல் ஜெயிலுக்குப் போறதையும், நாராயணன் போறதையும் ஒண்ணாப் பேசறயே; போரும் உன் பேச்சு!'' என்று சீறினார் அம்மாஞ்சி.

''ஒண்ணே இல்லையோ; நாணம்மாள் ஒண்ணுன்னுதான் சொல்லப்போறா. அதுலே சந்தேகம் இல்லை. கழுதையும் காதம், குதிரையும் காதந்தான். அதற்கு நீங்களும் நானும் கோபப்பட்டு என்ன பண்றது?'' என்று அவர் மனைவி குத்தலாகக் கூறினாள். இரண்டும் ஜெயிலுக்குப் போவதுதானே? அது அவள் மனத்தை உறுத்திக்கொண்டிருந்தது. நாணம்மாள் பிள்ளை சுப்புணி ஓர் உதாவக்கரை; அவள் பிள்ளையோ படித்த மேதாவி. அவனும் இவனும் ஒன்றாகப் போகிறதா?

ஆனால் அம்மாஞ்சி, ''போடி, அவள் சொல்லிவிட்டா ஆயிடுத்தா? ஊராருக்குத் தெரியாதா என்ன?'' என்று அவள் எண்ணத்தை அலக்ஷ்யமாகத் தள்ளிச் சொன்னதற்கும் ''நாணம்மாள் அதுமாதிரிதான் சுப்புவிடம் சொல்லிக்கொள்ளு வாள். சுப்புவும் அதை நம்புவாள். அது போதாதா? ஊரார் என்ன நினைத்தால் என்ன? நம்மைச் சேர்ந்தவர்கள் நினைப்பது தானே நமக்கு முக்கியம்?'' என்று எடுத்துச் சொல்லி அதற்கு வேறு வருந்தினாள், தர்மாம்பாள்.

இவர்கள் பேச்சு அரைகுறையாகக் காதில் விழுந்தது மகாலக்ஷ்மிக்கு. தன் தந்தையின் போக்கை எண்ணி மிகுந்த மன வருத்தம் உண்டாயிற்று. மாமியார் ஒருகால் அதிகப்படுத்திச் சொல்லுகிறாளோ என்று சந்தேகித்தாலும், மாமனாரும் அதை ஆமோதித்துத்தானே பேசினார்?

இப்போதுதான் முதல் முதல், அவளுக்குத் தந்தையின் பேரில் வருத்தமும் கோபமும் விசேஷமாக உண்டாயின. தான்

ஆதரவற்று இருப்பதும் பட்டது அவளுக்கு. சில சமயம் நமக்காக அறியத் தெரியாவிட்டாலும் பிறர் எடுத்துக் காட்டுவதிலிருந்து நமது நிலைமையை நாம் உணர்ந்துகொள்ளு கிறோம். அவ்விதந்தான ஆயிற்று மகாலக்ஷ்மியின் நிலை. தகப்பனாருடைய பிரியமற்ற தன்மை தர்மாம்பாள் எடுத்துக் காட்டின பிறகுதான் அவளுக்குப் புலப்பட்டது. இப்போது இந்தச் சந்தர்ப்பத்தில் தனக்கு எவ்வளவோ ஆதரவாக இருக்க வேண்டிய அவர் அதற்கு முற்றும் விரோதமாகத் திரும்பிப் பாராமல் இருக்கிறாரே என்பதை உணர்ந்து மிகவும் வருந் தினாள்.

'மாமியாரின் மனநிலை சரியாக இல்லை; பெண்ணுக்காகவும் பிள்ளைக்காகவும் கஷ்டப்படுவதில் அவருக்கு எல்லோரிடத்திலும் வெறுப்பு மேலிட்டிருக்கிறது. அது விசேஷமாக, கூடவே இருக்கும் நம்மிடத்தில் அதிகம் பாய்கிறது. அதற்கு முழுதும் இலக்காகாமல், நம்மை அழைத்துச் சென்று சிறிதுகாலம் வைத்துக்கொள்ள ஒரு பிறந்தகம் இல்லை என்றால் அப்புறம் என்ன இருக்கிறது? தாயென்று ஒருத்தி இருந்தால் இதுமாதிரி இருக்குமா?' என்று தனது தாயில்லாக் குறையை நினைத்து வருந்தினான்.

## 32
# சந்தேகப் பொறி

தர்மராஜு வந்தபோது, பிள்ளையிடமிருந்து வருகிறான் என்ற எண்ணத்தால் அவனிடமிருந்த கோபமெல்லாம் பறந்து போயிற்று, தர்மாம்பாளுக்கு. நாராயணன் ஜெயிலில் எப்படி இருக்கிறான். என்னதான் பண்ணுகிறான்? - இவைகளை அறிய அவளுக்கு இருந்த ஆவலில், தர்மராஜுதான் தன் மகன் சிறை செல்லக் காரணமாக இருந்தவன் என்று அவள் எண்ணியிருந்த தையும் மறந்து, அவனிடம் நாராயணனைப்பற்றி விசாரிக்கத் தொடங்கிவிட்டாள். பெற்ற மனம் அல்லவா?

"அம்மா, அவன் சுகமாக இருக்கிறான். அவன் சிறை சென்றிருப்பதற்கு நீங்கள் வருந்தவே கூடாது. அதனால் அவனுக்குப் பேரும் புகழும் ஓங்குகின்றனவே தவிரக் குறைவு கிடையாது. என்ன பேச்சுப் பேசுகிறான்! அவன் ஒரு நாள் பெரிய காங்கிரஸ் தலைவனாக வருவான் என்பதில் சந்தேகமே இல்லை. நம் நாட்டு மந்திரியாக ஒரு காலத்தில் வரப்போகிறான்;

அப்போது நாமெல்லாம் பெருமையோடு சந்தோஷமடைவோம்'' என்று அவன் செய்தி சொல்லியபோது தர்மாம்பாளுக்கு வருத்தம் மறைந்து மகிழ்ச்சிகூட ஏற்பட்டதென்றால், தர்மராஜு விடம் பேசுவதில் அவளுக்கு எவ்வளவு ஆசை உண்டாகாது! நடந்த விவரங்களை ஒவ்வொன்றாக அவனிடம் கேட்கத் தொடங்கினாள். 'ஒரு நொடியில், அவன் வாக்குவன்மையால் எவ்விதம் அத்தனை கல்லூரி மாணவர்களையும் தன் போக்கிலே திரும்பும்படி செய்துவிட்டான் என்கிற விஷயங்களையெல்லாம் அவன் சொல்லச் சொல்ல, அதிசயமாகக் கேட்டுவந்தாள். இதற்காகவே தர்மராஜுவை, உடனே அவன் ஊர் போகவிட அவளுக்கு மனம் வரவில்லை. தங்களிடமே சிறிது காலம் நிறுத்திக்கொள்ள ஆசைப்பட்டாள். தர்மராஜு நாராயணனைப் புகழ்ந்து கூறும்போது, பிள்ளை ஏதோ மிகப் பெரியவன் என்கிற பெருமை தோன்றி, அவள் கவலைகள், வருத்தங்கள் எல்லா வற்றையும் ஒருங்கே போக்கடித்து விட்டது. 'இப்படிப் படிப்பைக் கெடுத்துக்கொண்டு ஜெயிலுக்கு வேறு போய் வருங் காலத்தைப் பாழ் பண்ணிக்கொண்டு விட்டானே' என்று அவள் அடிவயிற்றோடு பட்ட கவலைகூடத் தானாகவே குறைந்து போயிற்று.

சில நாள் தங்களிடம் இருந்து, பிறகே அவன் தன் தாயைப் பார்க்கக் கிராமத்துக்குச் செல்லலாமென்று அவனை வற்புறுத்தத் தொடங்கினாள். அவனும் அவர்களுக்கு ஆறுதல் அளிக்கும் எண்ணத்தைத்தானே முக்கியமாகக் கொண்டு வந்திருக்கிறான்? மேலும், மகாலக்ஷ்மியிடம் நாராயணனின் பெருமைகளைச் சொல்லி அவளை உத்ஸாகப்படுத்த வேண்டு மென்றும் நினைத்திருந்தான். ஆனால் அவன் விரும்பின அளவுக்கு அவளிடம் பேச அவகாசம் கிட்டவில்லை. தர்மாம்பாள் எவ்வளவு நேரமானாலும், அவனுடன் தன் மகனைப்பற்றிப் பேசியிருந்தாளே தவிர, மகாலக்ஷ்மியை அதுமாதிரி செய்ய விடவில்லை. தான் பேசும்போதுகூட அவளை அதிகம் அங்கே தாமதித்து நிற்கவிடாமல் ஏதாவது வேலை சொல்லி அனுப்பி வந்தாள்.

அதனால் என்ன ஆயிற்று? தர்மராஜுவுக்கு மகாலக்ஷ்மி யோடு தனித்துப் பேசவேண்டுமென்னும் அவா அதிகமாயிற்று. 'அவள் மிகுந்த மன ஏக்கத்தோடு காணப்படுகிறாளே. அவளிடம் அவள் கணவனைப்பற்றி விரிவாகக் கூறி அவளைச் சந்தோஷிப்

பித்து அவள் ஏக்கத்தைப் போக்கடிக்க வேண்டாமா? நண்பனுக்காக அது செய்யவேண்டியது நம் கடமை.'-இவ்விதம் நினைத்து, அவளுடன் தனித்துப் பேசும் சந்தர்ப்பத்தை எதிர் பார்த்திருந்தான் அவன். அதனால் அவனும் அங்கே தங்கிப் போக எண்ணினான்.

அம்மாஞ்சி தம் மகனைச் சிறையில் எந்த வகுப்பில் வைத்திருக்கிறார்கள், அவனுக்கு என்ன என்ன சௌகரியங்கள் இருக்கின்றன என்பவைகளைக் கேட்டுத் தெரிந்துகொள்வதோடு நிறுத்திக்கொண்டார். அவருக்கு அதற்குள்ளாகவே சர்க்காரிட மிருந்து, 'பிள்ளையின் போக்கு அவருக்கு முன்பே தெரியுமா? அப்படியானால் அவர் அதை ஒப்புக்கொண்டு அதற்கு இடங் கொடுத்து வந்தாரா? அவன் எத்தனை நாளாக இதுமாதிரி இருக்கிறான்?' என்றெல்லாம் கேள்விகள் கேட்டுக் கடிதங்கள் வருவதை, அவர் தர்மராஜுவிடம் சொல்லவில்லை. அவனுக்குத் தெரிந்து அவன் இது விஷயத்தில் என்ன ஒத்தாசை செய்யப் போகிறான்? சாமர்த்தியமாக அவர் அவைகளுக்குப் பதில் எழுதிச் சமாளித்துக்கொள்ள வேண்டுமே தவிர, அவனால் ஆகக்கூடியது என்ன இருக்கிறது என்று எண்ணியே அவனிடம் சொல்லாமல் நிறுத்திக்கொண்டார். இனிமேல் சர்க்கார் தம்பேரில் ஒரு கண் வைத்தவண்ணந்தான் இருப்பார்கள் என்பது அவர் அறிந்ததுதானே? தொட்டதற்கெல்லாம் அவர்களுக்கு அவர்பேரில் சந்தேகம் தோன்றின வண்ணம் இருக்கும். ஒவ்வொன்றுக்கும் காரணம் கேட்டுத் தொல்லை கொடுப்பார்கள். இவைகளை நினைக்கவே அவருக்கு அலுப்பாக இருந்தது. அவர் சுபாவமான உத்ஸாகத்தையும் அது அடியோடு குறைத்தது. வேலையை எந்த நிமிஷமும் தாம் விடத் தயார், என்கிற ஓர் எண்ணமே அவரைச் சற்றுச் சமாதானமாக இருக்கச் செய்தது.

இப்போது சில மாத காலமாகத்தான் மீனுவின் கணவன் சங்கரனுக்கு அம்மாஞ்சியின் பிரயத்தனத்தால், சாத்தூரில் ஸப் இன்ஸ்பெக்டர் வேலை ஆகியிருந்தது. அவன் அந்த உத்தியோகத்தை ஏற்ற புதிதாகையால் அடிக்கடி அம்மாஞ்சி யிடம் வந்து எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று தெரிந்துகொண்டு போய்க்கொண் டிருந்தான். அவனாக அவ்வளவு தடவை வந்து போயிருப்பானோ என்னவோ? நாணம்மாள் தன் பிள்ளைக்குக் குடித்தனம் வைக்க நாட்டுப்

பெண்ணோடு வந்திருந்தவள், அவனை அவ்விதம் பார்த்து வரும்படி துரத்திக்கொண் டிருந்தாள். அவனுக்கு ஏதோ அதிருஷ்டத்தில் கிடைத்ததைத் தெரியாத்தனத்தினால் விட்டு விடக் கூடாது, அதை நன்றாகக் காப்பாற்றிக்கொள்ள அம்மாஞ்சியின் அநுபவம் நிறைந்த யோசனைகள் உதவும் என்று அவள் எண்ணினாள்.

அதன்படி அவன் ஒரு நடை வந்துபோன போதுதான் நாராயணன் சிறை சென்ற சமாசாரம் முழுவதையும் நேரிலேயே கேட்கச் சந்தர்ப்பம் வாய்த்தது. தர்மராஜுவேறு வந்து நடந்தவைகளைச் சொல்லிக்கொண் டிருந்தானாகையால் துளியும் விட்டுப்போகாமல் எல்லாவற்றையும் தெரிந்துகொண்டான்.

நாராயணன் பரீக்ஷைகளில் முதல்வனாகத் தேறும் உயர்வைக் கேட்டபோது உண்டான பொறாமை, அவன் நாட்டுக்காகத் தியாகம் செய்து சிறை சென்றிருப்பதைத் தர்மராஜு எவ்வளவோ புகழ்ச்சியாகக் கூறும்போது அவனுக்கு உண்டாக வில்லை. 'என்ன இருந்தாலும் சிறைவாசம் சிறைவாசந்தானே? உயர்வாகப் பரீக்ஷைகள் தேறி உயர்ந்த சர்க்கார் உத்தியோகங்கள் வகிப்பதன் பெருமையும் கௌரவமும் வருமா? அன்றியும் உத்தியோகம் பார்ப்பதன் சௌகரியம் தனியல்லவா?' என்று நினைத்தான். இப்போது அவன் புதிதாக உத்தியோகத்தின் செல்வாக்கை அநுபவித்து வருகிறவன். தன்னைப்பற்றியே பெருமையும் கௌரவமும் அவனுக்கு அபாரமாக ஏறி இருந்தன.

அந்தத் தன்மதிப்பில்தான் தான் வந்த சமயங்களில் தர்மாம்பாள் தனக்கு விசேஷ மரியாதை ஒன்றும் காண்பிக்காமல் தன்னை நடத்துகிறாள் என்று அவனுக்குக் குறை இருந்துவந்தது. தர்மராஜு சென்னையிலிருந்து வரவும் அவனுக்கு நடக்கும் பிரத்தியேக உபசாரத்தைப் பார்க்கவும் அது பலப்பட்டது. அவனை ஏதோ வீட்டுப்பிள்ளை போலவும், தன்னை ஏதோ அயலானாக விட்டேற்றி யாகவும் நடத்துவதாக எண்ணிக் கொண்டான். மகாலக்ஷ்மிகூட அத்திம்பேரான தன்னிடம் காண்பிக்கும் தாராளத்தைவிட அவனிடம் உரிமையோடு பழகுவதாக அவனுக்குப் பட்டது.

'நாராயணன் ஸ்தானத்தில் இவனை அந்த வீட்டில் எல்லோரும் ஏற்றுக்கொண்டு விட்டார்களா என்ன? தாழ்ந்த ஜாதியானான அவனுக்கு இருக்கும் சுவாதீனம், சொந்த

மனுஷ்யனுன நமக்குக் காணுேமே. இவனேடு பரிந்து பரிந்து பேசுகிறவர்கள் நம்மிடம் இரண்டொரு வார்த்தைகளோடு நிறுத்திக்கொள்ளுகிறுர்களே!' என்று அதிசயப்பட்டான்.

அவன் நினைத்தது முழுதும் கற்பனையல்ல. தர்மாம்பாள் சங்கரனிடம் ஒருவாறு ஒதுங்கினுற் போலத்தான் நடந்து கொண்டாள். அவளுக்குச் சுப்பு, கோபாலையர், நாணம்மாள், அவள் புருஷர், ஏன், தானப்பாளையத்தார் எல்லார் பேரிலுமே ஒரு வகையான வெறுப்பு ஏற்பட்டிருந்தது. 'குக்கிராமத்திலும் குக்கிராமம்! நாட்டின் நிலைமை தெரியாது. என்ன பட்டிக் காட்டு ஜனங்கள்! அவர்கள் குருட்டு ஆசாரமும் அவர்களும்!' என்று அவளுக்குத் தானப்பாளையத்தையும் அதன் வாசிகளை யும் நினைத்தாலே வேண்டியிருக்கவில்லை. அப்படியிருக்க, சங்கரன் மட்டும் எந்த விதத்தில் தனியாவான்? அதிலும் சுலகலப்புச் சுபாவமில்லாத அவனிடம் அவள் எதற்கு வலுவில் அதிக உறவு கொண்டாடிப் பேசவேண்டும்?

ஆனுல் மகாலக்ஷ்மி அவ்விதம் இருக்கவில்லை. ஊரைப் பற்றியும், ஊரில் அப்பா, அத்தை, பாலு, கிருஷ்ணன் இவர்களைப்பற்றியும், பிரத்தியேகமாக அக்கா மீனுவைப்பற்றியும் எவ்வளவோ ஆசையும் அன்புமாக அவனிடம் விசாரிக்கத்தான் விசாரித்தாள். அவனுக்குத்தான் அவள் ஆவலைத் தணித்து அவள் திருப்தியடையும் விதம் எல்லாரைப்பற்றியும் விவரித்து விரிவாகச் சொல்லத் தெரியவில்லை.

"அத்திம்பேரே, மீனுவை ஒரு தடவையாவது அழைத்து வாருங்களேன்" என்று அவன் வரும்போதெல்லாம் அவள் ஆசையோடு சொல்லிவந்தாள். அவள் விருப்பப்படி மீனுவை ஒரு தடவைகூட அழைத்துவர முடியாமல் போனதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று, ஏற்கனவே தர்மாம்பாள் ஒரு தரமும் அதுமாதிரி சொல்லாமல் இருக்கும்போது, அவள் அகத்துக்கு அவள் அழையாமல் எப்படி அழைத்துவருவது என்பது. மற்றுென்று, மகாலக்ஷ்மி இப்போது தர்மராஜு வோடு பழகும் மாதிரியில் அவனுக்குத் தவறு தோன்றியது.

அவன் ஒரு நாள் அம்மாஞ்சியைப் பார்க்க வந்த சமயம் அஸ்தமிக்கும் நேரமாக இருந்தது. தர்மராஜுவும் மகாலக்ஷ்மி யும் மட்டும் கூடத்தில் தனித்து நின்று பேசிக்கொண் டிருந் தார்கள். அதை அவன் பார்க்க நேர்ந்ததில் என்ன என்னவோ சந்தேகங்கள் பலமாகத் தோன்றத் தொடங்கிவிட்டன. 'சிறு

பெண் அயல் புருஷனோடு தனித்துப் பேசுவதாவது! கொஞ்சமும் நன்றாக இல்லையே!' என்று நினைத்தான். அவர்களுக்குள் சிநேகம் எவ்வளவு தூரத்துக்கு இருந்தால் இதுமாதிரி ஒருவரும் இல்லாத சமயம் பார்த்துப் பேசத் தோன்றும் என்று எண்ணினான். 'இதுமாதிரி எவ்வளவு நாளாக நடக்கிறதோ?' என்று வேறு அவன் மனம் தானே சந்தேகத்தோடு கேட்டுக்கொண்டது.

அன்றுதான், அப்போதுதான், தர்மராஜு ஒரு மாதமாக அவளுக்குத் தேறுதல் கூற விரும்பி ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருந்த சந்தர்ப்பம் கிடைத்தது என்பது சங்கரனுக்கு எப்படித் தெரியும்? தர்மாம்பாள் எங்கோ வெளியே சென்றிருந்தாள். அம்மாஞ்சி இன்னும் காரியாலயத்திலிருந்து வரவில்லை; தர்மராஜு வெளியில் சென்றிருந்தவன் சற்றுச் சீக்கிரமே வீடு திரும்பினான். தற்செயலாக அந்தச் சந்திப்பு நேர்ந்தது. அதைப் பயன்படுத்திக்கொண்டு, ''நாராயணனுக்காக வருந்தாதே, மகாலக்ஷ்மி. அவன் எவ்வளவோ பெரியவன்; காந்தி மகாத்மாவுக்குச் சரியான சிஷ்யனாக இருக்கத் தகுந்தவன். அவன் பெருமையைத் தேசம் தெரிந்து கொண்டாடும்போது நீ எவ்வளவோ சந்தோஷப்படப்போகிறாய்'' என்றெல்லாம் அவளுக்குச் சமாதானம் கூறிக்கொண் டிருந்தான்.

கணவனுடைய பெருமைகளைக் கேட்க அவளுக்கு எவ்வளவோ ஆசையென்றாலும், அவனோடு தனித்து நின்று அதைக் கேட்டு நிற்பது சரியில்லை என்று அவள் மனம் எச்சரிக்கத்தான் எச்சரித்தது. எல்லார் முன்னிலையிலும் அவனுடன் பேசினதற்கே அவள் அபாண்டமான சொற்களைக் கேட்டு வருந்துகிறாள்; அதைப் பின்னும் அதிகப்படுத்தத் தனித்து வேறு அவனோடு பேச அவள் துணிவாளா? தர்மராஜு தவறாக எடுத்துக்கொண்டு விடக் கூடாது என்பதற்காகவே அவள் அவன் சொல்வதை நின்று கேட்டாள். இந்த நிலையில் சங்கரனும் வந்து சேர்ந்தான். தவறாகவும் எடுத்துக்கொண்டான்.

அதன் விளைவாகத்தான் அவன் திரும்பி ஊர் போனதும் பின்வரும் சம்பாஷணை அவன் தாய்க்கும் அவனுக்கும் நடந்தது. ''ஏண்டா சங்கரா, தர்மாம்பாள் ரொம்பத் துக்கப்படறாளோ, நாராயணன் ஜெயிலுக்குப் போனதற்கு? அம்மாஞ்சியும் கஷ்டந்தான் படுவார், பாவம்!'' என்றாள். பிள்ளை முதல் முதலாகப் பரீக்ஷைகள் தேறும் பெருமை தர்மாம்பாளுக்கு எவ்வளவோ இருக்குமென்று இதுகாறும் அவளிடம் உள்ளூறப் பொறாமை

மண்டிக்கிடந்தது அவளுக்கு. இப்போது பிள்ளை சிறை சென்றிருப்பதற்கு அவள் வருந்திக் கஷ்டப்படுவதை அறிந்து ஆனந்தப்பட அவளுக்கு உள்ளூற ஆசை இராதா? அதற்குத்தான் சங்கரனை அவள் அம்மாஞ்சி அகத்துக்குப் போய்வரும்படி விடாது நச்சரித்துக்கொண் டிருந்தாள். அதன்படி அவனும் இப்போதுதான் போய்வந்தான்.

''அப்படி ஒன்றும் பிரமாதமாக வருந்துகிறவர்களாகத் தெரியவில்லை, அம்மா!'' என்றான் சங்கரன். இதைக் கேட்க நாணம்மாளுக்கு ஆச்சரியம் மட்டுமல்ல; ஏமாற்றமே உண்டாயிற்று.

'தர்மாம்பாள் தலை தூக்காது கிடக்கிறாள்' என்று சொல்லியிருந்தால் அவளுக்கு எவ்வளவோ திருப்தியாக இருந்திருக்கும். ''பிள்ளை பரீக்ஷைகள் தேறினதற்குப் பெருமை தாங்காது கிடந்தாளே; இப்போது படிப்பைக் கெடுத்துக்கொண்டு ஜெயிலுக்குப் போனதற்குக் கஷ்டப்படாமலா இருக்கிறாள்? எல்லாம் வெளிக்கு இளப்பமாகக் காட்டிக்கொள்ளக் கூடாதுன்னு இருப்பள்'' என்று சமாதானமாகக் கூறிக்கொண்டாள் நாணம்மாள்.

''அதில்லை அம்மா; இப்போது ஜெயிலுக்குப் போயிருக்கிறதே பெருமையாகப் போய்விட்டது. தேசத்துக்காகத் தியாகம் செய்திருப்பதாக அவனுக்குக் கௌரவம் ஏற்பட்டுவிட்டது. அந்தத் தர்மராஜு வேறு வந்து உட்கார்ந்துகொண்டு நாராயணனை ஆகாயத்தில் தூக்கி வைத்துப் புகழ்கிறான்'' என்றான் சங்கரன்.

''அவனையுந்தான் காலேஜியை விட்டுத் தள்ளிவிட்டாளாமே?''

''அதனால்தான் அவனுக்கும் வேலை இல்லை! இவர்கள் வீட்டில் ஸ்திரமாக வந்து உட்கார்ந்துவிட்டான். தாங்கள் ஏதோ லக்ஷ்ய புருஷர்கள் என்கிற மாதிரியில் தங்களையே உயர்த்திக்கொள்ளுகிறான். அதைக் கேட்டு இவர்களும் மகிழ்ந்து போகிறார்கள்'' என்றான் சங்கரன்.

''இவர்கள் வீட்டில் அவன் எதற்கு அப்படி ஸ்திரமாக உட்காருகிறான்? அவம்மா, பிள்ளை வல்லையேன்னு தவிக்கமாட்டாளோ?'' என்றாள் நாணம்மாள்.

''அது ஒரு கிழம். அவளைத்தான் இவன் லக்ஷ்யம் செய்கிறானுக்கும்! இங்கேதான் வீட்டுப் பிள்ளைக்கு மேலே உபசாரம்

நடக்கிறதே. நான் போனால் பேசுபவர்களைக் காணோம்; அவனுக்கு ராஜோபசாரம் நடக்கிறது. அம்மாஞ்சி அவர்களின் சம்சாரம் அவனைத் தன் பிள்ளைக்குப் பதிலாக ஏற்றுக்கொண்டு விட்டாள்; நாட்டுப் பெண்ணையும் கணவனாக ஏற்று நடக்கச் சொல்லியிருக்காளோ என்னவோ? எல்லாம் ரசாபாசமாகக் கிடக்கு. கேள்வி முறை இல்லை'' என்றான் சங்கரன் ஆத்திரமாக.

''என்னடா அப்படிச் சொல்லறே? அவ்வளவு மோசமாகவா இருக்கா? நாட்டுப்பெண்ணை என்னதான் அவனுக்குப் பண்ணச் சொல்றா? எதுலேயிருந்து உனக்கு இதுமாதிரி கேவலமாகத் தோணுகிறது?''

நாணம்மாளின் கேள்விகளில் இப்போது தனிவேகம் தெரிந்தது. தர்மாம்பாள் மகாலக்ஷ்மியைக் கேவலமாக நடக்கும்படி விடுகிறாளா? அவளுக்குத்தான் அவ்விதம் நினைப்பதில் எவ்வளவு உத்ஸாகம்! பொதுவாகவே பெண்களுக்கு மற்றப் பெண்களின் தவறான நடத்தையைக் கேட்கப் பிரியந்தான். மற்றவர்கள் தவறாக இருக்கும்போது தான் சரியாக இருப்பதாகப் பெருமை ஏற்படுகிறதோ என்னவோ!

அதிலும் நாணம்மாளுக்கு மகாலக்ஷ்மியின் பேரில் கொஞ்ச காலமாக ஒரு கோபம் இருக்கிறது. அவள்தான் தன் பிள்ளை சுப்புணியை எல்லார் கண்களிலும் பின்னும் மோசமாகத் தோன்றும்படி செய்துவிட்டாள். அது அவளுக்கு மறக்குமா? இப்போது அவள் நடத்தையே சரி இல்லையென்று ஏற்பட்டால் சுப்புணியின் தப்பு எவ்வளவு குறைந்துபோகிறது!

நாணம்மாளின் கேள்வியில் தொனித்த ஆவலைக் காணச் சங்கரனுக்கே கொஞ்சம் ஜாக்கிரதை ஏற்பட்டது. அவன் ஆரம்பித்த தோரணையில் மேலும் தொடர்ந்து பேச மனம் வரவில்லை. என்ன இருந்தாலும் மகாலக்ஷ்மி அவன் மைத்துனி அல்லவா? அவளைப்பற்றி நாணம்மாள் ஒரே கெடுதலாக நினைக்கத் தானே காரணமாக இருக்கத் தோன்றுமா?

''தாராளமாகப் பழகுகிறார்கள் என்பதைத்தான் சொல்லுகிறேன், அம்மா'' என்று பேச்சை அதோடு நிறுத்திக் கொண்டான். ஆனால் மீனாவிடம் மட்டும் தனிமையில் தான் பார்த்ததைக் கூறி, ''மகாலக்ஷ்மி, நாராயணனும் இல்லாதிருக்கும்போது, அவன் சிநேகிதனோடு இது மாதிரி பழகுவதாவது! எனக்கு இது கட்டோடு பிடிக்கவில்லை. உன் தங்கை

தான் என்ருலும் அவள் இது மாதிரி இருக்கும்வரைக்கும் அவளோடு நீ பழக்கம் வைத்துக்கொள்ளக்கூடாது'' என்று மனைவியைக் கண்டித்துக் கூறினான்.

'மகாலக்ஷ்மிக்கா இந்தப் பெயர்? இதென்ன அநியாயம்!' அதுவும் தன் கணவன் வாயால் அதைக் கேட்பது என்ருல் மீனுவுக்கு எப்படிப் பொறுக்கும்? வாயில் வந்தபடி வைது தீர்க்கவேண்டும் போல் ஆத்திரம் பொத்துக்கொண்டு வந்தது. 'என்ன நன்றிகெட்ட தனம்! முழுக்க முழுக்க அம்மாஞ்சியிடம் நன்மையைப் பெற்றுக்கொண்டுவிட்டு அவர்களையே இவ்விதம் பேசுகிருரே!' அவன் நன்றி மறந்த தன்மைக்கு அவள் மனம் பெரிதும் வருந்திற்று. அவன் சொன்னாலும், தங்கையினிடம் அவளுக்குச் சந்தேகம் இல்லை. சொல்லுகிறவர்கள் சொன்னாலும் அவள் நம்புகிறவள் அல்ல. தர்மராஜுவோடு மகாலக்ஷ்மி சகஜமாகப் பழகுவது அவளுக்குத் தெரிந்த விஷயந்தான். அதற்குத்தான் இவ்வளவும் கற்பிக்கப்படுகிறது. மேலும், இதுமாதிரி விஷயம் பெரிதாகிப் பரவாமல் இருக்க இப்போதே அவளைப் பார்த்து எச்சரிக்கவேண்டும் என்று நினைத்தாள்.

ஆனால் சங்கரன்தான் அவளை ஒரு தடவையாவது மதுரைக்கு அழைத்துப் போவதாக இல்லையே! இதன் பொருட்டு அவனிடம் அவளுக்கு மனஸ்தாபமே ஏற்படத் தொடங்கிற்று. எதையும் பொறுத்துப் போகும் மீனுவால்கூடத் தங்கையைப் பழித்துப் பேசின கணவனைப் பொறுத்துப் போக முடியவில்லை. முகம் கொடுத்துப் பேசாமல் இருக்கத் தொடங்கினாள். வாய் வார்த்தையைக் கொட்டும் சுபாவம் இல்லாத அவள் வேறு எவ்விதம் தன் கோபத்தைக் காட்டுவாள்?

## 33
## பஹிஷ்காரம்

காலம் சென்றுகொண்டே இருக்கிறது. அது ஒன்றுக்காகவும் நிற்பதில்லை. நமது கதை ஆரம்பித்தும் சில வருஷங்கள் ஓடிவிட்டன அல்லவா? தானப்பாளையத்தில் சிறுவர்களாக இருந்தவர்கள் வாலிபத்தையும், வாலிப வயசினர் நடுத்தர வயசையும், நடுத்தர வயசினர் வயோதிகத்தையும் காலக்கிரமத்தில் அடைந்திருந்தார்கள். புதுக் குழந்தைகள் பிறந்தும், சில பெரியவர்கள் இறந்தும் மாறுதல்கள் ஏற்பட்டுத்தான் இருந்தன. இவைகளைத் தவிர வேறு வித்தியாசங்கள் அவ்

விடத்தில் இருந்தனவா என்ருல், நிச்சயமாகச் சொல்ல முடியாது. குடியானவர்கள், பிராம்மணர்கள் சொல்லைத் தெய்வ வாக்காகக் கேட்டுக் கீழ்ப்படிந்து நடந்து வந்த காலம்மட்டும் மலையேறிப் போய்க்கொண் டிருந்தது.

காந்தி மகானின் கொள்கைகளைப் பின்பற்றுகிறவர்களின் பிரசங்கங்கள் கிராமங்களின் மூலை முடுக்குகளி லெல்லாம் எட்டி, எல்லாரிடமும் தன்மதிப்பை ஏற்றி இருந்தன. அதன் பின்னும் அடிமை போலக் கீழ்ப்படியும் குணம் நிலைத்து நிற்குமா? தானப்பாளையத்துப் பிராம்மணர்களுக்கு இதனுல் ஏதோ சிறு சச்சரவுகளும் தொல்லைகளும் நேரத்தான் நேர்ந்தன. நில புலன்கள் சாகுபடி விஷயமாகக் குடியானவர்கள் தங்கள் கூலிகளை ஏற்றுவது முதலான சில சௌகரியங்கள் செய்து கொடுக்கும்படி கேட்டார்கள். அவர்கள் கேட்பது நியாய மென்று தோன்றினுலும் ஒரேயடியாக அவ்விதம் ஏற்றி விடப் பிராம்மணர்களுக்கு மனம் வரவில்லை. அவர்கள் அதற்குப் பிசுகிக்கொண் டிருந்தார்கள். அதற்காகக் குடியானவர்கள் அந்தப் பார்ப்பனரை ஏளனமாகப் பேசத் தொடங்கினர். அதைக் கேட்டு உள்ளுக்குள் ஆத்திரம் பொங்கினுலும், காது கேளாதவர்கள் போலவே நடந்துகொள்வதைத் தவிர வேறு வழியில்லை அவர்களுக்கு. சண்டைக்குத் தயாராக இருந்தா லொழியக் கேட்டதாகக் காண்பித்துக்கொண்டு என்ன செய்கிறது?

இவைகளைத் தவிர, வீட்டுக்கு வீடு சில பெண்கள் வெளி யிடங்களில் வாழ்க்கைப்பட்டும், சில பிள்ளைகள் உத்தியோகங் களில் வெளியூர் சென்றும், கிராமத்தில் வித்தியாசங்கள் எவ்வளவோ ஏற்பட்டுத்தான் இருந்தன. அதற்காகக் கோபாலையர் வீட்டுக்கு எதிர்வீட்டு லக்ஷ்மி முதலான, நமது கதை ஆரம்பத்தில் நடுத்தர வயதினர்களாக இருந்த சில மாதர்களிடத்தில் வித்தியாசம் இருந்ததா என்ருல், வயசு ஆனதன் அடையாளங்கள் அவர்கள் தோற்றத்தில் நன்கு தெரியத்தான் தெரிந்தன. முன்பு நாட்டுப்புற வாழ்கையினுல் கட்டுமஸ்தாக இருந்த தேகம் தளர்ந்து தெரிந்தது. தலைமயிர் நரைத்து நெற்றியில் சுருக்கங்கள் விழுந்து காணப்பட்டார்கள். ஒருவருக்கொருவர் தள்ளாமையையும், வர வரக் காது கேளாக் குறையையும், கண்பார்வை மங்குவதையும்பற்றி எவ்வளவோ பேசிக்கொண்டார்கள்.

ஆனால் இந்த மாறுதல்களெல்லாம் இருந்தும், அவர்கள் ஊர் சம்பந்தப்பட்ட மட்டில், அல் அசல், தெருக்காரர் இவர்கள் விஷயங்களை அறியவும் பேசவும் பழைய உத்ஸாகமும் ஆவலும் ஆசையும் துளியும் அவர்களிடத்தில் வித்தியாசப்பட்டிருக்கிற மாதிரி தெரியவில்லை. அவர்கள் பழையபடியே யார் வீட்டில் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்துகொண்டு, தங்களுக்குள் அதே ஊக்கத்தோடு பேசிவந்தார்கள். அவர்கள் பெண்கள் பிள்ளைகளுக்கு வேண்டுமானால் இது அதிசயமாக இருக்கலாம். அவர்கள் நகரவாசத்துப் பழக்கத்தினால் அயல் வீட்டார் எப்படிப் போனால் நமக்கு என்ன வந்தது என்று நினைக்கலாம். அவர்களுக்கு அதுமாதிரி இல்லை. அது விஷயத்தில் வயசு ஆனதன் அடையாளம் அவர்களிடம் கொஞ்சமும் தெரியவே இல்லை.

இப்போதும் கோபாலையர் அகத்துச் சாரதாவின் வளைகாப்பைப்பற்றிப் பேசும்போது, அன்று சாரதாவின் கல்யாணத்தைப்பற்றிப் பேசின அதே கரிசனையோடும் உத்ஸாகத்தோடுந்தான் பேசினார்கள்; குளக்கரையான ஸ்நான கட்டந்தான் இப்போதும் அவர்கள் ஒன்றுகூடும் இடமாக இருந்தது.

"பிள்ளையாண்டிருப்பது சாரதாவுக்கு எத்தனை அழகிட்டிருக்கு? காமாக்ஷியே நினைவுக்கு வறது" என்று ஆரம்பித்தாள் ஒருத்தி.

"நாய்க்கும் சூலழகிடும்னு கேட்டதில்லையோ? அதுவும் சாரதா என்னிக்கும் நல்ல லக்ஷணம். சுப்புவுக்கு, 'நாளாறதே', இன்னும் ஸ்நானம் பண்ணிண்டிருக்காளேன்னு கவலை இருந்தது. இப்போ திருப்தி நிறைஞ்சு இருப்பள்" என்றாள் இன்னொருத்தி.

"என்னவோ புது தினுசுப் புடைவை வாங்கி வந்திருந்தாளே, சாரதா மாமியார்? பளபளன்னு நன்னாத்தான் இருந்தது" என்றாள் அவர்களில் சற்றுச் சிறியவளான ஒருத்தி.

"இப்போ அதுமாதிரி புடைவை வேணது வறது. எல்லாருந்தான் வாங்கிண்டிருக்கா. எல்லாம் கட்டிக்கறவா கட்டிண்டா எடுபடறது. சாரதாவுக்கு எதுவும் நன்னாருக்கும்" என்றாள் எதிர் வீட்டு லக்ஷ்மி; பொன்னும் புடைவையும் என்ன பண்ணும்? எதற்கும் அழகு வேண்டும், எடுத்துச் சோபிக்க என்பதைக் குறிப்பாக வற்புறுத்தினாள்.

"வளைகாப்பைச் சொல்லவும் நினைவு வறது. ஏன் மகாலக்ஷ்மி வரல்லையாம்? ஆத்துலே அவுருபமாக் கல்யாணம் வந்திருக்கு. இந்த மதுரையிலே இருந்துண்டு வரல்லையே. தர்மாம்பாகூடக் கட்டாயம் வருவான்னு நெனைச்சேன்" என்றாள் வம்புக்காரி ஒருத்தி.

"அவ பணம் கட்டிப் பரீக்ஷைக்குப் போறாளாம். பரீக்ஷை கிட்ட வந்தூடுத்தாம்; படிப்புக் கெட்டுப் போயிடுமாம்."

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. நாலு நாளைக்கு வந்தா ஒன்னும் கெட்டுப்போயிடாது. விஷயம் வேறே" என்றாள், நாணம்மாள் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக்காரி. அதுபற்றித் தனக்கு அதிகம் தெரியும் என்கிற பாவனையில் இருந்தது அவள் பேச்சு. அதோடு ரகசியம் என்றும் காட்டிற்று, அவள் தாழ்த்தியிருந்த குரல்.

"ஏன், நாராயணன் ஜெயிலுக்குப் போயிருக்கறதுக்கா? அது ஒத்தருக்கும் தெரியாதா என்ன? அதுக்காக ஆத்து விசேஷத்துக்கு ஒரு பெண் வராமல் இருக்குமோ?"

"சுப்புன்னு கூப்பிடாமே வச்சுருக்கா!"

"ஆத்தில் பிறந்த குழந்தையை அழைக்காமே எதுக்கு இருக்கா? அப்படி என்னவாம்?"

"அந்த மேலப்பாளையத்துப் பிள்ளையோடே அந்தப் பெண் இருக்கிறமாதிரி நன்னாவே இல்லையாமே!"

"அதாரு சொன்னு? அந்தப் பெண்ணைப் பார்த்தா, அப்படியெல்லாம் தப்பா இருக்கும்னு தோணலையே!"

"என்னவோ, ஆம்படையான் ஜெயிலிலே இருக்கச்சே, இந்தப் பிள்ளையாண்டானோடு பழகுகிறது வெகு அதிகமாக இருக்காம்."

"ஆத்துலே மாமனார் மாமியார் பெரியவா இல்லையோ? அவா இதுக்கெல்லாம் இடம் கொடுத்துண்டு பேசாமே இருப்பாளா? அவன் ஜாதியிலே தாழ்ந்தவன்வேறே யாச்சே!"

"தர்மாம்பாளேன்னு சம்மதிச்சு இதுமாதிரி இருக்க விட்டிருக்காளாம். அதுன்னு எல்லாத்துலேயும் அதிசயமாயிருக்கு!"

"நம்பிக்கையாகத் தோணல்லே. கண்டபடி ஆராவது சொன்னு அதையெல்லாம் எடுத்துக்கப்படாது."

"சுப்புவேன்னு நம்பறு. அவ நம்பறபோது நாமெல்லாம் என்ன பண்றது? அவளுக்குத் தெரியாதா, அவ மருமாள்

சங்கதி? மகாலக்ஷ்மி வல்லையான்னு எங்காத்துப் பொண் கேட்டதுக்கு, 'அவளைப்பத்தி எங்கிட்டப் பேசாதே'ன்னு கோவிச்சுண்டாளாம் சுப்பு. சுப்புவுக்கு மறைக்கத் தெரியாது, பாவம்! மனசுலே இருக்கிறதைக் கொட்டிவிடுவ. பெண்கள்ளாம் கெட்டிக்காரா; பரீக்ஷை, அதுனாலே வல்லேன்னு சொல்லிக் கிறதுகள்."

"அப்படித்தான் இருந்தாலும் இவ்வளவு தூரத்துக்குத் தப்பா இருக்கும்னு என்னமா எடுத்துக்குறது? யாரு பார்த்தாளாம்?"

"நீ தேவலையே! ஆனா; பாயா போட்டுட்டு வருவா? இருக்கிற மாதிரியைப் பாத்தாத் தெரியாதா? நாணம்மாவே சொன்னாளே; அவளே பாத்தாப்பல இருக்கு, போன சமயத்துலே" என்றாள் பக்கத்து வீட்டுக்காரி மெதுவாக.

"நாணம்மா கைச்சரக்குச் சேர்த்திருக்கா; அப்படிச் சொல்லு. அதுதான் பாத்தேன். அப்போ அதுலே எவ்வளவோ பொய் இருக்கும். சுப்புவுக்கும் அவதான் சொல்லி இருப்பள். வேறே அவளுக்கா ஒன்னும் தெரியவேண்டாம்" என்றாள் லக்ஷ்மி.

"ஏன், பாலுவை அனுப்பாமல் வச்சுக்கலையோ? அதுகூட இதுக்குத்தானும்" என்றாள் இன்னொருத்தி, அதை ஸ்தாபிக்கும் முறையில்.

"கோவிலிலே நடந்த சுப்புணி சமாசாரம் நினைவில்லையா? ஊரிலே மத்தப் பெண்களிடம் அவன் வாலாட்டுகிறானா? இவகிட்டெ மட்டும் தனியா அதுமாதிரி ஏன் செஞ்சான்? எல்லாம் இவள் ஒரு மாதிரி இருக்கக் கண்டுதான்" என்று மற்றொருத்தி அதைப் பின்னும் வற்புறுத்தும்பொருட்டுக் கூறினாள்.

"பெண்கள் கண்டபடி இருந்தா இப்படியெல்லாந்தான் நடக்கும்" என்று மற்றவர்களும் ஆமோதித்தார்கள். லக்ஷ்மிக்கு மட்டும் அதை அப்படியே ஏற்றுக்கொள்ள மனம் வரவில்லை.

"என்னமோ அம்மா, அந்தக் குழந்தையைக் கண்டபடி பேச எனக்கு மனசாகல்லே. காணாததைச் சொல்லி ஒரு பெண் பாவத்தைக் கட்டிக்கப்படாது. மகா பாவம்! சூத்திரா, பிராம்மணா வித்தியாசம் பார்க்காமே வேணுமானா நாராயணன் படுத்தறான். இந்த நாளிலே பாதிப் பேருந்தான் அப்படி

இருக்கா'' என்று ஒரு வார்த்தையில் சொல்லிவிட்டு, லக்ஷ்மி அங்கிருக்கப் பிடிக்காமல் ஸ்நானத்தை முடித்துக்கொண்டு போய்விட்டாள்.

'மகாலக்ஷ்மி ஏன் வரவில்லை?' என்றுதான் அவள் சாரதாவை, மீனுவை, பாலுவைக்கூடக் கேட்டுப் பார்த்தாள். ''அத்தைக்கு அவபேரில் கோவம்; கூப்படல்லை'' என்று பாலு மட்டும் அரைகுறையாகச் சொல்லியிருந்தான். அதிலிருந்தும், எதிர்வீட்டிலிருந்து அவர்கள் பேச்சுக்களை அப்போதப்போது கவனிப்பதிலிருந்தும் அவளுக்கு விஷயம் கொஞ்சம் எட்டித்தான் இருந்தது. அதற்காகச் சுப்புவிடம் அவளுக்கு அசாத்தியக் கோபம் வந்தது.

'குழந்தை மகாலக்ஷ்மி ஒருகாலும் தவறாக இருக்க மாட்டாள். அப்படி ஏதாவது தெரியாத்தனத்தில் இருந்தாலும், அத்தையாக இருப்பதற்கு, அழைத்து வைத்துப் புத்தி சொல்லி மறைத்துக்கொண்டு போவாளா? இப்படி ஊரெல்லாம் பேசும்படி விடுவாளா? ஐயேடி! என்ன அசட்டுத்தனம், என்ன கொடும் மனசு!' என்றெல்லாம் சுப்புவைத் தனக்குள்ளேயே திட்டிக்கொண்டாள் லக்ஷ்மி. 'அவளாயிருந்தால் அந்தத் தாயில்லாக் குழந்தைகளை எவ்வளவு அன்பும் ஆதரவுமாக அரவணைத்துக்கொண்டு போவாள்? பாவம்! மணையில் இருந்த சாரதாவுக்குத் தங்கை வராத துக்கம், முகத்தில் சந்தோஷமே இல்லை. மீனுவுக்குத்தான் ஆகட்டும்; அக்காவின் வளைகாப்புக் கல்யாணத்தில் குதூகலம் எப்படி வரும், தங்களோடுகூட இருக்கவேண்டிய தங்கை இல்லாவிட்டால்? அந்தப் பெண்ணும் சந்தோஷம் இல்லாமல்தான் சுற்றிவந்தது. தகப்பனார்தான் ஆகட்டும், எதற்கும் சும்மா இருப்பாரோ? இவ்வளவு தூரத்துக்குப் போக விடுவரோ? தமக்கையை ஓர் அதட்டுப் போட்டுவிட்டுத் தாம் போய்ப் பெண்ணை அழைத்து வரமாட்டாரோ? இப்படிக் கையாலாகத்தனந்தான் உண்டோ? ஒருத்தருக்கு உபகாரமில்லாமல், ஒரு நல்லது செய்யாமல் ஒரு ஜன்மமா?' என்று லக்ஷ்மி தனக்குள்ளேயே கோபாலையரை வெகு இழிவாக நினைத்துக்கொண்டாள்.

வாஸ்தவத்தில் சாரதாவின் வளைகாப்பு வருமா என்று எண்ணியிருந்ததற்கு ஏற்றபடி இருக்கவேண்டிய உத்ஸாகம் வீட்டில் யாருக்குமே இல்லாமல்தான் போயிற்று. சுப்புவின்

கொடுஞ் செயல்தான் அதற்குக் காரணம். பிள்ளையிடமிருந்து திரும்பி வந்திருந்த நாணம்மாள், பிள்ளையின் உத்தியோகப் பெருமைகளைச் சுப்புவிடம் அளவளாவினதோடு நிறுத்திக் கொள்ளவில்லை. ஏதோ நாராயணன் சிறை சென்ற விஷயமாக வார்த்தை வளர்ந்ததில், சுப்பு, தர்மாம்மாளையும் அம்மாஞ்சியையும் குற்றம் சாட்டினாள். அவர்கள் கவனியாமல் கண்டபடி இருக்கவிட்டுத்தான் பிள்ளை இம்மாதிரி ஆகிவிட்டான் என்று வருந்தினாள்.

''ஆமாம், பெத்தவா அடக்கி ஒடுக்கி வளர்த்தா இப்படியெல்லாம் கெட்டுப்போவானோ? நீ சொல்றது ரொம்ப சரிதான். இவா இடம் கொடுத்துக் கொடுத்துத்தான் பிள்ளை, ஜாதி வித்தியாசம் பார்க்காமே, காந்திக்காரனாப் போயி, பொழைப்பையும் கெடுத்துண்டு ஜெயிலுக்குப் போயிருக்கிறான்'' என்று சுப்புவுக்குத் தூபம் போட்டாள் நாணம்மாள். அவர்கள் மகன் சுப்புணியை எவ்வளவெல்லாம் நேர்மையாகக் கொண்டு வந்திருக்கிறார்களாம்? அதை யார் கேட்கிறது?

''நாராயணன் எத்தனையோ புத்திசாலி. அவனைக் கோண வழியிலே போட்டுட்டாளே, யானை தன் தலையிலே தானே மண்ணை வாரிப் போட்டுண்டாப்பலே. இப்போ இவாளுக்குத்தானே கஷ்டம்? அம்மாஞ்சிதான் புருஷன், உத்தியோக தோரணையிலே இருக்கான்னா, இவ பொம்மனாட்டி நம்ம ஆசாரம் கெட்டுப் போறதேன்னு பார்க்க வேண்டாமோ? என்ன இருந்தாலும் ஜெயிலிலே கண்டவன் பண்ணிப்போட்ட சோத்தைத் தின்னூட்டு வந்தா ஜாதிப்ரஷ்டமில்லையோ? எனக்கு ஒண்ணும் புரியல்லை. இனிமே இவாளும் நாமும் கஷ்டப்பட்டால் தீருகிற காரியமா?'' என்று அடுக்கினாள் சுப்பு.

''நீ வேணுமானாக் கஷ்டப்படறே. தர்மாம்பாள் ஒண்ணும் படறதாத் தெரியல்லை. பெருமையான்னா இருக்காளாம்?'' என்றாள் நாணம்மாள்.

''எதுக்குப் பெருமை? இந்த மட்டும் பிள்ளை ஜெயிலுக்குப் போனானேன்னா!''

''ஜெயிலுக்குப் போறதுங்கறது சும்மாவா? தேச சேவைன்னுதான் இப்போது அமக்களப்படறதே. அந்த மேலப் பாளையத்துப் பிள்ளையாண்டான் வேறே வந்து உட்கார்ந்துண்டு போது போதா ஸ்தோத்திரம் பண்றானே.''

''அவன் வேறே அங்கே இருக்கானா?''

''இல்லாமே? அவன்தான் ஆத்துப் பிள்ளையாட்டமா இருக்கான். நாட்டுப் பெண் அவனோடே போனாக் கூடன்னு தர்மாம்பாள் சம்மதமா இருப்பபோலே இருக்கு? ஐயோ! நான் எதுக்கு அவாளைப்பத்திப் பேசறேன்? தப்பாப் போயிடப் போறது'' என்று சொல்லி நிறுத்திக்கொண்டாள் நாணம்மாள். எப்படியாவது தர்மாம்பாள் பேரில் குற்றம் சொல்லவேண்டும்; மகாலக்ஷ்மி தர்மராஜுவோடு பழகும் மாதிரி நன்றாகவே இல்லை என்பதைச் சுப்புவிடம் சொல்லிவிட வேண்டும். இதுதானே நாணம்மாளின் உத்தேசம்? அதை ஒரு விதமாகச் சம்பாஷணையில் வெளியிட நேர்ந்தது; சொல்லியும் விட்டாள்.

''ஏன், ஏதாவது பார்க்க ரசாபாசமாகப் பழகவிடறாளா என்ன?'' என்று சுப்பு ஒருவிதப் பரபரப்போடு கேட்டதற்கு, ''என்னவோம்மா, எல்லாரும் சொல்லிக்கொள்வதுதான். நான் என்ன பார்த்தேனா?'' என்று நாணம்மாள் பேச்சை மேல் ஒட்டாமல் நிறுத்திக்கொண்டாள்.

சுப்புவுக்கு அதற்கு மேலும் சொல்லிக்கொண்டிருக்க வேண்டுமா என்ன? விபரீதக் கற்பனைகளுக்கும் கவலைகளுக்கும் அவள் மூளையில்தான் வேண்டிய இடம் இருக்கிறதே! குழந்தைகளுக்கு அன்பாகப் புத்திமதி சொல்லி வளர்க்கத் தெரியாவிட்டாலும், தப்பைப் பெரிது பண்ணிக்கொண்டு கோபிக்கத் தெரியாதா? அதற்கு அவளுக்குப் பாத்தியந்தான் இல்லையா? தான் ஊருக்குப் போகுமுன் அவ்வளவு கோபித்துக்கொண்டும், பாலுவை உடன் அனுப்பாமல் வைத்தும் அந்தப் பெண்ணுக்குப் புத்தி வரவில்லையென்றால் சுப்புவுக்குக் கோபம் கொஞ்சமாகவா வரும்? இனி அந்தப் பெண் முகத்திலும் விழிக்கக்கூடாது என்னும்படி அவ்வளவுக்குக் கொழுந்துவிட்டு ஜ்வாலையாகக் கிளம்பிற்று அவள் சினம். நாராயணன் சிறைக்குப் போனதற்கு அம்மாஞ்சியிடம் சென்று விசாரித்து, மகாலக்ஷ்மியையும் பார்த்து வராததற்குத் தம்பியை அடிக்கடி தவறு சொல்லிக்கொண்டிருந்தவள், 'இந்த அழகான பெண்ணைப் பார்க்காட்டா என்னவாம்? நல்லதாயிற்று. எக்கேடாவது கெட்டுப் போகட்டும். அவர்கள் சம்சர்க்கமே நமக்கு வேண்டாம்' என்று ஆத்திரத்தோடு முடிவு கட்டிவிட்டாள்.

வீட்டில் பிறந்த குழந்தையை அப்படித் தள்ளிவிட முடியுமா? கிட்டத்து ஒரே பந்துவான அம்மாஞ்சியை விலக்குவது எளிதா? இவற்றையும் அவள் சிந்திக்கவே இல்லை.

கொண்டாடும்படி உயர்வாக இருக்கவேண்டும் என்கிற அவள் அதிக ஆசையும் அதோடு அவள் நேர்மை உணர்ச்சியும் சேர்ந்து அவளை அவ்வளவு தூரத்துக்குக் கொண்டு போயின.

வேலியே பயிரை அழித்ததுபோல் என்பதற்கொப்ப, தங்கள் குழந்தை தலையில் அபாண்டமான பழிச் சொல்லைச் சுமத்துகிறோம் என்கிற எண்ணமில்லாமலே, அருமையாக நேர்ந்திருக்கும் சாரதாவின் வளைகாப்புக்கு மகாலக்ஷ்மியை அழைத்து வராமல் விலக்கத் தீர்மானித்தாள். தனது கோப உணர்ச்சியை வெளியிடும் திருப்தியில் இருந்தாளே தவிர, அது அந்தக் குழந்தையின் பெயரைக் கெடுத்து அதன் வருங்கால வாழ்க்கையை நெடுகிலும் பாதிக்குமே என்கிற எண்ணம் அவளுக்கு உண்டாக வேண்டுமே; இல்லவே இல்லை. எதிலும் பிறரைப்பற்றின சிந்தனை தான் அவளுக்குக் கிடையாதே!

அத்தையின் இந்தத் தீர்மானத்தைக் கேட்டுச் சாரதாவும் மீனுவும் மிகவும் திடுக்கிட்டுப் போனார்கள். தங்களால் முடிந்த மட்டும் சொல்லிப் பார்த்தார்கள். அத்தையின் அசட்டுப் பிடிவாதத்தை மாற்ற யாரால் ஆகும்? கோபாலையருக்கும் அவள் செய்வது சரி அல்ல என்று தோன்றிற்று. ஆனால் அதை மாற்றிக் காரியத்தில் நடத்தவோ செய்யவோ மட்டும் அவரால் முடியவில்லை. அவ்வளவுக்கு முனைந்து மேல்போட்டுக்கொள்வது அவர் வழக்கமில்லையே! 'இது நல்லத்துக்கு இல்லை' என்று மட்டும், முற்றும் உணர்ந்த ஞானியாகச் சொல்லிவிட்டுச் சும்மா இருந்தார்.

ஆனால் கிருஷ்ணன் அதுமாதிரி பேசாமல் இருக்கவில்லை. அத்தையம்மாளோடு சண்டைப் பிடித்தான். மகாலக்ஷ்மியை அழைத்து வராத கல்யாணத்தில் தனக்கு மட்டும் என்ன என்று அன்று வீட்டில் இல்லாமல் வீட்டை விட்டே புறப்பட்டுப் போனான். 'இப்படித் தாயில்லாக் குழந்தையின் வவுத்தெரிச் சலைக் கொட்டிக்கற பாவம் சும்மா விடுமா?' என்று அவன் சுப்புவைக் கேட்டுச் சென்றது. சுப்புவின் மனத்தில் எங்கோ ஒரு மூலையில் சுருக்கென்று தைக்கத்தான் தைத்தது. அவள் அந்த வலியை லட்சியம் செய்யாமல் தன் பிடிவாதத்தைத் தொடர்ந்து நடத்திச் சென்றாள். இருதயத்திலே தைத்துவிட்ட அந்தச் சிறு முள்ளைச் சமயத்திலே பார்த்துப் பிடுங்கி எறியா விட்டால், பிறகு அது புரையோடிப் பெரும் புண்ணாகப் போகுமே; பின்னாடி அது அவளுக்கு கேடு விளைவிக்குமே; அதை

அவள் நினைத்துப் பார்த்தாளா? இல்லை. அவ்வளவுக்கு நிதான மும் பகுத்தறியும் புத்தியும் அவளுக்கு ஏது?

கிருஷ்ணனைப் போலவேதான் சாரதாவுக்கும் மீனுவுக்கும் அத்தையின் பேரில் இருக்கும் தங்கள் கோபத்தையும் அதிருப் தியையும் வெளியிட்டுக் காண்பிக்க வேண்டும்போல் இருந்தது. ஆனல் அடக்க ஒடுக்கமான சுபாவம் படைத்த அவர்களால் அது சாத்தியமா?

# 34
# கிருஷ்ணன் முயற்சிகள்

கிருஷ்ணன் வீட்டை விட்டுக் கோபத்தில் கிளம்பினவன் நேராக மதுரையில் உள்ள அம்மாஞ்சி வீட்டுக்குத்தான் சென்றான். போகும்போதே கோபத்தைத் தணித்து யோசித்துக் கொண்டே போனான். 'மகாலக்ஷ்மி பேரில் அத்தையம்மாவுக்கு இருக்கும் தப்பெண்ணத்தையும், அதுக்காகவே அவுகளை விசேஷத்துக்கு அழைக்காமே வச்சிருக்கிறதையும் அவுகளுக்குத் தெரியும்படி விடக்கூடாது. வேறே எதுனச்சும் காரணந்தான் சொல்லணும். எனக்கே பொறுக்கவில்லையே! இது கேட்டா மகாலக்ஷ்மித் தாயி எப்படிப் பொறுக்கும்? துடிச்சுப் போவாதா?' என்று நினைத்து அதுபற்றி அங்கே வாய் திறக்கக்கூடாது என்று தீர்மானித்துக்கொண்டான். தான் கோபத்திலே வந்ததாகவே காண்பித்துக்கொள்ளாமல் சாதாரணமாகப் பார்க்க வந்த தாகவே சொல்லவேண்டும் என்று நிச்சயித்தான். 'அவுகளுக்கு வளகாப்புச் சங்கதி தெரிஞ்சிருந்தா அதுக்கு இருந்தாட்டு வரவனகவே பேசணும்' என்றும் தீர்மானம் செய்துகொண்டான்.

அதன்படியேதான் அவன் சாமர்த்தியமாக, வெறுமனே பார்த்துப் போக வந்தவனக க்ஷேமம் விசாரித்துக்கொண்டு வந்து சேர்ந்தான். அப்படி வந்த கிருஷ்ணனை முதலில் பார்த்தவள் மகாலக்ஷ்மிதான். அவனைப் பார்க்கவும் அவள் என்ன செய்தாள்? அவள் அவனை வரவேற்கவோ, விசாரிக்கவோ இல்லை. 'ஹோ'வென்று கண்ணீர் ஆருகப் பெருக அழுது விட்டாள். அதுகாறும் மனத்தை அழுத்திக்கொண் டிருந்த துக்கம், தானகவே பொத்துக்கொண்டு கண்ணீர் வழியாக வெளிப்பட்டது. வாய் பேசாது மாலை மாலையாகக் கண்ணீர் உகுத்து நின்றாள்.

கிருஷ்ணனும் துக்கத்தில் சில நிமிஷங்கள் பேச்சற்றுப் போனான். பிறகு, "அழாதே, தாயி, உடம்பு ஏன் இப்படி இளைச்சுப் பூட்டுது?" என்று பரிவோடு விசாரித்தான். அது அவள் அழுகையைப் பின்னும் தூண்டிவிட்டது. எவர்களுடைய அன்புக்கும் ஆதரவுக்கும் அவள் ஏங்கித் தவிக்கிறாளோ, அந்தப் பிறந்த வீட்டு மனிதர்கள் அவ்வளவு பேருக்கும் பிரதிநிதியாக அல்லவா அவன் வந்திருக்கிறான்? மேலும், அவளுக்கு என்றுமே அவனிடத்தில் விசேஷ அபிமானம் உண்டு. அவள் நினைவு தெரிவதற்கு முன்னிருந்து அவனிடம் தன் சுக துக்கங்களை எவ்வளவோ சொல்லிக்கொண்டிருக்கிறாள். குழந்தை மனத்தில் ஏற்படும், தாங்க முடியாது பெரிதாகத் தோன்றும் எத்தனையோ துக்கங்களை அவன் தோளில் சாய்ந்து விம்மி விம்மி அழுது தீர்த்துக்கொண்டிருக்கிறாள் அல்லவா? அந்த நாளைக்கும் இப்போதைக்கும் வித்தியாசம் இருப்பதாகவே அவளுக்குத் தோன்றவில்லை. முன்போலவே அவன் தோளில் சாய்ந்து அழ வேண்டும்போல்தான் இருந்தது அவளுக்கு. அவனும் அப்போது போலவே தன் இரு கைகளாலும் அவளை வாரி அணைத்துச் சமாதானம் செய்வதற்கில்லையே என்றுதான் வருந்தினான்; அவள் அந்தக் குழந்தைப் பருவத்தைத் தாண்டிவிட்டாளே என்று இருந்தது அவனுக்கு.

கேவலம் வேலையாளான அவனிடம் ஒரு தந்தைக்கு இருக்க வேண்டிய அன்பு பரிபூரணமாக இருந்தது. கோபாலையர்தாம் விதிக்கு விலக்காக இருந்தார். கிருஷ்ணன் காட்டிய அன்பும் கனிவும் அவர் காட்டியிருந்தால் மகாலக்ஷ்மி வீணுக்கு இவ்வளவு மனம் வருந்தும்படி நேர்ந்திருக்குமா?

தர்மாம்பாள் அவ்விடம் வந்தவள், "யாரு, கிருஷ்ணனு? எப்படா வந்தே? வா" என்று வரவேற்ற பிறகுதான் மகாலக்ஷ்மிக்கும் கிருஷ்ணனுக்கும் தங்கள் நிலைமையை உணர்ந்து சமாளித்துக்கொள்ள முடிந்தது.

"சும்மா பார்த்துப் போகத்தான் அம்மா. ரொம்ப நாளாச்சுதுங்களே" என்றான் கிருஷ்ணன் தடுமாற்றத்துடன்.

"போறது; உனக்காவது அந்த எண்ணம் தோணித்தே" என்றாள் தர்மாம்பாள் குத்தலாக.

"நம்ம குழந்தை இல்லையாம்மா? நீங்களும் நம்ம மனுஷா இல்லீங்களா?" என்றான் கிருஷ்ணன், மன்னிப்புக் கோரும் பாவனையில்.

''சுப்புவுக்காவது, அவ உடப்பிறந்தானுக்காவது அது மாதிரி தோணலேயே! எங்களை வேண்டாத மனுஷ்யாளான்னு விலக்கி இருக்கா? அவாளுக்குத் தொட்டதுக்கெல்லாம் ஓடி வந்து நின்னு செய்ய அம்மாஞ்சி வேண்டியிருந்தது. இப்போ வேண்டாம்னு ஆயிருக்கு'' என்று நிந்தித்தாள் தர்மாம்பாள். 'கிருஷ்ணன் வேலைக்காரன். அவனிடம் அவன் எசமானர்களிடத்தில் தங்களுக்கு இருக்கும் குறைகளைச் சொல்வது சரியா?' என்று அவள் யோசிக்கவில்லை. அப்படியும் அவன் சொந்தக்காரன் போல இருப்பவன்தானே? தன்னையும் அவர்களோடு சேர்த்துத்தானே கொள்ளுகிறான்?

''ஐய! அவுகளுக்குத் தெரிஞ்ச லச்சணம்; விட்டுத் தள்ளுங்கம்மா'' என்று கிருஷ்ணன் அலட்சியமாகச் சொல்லவும், தர்மாம்பாளுக்கு ஆத்திரம் பொங்கிவந்தது. 'மனக் குமுறலைச் சுவரோடாயினும் சொல்லி ஆறு' என்கிற சங்கதியாக, கோபாலையரும் சுப்புவும் சேர்ந்து செய்யும் அக்கிரமத்தை யாரோடாவது சொல்லத்தானே அவள் துடித்துக்கொண் டிருக்கிறாள்? அதற்கு வாய்ப்பாக அகப்பட்ட கிருஷ்ணனை அவள் லகுவில் விடுவாளா? ''தெரிஞ்ச லக்ஷணமா? நீ சொல்றது ரொம்ப நியாயந்தான். ஜெயிலுக்குப் போயிருக்கிற மாப்பிள்ளையை என்னமாயிருக்கான்னுகூட விசாரிக்காமல் இருக்கத் தெரியலையா? பெத்த பெண்ணைத் திரும்பிப் பார்க்காமல் இருக்கத் தெரியலையா? முழுக்க முழுக்கத் தங்களுக்கு ஒத்தாசை செய்கிற அம்மாஞ்சியை அலட்சியம் பண்ணத் தெரியலையா? எல்லாத்துக்கும் மேலாக அவுரூபமாய் ஆத்துலே வந்திருக்கும் வளைகாப்புக்குக்கூட அழைக்காமே அவமானத்தைப் பண்ணத் தெரியலையா? என்ன தெரியலை? போடா போ, நீ பேசாதே. எனக்குத் தெரியும். உபகாரம் வேண்டியிருக்கச்சே அம்மாஞ்சி வேண்டியிருந்தது. இப்போதான் வரவே வேண்டாம்னு போயிடுத்து. இவா வருந்தி அழைச்சாலும் இவா வீட்டுக்கு இனிமே யாரு போகக் காத்துக் கிடக்கா? இத்தனை நாளும் தெரியல்லே; இப்போ தெரிஞ்சு போச்சு மனுஷ்யாள் குணம்'' என்று சொல்லிக்கொண்டே போனாள். அவள் ஆத்திரம் தீரச் சொல்லவேண்டுமென்றால் இன்றைக்கெல்லாம் போதாது.

''அம்மா, நீங்க என்ன சொன்னாலும் சரிதானம்மா. அவுக அவ்வளவு மோசந்தானுங்க'' என்று கிருஷ்ணன் ஆமோதித்தான். 'அவள் நிந்தனைப்படி அவ்வளவு யோசித்துத்

தப்புச் செய்ய அவுகளுக்குப் புத்தி ஏது?' என்று அவன் நினைத்தாலும் இப்போது அவர்கள் பேரில் அவனுக்கு இருந்த கோபத்தில் அவ்வளவையும் ஒப்புக்கொண்டான். "ஏண்டா, வளைகாப்புக்குக் கூப்பிட முடியாமே அப்படி என்ன நாங்கள் தப்புப் பண்ணினோம்?" என்று தர்மாம்பாள் கேட்டதற்கு அவன் ஒன்றும் சொல்லத் தெரியாமல் விழித்தான்.

"ஏண்டீ அவனைத் தொந்தரவு பண்றே! அவன் கிட்டச் சொல்லிவிட்டா அவா செஞ்சிருக்கா?" என்று அம்மாஞ்சி சமயத்தில் வந்தவர் தடுத்துச் சொல்லியிராவிட்டால் அவள் விடாது கேட்டுத் தொந்தரவு கொடுத்திருப்பாள்; அவனும் உண்மையைச் சொல்லும்படி வந்திருக்கும்.

"ஏண்டா, கிருஷ்ணு, எப்படா வந்தே? கோபாலனுக்கு என்ன வந்துடுத்துத் திடீர்னு? என் இப்படித் தத்துப் பித்துன்னு பண்றான்?" என்று அம்மாஞ்சி கேட்டார்.

"அவுகளுக்கு என்ன தெரியும், சாமி? எல்லாம் இந்தச் சுப்பு அம்மா பண்றது. அவுகளுக்கும் என்ன, எல்லாம் கோணல் புத்தி; நல்ல புத்தி ஏது?" என்று எல்லாம் தெரிந்தவனாகப் பதில் சொன்னான் கிருஷ்ணன்.

"இவர்களுக்கு என் உறவு வேண்டாமானால், எனக்கு மட்டும் இவர்கள் உறவினால் ஏதாவது ஆகவேண்டுமா என்ன? நானும் ஒதுங்கி இருந்துவிடுகிறேன்" என்றார் அம்மாஞ்சி, சற்றுக் காரமாக.

மனைவியை, வேலைக்காரனிடம் எதற்காகக் குறை சொல்லுகிறது என்றாரே, இப்போது இவரும் அதைத்தானே செய்கிறார்? கோபம் வந்துவிட்டால் யார் என்ன என்கிற தராதரம் பார்த்துக்கொண் டிருக்க முடியுமா? பிறருக்குப் புத்தி சொல்வது வேண்டுமானால் எளிதாக இருக்கலாம்.

கோபாலனுக்கு ஒன்றும் தெரியாது என்று அலட்சியமாகத் தள்ளிக்கொண்டு போகும் அம்மாஞ்சிக்குக்கூட இது விஷயத்தில் அசாத்தியக் கோபந்தான் வந்தது. 'தெரியாத்தனத்துக்கும் எல்லை இல்லையா?' என்றே எண்ணினார். அதனால்தான் தம்மையும் மறந்து கிருஷ்ணனிடத்தில் அவ்வாறு பேசினார்.

"என்னவோ சாமி, மாப்பிள்ளை ஐயா ஜெயிலுக்குப் போயிருக்கிற மனவருத்தமுங்க, சரியா நடந்துகொள்ளத் தோணுமே அவுகளைப் பண்ணுறதுங்க" என்று ஏதோ மழுப்பினான் கிருஷ்ணன்.

''ஜெயிலுக்குப் போனு என்னடா? ஏதாவது திருடிவிட்டு ஜெயிலுக்குப் போயிருக்கானு? வருத்தம் என்ன? அப்படித்தான் ஆகட்டும்; இவா என்னேடு வித்தியாசமா நடந்துக்கறத்துக்கும் அதுக்கும் என்னடா? ஆனு உன்கிட்ட இதெல்லாம் எதற்காகச் சொல்லுகிறது? நீ ஏதோ வந்திருக்கே; நாலு நாள் இருக்கப் போறே. நீயாவது வந்தது மகாலக்ஷ்மிக்குச் சந்தோஷமாக இருக்கும். அவகிட்ட எல்லாம் சொல்லு போ'' என்று அவனை அனுப்பிவிட்டுத் தம் காரியத்தைக் கவனிக்கச் சென்று விட்டார் அம்மாஞ்சி.

வளைகாப்பைப்பற்றி ஒன்று விடாமல் விசாரித்தாள் மகாலக்ஷ்மி. கிருஷ்ணனும் வளைகாப்புக்கு இருந்து வந்தவனுகவே ஏதோ ஊகமாய்ப் பதில் சொல்லிவந்தான்.

''ஏண்டா, வளைகாப்புக்கு யாரெல்லாம் வந்திருந்தா? சாரதா புக்ககத்துவா எல்லாரும் வந்தாளா? என்ன எல்லாம் நடந்தது? என்ன வளைகள் போட்டா? என்ன புடைவை வாங்கினு? சாரதா மணையிலே இருந்தது எப்படிடா இருந்தது? மீனு யோசனை பண்ணி எல்லாம் செய்தாளாக்கும்?''-இதுமாதிரி அவள் அடுக்கிக்கொண்டே போன கேள்விகளுக்கு அவனுல் பதில் சொல்லியே சாத்தியமாகவில்லை.

''சாரதாவும் மாப்பிள்ளை ஐயாவும் மணையிலே இருந்தது ரொம்ப நல்லாத்தாம்மா இருந்தது'' என்று அவன் ஏதோ சொல்லப் போக, ''மாப்பிள்ளை ஐயாவா? ஏண்டா, வளைகாப்புக்குப் புருஷாளையுங்கூட மணையிலே உட்கார வைப்பாளா என்ன? அத்திம்பேர் எதுக்கடா உட்கார்ந்தார்?'' என்று மகாலக்ஷ்மி அதிசயமாகக் கேட்டாள்.

கிருஷ்ணன் பாவம், இதற்குமுன் வீட்டில் வளைகாப்பு வந்து பார்த்ததில்லை; ஏதோ கல்யாணங்களுக்குப் பெண்ணையும் பிள்ளையையும் சேர்த்து உட்காரவைக்கிறுர்களே, அது போல எண்ணிச் சொல்லிவிட்டான். அவள் அவ்விதம் கேட்ட பிறகுதான் அது தப்பிதம் என்று தெரிந்து வேறு மாற்றிச் சொல்ல யத்தனித்தான். இவ்விதம் அவன் விஷயங்கள் சொல்லும்போது தடுமாறுவதைப் பார்த்து, ''ஏண்டா, நீ சரியாவே பார்க்கல்லையா?'' என்று மகாலக்ஷ்மி மிகுந்த சந்தேகத்துடன் கேட்டாள்.

''நீ இல்லாமே எனக்குக் கல்யாணத்துலே நிக்கப் பிடிக்கலே, தாயி! நான் இல்லாமே வந்துட்டேன்'' என்று அவன்

உண்மையை அவளிடம் ஒப்புக்கொண்டான். அவனுடைய அன்பை மகாலக்ஷ்மியால் தாங்கவே முடியவில்லை.

''கிருஷ்ணு, உனக்கு இருக்கும் பிரியம் அவர்கள் யாருக்கும் இல்லையே! நான் இல்லாமே விசேஷம் நடத்த அவா எல்லாரும் சம்மதிச்சு இருந்திருக்காளே!'' என்று புலம்பினுள் மகாலக்ஷ்மி.

''அப்படிச் சொல்லாதே; தாயி, சாரதாவுக்கும் மீனுவுக்கும் நெஞ்சுமுட்டும் துக்கம். ஏதாவது பெரிசாக் காமிச்சா அல்லசலுக்குத் தெரிஞ்சு பேச்சுக்கு இடமாகும்னு பொறுத்துக்கிட்டு இருக்காங்க. ஒருத்தருக்கும் தெரியவேணுமுங்கறது அவுகளுக்கு'' என்ருன் கிருஷ்ணன்.

''என்பேரில் ஏண்டா அத்தைக்கு அத்தனை க்ஷாத்திரம்?'' என்று மகாலக்ஷ்மி கேட்டாள்.

''அதெல்லாம் எதுக்கு விவரிக்கணுமுங்க? யாராச்சும், எதுஞச்சும் சொன்ஞ அதைக் கேட்டுக் கிடறது இந்தச் சுப்பு அம்மா. தனக்காச் சொந்த புத்தி கிடையாது. குழந்தையாட்டம் பிடிவாதம் வேறே. விட்டுத் தள்ளு, தாயி. இவுங்க சொல்றத்துக்காவ சூரியன்பேரிலே அழுக்கு ஒட்டுமா?'' என்ருன் கிருஷ்ணன். அவன் அவ்விதம் சொன்னதிலிருந்து அவள் ஒருவாறு ஊகித்துக்கொண்டாள்; 'அத்தைக்கு இன்னும் அந்தக் கோபம் தீரவில்லையா?' என்று நினைத்துக்கொண்டாள் மகாலக்ஷ்மி. நாணம்மாள் உதவியால் அது புதிதாக மேலும் விருத்தியாகி இருப்பது அவளுக்கு எப்படித் தெரியும்?

''பாலு என்னடா பண்ருன்? சரியாப் படிக்கருஞ? அவன் இருந்தாலாவது எனக்கு எவ்வளவோ சமாதானமாக இருக்கும்'' என்ருள் மகாலக்ஷ்மி.

''அவனை யாரு கவனிக்கருக? அவன் பாட்டுக்குப் படிக்காமே சந்தோஷமாய் இருக்கான்'' என்ருன் கிருஷ்ணன்.

இதைக் கேட்க மகாலக்ஷ்மிக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. 'அப்பா அவனைக் கூடக் கவனிப்பதில்லையா? எதற்குமே சும்மாவா இருக்கிருர்? அவர் மக்களான நாங்கள் யார் எப்படிப் போஞலும் அவருக்கு ஒன்றும் கிடையாதா?' என்று வருந்திஞள். கிருஷ்ணனிடங்கூட, ''அப்பா, எப்படியடா இதையெல்லாம் பொறுத்துக்கொண் டிருக்கிருர்? எனக்காக, பாலுவுக்காக, ஒருவருக்காகவும் அவருக்கு ஒரு கவலையும் கிடையாதா?' என்று கேட்க அவளுக்குத் துணிவு

வரவில்லை. 'அவருக்கு ஒரு கவலையும் இல்லை' என்று அவன் கண்டிப்பாகச் சொல்லிவிட்டால், அதைக் கேட்டு எப்படி மனம் பொறுப்பது? நாம் விரும்பாத சில விஷயங்கள் நமக்கு நன்கு தெரிந்தாலும் இன்னொருவரிடமிருந்து அதைக் கேட்க மனம் கூசும். மகாலக்ஷ்மிக்கும் அவ்விதந்தான் இருந்தது. கிருஷ்ணன் வாயால் தங்கள் தந்தைக்குத் தங்களிடம் ஒருவித அன்பும் இல்லை என்று கேட்டுக்கொள்ள முடியவில்லை. ஆகையால் தந்தையைப்பற்றி அவனிடம் கேளாமலே விட்டு விட்டாள்.

கிருஷ்ணன் அவர்களோடு கூடவே சில தினங்கள் தங்கினதில் மகாலக்ஷ்மியின் கஷ்டங்களை ஒருவாறு ஊகித்து அறிந்துகொண்டான். தர்மாம்பாள் தனக்கு ஏற்பட்டிருக்கும் மனவெறுப்பில் நாட்டுப்பெண்ணை ஒரு தினுசாக நடத்துவது, சமயத்தில் நாராயணனும் பக்கத்தில் ஆதரவுக்கு இல்லாமல் சிறையில் இருப்பது, பெரியவர்களை விட்டால் வீட்டில் பேசிக் கொள்ளக்கூட ஒத்த வயதினர் யாரும் இல்லாதிருப்பது, எல்லாவற்றுக்கும் மேல் சுப்பு ஒரேயடியாகப் பகிஷ்கரித்துப் பிறந்த வீடே இல்லாமல் அடித்திருப்பது; எல்லாமாகச் சேர்ந்து மகாலக்ஷ்மியை என்றும் இல்லாத சோகக் கடலில் ஆழ்த்தியிருக் கின்றன. பாவம்! அவள் அதிலிருந்து நீந்திக் கரையேற வகை யறியாது தத்தளித்துக்கொண் டிருக்கிறாள். தான் வந்திருப்பது அவளுக்குச் சற்றுத் தென்பு கொடுத்திருக்கிறது என்பதை உணர்ந்த கிருஷ்ணன், 'நல்ல காலம், நமக்கு வரத் தோணித்தே!' என்று சந்தோஷப்பட்டுக்கொண்டான்.

தர்மாம்பாள் கோபாலையர் வீட்டில் எல்லாரையுமே ஏதேதோ நிஷ்டுரமாய்ப் பேசினவண்ணம் இருந்தாள். அவை களுக்கு நியாயம் இருக்கிறது என்று கிருஷ்ணனும் கேட்டு வந்தான். மகாலக்ஷ்மியிடம் அவள் எரிந்து விழுந்து கோபத்தைக் காண்பிக்கும்போதுதான் அவனுக்கு அது பொறுக்கவில்லை. தன் பெண்ணாக மட்டும் அவள் இருந்தால், பேசாமல் அவளை இட்டுப் போய்விடமாட்டானா? சுப்புவைப் போல அவன் குழந்தைகுட்டி இல்லாதவனா, மகளின் அருமை தெரியாமல் இருக்க? ஆனால் தன் எசமானனை என்ன சொல் கிறது? 'அவரு பெறலையா? அவுங்க போக்கு ஒரு போக்கு' என்று எண்ணமிட்டான் கிருஷ்ணன்.

அம்மாஞ்சியிடம் சொல்லி ஏற்பாடு பண்ணிக்கொண்டு ஒரு நடை நாராயணனைப் போய்ப் பார்த்து வந்து மகாலக்ஷ்மி

மனம் குளிர நல்ல செய்தி சொல்லவேண்டும் என்று அவனுக்கு அவா ஏற்பட்டது. அதற்கு ஏற்றாற் போல, நாராயணனிட மிருந்து இவன் வந்த சில தினங்களில் அவர்களுக்குக் கடிதம் ஒன்று வந்தது. ஜெயிலதிகாரிகள் பார்வையிட்டு அனுப்பி இருந்தார்கள்.

அதில் அவன் அவர்களையெல்லாம் விசாரித்துத் தன் சௌக்கியத்தையும் தெரிவித்திருந்தான். நடுவில் தனக்கு ஏதோ கொஞ்சம் காய்ச்சலாக இருந்து இப்போது ஒன்றும் இல்லை என்றும் அதில் ஒரு வரி இருந்தது. அதைப் பார்க்கவும் தர்மாம்பாள் மிகவும் கவலை கொள்ள ஆரம்பித்தாள். 'இப்போது ஒன்றும் இல்லை என்பது தங்களுக்காகச் சொன்ன வெறும் வார்த்தையோ! இன்னமும் காய்ச்சலாகத்தான் இருக் கிறானோ?' என்றெல்லாம் அவளுக்கு விசாரம் உண்டாயிற்று. யாராவது நேரில் சென்று பார்த்து வந்தால்தான் சமாதான மாகும்போல் இருந்தது அவளுக்கு. அதற்குச் சரியாக, கிருஷ்ணன், தான் சென்று வருவதாகக் கிளம்பினான்.

''நீ எங்கும் போனவன் அல்ல. உனக்கு அவ்வளவு தூரம் ரெயில் பிரயாணம் செய்து போகத் தெரியாது'' என்று அம்மாஞ்சி சந்தேகப்பட்டார்.

''ஆம்புள்ளைதானே, சாமி? வாயிலே வார்த்தை இல்லீங் களா? விசாரிச்சுக்கிட்டுப் போயிடமாட்டேனா?'' என்று தெம்பு பேசினான் கிருஷ்ணன்.

தாம் சகல ஏற்பாடுகளும் செய்துகொடுத்தாலும் அவனுக்குப் போய்ப் பார்த்துவரத் தெரியுமா? தெரிந்தாலுங் கூட அது போதுமா? 'நாமே சென்று வருவோமா?' என்று அம்மாஞ்சி யோசித்துக்கொண் டிருக்கிற சமயம், ஊர் சென்றிருந்த தர்மராஜு சமயசஞ்சீவியாகத் திரும்பி வந்து சேர்ந்தான். அவனுக்குக் கிராமத்தில் இருப்புக் கொள்ள வில்லை. ஊரில் சிநேகிதர்கள் யாரும் இல்லை. வயது சென்ற தாய் மட்டும் இருக்கும் வீட்டில் அவனுக்குப் பொழுதுதான் எப்படிப் போகும்?

ஆகையால் அவன் மதுரை திரும்பிவிட்டான். நாலு இடங்களுக்குப் போக, நாலு மனிதர்களைப் பார்க்க, தர்மாம்பாள், மகாலக்ஷ்மி இவர்களோடு ஏதாவது பேசியிருக்க, பொழுது போவதே தெரியாமல் போகும் அல்லவா?

அவனிடம் நாராயணன் கடித சமாசாரம் சொல்லவுமே, தான் சென்று பார்த்து வருவதாகத் தயாரானான். இப்போது கிருஷ்ணனை அவனுடன் அனுப்ப அம்மாஞ்சி தயங்கவில்லை.

தர்மாம்பாள் அருமையாகச் செய்துகொடுத்த தின் பண்டங்கள், பழங்கள் இவைகளுடன், அவர்கள் நாராயணனைப் பார்த்துவர வேலூருக்குப் புறப்பட்டார்கள். 'நம்மைக் கிராமத்தில் எசமான் வீட்டில் தேடுவார்களே. சீமந்தக் கல்யாணம் வேறு வருகிறதே. அவர்கள் அதற்குப் போகும் போது வீட்டுக் காவலுக்கோ, கூட ஒத்தாசைக்கோ அவசியம் வேண்டியிருக்குமே.' இது ஒன்றையும் கிருஷ்ணன் ஒரு பொருட்டாகவே நினைக்கவில்லை. 'எப்படியோ, திண்டாடட்டும்; நமக்கு என்ன?' என்கிற எண்ணத்தில் இருந்தான்.

சொந்தக்காரனாகப் பழகிப் போன அவனை வேலையைவிட்டு நீக்குவதானாலும் அவனுக்கு லட்சியம் இல்லை. மகாலக்ஷ்மிக்காக அவனுக்கு அவ்வளவு துணிவும் வந்திருந்தது.

## 35
## நாராயணன் நிலை

சிறையில் இருக்கும் ஒருவரைப் பார்க்க எந்த எந்த அதிகாரிகளிடமிருந்து என்ன என்ன அநுமதிகள் பெற வேண்டுமோ அவைகளைப் பெற்றுத் தர்மராஜுவும் கிருஷ்ணனும் வேலூர்ச் சிறைச்சாலையில் நாராயணனைப் பார்க்கச் சென்றார்கள். கிருஷ்ணன் தானப்பாளையத்தை விட்டே அதிகம் வெளிச் சென்றவன் அல்ல. அருகில் இருக்கும் மதுரைக்குக்கூடப் 'பஸ் ஸர்விஸ்' ஏற்பட்ட பிறகுதான் அவன் சில தடவைகள் வந்து போயிருக்கின்றான். ரெயில் பிரயாணமோ விரலைவிட்டு எண்ணக் கூடிய அளவுக்கு அவ்வளவு குறைவாகத்தான் செய்திருக்கிறான். அதுவும் பக்கங்களில் இருக்கும் ஊர்களுக்கே சில மணி நேரம் ரெயிலில் போயிருக்கிறான். இப்போது ஓர் இரவு முழுவதும் சென்று சென்னையில் மறுபடியும் ரெயிலேறிப் பாதிப் பகல் சென்று வேலூரை அடைவதென்றால், அவனுக்குப் பூமியில் பாதிச் சுற்றளவு வந்துவிட்டதாகவே தோன்றிக்கொண்டிருந்தது. 'அப்பா! எங்கிருந்து எங்கே; எவ்வளவு தூரம்!' என்று நினைத்தான்.

அவர்கள் சிறைக்குள் சென்று பார்த்தபோதோ, அதன் விஸ்தாரமான சுற்றுப்புறமும், பெரிய கட்டிடமும், அதில்

இருந்த கூட்டமும், 'இதுவா ஜெயில்! ஓர் ஊர் போலல்லவா இருக்கிறது!' என்று அவனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. பெரிய பூட்டோடு கூடின 'கேட்'டும் இரண்டு ஆள் உயரத்துக்கு மேற்பட்ட மதில் சுவரும் இல்லாவிட்டால், சிறிய கிராமங்களையே பார்த்த அவனுக்கு, அதனளவுக்கு இதுவும் ஓர் கிராமமாகத்தான் தோன்றியிருக்கும். சிறை என்றாலே தேன் கூட்டைப்போல் இரண்டொருவர் இருக்கக்கூடிய சிறு சிறு அறைகளாக இருக்குமென்று அவனுக்காகவே ஏதோ கற்பனை தோன்றியிருந்தது. இப்போது அரசாங்கக் கைதிகள் நிறைந்த விஸ்தாரமான அந்தப் பிரதேசத்தைப் பார்க்கவும் அவனுக்குத் திகைப்பு ஏற்படாமல் என்ன செய்யும்? கைகால்களுக்கு விலங்கு பூட்டப்பட்ட கைதிகளும் பூட்டப்படாதவர்களும், ஜெயில் சேவகர்கள் மத்தியில் குறுக்கும் நெடுக்கும் சென்றுகொண்டிருந்தது அவனுக்கு ஒருவகை அச்சத்தை விளைவித்தது. அந்த இடத்தில் நிற்பதே ஏதோ குற்றம் செய்து தண்டிக்கப் பட்டவனைப்போல் அவனுக்குத் திகிலைக் கொடுத்தது. தாங்கள் திரும்ப வெளியே போக முடியுமோ என்றுகூட அவன் உள்ளம் துணுக்குற்றது.

அவன் இம்மாதிரி பல விதம் நினைத்துத் திகைத்து நிற்கையிலேயே ஜெயில் அதிகாரிகளில் ஒருவன் ராஜாங்கக் கைதிகளைப் பார்க்க வருகிறவர்களுக்கென்று பிரத்தியேகமாக இருக்கும் அறையில் அவர்களை இருக்கச் செய்து, நாராயணனைக் கூட்டிவரச் சென்றான்.

நாராயணன் வந்தபோது கிருஷ்ணனைப் பார்த்துப் பெரிதும் வியப்படைந்து போனான். அவன் தன்னைப் பார்க்க இருவர் வந்திருப்பதாகக் கூறவே, தர்மராஜுவைத்தான் நிச்சயமாக எதிர்பார்த்தான்; இன்னொருவர் யாராக இருக்கக்கூடும் என்று ஊகிக்க முடியவில்லை. வீட்டிலிருந்து வரக்கூடியவர்களை யெல்லாம் விட்டுக் கேவலம் வேலையாளான கிருஷ்ணன், கிராமத்தில் வீட்டோடு கிடப்பவன், இவ்வளவு தொலைவு வருவானென்று அவன் எதிர்பார்க்க நியாயம் இல்லையே!

"நீ எங்கடா வந்தே?" என்று ஆச்சரியத்தோடு அவர்கள் இருவரையும் வரவேற்றுக்கொண்டே கேட்டான்.

"உங்களைப் பார்த்துட்டுப் போகத்தானுங்க" என்று கிருஷ்ணன் பதில் சொன்னது அவன் முகத்தில் புன்னகையைத் தான் வருவித்தது.

''அதுதான் தெரிகிறதே! நீ கிராமத்தில் இருப்பவனுச்சே; எப்படி இவ்வளவு தூரம் வந்தே? உன்னை யார் அனுப்பினு?'' என்று அவன் மறுபடியும் கேட்டான்.

கிருஷ்ணன் ஒரே திக்பிரமையில் இருந்தான். அந்த இடம், நாராயணனை அங்கே பார்ப்பது, அவனுடைய இளைத்த தோற்றம் - எல்லாமாக அவனைத் திகைக்க அடித்துப் பதில் சொல்லத் தெரியாமல் விழிக்க வைக்கின்றன என்பதைத் தெரிந்துகொண்ட தர்மராஜு அவனுக்காகத் தானே பதில் சொன்னுன். ''இவன் மதுரையில் உங்கள் வீட்டுக்கு வந்திருந் தான். உன் கடிதம் பார்த்து உங்கள் அம்மாவுக்கு யாராவது உன்னைப் பார்த்து வரவேணுமென்று ஆவல் தோன்றியிருந்தது. நான் அந்தச் சமயத்தில் கிராமத்திலிருந்து வந்தவன், பார்த்து வருவதாகச் சொன்னேன். இவனும் என்னுடன் புறப்பட்டான், உங்கள் அப்பாவும் அனுப்பிவைத்தார்'' என்று சுருக்கமாகக் கூறினுன்.

''ஆனுல் நீ கிராமத்திலா இவ்வளவு நாளும் இருந்தாய்? அங்கே என்ன பண்ணினுய்? ஏதாவது கிராமப் புனருத்தாரண வேலைக்கு ஆரம்பம் செய்தாயா? மதுரையிலே எங்கள் அம்மா அப்பா, மகாலக்ஷ்மி இவர்களைப் பார்த்துவிட்டுத்தானே பிறகு போனுய்? அவர்கள் எப்படி இருக்கிருர்கள்? ஊரிலே உங்கள் அம்மா சௌக்கியமா? நீ காலேஜைவிட்டு வந்ததற்காக வருத்தப்படுகிருளா?'' என்று விதம் விதமாக நண்பனைக் கேள்விகள் கேட்டான் நாராயணன்.

''அவ்வளவெல்லாம் வருத்தப்பட எங்கள் அம்மாவுக்கு விஷயம் என்ன தெரியும்? ஏதோ நான் நல்லதென்று சொன்னுல் அவளும் நல்லதென்று எடுத்துக்கொள்கிருள். அதற்கு மேலே அவளுக்கு ஒன்றும் தெரியாது. நான் உடனே ஊருக்குப் போகவில்லை. நான் அங்கே போய் ஒரு மாதம் ஆகிறது. அது வரையிலும் மதுரையில் உங்கள் வீட்டில்தான் இருந்தேன். உங்கள் அம்மா என்னைப் போகவிடாமல் நிறுத்திக்கொண்டு விட்டாள்; அவள் பாவம், உன்னைப்பற்றியே கவலைப்பட்டுக் கிடந்திருக்கிருள். நான் எல்லாவற்றையும் எடுத்துச் சொன்ன பிறகு பயம் தெளிந்து அவளுக்கு ஆறுதல் ஏற்பட்டிருக்கிறது. நீ ஜெயிலிலே இருக்கிறதற்குக் கஷ்டப்பட்டுக்கொண் டிருந்தது குறைந்துபோய்ப் பெருமைகூட வந்துவிட்டதென்று சொல்ல லாம். நீ ஜெயிலிலிருந்து திரும்பி வருகிறபோது பரீட்சையில்

தேர்ச்சி பெற்று வருகிற மாதிரி சந்தோஷப்படுவாள் என்றுகூட நினைக்கிறேன்'' என்றான் தர்மராஜு.

''நீ இந்திரன், சந்திரனென்று என்னைப் புகழ்ந்து ஏற்றி வைத்திருப்பாய். அது போகட்டும்; நான் ஜெயிலுக்கு வந்ததைப்பற்றி அப்பா என்ன நினைக்கிறார்? மகாலக்ஷ்மி என்ன பண்ணுகிறாள்? அவளுக்குக் கொஞ்சம் தெரியும். அம்மாவைப் போல் வீணுக்கு அவ்வளவு வருத்தப்படமாட்டாள்'' என்றான் நாராயணன்.

''உங்கள் தகப்பனார் என்ன நினைக்கிறாரோ? ஒன்றும் விசேஷமாகக் காண்பித்துக்கொள்ளவில்லை. அவர் சர்க்கார் உத்தியோகஸ்தராயிற்றே; நீ இப்படிச் செய்ததற்குக் கோபித்துக் கொள்வாரோ என்று நினைத்தேன். உன்னைப்பற்றி விசாரித்தாரே தவிர வேறே ஒன்றும் சொல்லவில்லை. மகாலக்ஷ்மிதான் மிகவும் உறக்கமாக இருக்கிறாள். உனக்காகத்தான் கஷ்டப்படுகிறாளோ, வேறு காரணம் ஏதாவது இருக்கிறதோ? நான் முன்னமே சொல்லவில்லையா, அவள் என்னவோ மாதிரி இருக்கிறாளென்று. அவளை உத்ஸாகப்படுத்தவேதான் நான் ஊருக்குக்கூட உடனே கிளம்பாமல், உன்னைப்பற்றியெல்லாம் தனியாகக்கூட அவளுக்கு எடுத்துச் சொல்லிக்கொண்டிருந்தேன். அது அவளுக்கு ஆறுதல் கொடுக்கும், பார்'' என்றான் தர்மராஜு.

''அப்படியானால் நீ எங்கள் வீட்டில் உள்ளவர்களுக்கு ஆறுதலாக இருப்பதிலேயே காலத்தைப் போக்கினாய் என்று சொல்லு'' என்றான் நாராயணன்.

''ஏண்டா, அதுகூடச் செய்ய வேண்டாமா? அவர்கள் எப்படியோ கஷ்டப்படட்டும் என்று விட்டு விடுகிறதா? முதலில் நம்மைச் சுற்றியுள்ளவர்களுக்கு நன்மை செய்துவிட்டல்லவா அப்புறம் தேச சேவைக்குக் கிளம்ப வேண்டும்? தேசசேவை என்றால் மட்டும் என்ன? தனியாக உலகம் என்று ஒன்று இருக்கிறதா? இவர்களும் சேர்ந்ததுதானே அந்த உலகம்?'' என்றான் தர்மராஜு.

''அப்படிப் பார்க்கப் போனால், நாம் பிறந்து வளர்ந்திருக்கிறதே உலகத்துக்குச் செய்கிறதுதான் போ. மனிதர்கள் இல்லாத உலகம் எது? அது என்னவாக இருக்கும்?'' என்று பரிகாசமாகக் கூறினான் நாராயணன்.

"அப்படியா! நம் மனிதர்களையும் சந்தோஷப்படுத்தி வைத்துக்கொண்டு, பொதுமக்களின் சேவையும் செய்யக் கூடாதா? இப்போது, நான் சமாதானங்களை எடுத்துச் சொன்னதில் உங்கள் அம்மா கொஞ்சம் கஷ்டப்படாமல் இருக்கிறாள். அது நல்லதுதானே? இனிமேல் ஏதாவது பொது வாகச் சேவைக்கு ஆரம்பித்தால் போகிறது. அதற்குத் தடை எங்கிருக்கிறது? அந்த உத்தேசத்தில்தான் மதுரைக்குத் திரும்பி வந்தேன். உன் கடிதம் வந்திருந்தது; இவனையும் அழைத்துக் கொண்டு உன்னைப் பார்க்க வந்திருக்கிறேன்" என்றான் தர்மராஜு.

"இவன் வர வேண்டியது மிகவும் முக்கியந்தான்" என்று பரிகாசமாகக் கூறிக்கொண்டே, "ஏண்டா, நீ என்னைப் பார்த்து என்ன பண்ணப் போகிறாய்? உங்கள் எசமானனுக்குப் பதிலாகவா? ஆனால் ஒன்று, நீ இந்த இடத்தை யெல்லாம் பார்க்கலாம். இப்போது விட்டால் அப்புறம் எப்போது பார்க்கிறது? ஜெயிலை முழுதும் சுற்றிப் பார்த்தாயா? ஊர் மாதிரிப் பெரிசா இல்லையா? இங்கே இருக்கிறது ஏதாவது கஷ்டமா, சொல்லு" என்று நாராயணன் கிருஷ்ணனிடம் கிண்டலாகக் கேட்டான்.

"உங்க உடம்பு ்போயிருக்கிற போக்கைப் பார்த்தாக் கஷ்டமில்லேண்ணு தோணலீங்களே" என்றான் கிருஷ்ணன். அவனுக்கு இருந்த திகைப்பு இப்போது நீங்கிவிட்டது.

"ஆமாம், கிருஷ்ணன் சொல்கிறது ரொம்ப சரி; நீ மிகவும் இளைத்துத்தான் போய்விட்டாய்" என்று தர்மராஜு கிருஷ்ணனை ஆமோதித்துச் சொன்னான்.

"என்ன இருந்தாலும் நம்ம மனிதர்களை யெல்லாம் விட்டு விட்டு, ஒரு கட்டுக்கு உட்பட்டிருக்க வேண்டியிருக்கிறதல்லவா? அது உடம்பில் உறைக்கத்தான் உறைக்கிறது" என்று கிருஷ்ணனுக்கும் தர்மராஜுவுக்குமாகப் பதில் சொல்லிவிட்டு, "தானப் பாளையத்தில் என்னடா விசேஷம்? எல்லாரும் சௌக்கியமா? உன் எசமான் வழக்கம்போல் காமரா உள் சாய்வு நாற்காலியிலும், கூடத்து விசிப்பலகையிலும், வாசல் திண்ணையிலுமாகப் போது போக்குகிறாரா? அத்தையம்மாவுக்கு இப்போது விசாரத்துக்கு என்ன விஷயம் கிடைத்திருக்கிறது? நான் ஜெயிலுக்குப் போனதற்கு ஊரெல்லாம் என்ன பேச்சாக இருக்கிறது? பாலு படிக்காமல் மாடு மேய்த்துக்கொண்

டிருக்கிறுனு?'' என்றெல்லாம் விளையாட்டாகக் கிருஷ்ணனைக் கேட்டான்.

''அவுகளைப்பத்தி என்னைக் கேக்காதீங்க; அவுக எப்படியோ போகட்டும். நீங்க என்னமா இருக்கீங்க, அதைச் சொல்லுங்க'' என்முன் கிருஷ்ணன்.

''என்னடா உனக்கு அவர்கள் பேரில் அத்தனை கோபம்?'' என்று நாராயணன் கேட்டான். கிருஷ்ணனுக்குக்கூடத் தன் எசமான், அவர் குடும்பம், இவர்களிடம் கோபம் வருவதுண்டா என்கிற ஆச்சரியம் உண்டாயிற்று, அவனுக்கு.

''அவுக செய்யறது நல்லாவே இல்லீங்க; அக்கிரமமாயிருக்கு'' என்று பதில் சொன்னுன் கிருஷ்ணன். அவனுக்கு மகாலக்ஷ்மி படும் சிரமத்தை நாராயணனிடம் சொல்லவேண்டுமென்ற எண்ணம். தர்மராஜுவோடு தாராளமாகப் பழக வைத்து அபாண்டமான பழிச் சொல்லுக்கு அவளை ஆளாக்கி இருப்பவன் அவன்தானே? அவன் அதைத் தெரிந்துகொண்டு அதற்குப் பரிகாரம் தேடட்டும் என்ற எண்ணம் அவனுக்கு. அவன் வரும்போதே கட்டாயம் எவ்விதமாவது அதுபற்றி நாராயணனிடம் சொல்லிவிடுவது என்று நினைத்திருந்தான். இப்போது பேச்சு அந்தப் போக்கிலே போயிற்று. 'தர்மராஜுவுக்கும் அவன் பண்ணுகிற குற்றம் புரியட்டும். அவளைச் சமாதானம் செய்ய இவன் என்ன தனியாகப் பேசுகிறது? கணவன் பக்கத்தில் இல்லாத பெண்ணோடு ஜாக்கிரதையாகப் பழக வேண்டாமா? இப்படியா செய்கிறது? என்ன சிநேகம் வேண்டிக் கிடக்கிறது!' என்று அவன் எண்ணமிட்டான்.

''என்னதான் அக்கிரமம் அவர்கள் பண்ணுகிறுர்கள், உனக்குக்கூடப் பொறுக்க முடியாமல் போகும்படி?'' என்று நாராயணன் மறுபடியும் விளையாட்டாகவே கேட்டான். என்ன பெரிதாக இருக்கப்போகிறது என்ற எண்ணம் அவனுக்கு.

''நம்ம மகாலச்சிமித்தாயை வீட்டோடு விலக்கின்னு வச்சிருக்காங்க?'' என்முன் கிருஷ்ணன்.

''ஒதுக்குகிறதென்றுல், என்னடா? எதற்காக? ஜெயிலுக்குப் போனவன் பெண்டாட்டி என்ரு?'' என்று கேட்டான் நாராயணன்.

''ஐயோ! அதுமாதிரின்னுத் தேவலையே! சொல்லத்தான் நாக்குக் கூசுது. நம்ம ராஜு எதிரிலே சொல்லவாணும்னு நெனைச்சேன். இப்போ சொல்லித்தான் ஆகணும். அவரும்

கேட்க வேண்டியதுதான், நம்ம தாயி கஷ்டப்படற சங்கதியை. ராஜு பேரோடு சேர்த்துத் தானே பேரு கட்டிவச்சு விலக்கி இருக்காங்க? அதுக்குத் தானே சாரதா வளைகாப்புக்குக்கூட அழைக்காமே ஊரெல்லாம் பேச்சாப் போகும்படி வேறே செஞ்சிருக்காங்க?'' என்றான் கிருஷ்ணன்.

''யாரடா, அதுமாதிரி செய்கிறது?'' என்று நாராயணன் மட்டுமல்ல, தர்மராஜுவும் பதறிப்போய்க் கேட்டான்.

'இது என்ன பெரும் பழி? நம்பேரிலா?'-தர்மராஜுவுக்குத் திடுக்கிட்டது. அவனுக்குத் தலை சுழன்றது.

''எல்லாம் அவுங்க இவுங்க பேசற வார்த்தையைக் கேட்டுக்கிட்டுச் சுப்பம்மா செய்கிற காரியந்தானுங்க'' என்றான் கிருஷ்ணன். தர்மராஜு வீட்டுக்கு அவர்கள் போய்வந்த அன்றிலிருந்து இந்தப் பழிச்சொல் தோன்றியிருப்பதையும், பிறகு நடந்தவைகளையும், சுப்பு மகாலக்ஷ்மியை வீட்டுக்கே அழைக்காமல் வைத்து அம்மாஞ்சிகூட மனஸ்தாபப்படும் வரைக்கும் செய்திருப்பதையும் விரிவாகக் கிருஷ்ணன் எடுத்துச் சொன்னான். ''ஆனு உங்கப்பா அம்மாவுக்கு இதுமாதிரின்னு தெரியாது; 'ஜாதி ஆசாரமில்லாமே நீங்க இருக்கிறதுக்காக' என்கிற நினைப்பிலே இருக்காங்க? மகாலச்சிமி வாயை விட்டுச் சொல்லவும் மாட்டாமே மெல்லவும் மாட்டாமே மனசுலே வச்சு உருகிப் போகுதுங்க. இவுங்க கோவிச்சுக்கற அளகு ஊரெல்லாம் பேச்சுக்கு இடமாகுதுங்கறது அந்தச் சுப்பு அம்மாளுக்கு எங்கே தெரியுது? அதைச் சொல்றவங்க யாரு? சொன்னுத்தான் கேக்கறது யாரு?'' என்றான் கிருஷ்ணன்.

மகாலக்ஷ்மி ஒரே வருத்தத்தில் இருப்பதன் காரணம் இப்போது நாராயணனுக்கும் தர்மராஜுவுக்கும் நன்கு விளங்கிற்று. நாராயணனுக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை. 'இவர்கள் யார், என் மனைவியைப்பற்றியும் நண்பனைப்பற்றியும் கண்டவாறு பேச? இப்படிப் பேசுவதற்கு நாக்கைத் துண்டித்து விட மாட்டேனு?' என்று கோபமாக இரைந்தான். உண்மையில் அவர்களை என்னதான் செய்யக் கூடாது என்று அவனுக்கு ரௌத்திராகாரமாகச் சினம் மூண்டது. அவர்கள் தூற்றுகிறார்கள் என்பதற்காக, மகாலக்ஷ்மியிடமோ தர்மராஜு விடமோ அவனுக்குத் தவறு தோன்றுமா? மகாபாரதத்தில், துரியோதனனுக்குக் கர்ணனிடத்தில் இருந்ததாகச் சொல்லப்

படும் நம்பிக்கையும் விசுவாசமும் அல்லவா, அவனுக்குத் தர்மராஜுவிடத்தில் பூர்ணமாக இருக்கின்றன.

தர்மராஜுவுக்கோ மிகுந்த மனவருத்தம் ஏற்பட்டது. மகாலக்ஷ்மி சிறிது வருந்துவதையும் சகியாமல் அவன் ஆறுதல் கூற நினைக்க, அது முற்றும் மாறுன பலனை அளித்திருக்கிறதே! காற்றுச் சற்று வீசி அடித்தாலும் மலர் துவண்டு வாடிவிடுமே என்று அவன் அஞ்சி இருக்க, சூறுவளியன்றோ சுழற்றி அடித்துத் தயையின்றி இதழ் இதழாகப் பிய்த்து எறிந்திருக்கிறது? என்னே விதியின் கொடுமை! நெருப்பை அணைக்கக் காற்று உதவினது போலல்லவா, அவளைச் சந்தோஷிப்பிக்க அவன் செய்த முயற்சியெல்லாம், அவள் துன்பத்தை விருத்திசெய்ய உதவி இருக்கின்றன? அவனுலே அன்றோ அவளுக்கு அத்தனை துன்பமும் நேர்ந்திருக்கிறது? அவளுக்குச் சிரமம் உண்டாகும் என்பதற்காக நாராயணனின் சுதந்தர உணர்ச்சிகளைக்கூட அவன் குறைக்க முயன்றுன். அவன் தேசத் தொண்டென்று கிளம்பினுல் அவள் சுக வாழ்க்கைக்கு இடையூறு நேருமே என்கிற நினைப்பு அவனுக்கு. அவளைப் பற்றி நினைத்துப் பார்க்காமல் தேச சேவை என்று கிளம்பியதற்காக நாராயண னிடத்தில்கூடக் குற்றம் தோன்றிற்று அவனுக்கு. அவளைத் தெய்வப் பெண்ணுக நினைத்து வழிபட வேண்டுமென்று அவன் நினைக்கும்போது சாதாரணப் பெண்ணுக நடத்துவதில் மனம் கேட்குமா?

அவ்வளவெல்லாம் அவன் நுட்பமாய் ஆராய்ந்து பார்த் திருக்க, அவனே அவள் வருத்தத்துக்கு முக்கிய காரணமாகி இருக்கிறுனே! அதை என்ன என்பது! அவனுக்கு ஏற்பட்ட ஏமாற்றமும் வருத்தமும் சொல்லி முடியா:

அவன் முகம் கவிழ்ந்து வருந்தி நிற்பதைப் பார்த்த நாராயணன், "நீ எதற்கடா வருத்தப்படுகிறுய்? இந்த மூட ஜனங்களின் பேச்சுக்கா? என் மாமனுரும் அத்தையும் தனிப் பிரகிருதிகள். அவர்கள் போக்கு நமக்குப் புரியாது; ஒன்றும் செய்யவும் முடியாது; விட்டுத் தள்ளு. மகாலக்ஷ்மியை இதற்காக வருந்தச் சொல்லாதே. சூரியனைப் பார்த்து நாய் குரைக்கிற மாதிரிதான். இன்னும் இரண்டே மாதத்தில் நான் வந்துவிடுவேன். அப்புறம் என்ன? இருவரும் எவ்வளவோ சந்தோஷமாகத் தேச சேவை செய்யப்போகிறோம். நீ அவளை உத்சாகமாக இருக்கும்படி செய். வீண் கவலைகளில் பரீட்சைக்

குப் படிப்பதை விட்டு விடப் போகிருள். மனத்தை மாற்ற அது ஒரு போதுபோக்கு என்று சொல்'' என்று நாராயணன் தர்மராஜுவிடம் சொன்னுன். யார் எது சொன்னுலும் தனக்கு அவர்களிடம் பூரண நம்பிக்கை என்பதை இதனுல் தெளிவுபடுத் திஞன்.

''அப்படிச் செய்ய நினைத்துத்தான் இப்படி விபரீதமாக முடிந்திருக்கிறதே'' என்று துக்கித்தான் தர்மராஜு.

''விபரீதம் என்ன? இந்த அற்ப ஜனங்களின் பேச்சுக்கா? அதை என்னிடம் இனிமேல் சொல்லாதே. நான் கேட்டுக் கொள்ளப்போகிறதில்லை'' என்று ஒரு வார்த்தையில் சொல்லித் தர்மராஜுவை அதுபற்றி மேலும் வருந்திப் பேசவிடாமல் செய்துவிட்டான்.

''கிருஷ்ணு, நீயுந்தான் மகாலக்ஷ்மியைப் பார்த்துக் கொள்ளவேணும், தெரியுமா? வீணுக்கு இந்த அசட்டு அபவாதத் துக்கெல்லாம் பயப்பட்டு வருந்தக்கூடாதென்று சொல்ல வேணும். இங்கே சிறையில் இருக்கிற பெரியவர்களையெல்லாம் பார். எவ்வளவோ தாறுமாருன பேச்சுக்கள் கேட்டும் அவற் றைப் பாவிக்காமல் எவ்வளவு சந்தோஷமாக இருக்கிருர்கள் தெரியுமா? அவர்களை அருகில் சென்று பார்த்தாலே சிறிய சிறிய கஷ்டங்களுக்கெல்லாம் நாம் வாட்டமடையக் கூடாது என்று நமக்கும் நன்ருகப் பழகிப்போகும். ஜெயிலுக்கு வந்த திலே ஒரு நன்மை; எனக்கு அவர்களோடு சொந்த மனிதனைப் போலவே பழக முடிகிறது. அம்மாவிடம் சொல்லு; அவள் செய்து கொடுத்திருக்கும் இந்தப் பட்சணத்தையெல்லாம் எவ்வளவோ பெரியவர்கள் சாப்பிடப்போகிருர்களென்று சொல். இங்கே என்ன வழக்கமென்ருல் ஒருவருக்கு யாராவது ஏதாவது கொடுத்தால் அதை எல்லோரும் பங்கிட்டுப் புசிப்பார்கள். இங்கே இருக்கிற பெரியவர்கள் எல்லோரையும் ஜெயிலைச் சுற்றி ஒரு பார்வை பார்த்துவிட்டுப் போ. எவ்வளவு பேர் இருக் கிருர்கள், ஒருவருக்கு ஒருவர் எத்தனை அன்பாக இருக்கிருர்கள், எல்லாம் தெரியும். நான் சந்தோஷமாகத்தான் இருக்கிறேன் என்று ஊரிலே சொல்'' என்று கிருஷ்ணனுக்குச் சொன்னுன்.

''உன்னையும் என்னேடு ஜெயிலுக்கு அனுப்பாமல் விட்டு விட்டார்களே. இரண்டு பேருமாக இருந்தால் இன்னும் எவ்வளவு நன்ருக இருக்கும்! ஒரு நிமிஷம் இங்கே வீணுகப் போகவில்லை. எவ்வளவோ விஷயங்கள் படித்தும் பேசியும்

தெரிந்துகொள்ளலாம்'' என்று தர்மராஜுவுக்கு எடுத்துச் சொன்னான்.

அவர்கள் சந்திப்பு முடியும் வரையிலும், தான் ஆரோக்கியமாக இருப்பதையும் சந்தோஷமாக இருப்பதையுமே வற்புறுத்திச் சொல்லி விடைகொடுத்து அனுப்பினான். கொண்டு வந்த பழம், பட்சணம் முதலியவற்றை எந்த ஜெயில் அதிகாரியிடமோ சமர்ப்பித்துவிட்டுத் திரும்பாமல் நேரில் அவன் கையில் கொடுத்தோமே என்கிற திருப்தி கிருஷ்ணனுக்கு ஏற்பட்டது. அவன் வந்ததில் மகாலக்ஷ்மிக்காகப் பேசி ஒன்றும் சாதித்துவிடவில்லை. நாராயணன் துளியாவது தானேதான் மகாலக்ஷ்மி பேரில் ஏற்பட்டிருக்கும் பழிச்சொல்லுக்குக் காரணம் என்பதைப் புரிந்துகொண்டவனாகத் தெரியவில்லை. தர்மராஜுவோடு தாராளமாகப் பழகும்படி அவன் வற்புறுத்தியிரா விட்டால் இதுமாதிரி அபவாதம் கிளம்ப இடமுண்டா என்பதை அவன் நினைத்துப் பார்த்தவனாகவே தெரியவில்லை. அவன் அதைப் புறக்கணிப்பதைப் பார்த்தால் ஜெயிலிலிருந்து திரும்பி வந்ததும் பழையபடியே தானும் இருந்துகொண்டு மனைவியையும் அப்படியே இருக்கச் செய்வான்போல் இருந்தது. 'ஒருவருக்கும் அவர்கள் செய்யும் பிழையைப் புரியவைப்பதென்பது முடியாதா? சுப்புவுக்குத்தான் அவள் தவறு புரியவில்லை என்றால், இவனும் தெரிந்துகொள்ள மாட்டான்போல் இருக்கிறதே' என்று நினைத்து வருந்திக்கொண்டே ஊர் திரும்பினான் கிருஷ்ணன்.

தர்மராஜுவும் மிகவும் மனம் குன்றித்தான் ஊருக்குக் கிளம்பினான். நாராயணனது விசுவாசத்துக்கு நன்றி தோன்றினாலும், மகாலக்ஷ்மியை வருந்தச் செய்துவிட்டோமே என்று துக்கித்தான். நண்பனுக்காக அவன் தாயும் மனைவியும் கஷ்டப்படுவதைத் தவிர்க்க எண்ணி அவன் சிரமப்பட்டது விபரீதமாக முடிந்திருக்கிறது. நாராயணன் புருஷன், அவன் அபவாதத்தை அலட்சியமாக மதிக்கிறான். பெண்பிள்ளையின் மனம் அவ்விதம் எளிதில் அசட்டை செய்துவிட முடியுமா? 'மகாலக்ஷ்மியிடம் என்றும்போல் இனி நாம் பழகக்கூடாது. விலகியே நடந்து கொள்ள வேண்டும்.' அவள் இருக்கும் இடத்தில் இருக்கவும், அவளோடு பேசவும், ஏதோ ஓர் ஆசை அவனையும் மீறி அவனுக்கு இருக்கத்தான் இருந்தது. 'அதற்குத்தான் இது தண்டனையா? இதற்குப் பிராயச்சித்தமாக நாம் பொதுக் காரியங்களில் ஈடுபட வேண்டியதுதான். நாராயணனே

சொன்னதுபோல் ஒரு குடும்பத்தைத் தனியே கவனிப்பது பொதுச் சேவை ஆகாது.'

இவ்விதம் தீர்மானத்துக்கு வந்தான் அவன். போகும்போது நாராயணனைப் பார்க்கும் அவசரத்தில் இருந்தார்கள் அவர்கள். அதனால் சென்னையில் தங்காமலே சென்றார்கள். இப்போது அந்த அவசரம் இல்லாமையால் நாராயணனைப் பற்றிய செய்தியைத் தெரிவித்து அவனைச் சார்ந்தவர்களை ஆசுவாசப்படுத்த, தர்மராஜுவுக்குப் போதிய அவகாசம் இருந்தது.

பட்டணத்தில் இரண்டொரு நாள் தங்கிச் சில சிநேகிதர்களைப் பார்க்க எண்ணினான், தர்மராஜு. கூடவே கிருஷ்ணனும் தங்கும்படி ஆயிற்று. அதனால் அவனுக்கு அந்தப் பெரிய நகரத்தைச் சுற்றிப் பார்க்க அவகாசமும் கிடைத்தது. மீன் காலேஜ் என்ன, செத்த காலேஜ் என்ன, 'லைட் ஹவுஸ்' என்ன – இப்படியாக அவன் எல்லா இடங்களையும் அதிசயமாகப் பார்த்து வந்தான். கடல்தான் எல்லா அதிசயங்களிலும் பெரிய அதிசயமாக அவனுக்குப் பட்டது. "எம்பிட்டுத் தண்ணி!" என்று கண்களை அகல விழித்து நெடுநேரம் பார்த்தும் அவனுக்குத் திருப்தி உண்டாகவில்லை. தானப்பாளையத்துக் குளத்தைப் பார்த்துப் பழக்கமான கண்களுக்கு அலை மோதும் பிரம்மாண்டமான சமுத்திரம் சாமானியமாகத் தோன்றுமா?

கடல் அலைகள் கண் எதிரில் ஒன்றன்பின் ஒன்றாக ஓயாது உயரக் கிளம்பிக் கரையில் மோதி மடிவதைக் காண அவனுக்குப் பெருத்த அதிசயமாக இருந்தது. "இவ்வளவு வேகத்தோடே சத்தம் போட்டுக் கிளம்பற தண்ணி ஊரையே முழுக அடிச்சிப்புடலாமே! அப்படிக்கில்லாமே எதுக்கோ கட்டுப்பட்டுப் பேசாமே திரும்பிப் போகுதே. எல்லாம் அந்தச் சாமி செயல்னு" என்று வியந்துகொண்டான். "இந்தத் தண்ணி மட்டும் இப்படி உப்பா இல்லாமே இருந்தா, உலகம் பூரா உளுது பயிரிட்டுச் செழிப்பா ஆக்கிப்புடலாமே; அதுக்கில்லாமேன்னு இருக்கு" என்று அவன் அங்கலாய்த்தான்.

பிறந்தது முதல் நிலச் சாகுபடியையே பார்த்துப் பழக்கமான அவனுக்கு, 'இம்பிட்டுத் தண்ணி இருந்து என்ன உபயோகம்? துளித் தண்ணி, தாகத்தைக்கூடத் தீர்க்கமாட்டாமே!' என்று வெறுப்பு ஏற்பட்டது. 'உலகத்திலே சில பிறவிகள் எவ்வளவோ செல்வாக்கு இருந்தும் அதை யாருக்கும்

உபகாரமாக உபயோகியாமல் இல்லையா? அதுபோல' என்று நினைத்தபோது தன் எசமானன் நினைப்புத்தான் அவனுக்கு வந்தது. 'தம் சொந்தக் குளந்தைகளைக்கூடச் சுகமாக வச்சிருக்கச் சிரமப்படாமே ஒரு மனுஷன் சும்மா இருக்கிறாரே, அவர் இந்தக் கடலாட்டந்தான்' என்று நினைத்துக்கொண்டான். "இம்பிட்டுத் தண்ணியும் இப்படி உப்பாக் கிடந்து வீணாப் போகுதே; இதை உபயோகிக்க எதுனாச்சும் வளி கிடையா துங்களா?" என்று அவன் தர்மராஜுவைக் கேட்டதற்கு, "இது எவ்வளவோ உபகாரமாக அல்லவா இருக்கிறது? கடல் இல்லாவிட்டால் நமக்கு மழை ஏது? மழை இல்லாவிட்டால் ஆறு குளங்களில் தண்ணீர் ஏது? நாம் ஜீவிக்கிறது ஏது? கடல் செய்கிற உபகாரம் வெளிப்படையாகக் கண்ணுக்குத் தெரிய வில்லை. அவ்வளவுதான், ஆனால் ரொம்பப் பெரிது" என்றான் தர்மராஜு.

இதைக் கேட்கக் கிருஷ்ணனுக்கு அதிசயமாக இருந்தது. "அப்படியானா, அது விஷயம் முழுக்கச் சொல்லுங்க; கேட்க ஆசையாயிருக்கு" என்றான் அவன்.

"அது பெரிய விஷயம். இப்படியெல்லாம் லேசாகச் சொல்லிவிட முடியுமா?" என்று தர்மராஜு சொன்னான். இன்னொரு சமயம் சாவகாசமாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமென்று, கிருஷ்ணன் தன் ஆவலை அடக்கிக் கொண்டான்.

ஆனால், 'நாம் அந்த உப்புத் தண்ணீரை நம் எசமான னுக்குச் சரியாக நினைத்தது தப்பு. அது பெரிசா உலகத்தையே காப்பாத்தறதா மல்ல' என்று தனக்குள்ளேயே நினைத்துக் கொண்டான்.

## 36

# ராஜூவின் தொண்டு

அவர்கள் மதுரை வந்து சேர்ந்தபோது கிருஷ்ணனை விசாரித்து இரண்டு கடிதங்கள் அம்மாஞ்சிக்கு முன்னமே வந்திருந்ததாகத் தெரிந்தது. இரண்டும் தானப்பாளையத்துக் கோபாலையரிடமிருந்துதான் வந்திருந்தன. "கிருஷ்ணன் அங்கே வந்திருக்கிறானா? அப்படியானால் அவனை உடனே அனுப்ப வேண்டும்" என்று இரண்டு கடிதத்திலும் எழுதியிருந்தது. "சாரதாவுக்குச் சீமந்தம்; அதற்குத் திருநெல்வேலி போக

வேண்டும்: கிருஷ்ணன் அவசியம் வரவேண்டும்.'' இவை அவற்றில் கண்டிருந்த முக்கிய விஷயங்கள். அம்மாஞ்சி முதலானவர்களைச் சீமந்தத்துக்கு அழைக்க வில்லையா என்றால், கிருஷ்ணனை மட்டும் விசாரித்துவிட்டுச் சும்மா இருக்க என்ன இருந்தாலும் கோபாலையருக்குத் துணிச்சல் வருமா?

'வளைகாப்புக் கடிதம் போடாமல் வைத்தோமே; இப்போது கிருஷ்ணனை விசாரிக்கமட்டும் செய்யலாமா?' - சுப்புவுக்கு இது மாதிரி யோசனை ஒன்றும் இல்லை. அப்போது அவளுக்கு மகாலக்ஷ்மி பேரில், ஏன், அவர்கள் எல்லோர் பேரிலுமேதான் கோபம் பிரமாதமாக வந்திருந்தது; காண்பித்தாள். இப்போது அது தீர்ந்துவிட்டதா? இல்லை. ஆனாலும் கிருஷ்ணன் இல்லாமல் வீட்டை விட்டு நகர முடியாது. ஆகையால் அவனைத் தேடி வரவழைக்க வேண்டும். அவன் அநேகமாக அம்மாஞ்சி அகத்தில்தான் இருப்பான். 'கழுதை கெட்டால் குட்டிச்சுவர்' என்று அவனுக்கு வேறு எங்கே போகத் தெரியும்? ஆகையால் அவனை உடனே வரவழைக்க அம்மாஞ்சிக்குக் கடிதம் எழுத வேண்டும்.

சுப்புவே அதைச் செய்யவேண்டி யிருந்தால் கொஞ்சம் முன்னுக்குப் பின் யோசனை தோன்றலாம். 'அவமரியாதை காண்பித்துவிட்டுச் சொந்தக் காரியம் வரும்போது எந்தத் தெம்பு கொண்டு உறவாடுவது?' என்று பயம் வரலாம். கடிதம் எழுதுகிறவர் கோபாலையர். அவரிடம் எழுதும்படி சொல்வதை விட்டு, மற்றது பற்றி அவளுக்கு என்ன கவலை? அவர் அதன்படி செய்யாவிட்டால் வேண்டுமானால் குற்றம் கூறிக்கொண் டிருக்கலாம். அது அவளுக்கு எளிது; பழக்கமானதுங்கூட.

ஆனால் ஒன்று; இந்தத் தடவை கோபாலையர் அவள் சொல்லை அலட்சியமாகத் தள்ளிப் போடவில்லை. பெண்ணைப் பற்றியும், அவள் மனநிலையைப் பற்றியும் நினைத்துப் பார்க்காவிட்டாலும், அம்மாஞ்சியை முழுதும் கத்தரித்து விட்டது போல் இருக்க அவருக்குச் சம்மதம் இல்லை. இவ்வளவு நாளும் அம்மாஞ்சியின்றி அவர் எந்தக் காரியத்தையும் நடத்தியதில்லை; இவருடைய வேண்டுகோளை எதிர்பாராமலே அம்மாஞ்சி எவ்வளவோ சொந்தமாகச் செய்து பழக்கமாக இருக்கும்போது, அவரை விலக்குவது கோபாலையருக்குச் சரியாகத் தோன்றுமா? எந்தக் காரியத்திலுமே மாறுதலை விரும்பாத அவர் இதில் மட்டும் அதை விரும்புவாரா?

ஆனால் எதற்கும் பாடுபடுவது மட்டும் அவரால் ஆகாது. எவ்வளவு முக்கியமானதாயினும் தாம் முனைந்து செய்ய வேண்டுமென்று வந்தால் அவர் அதை அதன் போக்கில் விட்டு விடுவாரே தவிர மாற்றி அமைக்கச் சிரமப்பட மாட்டார். வளைகாப்பின் போது சுப்புவோடு வாக்குவாதம் செய்தன்றோ மாற்றி நடத்த வேண்டும்? அது யார் செய்கிறது என்று பேசாமல் இருந்துவிட்டார். இப்பொழுது அவளாகவே அம்மாஞ்சிக்கு எழுதச் சொல்லும்பொழுது எதற்காகத் தாமதம் செய்கிறார்? இதற்குமுன் வளைகாப்புச் சங்கதி தெரிவியாததற்குச் சமாதானம் கூறிக்கொண்டு அவர் கடிதத்தைத் துவக்கவில்லை. கிருஷ்ணன் சமாசாரத்தையே முதலில் கேட்டு எழுதினார்.

அவர் கடிதத்தைப் பார்க்கவும் முதலில் அம்மாஞ்சிக்குக் கோபந்தான் வந்தது. "காரியம் ஆகவேண்டுமானால் கழுதையின் காலைப் பிடி என்கிற சங்கதிதான்" என்று கடிதத்தை வீசி எறிந்தார். இதற்குப் பதில் எழுதுவதில்லை என்றும் நிச்சயித்துக்கொண்டார். இரண்டாவது கடிதமும் அதே தோரணையில் வரவும், "சீ! இவன் ஒரு மனுஷ்யனாட்டமா! இவனிடம் மன வெறுப்பைக் காண்பிப்பதைவிடச் சும்மா இருக்கலாம்" என்று அவருக்கு அலுத்து வந்தது. அவ்விதம் நினைத்ததற்காக என்ன செய்தார்? பதில் எழுதினாரா? இல்லை. கிருஷ்ணன் வரவும் அவனை அனுப்பிவைத்துவிட்டுப் பேசாதிருப்போம் என்று மட்டும் நிச்சயித்துக்கொண்டார்.

கிருஷ்ணன் வந்து நாராயணனைப்பற்றிச் சொன்ன சமாசாரங்களைக் கேட்டுக்கொண்ட பிறகு முதல் காரியமாக, "உன் எசமான் கிட்ட இருந்து எனக்கு உத்தரவு பிறந்திருக்கப்பா; உன்னை உடனே அனுப்பணுமாம். நீ போயிட்டு வா" என்றார் அம்மாஞ்சி.

"நான் போகலீங்க" என்று கிருஷ்ணன் தாழ்மையாக மறுத்துக் கூறினதற்கு, "அப்படி முடியாதப்பா; எனக்கு ராஜாங்க உத்தியோகத்துலே, மேலிருக்கிறவனுக்குக் கீழ்ப் படிஞ்சு, கீழிருக்கிறவனை உத்தரவிட்டே பழக்கம். அதன்படி உங்க எசமான் பெரியவர், அவர் உத்தரவுக்கு நான் கீழ்ப்படிய வேணும். நீ என்ன இருந்தாலும் வேலையாள் பாரு; நான் சொல்வதை நீ கேட்கத்தான் வேணும்" என்று விளையாட்டாகச் சொல்வதுபோல் அவனைப் போகும்படி கண்டித்துச் சொன்னார். அப்படியும் கிருஷ்ணன் அவர் உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து ஊர்

போயிருப்பானோ என்னவோ, நிச்சயம் சொல்லுவதற்கில்லை; ஆனால் மகாலக்ஷ்மி, ''கிருஷ்ணா, நீ போயிட்டு வாடா. அங்கே நடப்பதையெல்லாம் எனக்கு உடனுக்குடன் வந்து சொல்லு; நீ போகல்லேன்னா எனக்கு அவ்விடத்துச் சங்கதியெல்லாம் தெரியறது எப்படி? இந்த ஒரு வருஷமா ஒரு சமாசாரமும் தெரியாமே கஷ்டப்பட்டுப் போனேன். இன்னமும் அப்படி வேண்டாம். நீயாவது அங்கும் இங்குமாக இருடா'' என்று மன்றாடிக் கேட்டுக்கொண்டாள்.

அவள் அவ்வளவு சொன்ன பிறகும் அவன் போகாமல் இருப்பானா? ''சரி, தாயீ, நீ சொல்றபடி மாசம் ஒரு நடை வந்து போறேன். மாப்பிள்ளை ஐயா ஜெயிலுலே யிருந்து புகழோடு திரும்பி வரும்போது வந்து பார்க்கிறேன்'' என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டு போனான்.

அவனுக்கு இருக்கும் அன்பையும் அவன் செய்கிற உபகாரத்தையும் நினைத்து மகாலக்ஷ்மி மனம் உருகியே போனாள். 'அவன், வேலைக்காரனாக இல்லை. ஜன்மாந்தரத்தில் தாயைப்போலக் கிட்டப் பந்துவாக அவன் இருந்திருக்கவேணும். இல்லாவிட்டால் சுயநலம் இல்லாத இந்தத் தனி அன்பு வைக்க முடியுமா?' என்று நினைத்தாள்.

தர்மராஜு தன் பங்குக்கு நாராயணனைப்பற்றியெல்லாம் அவர்களுக்குத் தெம்பாக எடுத்துச் சொல்லி விடைபெற்றுக் கொண்டான். அவர்களுக்காகக் கிட்டவே இருந்து செய்வதாக நினைத்ததன் பலன்தான் தெரிந்துவிட்டதே! இனி அவனுக்கு அங்கே என்ன வேலை? நாராயணன் சொன்னதுபோல் அது பொதுச்சேவை ஆகாததுடன், ஒருவரைக் கெடுத்ததாகவும் ஆகிறது. ஒரு குடும்பத்தைத் தனியே பெரிதாக நினைத்திருப்பது சரியல்ல; பொது நன்மைகளைச் செய்யக் கிளம்பவேண்டும். அதற்குக் கிராம சேவையே உகந்தது. கிராமத்திலே பிறந்து வளர்ந்த அவனுக்கு அது எளிதில் சாத்தியமாகலாம் அல்லவா? சுதந்தரப் போராட்டத்தில் கிராம முன்னேற்றமும் ஒரு முக்கிய அம்சந்தான். கட்டிடம் கட்டுவதற்குக் கல்லும் சுண்ணாம்பும் காரையும் சேறுங்கூட எப்படி அவசியமாகின்றனவோ, அது போலச் சுதந்தரக் கோயிலை நிர்மாணிக்க இந்தக் கிராமச் சேவையும் முக்கியந்தான் என்கிற தீர்மானத்துக்கு வந்தான். அந்த வேலையில் மும்முரமாக ஈடுபட்டு உழைக்க நிச்சயித்தான். அதற்கு வேண்டிய நண்பர்களைச் சேர்த்து இளம் தொண்டர்

சங்கம் ஒன்றை ஏற்படுத்தத் தொடங்கினான். அதற்காகக் கிராமம் கிராமமாகச் சென்று ஆட்களைத் திரட்டி என்ன என்ன செய்ய வேண்டுமோ அந்த அந்த வேலைகளிலெல்லாம் மும்முரமாக முனைந்தான். கூடவே நாராயணன் இல்லாதது பெருத்த கைமுறிசலாகத் தெரிந்தது அவனுக்கு. ஜனங்களை ஒன்று சேர்க்க அவன் பேச்சுத் திறமை எவ்வளவு அவசியமாக இருக்கும் என்பதை நன்கு உணர்ந்தான்.

'வெறும் மேடைப் பிரசங்கத்துக்கா இத்தனை பாராட்டு?' என்று சில காங்கிரஸ் தலைவர்களின் புகழைக் குறித்து அவன் முன்பு நினைத்ததுண்டு. அவன் அப்படி நினைத்தது எவ்வளவு பிசகு என்பதை இப்போது தெரிந்துகொண்டான். 'அவர்கள் செய்யும் தொண்டும் உயர்வானது; அவசியமானது; அவர்கள் பேசி உணர்ச்சி ஊட்டி ஒன்று சேர்க்காவிட்டால் ஜனங்கள் ஒன்று கூடுவார்களா? மாட்டார்கள்' என்பதைக் கண்டான். நாராயணன் சிறையினின்றும் வந்தவுடன் இருவருமாகச் செய்ய வேண்டியவைகளுக்குத் திட்டம் போட எண்ணினான். சுற்று வட்டக் கிராமங்களுக்கெல்லாம் சென்று பார்த்து என்ன என்ன சீர்திருத்தங்கள் அவசியம் என்பதையெல்லாம் குறித்துக்கொண்டான். அவர்கள் அறியாமையைப் போக்கிக் கல்வி கற்பிக்க நினைத்தான். இது மாதிரியான செயல்களில் அவனுக்குத் தன்னையும் அறியாமல் உத்ஸாகம் ஏற்பட்டது. கீழ்ப் பட்ட ஜனங்களோடு பழகி அவர்கள் குறைகளைக் கேட்டு ஆராய்வதில் அவன் மனம் முழுதும் ஈடுபட்டது. அவனுக்கு இயற்கையாகவே பிறர் மனத்தை நுட்பமாக அறியும் ஆற்றல் உண்டு. அதனால்தான் அவன் மகாலக்ஷ்மியின் மனவருத்தத்தையும் நுட்பமாகத் தெரிந்துகொண்டான். அவளுக்குத் தன்னாலான ஆறுதல் அளிக்கவும் முற்பட்டான். 'அவன் யௌவன வயசுடையவன்; யௌவன மங்கை ஒருத்திக்கு அந்நியனான அவன் விசேஷப் பரிவு எதுவும் காண்பிக்க முடியாது. அதைச் சமூகம் பிசகாக எடுத்துக்கொள்ளும்' என்பதை அவன் அறியவில்லை. அவன் தெரியாத்தனத்தால் செய்த பிழைக்குக் கைமேல் பலன் கிடைத்துவிட்டது. அப்புறம் என்ன? அவன் தன் போக்கை மாற்றிக்கொள்ளத் தீர்மானித்துக் கொண்டான். பிறருக்கு உதவும் சக்தியைப் பலருக்கு உதவி செய்யும் பெரிய நோக்குடன், பொதுச் சேவையில் ஈடுபடுத்தத் தொடங்கினான்.

கிருஷ்ணனும் தன்னளவுக்கு உத்தேசம் இல்லாமலே அவனுக்கு உதவி புரிபவன் ஆனுன். அதாவது அவன் தன் இனத்தாரிடமெல்லாம் நாராயணனைப் புகழ்ந்து கூறிக்கொண்டது அவ்விதம் ஆயிற்று. அவன் அவ்வளவு தூரம் வேலூர் வரைக்கும் போய் அங்கிருக்கும் ஜெயிலையும், அதிலே அடைந்து கிடக்கும் நூற்றுக்கணக்கான தொண்டர்களையும் நேரில் பார்த்து வந்த பிறகு சும்மா இருப்பாஞு?

''என்ன போங்க, நம்மைப்போல் ஏழைங்களுக்காகத் தியாகம் பண்ணி, நல்ல சோறு, நல்ல தண்ணி இல்லாமே பாடு படறவங்களெல்லாம், அங்கே என்னமா இருக்காங்க? காத் தோட்டமாப் பெரிய பெரிய பங்களாக்களிலே இருந்து பளக்கமான ஆசாமிகள், ஆட்டு மந்தை, மாட்டு மந்தை யாட்டமல்ல, ஒண்ணு அடைஞ்சு கிடக்காங்க? நம்ம எசமான் மருமவப்பிள்ளை இருக்கிறதெப் பார்த்து, என் மனசு உருகியே போச்சு. நம்ம நாட்டுச் சுதந்தரத்துக்கு, நம்ம சுதந்தரத்துக்குக் கூடத்தான் அவுக அந்தப் பாடு படறுங்க. அதுலே அவுகளுக்குக் காசு பணம் எதுனுச்சும் லாபமா? பொளைக்கற பொளைப்பை யெல்லாம் கெடுத்துக்கிட்டு அல்ல ஜெயிலுக்குப் போயிருக்காங்க! நம்ம மாப்பிள்ளை ஐயாவும் அதுமாதிரிதானே படிப்பை விட்டூட்டுப் போயிருக்காரு? நம்ம ராஜுவுந்தான் பாவம், காலேஜியே விட்டு வந்துட்டாரே'' என்றெல்லாம் அவன் பிரசங்கம் செய்தது, கிராமங்களில் குடியானவர்கள் மத்தியில் தர்மராஜுவினுடைய மதிப்பை உயர்த்தியது. தங்களுக்காக அரசாங்கத்தைக்கூட எதிர்த்துக்கொண்டு உழைக்கக்கூடிய மனிதனுக அவர்கள் அவனை எண்ணிக் கௌரவிக்கத் தொடங்கினுர்கள். அதனுல் அவர்களிடம் பேசித் தன் சொற்படியே அவர்களை நடக்கும்படி செய்ய அவனுக்குச் சிறிது சலுகை ஏற்பட்டது. அவன் அடிக்கடி தானப்பாளையம் முதலான இடங்களுக்கு வந்து சுகாதார முறைகளையும் கல்வி முறைகளையும் சிறிதளவு போதிக்கத் தொடங்கினுன்; மூடத்தனத்திலிருந்து ஜனங்கள் எளிதில் முன்னேறச் சம்மதித்து விடுவார்களா? அவன் சொல்வதைக் கேட்டு அவர்கள் திருந்துவது கஷ்டமாகத்தான் இருந்தது. இருப்பினும் அதைப் பொருட்படுத்தாமல் திடத்துடன் வேலை செய்து வந்தான் ராஜு.

திரும்பி வந்த கிருஷ்ணனைக் கோபாலையர் அகத்தில் எவ்விதம் வரவேற்ருர்கள்? அது தெரிய வேண்டாமா?

''ஏண்டா சொல்லிக்காமெ போனே? எங்கேதான் போனே யாம்? நன்னருக்கு!'' என்று சுப்பு சற்று அதிகாரமாகவே வரவேற்ருள்.

''நீங்க பண்றது எனக்குப் புடிச்சாத்தானே? அதுதான் போயிட்டேன். இப்பவும் நம்ம குளந்தை மகாலச்சிமித்தாயி வரச் சொல்லாட்டி வந்திருப்பேனு? மாட்டேனுங்க'' என்று பயப்படாமல் தைரியமாகப் பதில் சொன்ஞன் கிருஷ்ணன். சுப்புவுக்கு அவனை மேலும் கோபித்துக்கொள்ளப் பயமாக இருந்தது. எங்கே அவன் திரும்பிப் போய்விடுவானே என்று அஞ்சினுள். ஓடுகிறவர்களை விரட்டுகிற தைரியந்தானே சுப்புவுக்கு?

''ஆத்துக் குழந்தை தப்புப் பண்ணினு, அதுக்குக் கோவிச்சுக்கமாட்டாளா? அவளுக்கு மேலே நீ பிரமாதப் படுத்தறையே'' என்று ஒருவாறு சொல்லிவிட்டுத் தன் காரியங் களைக் கவனிக்கச் சென்ருள் சுப்பு.

''நல்லாருக்கு, கோவிச்சுக்கற அளகு! அங்கே தாயி துக்கம் தாங்காமே பிராணனையல்லா உட்டுடும் போல இருக்கு? நான் போகாட்டி இன்னும் மோசமா இருந்திருக்கும்'' என்ருன் கிருஷ்ணன்.

''ஏண்டா, மகாலக்ஷ்மி அத்தனை கஷ்டமா படரு?'' என்று சாரதா, மீனு இருவரும் அவனைக் கேட்டு மனம் வருந்தினுர் கள். அவர்களுக்கும் பொறுக்க முடியவில்லை. 'இந்த அத்தை இப்படிப் புத்தி இல்லாமே படுத்தருளே. நம்மாலும் ஒன்றும் செய்ய முடியாமல் இருக்கிறதே' என்றெல்லாம் அவர்கள் அங்கலாய்த்துக் கொண்டார்கள்.

''நல்ல காலம், கடுதாசுக்குப் பதில் போடாவிட்டாலும், அம்மாஞ்சி கிருஷ்ணனை அனுப்பி வைத்தானே'' என்கிற சமாதானத்தில் இருந்தார் கோபாலையர்.

## 37

## சிறையில் கலகம்

'நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கிறது' என்பதை மெய்ப்பித்துக்கொண்டு, கலவரப்படுத்தும் செய்தி ஒன்று அம்மாஞ்சியை எட்டியது. ஆறு மாதச் சிறைவாசம் முடிந்து தம் மகன் வந்து விடுவான்; அப்புறம் மேல் நடக்க வேண்டியவைகளைக் கவனித்துக் கொள்வோம் என்று அவர்

சமாதானமாக இருந்தபோது, அந்தக் கால வரையறைக்குள் அவன் திரும்பி வருவானு என்று சந்தேகப்படும்படியான காரியம் ஒன்று சிறையில் நடந்துவிட்டதாக அவர் கேள்விப் பட்டார். அதாவது வேலூர்ச் சிறை அதிகாரி ஒருவரை அவ்விடத்து அரசாங்கக் கைதிகளில் சிலர் அவமதித்து ஏதோ சொன்னதாகவும், அதிலிருந்து சிறு அடிதடிக் கலகம் ஒன்று ஜெயிலுக்குள் நிகழ்ந்துவிட்டதாகவும், அதற்குப் பொறுப் பாளியாகச் சில காங்கிரஸ் இளந்தொண்டர்களைப் புரட்சிக் கட்சியில் சேர்ந்தவர்கள் என்பதாக அரசாங்கத்தார் தீர் மானித்து விசாரணை ஏதும் இல்லாமல், கடுங்காவலும் கால வரையற்ற சிறைவாசமும், அத்துடன் சிறைமாற்றலும் சிட்சை யாக விதித்திருப்பதாகவும் செய்தி கிடைத்ததுடன், நாராயணனையும் அதில் சம்பந்தப்படுத்தியிருப்பதாகவும் கேள்விப்பட்டார்.

அம்மாஞ்சியை இந்தச் சமாசாரம் மிகவும் கலவரப் படுத்திவிட்டது. சாதாரண ராஜத்துரோகமாக இது கருதப் படமாட்டாது. பெரிய குற்றமாகிச் சிறையிலிருந்து மீளுவதே சிரமமாகப் போய்விடும். மீண்டாலும் பிறகு கட்டும் காவலும் அவன் சுதந்தரத்தை அடியோடு குலைத்து, வாழ்வையே பாழ் பண்ணிவிடும். இவற்றை நினைத்து அவர் பெரிதும் கவலை அடைந்தார். விஷயம், அவர் பகிரங்கமாகத் தலையிட்டுச் செய்யக் கூடியதாகவும் இல்லை. அவர் உத்தியோகத்தன்மை, தம் மகன் என்பதற்காக வெளிப்படையாக விசாரித்து, முழு விவரமும் தெரிந்து ஏதாவது சிபாரிசுகள் பிடித்துச் செய்யவும் முடியாமல் இருந்தது. காதுக்கு எட்டின சங்கதி எந்த மட்டில் உண்மை என்பதைக்கூட அவரால் உட்புகுந்து விசாரிக்க முடியவில்லை. சிறையில் கலவரம் நடந்தது என்றமட்டில் லேசாக எங்கோ தினசரிப் பத்திரிகையின் ஒரு மூலையில் கண்டிருந்தது. அதற்கு மேல் ஒன்றும் விவரம் அதில் இல்லை. இது மாதிரியான விஷயங்களுக்குப் பிரதானம் கொடுத்துக் கொட்டை எழுத்துக்களில் பிரசுரித்துப் பரவ விடக்கூடா தென்பது சர்க்காரின் நோக்கம்.

தர்மராஜுவின் உதவியை இம்முறை அம்மாஞ்சி தாமாகவே நாடினார். அவன் வேலூருக்கே சென்று விசாரித்து வரட்டுமென்று நினைத்தார். வீண் சந்தேகங்களுக்கு இடமாகும் படி போலீஸ் மூலமாக விசாரித்துக்கொண் டிருக்க அவர்

விரும்பவில்லை. தர்மராஜு கிராம ஊழியத்துக்கு ஆட்கள் சேகரிக்கும் வேலையில் இருந்தானுகையால், ஊரூராய்ச் சுற்றி அலையும் அவனைத் தேடிக் கண்டுபிடிக்கக் காலதாமதம் ஆயிற்று. அவனை அழைத்து வர ஆட்களை அனுப்பிவிட்டு அவன் வரவுக்காகக் காத்திருந்தார் அம்மாஞ்சி. கலங்காத திடசித்தம் படைத்த அவரே அமைதியை இழந்து தவித்துப்போனு ரென்றால், தர்மாம்பாளைப்பற்றிக் கேட்க வேண்டுமா? தாய்க்குள்ள இயற்கையான பாசத்தால் அவள் எண்ணுததை யெல்லாம் எண்ணி நெஞ்சம் புண்ணுனுள். பிள்ளையை முதலிலேயே கண்டிக்காமல் இதுமாதிரி தேச சேவைப் பித்துப் பிடிக்கும்படி விட்ட கணவரின் பேரில் தாங்காத கோபம் ஒரு புறமும், அவர் மகனுக்காகத் தவிப்பது கண்டு அநுதாபம் ஒரு புறமுமாக அவளை வாட்டி எடுத்தன. மகாலக்ஷ்மியைப் பார்க்குந்தோறும், 'இந்தப் பெண்ணுக்குத்தான் என்ன துரதிருஷ்டம்! முதல் முதலாகப் பரீட்சைகள் தேறிவரும் அவனைப் படிப்பை நிறுத்திச் சிறைக்குப் போக வைத்திருக்கிறதே. அது போதாதென்று மேலும் சங்கடமான நிலைக்குக் கொண்டுவந்து விட்டிருக்கிறது. பிறந்த வீட்டில் நாதிதான் இல்லையென்றாலும் புகுந்த வீட்டில் புருஷனை நேராக வைத்துக் கொள்ளாதோ ஒரு பெண்? இதன் துர்ப்பாக்கியத்தை என்ன வென்று சொல்லுகிறது!' என்று மகாலக்ஷ்மியிடம் சொல்ல முடியாத வெறுப்புத் தோன்றியது. அவளைப் பார்க்கவே பிடிக்கவில்லை.

'உசிரோடே பிள்ளையைக் கண்ணுல் பார்க்கப் போறேனு? என் பெத்த வயிறு நல்ல வயிருக இருக்குமா? இந்த மீனுட்சியம்மன் என்னதான் நினைச்சிருக்காள்?' என்று புலம்பிப் புழுவாய்த் துடித்துப் போனுள்.

தர்மாம்பாள் இப்படி இருந்தால் மகாலக்ஷ்மியின் நிலையை என்னவென்று சொல்லுகிறது? துக்கத்தைக் குறிக்கும் வார்த்தைகள் அவள் மனக் கஷ்டத்தை எடுத்துக் காட்டப் போதுமானவையாகத் தோன்றவில்லை. தன் செல்வம் முழுதும் ஏற்றியிருந்த கப்பல் முழுகிவிடுமா என்ன என்றுதான் அவள் ஏங்கிப் போகலானுள். அவள் பொறுமையின் சோதனைக்கு எல்லை இல்லையா? பிறந்த வீட்டாரின் பகிஷ்காரம், புக்ககத்தில் மாமியாரின் கொடுமைகள் இவைகளைத் தான் இனிமேல் அடையப்போகும் வாழ்க்கை இன்பத்தில் ஈடு செய்துகொள்ள

எண்ணியல்லவா அவள் ஒருவாறு பொறுத்து வருகிருள்? தான் படித்திருக்கும் புத்தகங்களில் உள்ள கதாநாயகிகளோடு தன்னையும் சேர்த்துக் கொண்டு முடிவில் வற்ருத இன்பப் பெருக்கை எதிர்பார்த்து நடுவில் ஏற்பட்டிருக்கும் இன்னல்களை எளிதாகத் தாங்கிவிட நினைத்தாள் அவள். வெயிலில் சென்ற வருக்கே நிழல் அருமை தெரியுமென்று, கஷ்டங்களுக்குப் பின் கிடைக்கும் சுகத்தைப் பெரிதுபண்ணிச் சொல்லுகிருர்கள் கவிகள். அந்தக் கூற்றை உண்மையென அப்படியே நம்பி அவள் சுகத்தை எல்லையில்லாமல் அநுபவிக்கலாமென்ற நினைவினுல் துக்கங்களை ஏற்று, வரப்போகிற நன்மைகளுக்குத் தன்னைத் தயாராக்கிக்கொண் டிருந்தாள். கணவன் சிறையி னின்றும் வந்து தாய்நாட்டின் மகத்தான சேவகனுக விளங்கப் போவதையும், அவனைப் பின்பற்றி எல்லா வகையிலும் அவனுக்கு உகந்த மனைவியாகத் தான் இருக்கப் போவதையும், தங்கள் இருவரையும் பார்த்து ஜனங்கள் புகழ்ந்து கொண்டாடப் போவதையும்பற்றி அவள் கட்டியிருந்த ஆகாசக் கோட்டைகள் கொஞ்சமா? அவை அவ்வளவும் ஒரு நொடிப் பொழுதில் தகர்ந்து தவிடுபொடி யாகிவிட்டனவே!

அவனை வருஷக்கணக்கில் சிறையிலேயே அடைத்து வைத்துக்கொள்ளுவார்களோ? இப்போதே அவன் உடல்நலம் குன்றி இருப்பதாகக் கிருஷ்ணன் தர்மராஜு இருவரும் சொன்னுர்களே. மேலும் அங்கேயே இருந்தால் உடல்நிலை மோசமாகி மரணமே நேர்ந்துவிட்டால்? அவ்விதம் நம் நாட்டுத் தலைவர்கள் சிலர், சிறைவாசத்தில் கிடைக்கக்கூடிய சௌகரியங்கள் முழுதும் கிடைத்துங்கூட இறந்து போக வில்லையா? அவனுக்குச் சிறையில் கடுங்காவல் வேறு என்றுல் அவன் உடல் தாங்குமா? அம்மாஞ்சியே தவித்துப் போகிருரே! இவைகளையெல்லாம் எண்ணித்தானு? அவனுக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால் அவள் கதி என்ன ஆவது? அவளை அவன் மறந்தே போனுனு? அவள் நினைவு அவனுக்கு இருந்திருந்தால் இவ்வாறு புரட்சிகரமான காரியத்தில் சேருவானு? அதனுல் வரக்கூடியது அவனுக்குத் தெரியாதா?

கதைகளில் வேண்டுமானுல் எத்தனை கஷ்டங்களுக்கும் முடிவில் விமோசனம் ஏற்பட்டுச் சௌக்கியமாக வாழ்வதாகக் கதாசிரியர்கள் எழுதிவிடுகிருர்கள். வாழ்க்கையில் உண்மையில் அவ்விதம் நடக்குமென்று எதிர்பார்க்க முடியுமா? அந்தக்

கதாநாயகிகளில் ஒருத்தியாக அவள் தன்னை நினைத்துக்கொண்டு மகிழ்ந்திருப்பது எவ்வளவு மதியீனம்?

'சீதை பர்த்தாவைப் பிரிந்து கஷ்டப்படவில்லையா? அவளை விடவா நாம்?' என்றெல்லாம் சீதையுடன் சேர்ந்துகொண்டு பெருமை கொண்டோமே! சீதையாவது வனத்தில் கொஞ்ச காலம் ராமனுடன் தனித்து இன்புற்றிருந்தாள். நாம் அப்படியும் கணவனுடன் அதிக நாள் இருக்கவில்லையே! நினைவு தெரிந்து அவருடன் சந்தோஷப்பட்ட நாட்கள் விரலை விட்டு எண்ணக்கூடிய அளவுக்குள்தானே இருக்கும்?'

அந்த நாட்களைக்கூடச் சங்கோசமும் வெட்கமும் முழுதும் அநுபவிக்கவிடாமல் தடுத்துவிட்டன. எங்கே பிறர் பார்த்து விடுவார்களோ என்கிற கவலையில் அவனுடன் பேசவே அவள் வெட்கப்பட்டு அதனால் அவனுக்குக் கோபம் வரும்படிகூடச் செய்திருக்கிறாள். மறுபடியும் அவனுடன் சேர்ந்திருக்கும் நாட்கள் கிடைக்குமா என்று இப்போது ஏங்கும்படி ஆகி விட்டதே. இது தெரிந்திருந்தால் அவள் யாரையாவது லட்சியம் செய்து வீணுக்கு வெட்கப்பட்டிருப்பாளா? 'நான் சீக்கிரம் திரும்பி வந்துவிடுவேன். பிறகு நாம் மிகவும் சந்தோஷமாக இருக்கப் போகிறோம்' என்று இப்போதுதானே கிருஷ்ணனிடம் அவளுக்குச் சொல்லியனுப்பி இருக்கிறான் நாராயணன்? அதற்குள் என்ன நேர்ந்துவிட்டது? - இவ்வாறு அவள் பலவாறு நினைத்துப் பார்த்து வருந்தினாள்.

'நான் எனக்கு வந்த சிரமத்தை வேண்டிய அளவு பெரிதாக நினையாமல் குறைவாகக் கஷ்டப்பட்டதற்குத்தான் சாமி தண்டனையாக மேல்கொண்டு கஷ்டத்தை எனக்குக் கொடுத்து விட்டார்' என்று அவள் அந்த ஈசுவரன் தன் துன்பத்துக்கு ஏதோ ஓர் அளவு வைத்திருக்க வேண்டும் போலவும், அது குறைந்துவிட்டதாக எண்ணி மேலும் அதிகம் கொடுத்து விட்டாற் போலவும் எண்ணத் தொடங்கினாள். ஈசுவரனாவா இன்பத்தையும் துன்பத்தையும் ஒவ்வொருவருக்கும் பார்த்துப் பங்கிட்டுக் கொடுக்கிறார்? அப்படி அவர் செய்பவராக இருந்தால் மக்களிடத்து அன்புகொண்ட தயாபரரான அவர் யாருக்குமே துன்பம் கொடுக்கமாட்டாரன்றோ?

பாவம், பேதைப் பெண் தன் கஷ்டங்களுக்குத் தன்னைத் தான் குறை கூறிக்கொள்ளத் தோன்றிற்று. நாராயணன் சிறை சென்றதற்கு வேணுமென்கிற அளவு தான் வருந்தவில்லை;

அதில் ஏதோ அவனுக்கு உயர்வு கிட்டப்போகிறது என்கிற எண்ணம், அவளுக்கு நியாயமாக ஏற்படவேண்டிய வருத்தத்தைக் குறைத்துவிட்டது. அதன் பலன்தான் இது. - இப்படி எண்ணினாள்.

'கஷ்டத்தை அதற்கு உகந்த சிரமத்தோடு ஏற்கவேண்டும். அப்போதுதான் அது மேலும் மேலும் விருத்தியாகாது. சீதைகூட வனவாசத்தை மனமுவந்து விநயத்தோடு ஏற்றதனால்தான், ராவணனது அசோகவனத்தில் பர்த்தாவைப் பிரிந்து கஷ்டப்பட நேர்ந்தது' என்று அவளுக்குத் தோன்றியது. 'சீதைக்கு ஒரு விடிவுகாலம் வந்ததே! அதுமாதிரி நமக்கும் விடியாதா?' என்றுதான் அவள் சதா தன் மனத்தோடு கேட்டு வந்தாள்.

தர்மராஜு வந்து சமாசாரம் கேட்டபோது பெரிதும் அதிர்ச்சி அடைந்தான். "இப்படியும் இருக்குமா?" என்று அவன் மனம் பெரும் போராட்டத்தில் சுழன்றது. "நாராயணன் புரட்சிகரமான காரியங்களில் சேருவானென்று எனக்குத் தோன்றவில்லை. காந்தியடிகளின் சாத்துவிகப் போரில்தானே அவனுக்குத் திடமான நம்பிக்கை? மாறிக் கிளம்புகிறவர்களை அவன் வெறுக்கிறவனாயிற்றே. அப்படியிருக்க, அவனே பலாத்காரக் கட்சியில் சேர்வானா? சர்க்கார் ஒருவேளை தவறாக வேறு ஒருவர் செய்ததை இவன் செய்ததாகக் கொண்டு விட்டார்களோ? இல்லை, ஒருவேளை இவனது ஆவேசப் பேச்சு, தவறாக நினைக்க இடம் கொடுத்துவிட்டதோ? அப்படியும் கலவரம் நடத்தும் சுபாவமுள்ள வேறு கைதிகள் ஜெயிலில் யாரும் இல்லையே. உயர்ந்த பொழுதாக அல்லவா அவர்கள் கழித்து வருவதாகச் சொன்னான்?" - இவ்விதமெல்லாம் அவன் அம்மாஞ்சியிடம் எவ்வளவோ பேசினான். ஆனாலும் ஒரு முடிவுக்கும் வர முடியாதவனாக இருந்தான்.

அவன் வேலூருக்கே சென்றான். சிறை அதிகாரிகளிடமே மெல்ல விசாரித்துப் பார்த்தும் முழுவிவரமும் தெரிந்துகொள்ள முடியவில்லை. பார்க்க வருகிறவர்களை முன்போல் தாராளமாக அவர்கள் அநுமதிக்கவில்லை. கண்டிப்பு அதிகமாக இருந்தது. அவன் சில நாள் அவ்விடமே தங்கி, விடாது விசாரணை நடத்தியதில், நாராயணன் அங்கேதான் இருக்கிறான் என்பது மாத்திரம் தெரியவந்தது. அவனையும் புரட்சிக்காரர்களோடு சேர்த்திருக்கிறார்களா இல்லையா என்பது தெரியாவிட்டாலும், அவன் அங்கேயே இருப்பதால் அவர்களோடு சேர்த்திருக்க

மாட்டார்கள் என்று ஊகிக்கவேண்டியிருந்தது. அந்த நம்பிக்கையோடு அவன் ஊர் திரும்பினன். அம்மாஞ்சியிடம் தான் அறிந்தவைகளைச் சொல்லவே அவரும் அவனைப்போலவே நம்பினர். ஏனெனில் புரட்சிக்குக் காரணமாக இருந்தவர்கள் என்று அவர்கள் நினைத்தவர்கள் எல்லோரையும் வேறு சிறைச் சாலைக்கு மாற்றிவிட்டதாக நம்பும்படியான செய்தி கிடைத்திருந்தது அவருக்கு. 'இவன் எப்போது அங்கேயே இருக்கிருனே, அப்போது இவனை அவர்களோடு சேர்க்கவில்லை என்று ஆகிறதல்லவா?' என்று ஒருவகையான சமாதானந்தான் கிடைத்தது அவர்களுக்கு.

''ஏண்டாப்பா, போனையே, நாராயணனைப் பாத்தியா? இன்னும் கடுமையாகத் தண்டனை விதிச்சிருக்காளா? எப்பத் தான் வருவன்?'' என்றெல்லாம் தர்மாம்பாள் மட்டுந்தான் ஆவலாய்க் கேட்டாள் என்பது இல்லை; மகாலக்ஷ்மியும் அந்தக் கேள்விகளையும் அதற்கு மேலாகவும் கேட்பதுபோல் இருந்தது. அவனை அவள் பார்த்த பார்வை.

''கவலைப்படாதீர்கள், அம்மா; அவனைப் பார்க்க முடியவில்லை. இருந்தாலும் சௌக்கியமாக இருக்கிருனென்று தெரிந்தது'' என்று அவர்கள் இருவருக்கும் பொதுவாகச் சமாதானம் சொன்னன்.

''அப்போது போனையே, பார்த்தையே; இப்போ பார்க்க முடியலையா? இன்னும் கண்டிப்பா வச்சூட்டாளா? ஆறு மாசம் முடியப்போறதே; ஆ ச் சு. வ ர ணு மே, அதில்லேன்னு ஆயுடுத்தா?'' என்று அவள் பயந்துபோய்க் கேட்டபோது தர்மராஜுவுக்குச் சந்தேகமாகச் சொல்ல மனம் வரவில்லை.

''அதெல்லாம் ஒன்றுமில்லை அம்மா. பேஷாகத் திரும்பி வருவான். நீங்களும் சந்தோஷம் தாங்காமல் படப்போறேள்'' என்று தாட்டியாகக் கூறினன். அவன் மனச் சந்தேகம் தெளியாவிட்டாலும், அந்தத் தாயின் சோகத்தவிப்பு, அந்த மனைவியின் ஏக்கம் இரண்டும் சேர்ந்து, அவன் வாயில் அவ்விதம் நல்ல வார்த்தைகளைத் தடையின்றி வரச் செய்தன.

## 38

## வரவேற்பு

இவர்கள் பயந்த விதம், நாராயணனைப் புரட்சிக்காரர்களோடு யாரும் சேர்க்கவில்லை. சிறையில் சிறு கலகம் நடந்தது

உண்மையே. அதனால் சிறையின் கண்டிப்பு அதிகமாயிற்று. அவ்வளவுதான். மற்றபடி யாரோ திரித்துவிட்ட கயிறுதான் நாராயணனை அதில் சேர்த்து இவர்களைப் பயப்படுத்தி வீண் பாதைக்கு உள்ளாக்கியது. நாராயணன், காலத்தில் தண்டனை தீர்ந்து வெளிவந்தான்.

தர்மராஜு ஜோசியம் தெரிந்து சொன்னமாதிரி இருந்தது. நாராயணன் சிறையினின்றும் விடுபட்டு வந்தபோது தர்மாம் பாளுக்கு உண்டான ஆனந்தம்! எந்தத் தாய்தான் பிள்ளை பெரிதாகக் கொண்டாடப்படுவதைக் கண்டு பூரிப்படையாமல் இருப்பாள்! நாராயணன் சிறை வாசம் முடிந்து மதுரை வந்த போது அவ்விடத்துக் காங்கிரஸ் தொண்டர்களிடையே அவனுக்குக் கிடைத்த வரவேற்பு பெரிதாகத்தான் இருந்தது. அவன் உத்தியோகஸ்தர் மகனாக இருந்தும், அதிலும் அடக்கு முறைகளைச் செயலிலே நடத்த உதவும் போலீஸ் அதிகாரி யொருவரின் அருமை மகனாக இருந்தும், அரசாங்கத்துக்கு விரோதமாகக் கிளம்பி, கலாசாலைப் படிப்பை விட்டுச் சிறை புகுவதென்றால் அது சாமானியமா? சாதாரண குடும்பஸ்தர் மகனாக இருந்தாலே காங்கிரசில் சேர்ந்து தடி அடி பட்டுச் சிறை செல்வதற்கு எவ்வளவோ மதிப்பு உண்டு; சாதாரணப் படிப்புள்ள மாணவனாக இருந்து கலாசாலைப் பகிஷ்காரம் செய்து தேசத்தொண்டில் ஈடுபடுவதற்கே எவ்வளவோ கௌரவம் உண்டு. இவனோ போலீஸ் உத்தியோகஸ்தர் மகன் மட்டுமல்ல; பரீக்ஷைகளில் முதல் முதலாகத் தேறுகிறவன்; தாய்நாட்டின் சேவையில் சிறை சென்றிருக்கிறான். பிறகு கேட்க வேண்டுமா?

நாராயணன் விடுதலையாகி வரப்போவது தெரிந்து காங்கிரஸ் தொண்டர்கள் சிலரும் கலாசாலை மாணவர்கள் சிலரும் ரெயிலடிக்கே சென்று பூமாலைகள் அணிவித்து வரவேற்பு அளித்தார்கள். தியாகத்தைக் கொண்டாடும்விதம் அதுதானே! மேலும் தங்களூரில் பிறந்து வளர்ந்து, தங்கள் பள்ளியில் வித்தை பயின்ற அவன், பொதுச் சேவையில் சிறை சென்று திரும்பி வருகிறானென்றால், அது அவர்களுக்குச் சொந்தப் பெருமையல்லவா?

பிள்ளையைக் காண அவளுக்கு இருந்த அதிக ஆவலில் தர்மாம்பாள் அவனை எதிர்கொண்டு ரெயிலடிக்கே சென்று விட்டாள். அங்கே வந்திருந்தவர்களையும், அவர்கள் அவனை வரவேற்கச் செய்த ஆர்ப்பாட்டத்தையும் கண்டு ஒருவகைத்

திகைப்பும் மகிழ்ச்சியும் ஒருங்கே கொண்டாள். 'இவ்வளவு தடபுடலும் நம் மகனுக்கா!' என்று அவள் பெற்ற மனம் இந்த ஆறு மாதமாகப் பட்ட கவலைகளையும், அதிலும் ஒரு மாதமாகத் தவித்த தவிப்பையும் மறந்து இன்ப சாகரத்தில் மூழ்கியது. அவள் கணவருக்கு, ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு மாற்றலாகிப் போகும்போதும் வரும்போதும் அந்த அந்த ஊர்களில் உபசாரங்கள் பலமாக நடப்பதுண்டு; அவள் பார்த்திருக்கிறாள். அவைகள் உத்தியோக ஹோதாவில் ஏற்படும் கௌரவங்கள்; அந்த அந்த இடத்து உத்தியோகஸ்தர்கள் ஒன்றுகூடி நடத்துவது. அதில் ஒரு கடமை உணர்ச்சி இருக்கிறது. இது அப்படியல்லவே. ஜனங்கள் அவர்களுக்காகவே எழும் ஆர்வத்தில் நடத்துவதல்லவா? இதற்கு மதிப்பே வேறு.

அவளுக்குத் தன் மகன் ஒரு விநாடி காந்தி மகானாகவே காட்சியளித்தான். தன் கணவர் மகனின் இந்தப் பெருமைகளைப் பாராமல் வீட்டில் நின்றுவிட்டாரே என்று இருந்தது அவளுக்கு. அவர் எப்படிப் பார்ப்பார்? அவர் உத்தியோகக் கடமைகளுக்கு விரோதமான செய்கையாகாதா அது? போலீஸ் அதிகாரத்தில் கூட்டம் கூடும் இடத்தைக் கண்காணிக்க வேண்டுமானால் அவர் போகலாம். அவ்விதம் செல்ல அவருக்குப் பிரியமில்லை. பிள்ளையின் தேசீய உணர்ச்சியைத் தடுத்து அவர் ஒன்றும் சொல்லவில்லை; அவன் மனப் போக்குப்படி செல்ல விட்டிருந்தார். ஆனாலும் அவனது இப்போதைச் செய்கை அவரை இரண்டுங்கெட்டான் நிலைமையில் வைத்து விட்டது; அவரைத் தம் போன்ற உத்தியோகஸ்தர் மத்தியில் தலைதூக்கி நடக்கவொட்டாமல் செய்தது; பகிரங்கமாக அவனை ஏற்றுக்கொள்வது அவருக்குச் சாத்தியமாகாமல் இருந்தது. ஆறு மாதச் சிறை வாழ்க்கை வாழ்ந்த மகன் எப்படி இருக்கிறான் என்று பார்க்கத் தர்மாம்பாளுக்கு மேலே அவருக்கு ஆவல் துடித்தும், எல்லோரும் அறிய ரெயிலடிக்கே சென்று அவனை வரவேற்க அவர் உத்தியோகக் கடமை இடம் கொடுக்கவில்லை. அவன் அகத்துக்கு வரட்டுமென்று அவன் வரவை எதிர்பார்த்து வீட்டில் காத்திருந்தார்.

இப்போது மகாலக்ஷ்மி என்ன செய்தாள்? மாமியாருடன் செல்ல அவளுக்கு ஏதாவது தடையுண்டா? அவளும் ரெயிலடியில் அவனுக்குக் கிடைத்த வரவேற்பு வைபவத்தை உவகை பொங்கப் பார்த்து நின்றாள்.

நாராயணன் தனக்கு வந்த பூமாலைகளை ஏற்று, அவர்கள் அன்பு வரவேற்புக்காக மனமார்ந்த வந்தனத்தை அளித்து, ''நான் ஒன்றும் பெரிதான தியாகம் செய்துவிடவில்லை, நீங்கள் இப்படிக் கொண்டாடுவதற்கு'' என்று தன் மனத்தில் வாஸ்தவமாகவே பட்டதைப் பணிவாகக் கூறி விடைபெற்றுக்கொண்டு தள்ளி நின்ற தாயையும் மனைவியையும் நோக்கி விரைந்து வந்தான். அவ்வளவு பேரும் பார்த்திருக்கும்போது, அவர்கள் கொண்டாடும் அவன், தங்களிடம் விரைந்து வந்தது அந்தத் தாய்க்கும் மனைவிக்கும் எவ்வித உணர்ச்சிப் பெருக்கைத்தான் அடைவித்திராது! அதை எப்படித்தான் எடுத்துச் சொல்லுகிறது!

''அம்மா, நீ எதற்காக இந்தக் கூட்டத்தில் வந்தாய்? நான் வீட்டுக்குத்தானே வரப்போகிறேன்?'' என்று சொல்லி அன்னையை ஒரு கையால் அணைத்தும் இன்னொரு கையால் சற்று ஒதுங்கி நிற்கும் மகாலக்ஷ்மியின் கரத்தைப் பற்றியும், ''வாருங்கள், போவோம். அப்பா அகத்தில் இருக்கிறாரா?'' என்று கேட்டுக்கொண்டே அவன் அவர்களுடன் தங்களுக்காகக் காத்திருந்த காரில் ஏறிக்கொண்டான்.

இதுவரையிலும் பொறுமையாகச் சற்று விலகி, ஒரு சிறு கிராமத் தொண்டர்கள் கூட்டத்தின் மத்தியில் நின்றிருந்த தர்மராஜு வண்டி புறப்பட்டுவிடும் என்பதை உணர்ந்து, விரைந்து கிட்டச் சென்றான். கொண்டு வந்திருந்த புஷ்ப மாலையையும் வண்டிக்குள் கையை நீட்டி அவன் கழுத்தில் அணிந்தான.

''தர்மராஜுவா! நீ கூடவா எனக்குப் பூமாலை போடுகிறாய்? இதென்னடா அசட்டுத்தனம்!'' என்று நாராயணன் வியப்போடு சொன்னான்.

''இது வெறும் வரவேற்பு மாலையல்ல. உன்னை எங்கள் சங்கத்துக்குத் தலைவனாக வரிக்கும் மாலையாக்கும். நீ அகத்துக்குப் போ. நான் இவர்களுடன் அங்கே வந்து எங்கள் திட்டத்தையெல்லாம் சொல்லுகிறேன்'' என்று அவனுக்கு விடைகொடுத்து அனுப்பினான். அவன் இந்த இரண்டு மாதமாக அங்குமிங்கும் அலைந்து, சிறு கிராமப் புனருத்தாரண சங்கம் ஒன்றை ஏற்படுத்தி, அது செய்ய வேண்டிய வேலைகளுக்கும் திட்டம் போட்டுத் தயாரித்திருந்தான். ராமனுக்காகப் பாதுகையை ஏற்று ராஜ்யபாரத்தை வகித்த பரதனைப் போல், இவைகளைச் செய்து வைத்துக்கொண்டு, நாராயணன்

வரவும் அவனிடம் தலைமைப் பதவியை அளித்துவிட்டு அவன் கீழ் வேலை செய்யத் தயாராக இருந்தான். இனிமேல் அவர்கள் சட்ட கலாசாலை செல்லப் போவதில்லை. படிப்பை நிறுத்தி விட்டுப் பொதுச் சேவையில் இறங்கக் காலம் வந்துவிட்டது. அவர்கள் பணம் சம்பாதித்து என்ன ஆகவேண்டும்? இருக்கிறதை வைத்துக்கொண்டு பொதுத் தொண்டில் ஈடுபடவேண்டியது தான். இதுமாதிரி முடிவுக்கு வந்திருந்தான் தர்மராஜு; நாராயணனும் அதுவேதான் நினைப்பான் என்பது அவன் நம்பிக்கை.

அது சரியாக இருந்தது. நாராயணனிடத்தில் எல்லாவற்றையும் சொன்னபோது அவன் ஒரு நொடியில் அவ்வளவையும் ஏற்றுக்கொண்டுவிட்டான். ''நான் என்ன தலைமை வகிப்பது? இவ்வளவு செய்திருப்பவன் நீ. நீயே இரு. நான் உனக்கு உதவியாக இருக்கிறேன்'' என்று சொன்னதற்கு, தர்மராஜு ஒப்புக்கொள்ளவில்லை.

''உனக்குத்தான் தலைமைப் பதவிக்குத் தேவையான பேச்சுத்திறனும், பணிந்து நடக்கச் செய்யக்கூடிய கம்பீரத் தோற்றமும் பொருந்தியிருக்கின்றன. நாம் எடுத்துக்கொண்ட காரியம் தடையின்றி விருத்தியடைய வேண்டுமானால், உன் போன்றவர்தாம் அதை ஏற்று நடத்த வேண்டும். நான் பரீக்ஷைகளில் இரண்டாவதாக உனக்குப் பின்தானே இருந்து வந்திருக்கிறேன்? அதுபோல் இதிலும் உன் பின்னேயே இருந்து விடுகிறது என்று தீர்மானித்துவிட்டேன்'' என்று கண்டிப்பாகக் கூறிவிட்டான். அதன்படி அவர்கள் வேலை செய்வதென்று ஏற்பாடு செய்துகொண்டார்கள்.

அவன் தந்தை அவனைப் பார்க்கவும், ''உடம்பு ஏண்டா இப்படி இளைத்துப் போயிருக்கிறது?'' என்றுதான் கேட்டார். அவன் தாய்க்கும் அவன் உடம்பு போயிருக்கிற போக்கைக் காணச் சகிக்காமல்தான் இருந்தது.

''நடுவில் காய்ச்சலாகப் படுத்துக்கொண்டு விட்டேனே இல்லையோ அப்பா? அதுதான்; வேறொன்றும் இல்லை'' என்று சொல்லிவிட்டு, ''அம்மா, ஞானம் சௌக்கியமாக இருக்கிறாளா? அவள் இங்கே வரவில்லையா?'' என்று கேட்டான்.

''போருமே. அந்த வயிற்றெரிச்சலைக் கிளப்பாதே. நீ வந்த சந்தோஷத்தில் நான் அதை மறந்திருக்கிறேன்'' என்றாள் தர்மாம்பாள்.

"அவளுக்கு என்னம்மா அப்படி?" என்று பதறிப்போய்க் கேட்டான் நாராயணன்.

"பெண்ணைப் பெற்று அருமையாக வளர்த்து, அவர்களுக்குத் தத்தம் செய்தாச்சு. வேறெண்ணும் இல்லே. நமக்கும் அவளுக்கும் சம்பந்தம் இருக்கிறதாகத் தெரியவில்லே. அவள் நம்மகத்துக்கு வரதே இல்லே" என்றாள் தர்மாம்பாள்.

"எதுக்காக வராமே இருக்காள்?" என்றான் நாராயணன்.

"ஏனா, அவ மாமியாருக்கு உடம்பு சரியாக இல்லே. அவளுக்குச் செய்வதற்கு இவள்தான் வேலேக்காரி அவாத்துலே. அந்தம்மா உடம்புந்தான் என்ன உடம்போ? அதிசயமாயிருக்கு! கண்ணுக்குக் காட்டப் புண்ணில்லேம்பாளே, அது மாதிரிதான் இருக்கு. நித்தியகண்டம் பூர்ணயுசாப் படுத்திண்டிருக்கா. எனக்கு ஒண்ணுதான் இருக்கலாம்னு தோன்றுகிறது. அந்தஸ்து இருக்கு, ஆம்படையானும் பிள்ளேயும் ஏனோதானோன்னு இல்லாமே வேண்டியது செய்யரு. சுசுரூஷைக்கு நாட்டுப் பெண்ணுச்சு. பணமிருக்கு வைத்தியனுக்குக் கொடுக்க. இதுகளுக்குத்தான் பாசாங்கு செய்துண்டு படுத்திண்டிருக்காளோன்னுகூட. நீ ஜெயிலுக்குப் போனப்புறம் எங்களேக் கண்ணுலே பார்க்கக்கூட அவாளுக்குப் பயமாயிருக்கும்போல் இருக்கு. அவர் ஸப் ஜட்ஜ் உத்தியோகத்தை எவனுவது பிடுங்கிவிடுவானோ என்கிறதோ என்னமோ?" என்று பெரிதாக வயிற்றெரிச்சலேக் கொட்டி அடுக்கினாள் தர்மாம்பாள்.

"அம்மா, நாளேக்கு ராஜ்யமே காங்கிரஸ்காரர்களிடம் வரப் போகிறதே! அப்போது என்ன செய்வாளாம்? பிரிட்டிஷ் கட்சியாக இருந்ததற்கு இவர்களுக்குத்தான் ஒன்றும் நல்லது கிடைக்காமல் போனாலும் போகும்" என்றான் நாராயணன்.

"எதுவோ, உங்கப்பா பேசாமே இருக்கார். இந்தப் பெண்ணும் அவா கீறின கோட்டைத் தாண்டாமே இருக்கு. வந்து போனா என்ன சிரசாக்கினை பண்ணிப் புடுவாளாம்? நான் எது சொன்னாலும் அப்பாவும் பெண்ணும் எனக்கு ஒண்ணும் தெரியாதூன்னு அதட்டி அடக்கிப்பிடுகிறார்கள்" என்று குறை கூறினாள் தர்மாம்பாள்.

"நமது குழந்தைகளுக்காவது அவர்கள் சௌகரியம்போல் இருக்க நாம் சுதந்தரம் கொடுக்க வேண்டாமா? நாட்டுக்குச் சுதந்தரம் வேண்டுமென்று அடித்துக்கொள்ளுகிற நம் வீட்டில் நமது பெண்கள் பிள்ளேகளுக்காவது அவர்கள் இஷ்டப்படி

நடக்க இடம் கொடுப்போமே'' என்றார் அம்மாஞ்சி. அவர் எந்த எண்ணத்தின் பேரில், தான் தன் போக்கில் காங்கிரசில் சேர்ந்து நடப்பதற்கு ஒரு வார்த்தை விரோதமாகச் சொல்லாமல் இருக்கிறார் என்பதை இப்போது நாராயணன் தெரிந்துகொண்டான். அதற்காகத் தனக்குள்ளேயே அவருக்கு வந்தனமும் அளித்துக்கொண்டான்.

''ஆமாம், நம்மைப் பார்க்கவேண்டாம் என்கிறதுதான் அவள் இஷ்டமாக்கும்?'' என்றாள் தர்மாம்பாள்.

''இஷ்டமென்று யார் சொல்லுகிறார்கள்? முடியவில்லை என்று தெரிகிறது. அதற்கு நாம் வேறு அவளைக் குற்றம் கூறலாமா? அதுதான் நான் சொல்லுகிறது. நம்மிடமாவது அவள் சௌகரியம்போல் கவலையற்று நடந்துகொள்ளட்டுமே. நம்மை அவள் எவ்வளவு நாள் பார்க்காமல் இருந்தாலும் நாம் குற்றம் சொல்லமாட்டோம் என்கிற தெம்பாவது அவளுக்கு நிறைய இருக்கட்டுமே. நம்முடைய அனுதாபம் நிறைய இருக்கிறது என்கிற நிம்மதியும் இல்லாமல் போகும்படி நாம் வேறு எதற்காகத் தவறு சொல்லி வருத்துகிறது? நமக்காவது அதுமாதிரி செய்வதில் ஏதாவது திருப்தி ஏற்படுகிறதா?'' என்று மனைவியைக் கடிந்துகொண்டார் அம்மாஞ்சி.

'எல்லாம் கையாலாகாத்தனம். அதில் வருகிற நியாயங்கள் இவை' என்று தர்மாம்பாள் சந்தேகமற நினைத்தாலும், நாம் வேறு தலையிட்டு அதை இதைக் கூறி மக்கள் மனத்தைத் துன்புறுத்தக் கூடாதென்பது அம்மாஞ்சியின் கொள்கை. நமது உதவியை அவர்கள் நாடினாலன்றி நாமாக அவர்கள் வாழ்க்கையில் நுழைந்து நமக்குப் படுகிறபடி நடந்தோ சொல்லியோ செய்வது அவர்களுக்கு மேலும் துன்பத்தையே அதிகரிக்கும் என்று அவர் திடமாக நம்பினார். அதன்படியே தான் அவர் தர்மாம்பாள் அங்கலாய்த்துக்கொள்வதற்கு ஒன்றும் செவிசாய்த்துக் காரியத்தில் கிளம்பிவிடாமல் நாட்களைக் கடத்திவந்தார்.

நாராயணன் மகாலக்ஷ்மியிடம் தனித்துப் பேசினபோது, ''இனிமேல் நாம் பிரிந்து கஷ்டப்படப் போகிறதே இல்லை, மகாலக்ஷ்மி. நான் படிப்பதற்காகக்கூடப் பட்டணம் போகப் போகிறதில்லை. நாம் இருவரும் சேர்ந்து கிராம சேவை செய்வோம். என்ன சொல்லுகிறாய்?'' என்றான்.

''நான் உங்களைப் பார்க்கத்தான் போகிறேனு என்று தவிச்சிண்டிருந்ததற்கு, சாமிதான் உங்களுக்கு இப்படித் தோணப் பண்ணி இருக்கார்'' என்றாள் மகாலக்ஷ்மி. அவனைப் பிரியாதிருப்பதற்குத்தானே அவள் ஆசைப் பட்டுக்கொண்டிருக்கிறாள்?

''நீங்கள் வீணுக்குக் கஷ்டப்பட்டிருக்கேள். அப்படியெல்லாம் நான் கண்டபடி கிளம்புவேனு? முதலில் எனக்கு இதுமாதிரி புரட்சிகரமான காரியங்களே தப்பு என்கிற எண்ணம். அதோடு உன்னைப் பாராமே, உன்னைத் தனியாகத் தவிக்க விட்டுவிட்டுப் போய்விடுவானே?'' என்றான் அவன், அவளை அன்பாக அணைத்துக்கொண்டு.

''அது சரீன்னு தோணியிருந்தா அப்போ என் நினைவு வருமா?'' என்றாள் மகாலக்ஷ்மி.

அவன் வாயினின்றும் மேலும் அவள் அன்பை ஊர்ஜிதம் செய்யும் சொற்களைக் கேட்க விரும்பி அவள் அவ்விதம் சொல்லியிருந்தால் அந்தத் திருப்தியும் அவளுக்கு உடனேயே கிடைத்தது.

''உனக்குக் கொஞ்சமும் பிடிக்காத காரியமென்று தெரிந்தால், எனக்குச் சரி என்று தோன்றினுலும் செய்ய மாட்டேனுக்கும். ஆனல் நீ மட்டும் உன் மனசில் உள்ளதை எனக்குத் தெரிவியாமலே மறைச்சு வக்சுக்கப்படாது தெரியுமா? ஆமாம்!'' என்றான் அவளைக் கண்டிக்கும் பாவனையாக.

''அப்படி நான் எப்போதெல்லாம் இருந்தேன்?'' என்று அவள் அவன் எதைச் சுட்டிச் சொல்லுகிறான் என்பது தெரியாதவள்போலக் கேட்டாள்.

''எல்லாரும் உன்னை அவதூறு சொன்னதற்கு, நீ கஷ்டப் பட்டதை யெல்லாம் எனக்குத் தெரிவியாமல்தானே மூடி வச்சிருந்தே? உடனே என்னிடம் எல்லாவற்றையும் சொல்லி யிருக்க வேண்டாமா? வீணுக்குத் துன்பப்பட்டுண்டு இருப்பாளா?'' என்றான் பரிவாக.

''சொல்லியிருந்தால் மட்டும் என்ன செய்திருப்பீர்களாம்? என் மனசு புண்பட்டு வருத்தப்படறது போராதுன்னு உங்களையும் வருந்த வச்சிருக்கணும், அவ்வளவுதானே?'' என்றாள் மகாலக்ஷ்மி.

''வருந்தறதா, எதற்கு? இவர்களுடைய பேத்தல்களுக்கா? வெகு அழகு! உன்னையும் இதையெல்லாம் லட்சியம் செய்யா

திருக்கும்படி அல்லவா சொல்லியிருப்பேன்?'' என்றான் நாராயணன்.

அப்படி அவன் சொல்லிவிட்டால் அவள் மனம் கேட்டு விடுமா? ஸ்திரீகளுக்கு இம்மாதிரி அவதூறுகளைக் கேட்பது எவ்வளவு பெரிய கஷ்டம்? அதிலும் பிறந்தகத்து மனிதர்கள் முக்கியமாக அதில் பங்கெடுத்துக்கொண் டிருக்கிறார்கள் என்றால் மனம் பொறுக்குமா?

ஆனால் அவன் அதைப் புரிந்துகொள்ளப் போவதில்லை. கிராமத்து மனிதர்களின் போக்கோ, அவன் மாமனார், அத்தை இவர்களுடைய தனி விதமோ, ஒரு பொருட்டாகத் தோன்றாத ஒருவனிடம் அவர்கள் நினைத்து நடத்துவதைப்பற்றிப் பெரிதாகச் சொல்லிப் பயன் என்ன? அவள் இருதயத்தின் ஒரு மூலையில் அது வேதனை செய்துகொண்டு கிடக்கவேண்டியது தான். அதற்கு மாற்று அவர்களிடம் இருக்கிறதேயன்றித் தன்னிடத்தில் இல்லை என்று மகாலக்ஷ்மி தனக்குள்ளேயே நினைத்துக்கொண்டாள்.

''பாவம், உங்கள் நண்பரை நினைத்துக்கொண்டால்தான் கஷ்டமாயிருக்கு. அவர் எவ்வளவோ நமக்காகப் பரிந்துசெய்ய, அவருக்குப் பேச்சுக் கேட்கத் தலையில் எழுதி யிருந்ததே; அதற்கு நாமே காரணமானோமே என்கிறதுதான் எனக்கு ரொம்ப....'' என்றாள் மகாலக்ஷ்மி.

''ஆமாம்; தர்மராஜு வெகு நல்ல குணமுடையவன். எனக்காக எது செய்யவும் தயங்கமாட்டான். 'அவனை இவர்கள் தூற்றுவதற்குச் சரியானபடி பாடம் கற்பிக்க வேண்டும்'' என்று நாராயணன் ஆத்திரம் பொங்கக் கூறினான். நண்பனுக்கு அவர்கள் செய்யும் தப்பை நினைக்க அவனுக்குக் கோபம் பொங்கி எழுந்தது.

''அவர் இவ்வளவு நல்ல சுபாவமாக இருப்பதற்கு, கல்யாணம் செய்துகொண்டு பெற்ற தாயைச் சந்தோஷப் படுத்த வேணுமென்கிற எண்ணம் இல்லாதிருக்கிறாரே'' என்று மகாலக்ஷ்மி அங்கலாய்த்துக்கொண்டாள்.

''அவர்களில் நல்ல பெண் கிடைப்பது அத்தனை துர்லபம் போலே இருக்கு'' என்று நாராயணன் மகாலக்ஷ்மியை அன்பு கனியப் பார்த்துக்கொண்டே சொல்லிவிட்டு, ''அதில் எனக்குக் கிட்டின அதிருஷ்டம் எல்லாருக்கும் கிடைக்குமா? இது மாதிரி

புத்திசாலிப் பெண்டாட்டி எளிதில் எல்லாருக்கும் கிடைத்து விடுவாளா?'' என்று அவள் கன்னத்தை லேசாகத் தட்டினன்.

''போரும், நீங்கள் என்னைப் புகழறது'' என்று மகாலக்ஷ்மி பதிலுக்குச் சொன்னாலும், அவள் அந்தப் புகழ்ச்சியில் மகிழ்ந்து பூரித்தே போனள். அவள் மனவருத்த மெல்லாம் எங்கோ சென்று மறைந்தது. அன்பு மேலிட அவன் தோளில் அப்படியே சாய்ந்தாள்.

வாஸ்தவத்தில் நாராயணனுடைய அதிருஷ்டம் வாழ்க்கையில் எல்லோருக்கும் இருக்குமா? தனக்கு முற்றும் மாருக நடந்தும் கோபித்து விலக்காத தந்தை, அன்பு அவ்வளவையும் அள்ளிக் கொடுக்கும் தாய்க்கு அருமையாக ஒரே மகன், அழகும் குணமும் ஒருங்கே அமையப் பெற்று மனங்கோணது நடக்கும் இளமனைவி, இவனை மிகப் பெரியவனுக நினைத்துக் கொண்டாடும் பிரிய சிநேகிதன் - வாழ்க்கை நலத்துக்கு இவைகளைவிட வேறு வேண்டுமா? எல்லோருக்கும் இவ்வளவும் ஒன்றுபோலப் பொருந்திக் கிடைப்பது சாத்திய மில்லைதான்.

நாராயணன் இவைகளை நினைத்துக்கொண்டபோது தன்னை விடப் பாக்கியசாலி உலகில் இல்லை என்கிற இன்ப வெள்ளத்தில் முழுகினன் என்றுதான் சொல்லவேண்டும். தேசத் தொண்டு என்றாலும், அது செய்வதற்கும் சுற்றியுள்ள சௌகரியங்கள் அமைவதற்கு அதிருஷ்டம் வேண்டுமல்லவா?

## 39

# தொண்டுக்குமேல் தொண்டு

நாராயணனும் தர்மராஜுவும் ஆரம்பித்த கிராமசேவை வேகமாக விருத்தி அடையப் பணத்தட்டுத்தான் தடையாக இருந்தது. மற்றப்படி அவர்கள் எல்லாவற்றையும் செம்மை யாக அமைத்தார்கள். எவ்வளவு நல்ல காரியமும் பணமின்றி முன்னேறுவது சாத்தியமில்லாதிருக்கிற தல்லவா? பணத்தை எவ்வளவு தாழ்வுபடுத்திக் கூறினாலும், பின்னேடு அதைத் தேடி அலையவும் வேண்டி இருக்கிறது.

காந்தி சேவாக்கிராமம் போலவே மதுரைக்குச் சமீபத்தில் ஒரு கிராமம் நிறுவ அவர்கள் ஏற்பாடு செய்தார்கள். நமது நாட்டு அபிவிருத்திக்கான கைத்தொழில்களையும் கல்வியையும் போதிப்பது என்று நிச்சயித்தார்கள். ஆடவர், பெண்டிர்

இருபாலருக்கும் அவரவர் விருப்பம்போல் வித்தையோ தொழிலோ கற்கச் சௌகரியங்கள் அமைக்க எண்ணினர்கள். அதற்கான எவ்வளவோ ஆட்களும் அவர்களுக்குத் தேவையாக இருந்தனர். பெண்டிருக்கென்று பிரத்தியேகமாகப் பெண் தொண்டர்களும் அவசியம் வேண்டியிருந்தார்கள்.

இரண்டொரு காங்கிரஸ்காரர்களின் மனைவிகளே முன் வந்தார்கள். மகாலக்ஷ்மி இப்போது எஸ். எஸ். எல். ஸி. யில் மேன்மையாகச் சொல்லும்படி தேறியிருந்தாள். அதற்குச் சந்தோஷித்ததோடு, தங்கள் சேவையில் அவளையும் சேர்த்துக் கொள்ள அவர்கள் நினைத்தார்கள்.

இவ்விதம் எல்லாம் ஏற்பாடாயிற்று. ஆனல் பணம் மட்டுந்தான் குறைவாக இருந்தது. இத்தகைய காரியங்களுக்குக் கிராமத்து மிராசுதார்களிடமிருந்து பொருள் உதவியை எதிர் பார்த்தால் நடக்குமா? சம்பாத்தியம் நிறைந்த பட்டணத்துப் பெரிய மனிதர்களோ, பெரும் பணம் படைத்த ஜமீன்தார் களோ மனசு வைத்து உதவி செய்தால்தான் உண்டு. அதற்காக நாராயணனும் தர்மராஜுவும் நெடுகிலும் அம்மாதிரி பணக் காரர்களைத் தேடி அலைந்தார்கள். பட்டணம் பட்டணமாகச் சுற்றி அலைந்ததில் அவர்களுக்குக் கொஞ்சம் கொஞ்சம் நிதி சேரத் தொடங்கிற்று. அதைக் கொண்டு சிறிய அளவில் சேவையைத் துவக்கினர்கள்.

இவ்விதம் இவர்கள் உலகத்தின் எங்கோ ஒரு சிறு மூலையில் புதிய கிராம சிருஷ்டியில் ஈடுபட்டிருக்க, மேற்கில் ஐரோப்பிய நாடுகள் துவக்கின யுத்தமானது, குண்டை வீசி இமை கொட்டும் நேரத்தில் நகரம் நகரமாக அழித்துத் தீர்த்து வந்தது. பிரிட்டிஷ் ராஜ்யத்தில் அஸ்தமிக்காத சூரியனும் அஸ்தமித்துவிடுவானே என்கிற பயம் தோன்றிற்று. மேற்கில் ஆரம்பித்த யுத்தவெறியானது தொத்துநோய்போல் பரவி, கிழக்கிலும் ஜப்பான் சண்டையைக் கிளப்பிவிட்டது. அதன் விளைவாகக் கிழக்கே பிரிட்டிஷாரிடமிருந்த நாடுகள் ஒவ்வொன்ருக அவர்களை விட்டுப் பிரியத் தொடங்கியிருந்தன. நமது இந்தியா தேசமும் கைமாறிவிடுமோ என்கிற நிலைமை ஏற்பட்டிருந்தது. இந்த நிலையில் பிரிட்டிஷாரை, 'வெளி யேறுங்கள்' என்று காந்திமகான் கேட்டுக்கொண் டிருந்தார். பிரிட்டனுடன் சேர்ந்திருப்பதில் நன்மை இல்லை என்று தோன்றிற்று. ஜப்பான் ஆளுகையின் கீழ்ச் சென்றுவிடுவோமோ

என்கிற பயம் பற்றிக்கொண்டது. பிரிட்டிஷாரிடம் இரந்து வேண்டியும் சுதந்தரம் கிடைப்பதாயில்லை. சட்டமறுப்பு இயக்கம் மும்முரமாக மறுபடியும் தேசத்தில் ஆரம்பமாயிற்று. காந்திஜி முதல் எல்லாத் தேசத் தலைவர்களும் சிறையிலே கேள்விமுறையின்றி அடைக்கப்பட்டார்கள்.

அதன் விளைவாகத் தேசம் முழுதும் அமைதியின்மை நிலவத் தொடங்கிற்று. காங்கிரசிலே புரட்சிக்கட்சி ஒன்று ஏற்பட்டுப் பிளவை உண்டுபண்ணியது. பொது உடைமைக் கட்சி ஒன்று உள்ளுக்குள் வேலை செய்து வந்தது. நகரங்களி லிருந்து தொடங்கும் எல்லாச் சீர்திருத்தங்களையும்போல் அல்லாமல் அது கிராமத்தையே ரகசியத்தில் தாக்கி நெடுகிலும் பரவி வந்தது. வைக்கோல் போருக்கு அடியில் வைத்த தீயைப்போல் உள்ளுக்குள்ளேயே படர்ந்து ஒரே ஜ்வாலையாக வெளிப்பட்டது. வேளாண்மை செய்கிறவர்கள், தாங்கள் பாடுபடுவதால் தங்களுக்கு நிலத்தில் பாதி உரிமை வேண்டு மென்று கேட்டார்கள். விளைச்சலில் சம பங்கு தராவிட்டால் பயிர் வேலை செய்யமுடியாது என்று சத்தியாகிரகம் செய்தார் கள். அவர்களுக்கு இதுமாதிரி கட்சியாடத் திடமான அடி வத்தி ஒன்று ஆடாமல் அசையாமல் வேலை செய்தது. அதுதான் ஜப்பானுக்குச் சென்றுவிட்டதாகச் சொல்லப்பட்ட நேதாஜி யைப் பின்பற்றுகிறவர்களின் செய்கை என்று பலர் சொல்லிக் கொண்டனர். அது எவ்விதம் கட்டுக்காவலைத் தாண்டி இவ்வளவு தொலைவு பிரயாணம் செய்து வந்தது என்பது யாரும் அறியாத பரம ரகசியமாக இருந்தது. அது எதுவாளு லும் அதன் பலனுக நாட்டு மக்கள் மிகுந்த கஷ்டப்படும் நிலைமையை அடைந்தார்கள். 'யுத்தத்தினுல் ஏற்படும் பஞ்சத் தைத்தான் அநுபவித்து ஆகவேண்டும் என்றுல், நாட்டிலே பயிர் செய்யாது வேலை நிறுத்தம் செய்வதால் ஏற்படக்கூடிய பஞ்சம் பின்னும் பெரிதாக இருக்குமோ?' என்று சொல்லும்படி இந்த இயக்கம் நெடுகிலும் பரவ ஆரம்பித்தது.

நாம் இங்கே தேச சரித்திரம் சொல்ல வரவில்லை. எது எப்படி இருந்தாலும் நமது கதை சம்பந்தப்பட்ட அளவில் என்ன நடந்தது என்பதுதான் நமக்கு முக்கியம். தானப் பாளையத்தில் இந்த வேலை நிறுத்தம் வெகு மும்முரமாக இருந்தது. எத்தனையோ பிற்போக்காக இருக்கும் இந்தக் கிராமம் இதில் முன்னணியில் நிற்கத் தொடங்கிற்று. அந்தச்

சுற்றுவட்டக் கிராமங்கள் எல்லாவற்றையும்விடத் தானப் பாளையத்தில்தான் மிராசுதார்களுக்கும் குடியானவர்களுக்கும் பலத்த மாறுபாடு ஏற்பட்டது. அவ்விடத்து நிலங்கள் முழுதும் பிராம்மணர்களுக்குச் சொந்தமல்லவா? ஜாதி வேற்றுமை நிலைத்து நிற்கும் இடமாக அது இவ்வளவு நாளும் இருந்து வந்திருக்கிறது. அதனால் சுற்றுவட்டக் கிராமங்களைக் காட்டிலும் இங்கேதான் சமபங்கு கேட்கும் சண்டை வலுத்து நிலைத்து நின்றது. அதோடு ஜாதிச் சண்டையும் சேர்ந்து கொண்டது. 'இந்தப் பார்ப்பனர்களுக்கு நாம் உழைத்துக் கொட்ட வேண்டுமென்று எங்கே சொல்லி இருக்கிறது?' என்று குடியானவர்கள் வைரம் கொண்டாடினார்கள். இவ்வளவு நாளும் உள்ளூறப் புகைந்து கொண்டிருந்த ஜாதித்துவேஷம் மேலோங்கி நின்றது. இவ்வளவு நாளும் தங்களைத் தாழ்மைப் படுத்தின பார்ப்பனர்களின்பேரில் வஞ்சம் தீர்த்துக்கொள்ளக் குடியானவர்கள் நினைத்தார்கள். இதிலிருந்து தப்ப வழி தெரியாமல் - பருவ மழை வந்து போயும் - சாகுபடி காலம் கடந்து போயும், அவ்வூர்ப் பிராம்மணர்கள் விழித்தார்கள். தாங்களாகவே உழுது வேலைசெய்து பார்க்கவும் பழக்கம் இல்லாததால் அவர்களால் முடியவில்லை. அப்படியும் யாராவது முயன்று பார்த்தால் குடியானவர்கள் சும்மா விடுவார்களா? மண்டையைப் பிளந்துவிட மாட்டார்களா? அந்தப் பயம் வேறு.

அவர்கள் அவ்விதம் பயமுறுத்தவும் செய்தார்கள். பட்டினியை எதிர்பார்த்துச் சும்மா இருப்பது தவிர வேறு வகை அறியாது திகைத்தனர் அவ்வூர்ப் பிராம்மணர்கள். அரசாங்க உதவியை நாடிப் பார்த்தார்கள். சர்க்காரும் போலீசை அனுப்பிப் பயமுறுத்தி ஏதேதோ செய்தார்கள். ஒன்றும் பலிக்கவில்லை. வீண் சண்டை சச்சரவுகள்தாம் முற்றின. அன்றாடம் ஏதாவது அடிதடி, போலீஸ் கோர்ட்டுக்குச் செல்வது, அதற்கு வேறு செலவு - இதுமாதிரி இருந்தது.

இவ்வளவோடு போயிற்றா? இல்லை. அடிக்கடி சர்க்கார் பார்வைக்குச் சென்றதன் பலனாகச் சர்க்கார் கண் விழித்துக் கொண்டது. இவ்வளவு நிறைய வரும்படி வருகிற கிராமம் முழுதும் கிஸ்தி இல்லாமல் எதற்காக இருப்பது என்று, இவ்வளவு வருஷங்களாகச் சர்வமான்யமாக அநுபவிக்கப்பட்டு வந்த நிலங்களுக்குக் கிஸ்தி போட்டு வரி வசூல் செய்ய முன் வந்தார்கள். எரிகிற வீட்டில் பிடுங்கினது லாபம்! எந்தக்

காலத்திலோ தானமாகக் கொடுக்கப்பட்டது என்பதைச் சொல்லிக் கதறியும் அவர்கள் காதில் வாங்கிக்கொள்ளவில்லை; கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதையாக முடிந்தது, சர்க்கார் உதவியை நாடினதன் பலன்.

அவரவர்கள் கையிருப்பில் இருந்த முன்வருஷத்திய நெல் முதலான தானியங்களும் சாப்பிட்டுத் தீர்ந்து போயின. அரிசி முதல் வாங்கிச் சாப்பிடும் நிலைமை ஏற்பட்டால், அதற்குக் கேவலம் மிராசுதார்கள் பணத்திற்கு எங்கே போவார்கள்? பசியும் பட்டினியும் அவர்கள் கண்முன்னே நின்றன. ஊழிக் காலம் கிட்டி விட்டதென்றே அவர்கள் கதி கலங்கிப்போனுர்கள்.

பெரிய மிராசுதாரான கோபாலையரிடத்தில் ஊரில் எல்லாரையும்விடக் கையிருப்புத் தான்யம் அதிகம் இருக்குமாதலால், அதனுலேயே அவர் கவலையற்று இருப்பதாக மற்றவர்கள் எண்ணினுர்கள். அதற்காக அவரை வாயில் வந்தபடி திட்டவும் திட்டினுர்கள். 'மற்றவர்கள் மடிந்து மண்ணுகப் போவது இவருக்குப் பொருட்டில்லை. எல்லோரும் கஷ்டப்படும் போது தாம்மட்டும் வாழலாமென்று நினைக்கிறுர்' என்று தனியே அவரிடத்தில் க்ஷாத்திரம் கொண்டார்கள். எது வரினும் கவலைப்படாமல் வேதாந்தியாக இருப்பது அவர் சுபாவம் என்று அவர்கள் இதுகாறும் நினைத்திருந்ததை முழுதும் மறந்து போனுர்கள். அவர் மனைவி இறந்த அன்றிலிருந்து, அவர் உலகப்பற்றே இல்லாமல், குடும்பத்தை விட்டே விலகி யோகியாக இருக்கிறுரென்று அவர்கள் சொல்லிக்கொண்டிருந்ததெல்லாம் அவர்கள் மனத்தை விட்டு எங்கோ அகன்று போயிற்று. தங்களுடன் சேர்ந்து, இப்போது நேர்ந்திருக்கும் புது விதமான சிரமத்தை விலக்க ஒரு வழியும் முயலாமல், அவர் பேசாமலே இருப்பது எல்லோருக்கும் பெரிய தவருகத் தோன்றிற்று.

பிறகு கேட்க வேண்டுமா? ஊருக்கு அவர் மிகவும் வேண்டாதவர் ஆனுர். இவ்வளவையும் அவர் தம் காதாலேயே கேட்ட பிறகுங்கூட அவர் அதைப் பொருட்படுத்துகிறவராகத் தெரியவில்லை. "இவர்கள் சரிசெய்யப் பாடு படுகிறுர்களே. அதற்கு என்ன பலன் கிடைத்திருக்கிறது? என்னுல் மட்டும் தனியே என்ன ஆகிவிடும்?" என்று சொல்லிச் சும்மா இருந்தார்.

சுப்புவுக்குத்தான் ஊராரின் வசவு கேட்கப் பொறுக்கவில்லை. கஷ்டம் எல்லோருக்கும் ஒன்றுக வந்தும் தங்களை

மட்டும் தனித்து வைத்துத் தூற்றுவது நியாயமா என்று பெரிய துக்கம் ஏற்பட்டது. பார்க்கப்போனல் கோபாலையருக்குத்தான் நஷ்டம் அதிகம். அவருக்குத்தான் நிலங்கள் அதிகம். பயிர் செய்யாததால் விளையக்கூடிய நஷ்டமும் அதிகம். ஆனல் ஊரில் ஒருவரும் அதை அந்த ரீதியில் பார்க்கிறவர்களாகத் தெரியவில்லை. அவர் குடும்பம் சம்பந்தப்பட்டவரையில் அவர் கவனியாமல் இருந்ததை, பற்றற்ற தன்மை என்று எண்ணினர்கள். இப்போது அவர்களுக்கும் சேர்ந்து பொதுவான சிரமம் ஏற்படவும், அதில் அவர் பங்குக்கு எதுவும் செய்ய முன் வராததைப் பெருத்த சுயநலமாகக் கருதித் தூஷித்தார்கள்.

சுப்புவுக்கு இவைகளையெல்லாம்பற்றி அங்கலாய்த்துப் பேசக்கூட வீட்டில் யாரும் இல்லை. சாரதா பிரசவித்துப் பிள்ளைக் குழந்தையுடன் புக்ககம் சென்றுவிட்டாள். மீன, கணவன் உத்தியோகம் பார்க்கும் இடத்தில் இருக்கிருள். பாலுவோ சின்னப் பையன். அவனிடம் இத்தகைய விஷயங்களைப்பற்றி என்ன பேசுவது? அவளுக்குச் சிறுவர்களுடன் சரிசமமாகப் பேசும் பழக்கமும் இல்லை.

நாணம்மாள் அப்போதப்போது ஊராரின் தூஷணைகளை வந்து சொல்வதில் முனைந்திருந்தாள். அதனல் அவளோடு பேசுவது சுப்புவுக்குக் கட்டோடு வேண்டியிருக்கவில்லை. காதில் விழாதவைகளையும் முடிந்து கொண்டுவந்து சொன்னளாகையால் மனத்துக்குப் பின்னும் சிரமம் ஏற்பட்டது. பெரிய களஞ்சியம் இருக்கிறதென்றும் இவர்கள் நிறைய நெல்லைப் பதுக்கி வைத்துக்கொண் டிருக்கிருர்கள் என்றும் ஊரார் தூற்றுவதாக நாணம்மாள் வந்து சொன்னள். 'என்ன அடாப்பழி! பாவ தோஷத்துக்கு அஞ்சாமல் பார்த்தமாதிரி சொல்லுகிருர்களே!' என்று சுப்புவுக்கு ஆத்திரம் பொத்துக்கொண்டு வந்தது. அதைக் கேட்டு வந்து, அது உண்மைபோலத் தன்னிடம் சொல்லும் நாணம்மாளிடம், 'இவளும் நம்புகிருளா என்ன!' என்று வெறுப்போடுகூடச் சந்தேகமும் தோன்றிற்று. 'இதைப் போன்றதாகத்தானே இருக்கும் மகாலக்ஷ்மியைப்பற்றி அவள் கூறின அவதூறும்? அதைக் கேட்டு நாமும் குழந்தையை நம்மிடமிருந்து விலக்கிக் காண்பித்தோமே. அது அந்தக் குழந்தைக்கு எப்படி இருந்திருக்கும்' என்று சுப்பு நினைத்துப் பார்த்தாளா? ஏது. அவ்வளவெல்லாம் எளிதாக அவரவர்கள் செய்யும்

பிழைகள் தெரிந்துவிட்டால் அப்புறம் மாய உலகம் என்று சொல்லும்படியாக இருக்குமா?

''ஏண்டா, அம்மாஞ்சியையாவது இந்தச் சங்கடத்துக்கு என்ன பண்ணுகிறதுான்னு போய்க் கேட்டு வாயேன். எல்லாம் பாழாகப் போனப்புறம் என்ன பண்ணுகிறது? பட்டினி கிடந்து சாவோமென்ருலும் ஊரார் பழிச்சொல்லுன்ன தாங்காது போல் இருக்கு?' என்ருள் சுப்பு, ஒரு சமயம் தம்பியிடம். 'இவ்வளவு சிரமமும் நீங்க அம்மாஞ்சி வழி சொல்லமாட்டானு? அவனுக்கு எல்லாம் தெரியுமே; சாமர்த்தியமும் உண்டே' என்ற எண்ணம் அவளுக்கு.

''அம்மாஞ்சியை விரோதிச்சுண்டுட்டு, அவன் கிட்ட எங்கே போகிறது?'' என்ருர் கோபாலையர்.

''விரோதமா? அதாரு பண்ணிண்டா? நன்னருக்கு நீ சொல்றது! அவன் வேணு வராமேயும் போகாமேயும் இருக்கான். நீ போட்ட கடிதாசிக்குக்கூடப் பதில் போடல்லே. இங்கே யாரு அப்படி இருக்கா? அப்படியுந்தான் அவனும் கிருஷ்ணனை உடனே அனுப்பலேயா? ஒத்தாசை கேட்டாச் செய்யாமே இருக்கமாட்டான்; நீதான் போய்ப் பார்க்காமே இருக்கே. பெண்ணைக் குடுத்தூட்டுப் போகாமே முடியுமோ?'' என்று சுப்பு பேசியது கோபாலையருக்கு ஆச்சரியமாக இருந்தது.

''நீதானே அவா சம்சர்க்கமே வேண்டாம்னு விலக்கினே?'' என்ருர் மெதுவாக.

''விலக்கறதா? யாரு சொன்ன? விலக்கின விலகிப் போயிடுமா என்ன? அவன் நமக்கு அம்மாஞ்சி. போராததுக்குப் பெண்ணை வேறு கொடுத்ததனுல் சம்பந்தி. எப்படி விலகும்? போரும் உன் பேச்சு. நீதான் மதுரைக்குப் போய் அம்மாஞ்சியையும் ஜெயிலிலிருந்து வந்த நாராயணனையும் பார்த்து ஒண்ணும் பண்ணமே இருக்கே. பொம்மனுட்டி, நான் என்ன பண்ண முடியும்? எனக்கு என்ன தெரியும்? புருஷான்ன அப்பப்போச் செய்ய வேணுங்கறதைச் செய்யணும்? நான் விலக்கினேன்னு என் பேரிலே பழி போடறயே. சாரதா வளைகாப்புக்குக் கூப்பிடாமே வச்சேன்; வாஸ்தவம். ஆனு அது வேறு சமாசாரம். மகாலக்ஷ்மி நடக்கறது நன்ன இல்லேன்னு அவளைக் கண்டிக்கறத்துக்காகச் செஞ்சேன். நம்மாத்துக் குழந்தையைக் கோவிச்சுக்க நமக்குப் பாத்தியம் இல்லையா? அப்போ நீ பேசாமெதானே இருந்தே? அதெல்லாம்

பின்னுக்குச் சரியா வராதூன்னு எனக்குச் சொல்லப்படாதோ? போய்த்தான் அவளை அழைச்சுண்டு வரப்படாதோ? அப்படித் தான் ஆகட்டும்; அப்போ செஞ்ச தப்புக்கு இப்போ என்ன வந்தது? அம்மாஞ்சி அதையே நினைச்சுண் டிருக்கமாட்டான். திவ்வியமாக நீ அவனைப் பார்த்தூட்டு என்ன பண்றதூங்கறத்துக் கும் கேட்கலாம். அதுக்கு ஒண்ணும் தடை இல்லே. நாமும் அவனும் வேறே வேறேயா, இதையெல்லாம் பெரிசா எடுத்துண்டு தீர்க்க வைரம் கொண்டாட?'' என்று பிரசங்கித்தாள்.

அவள் இவ்வளவு சொன்ன பிறகும், ''அவன் நம் மண்டை கோவமாகத்தான் இருக்கான்'' என்றார் கோபாலையர், தாம் சொன்னதையே திரும்பவும் சொல்லிக்கொண்டு.

''கோவமாகத்தான் இருக்கட்டுமே; அதைச் சரி பண்ண முடியாதா?'' என்றாள் சுப்பு.

''நீ தோணின விதம் பேசறே, உன்னோடு என்ன பண்றது? அம்மாஞ்சியை இவ்வளவு தூரம் விலக்கிப்பிட்டு, இப்போ அவனிடம் ஒத்தாசைக்குப் போக என்னால் முடியாது. அப்படியும் போலீஸ்காரா செஞ்சதைத்தானே அம்மாஞ்சியும் செய்யப்போறான்? அவனும் போலீசு ஆளுதானே?'' என்று பிடிவாதமாகக் கூறினார் கோபாலையர்.

''அம்மாஞ்சி எல்லாரையும் போல வெறும் போலீசு ஆளா? இப்படிப் பேசினா உன்னோடு என்ன பண்றது? அவன் கெட்டிக்காரன். ஏதாவது சரிபண்ண யோசனை சொல்லுவான். அவனைப் போய்ப் பாரு. பேசாமே இராதே'' என்றாள் சுப்பு. 'இப்படி ஒருவன் சும்மா இருப்பானா!' என்று, தனக்கு வந்த கோபத்தையெல்லாம் அடக்கிக்கொண்டு அவள் மன்றாடியும், கோபாலையர் கேட்பவராகத் தோன்றவில்லை.

''ஏதுக்கம்மா, ஐயாவோடு வாக்குவாதம் பண்ணிக்கிட்டுக் கிடக்கீங்க? நான் போயி நம்ம மாப்பிள்ளை ஐயாவைக் கண்டுக்கிட்டு வாறேன். அவர் எதுனாச்சியும் கட்டாயம் செய்வார். அவரண்டை நம்ம குடியானவன்களுக்கும் அசாத்திய மதிப்புங்க. அவரு சொன்னாக் கேப்பானுங்க'' என்றான், அவர்கள் சம்பாஷணையைக் கேட்டுக்கொண் டிருந்த கிருஷ்ணன்.

''ஏண்டா, போலீசாலேயே ஒண்ணும் பண்ண முடியலையே. இவனாலே முடியுமா? அப்படித்தான் ஆகட்டும்; அவன் இந்தப்

பக்கம் வராமேயே கோவத்தோடு இருக்கிறனே?'' என்றாள் சுப்பு.

''அவுங்களுக்குக் கோவமே கிடையாதுங்கம்மா. தெரிஞ்ச லட்சணம் இவ்வளவுதான்னு அன்னிக்கே நம்மை மன்னிச்சுப் புட்டாரே, அவரு. இல்லாமப்போனு நம்ம தாயியை நீங்க சொன்ன சொல்லுக்கு உங்களைச் சும்மா உடுவாரா? கிடக்கு தூன்னுதானே தள்ளிப்புட்டாரு? அப்படியும் அவுங்க ஒரு மாதிரி இருந்தா நம்ம தாயி அவுங்களை அப்படி இருக்க உடுமா? அது பூமாதேவியாட்டம் பொறுமை இல்லீங்களா?'' என்றான் கிருஷ்ணன். சுப்புவைச் சொல்லிக் காண்பிக்கச் சமயம் கிடைத்ததென்று அவனுக்குச் சந்தோஷம். மேலும் அவன் தொடர்ந்து, ''அங்கே நடக்கிற வேலையைப் பாத்தீங் கன்னுத் தெரியும்! பிரம்மாவாட்டம் ஊருன்னு சிருஷ்டி பண்றாரு? என்னவெல்லாம் வேலை நடக்குது! அதிசியமால்ல இருக்குது. போலீசு கிடக்குது! போலீசாலே என்ன நடக்கும்? நம்ம மாப்பிள்ளை ஐயாவைக் கூட்டியாறேன். எல்லாம் சரியாப் போகுது, பாருங்க'' என்றான் கிருஷ்ணன்.

''செய். மகாலக்ஷ்மி கிட்டேயும் இங்கிருக்கிற கஷ்டத்தை யெல்லாம் சொல்லு'' என்றாள் சுப்பு மெதுவாக. ஏதாவது கிருஷ்ணனாலாவது நடக்கக்கூடாதா என்கிறது அவளுக்கு.

''நீங்க மகாலச்சிமியைக் கண்டபடி பேசினாலும் அதுக்கு நம்ம ஆசை போகலீங்க. நம்ம கஷ்டத்தைக் கேட்டாத் துக்கப்பட்டுப்போவும்'' என்று கிருஷ்ணன், சுப்புவைக் குத்திக் காண்பித்துக்கொண்டே சொன்னான். நடந்த காரியத்தை அவன் அவ்வளவு தூரம் எடுத்துச் சொல்லிக்கொண் டிருப்பது சுப்புவுக்குப் பிடிக்கவில்லை. 'என்ன கெடுதலாச் செஞ்சுப் புட்டோம்?' என்று நினைத்தாள். மகாலக்ஷ்மியை வருத்தின தாகவே அவளுக்குத் தோன்றவில்லை.

நாம் பிறர் மனத்தை நோக அடித்துச் செய்யும் தப்பை எளிதில் மறந்துபோகலாம். ஆனால் அதை ஏற்றுக் கஷ்டப்படுகிறவர்கள் அவ்வளவு சுலபமாக அதை மறக்க வேண்டுமே; அது சாத்தியமா?

சுப்பு கிருஷ்ணனை, ''உடனே போடா'' என்று விரட் டினாள். அவனும் சம்மதித்துக் கிளம்பினான். மகாலக்ஷ்மியும் நாராயணனும் இருக்கும் இடத்துக்கு அவன் அடிக்கடி போய்க்கொண்டுதானே இருக்கிறான்? கிராமத்தில் அவர்கள்

அகத்துச் சமாசாரம், ஊர்ச் சங்கதி எல்லாம் சொல்லிக் கொண்டுதானே இருக்கிறுன்?

பொதுவாகவே நாராயணனுக்கும் தர்மராஜுவுக்கும் கிராமங்களில் நடப்பது முழுதும் தெரிந்துதான் இருந்தது. அதைச் சரிசெய்ய அவர்களும் அங்கங்கே குடியானவர்களை ஒன்று சேர்த்து, அவர்களுக்கு எடுத்துச் சொல்லி எவ்வளவோ செய்துவந்தார்கள்.

''உங்களுக்குள் என்ன தகராறுகள் இருந்தாலும் பயிர் செய்வதை மட்டும் நிறுத்தாதீர்கள். அதன் விளைவு நாட்டுக்கே மொத்தத்தில் கஷ்டமாக முடியும். தானியமே விளைச்சல் இல்லையென்று போனுல் எல்லோரும் ஒருமிக்கப் பட்டினி கிடந்து வீணுக்கு மடியவேண்டி வரும். இதுமாதிரி மகத்தான பாவத்தைச் செய்யலாமா? நீங்களே, பெண்டு பிள்ளைகளுடன் வயிற்றுக்கு இல்லாமல் சாகும்படி அடித்துக்கொள்ளலாமா? புழு பூச்சியைக்கூட மனிதன் வேண்டுமென்று கொல்ல மாட்டானே. அப்படி இருக்கத் தன் சொந்தப் பெண்டுபிள்ளை களை வீணுக்குப் பட்டினி போட்டுக் கொல்லுவாஞு? நீங்களே நினைத்துப் பாருங்கள். உழுது பயிரிடுங்கள். வீண் பழிக்கு ஆளாகாதீர்கள். நீங்கள் கேட்பதையும் நியாயமாகக் கேளுங்கள். நிலச் சொந்தக்காரர்கள் அதை உங்களுக்குக் கொடுக்கும்படி நாங்கள் பார்த்துச் செய்கிறேம்'' என்றெல்லாம் எடுத்துச் சொன்ஞர்கள். பல வாக்குறுதிகள் அளித்தார்கள். எசமானர்களுக்கும் வேலையாட்களுக்கும் நடுவில் சமரசம் பேசிச் சுற்றுவட்டக் கிராமங்களிலெல்லாம் கூடியமட்டும் நிலைமையைச் சரி செய்துகொண்டு வந்தார்கள். 'நாராயணன் சிறைக்குச் சென்றவன்; தங்களுக்காகப் பாடுபடுபவன்' என்று கருதியிருந்த குடிஜனங்களும் அவன் வார்த்தைக்கு மதிப்பு வைத்து நடக்கத் தொடங்கியிருந்தார்கள். தானப்பாளையம் சம்பந்தப்பட்ட மட்டுந்தான் அவ்வூரார் தாங்கள் தலையிடுவதை விரும்புவார் களோ மாட்டார்களோ என்கிற சந்தேகத்தில் அவர்கள் விலகி யிருந்தார்கள்.

இப்போது கிருஷ்ணன் அவ்வூராருக்காகவே வந்தான். அவன் தான்மட்டும் தனியே வரவில்லை. தன்னேடு தன் சொல் கேட்டு நடக்கக்கூடிய சிலரையும், நாராயணனிடத்தில் தங்கள் மனுஷ்யன் என்று விசுவாசம் உள்ளவர்களையும் கூடவே அழைத்து வந்திருந்தான். அவர்களிடமிருந்து அவ்விடத்து நிலைமை

முழுவதையும் தெளிவாகத் தெரிந்துகொண்டார்கள் அவர்கள். தங்களாலான ஒத்தாசை செய்ய நாராயணனும் தர்மராஜுவும் தயாராக முன்வந்து கிளம்பினார்கள். இது மாதிரி தொண்டுகள் செய்யத்தானே அவர்கள் காத்துக் கிடக்கிறார்கள்?

''ஏண்டா கிருஷ்ணா, அப்பா, அத்தை, ஊரில் எல்லோருமே ரொம்பக் கஷ்டப்படுகிறார்களா?'' என்று மகாலக்ஷ்மி கிருஷ்ணனைப் பரிவோடு கேட்டாள்.

''கஷ்டப்படட்டுமே தாயி, நல்லாக் கஷ்டப்பட்டாத்தான் அவங்களுக்குப் புத்தி வரும். உன்னை அவுங்க படுத்தினத்துக்குக் கொஞ்சம் அநுபவிக்க வேணுமா?'' என்றான் கிருஷ்ணன் ஆத்திரமாக. இந்த எண்ணத்தில்தான் அவன் முதலிலேயே நாராயணனைத் தேடி வரவில்லை என்று தெரிந்தது.

''அப்படியெல்லாம் நாம் எதுக்கடா சொல்லுகிறது? அவா கஷ்டப்பட்டா நாம் புட்டது இல்லை யென்று போய்விடுமா? ஊர்ச் சண்டையிலே நெல் விளைச்சலே இல்லாமல் போனா எல்லாரும்னா சாப்பாட்டுக்கு இல்லாமே தவிச்சுப் போகணும்'' என்று மகாலக்ஷ்மி வருத்தத்தோடு சொன்னாள்.

''உன் மனசு தெரியாமே அவுங்க பேசறாங்களே. அவுங்களை என்ன சொல்லறது? போறாங்க'' என்றான் விரக்தியாகக் கிருஷ்ணன். ஊரிலே யார் கஷ்டப்பட்டாலும் படா விட்டாலும் சுப்புவுக்கு மனசிலே நன்றாக உறைக்கவேண்டும் என்கிற எண்ணம் அவனுக்கு. சுப்புவின் சுபாவத்துக்கு அவ்வளவு தூரம் படுமா என்பது சந்தேகந்தான்.

# 40

# அமைதி

பாக்கிக் கிராமங்களில் போல, இங்கே நாராயணனாலும் தர்மராஜுவாலும் லகுவாகச் சமரசம் செய்ய முடியவில்லை. வெகு பாடுபட்டு இரு கட்சிக்காரர்களுக்கும் எடுத்துச்சொல்லி முடிக்கவேண்டி யிருந்தது.

குடியானவர்கள் பாதி வரும்படியைக் கேட்பது எவ்வளவு தவறு என்பதை அவர்களுக்கு எடுத்துக் காண்பிக்க, நிலச் சொந்தக்காரர்களுடைய கிஸ்தி முதலான செலவுகளைச் சொல்லி, சரி பாதி கொடுத்துவிட்டு அவர்கள் என்ன செய்வார்கள் என்பதையெல்லாம் விவரித்துச் சொல்ல வேண்டி இருந்தது. சொந்தக்காரர்களிடமும், பாடுபடும்

சமுசாரிகளை வயிற்றில் அடிக்காமல் நிறையக் கொடுத்து நடத்தவேண்டும் என்பதை வற்புறுத்திக் கூறி ராஜி செய்து வைத்தார்கள். 'யுத்தத்தின் விளைவாக நாட்டில் பஞ்சம் ஏற்பட்டிருக்க, நாமும் இது மாதிரி சொந்தச் சச்சரவுகளால் விளைபொருள் இல்லாமல் செய்துகொள்ளக் கூடாது' என்பதைப் பலவிதமும் அவர்கள் மனத்தில் படும் வகையில் பேசினதில் எல்லோரும் கடைசியில் ஒரு சமரச முடிவுக்கு வந்தார்கள்.

குடியானவர்களிடம், ''நீங்கள் பார்ப்பனர்கள் என்கிற துவேஷம் காட்டாதீர்கள். அவர்களும் உங்களைத் தாழ்மைப் படுத்தி நடத்தமாட்டார்கள்'' என்றும், ''கீழ்ப்பட்டவர்கள் என்பதாக அவர்களை மட்டம் தட்டாதீர்கள். கட்சி வலுத்திருக்கும் இக்காலத்தில் அது சரிப்பட்டு வராது. துன்பந்தான் விளையும்'' என்று பிராம்மணர்களுக்குப் புரியும்படி சொல்லியும், ஜாதித் துவேஷத்தைச் சிறிது சமனம் செய்தார்கள். ஜாதி வர்ணாசிரமங்கள் வேத காலத்திலிருந்து ஏற்பட்டனவாயினும் மனிதனுக்கு மனிதன் தாழ்மைப் படுத்தக்கூடாது என்பதைத் தான் அவர்கள் முக்கியமாகத் தானப்பாளையத்து அந்தணர்களுக்கு மனத்தில் படும்படி சொன்னார்கள்.

அவர்களை எதிர்நோக்கி நின்ற பசியும் பட்டினியும், இவர்கள் செய்த புத்திமதியோடு சேர்ந்து வேலை செய்து இரு கட்சிக்காரர்களும் கடைசியில் தணிந்து, விட்டுக்கொடுக்கச் செய்தன. நாராயணனும் தர்மராஜுவும் அவர்களுக்காகவே பாடுபடுகிறவர்கள்; நாராயணன் சிறைவாசம் வேறு செய்தவன். இவற்றையெல்லாம் உணர்ந்த அந்தக் குடியானவர்கள், அவர்கள் தங்களுக்கு நன்மையைத்தான் சொல்லுவார்கள் என்றே நினைத்தார்கள். ஒருவிதமான சமரச முடிவு ஏற்பட்டது. பழையபடி சாகுபடிக் காரியம் மும்முரமாக ஆரம்பமாயிற்று. உறங்கிக் கிடந்த கிராமம் புத்துயிர் பெற்று விழித்தெழுந்தது. ஜன சந்தடியற்று நிச்சப்தம் நிலவிய குளக்கரைகளெல்லாம் மறுபடியும் சந்தடியுடன் கலகலப்பாக மாறின.

நம் தானப்பாளையத்து ஸ்திரீகளும் குடமெடுத்துத் தங்கள் குளத்தங்கரை அளவளாவலைப் பழையபடி சந்தோஷமாக ஆரம்பித்தார்கள். ஊரில் கலவரம் ஏற்பட்டுக் குடியானவர்கள் வேலைநிறுத்தம் செய்யத் தொடங்கினதிலிருந்து அவர்களுக்கு உற்சாகம் ஏது? அதோடு தொடர்ந்து அவர்கள் கவலையற்று

மணிக்கணக்கில் ஆனந்தமாகக் குளத்தில் நீராடுவதுந்தான் எங்கே? சாப்பாட்டுக்கே இல்லையென்று வந்தால் அவர்கள் எதைக் கொண்டு சம்பிரமமாகக் கணவன்மார்களையும் குழந்தை களையும் உண்பித்து, தாங்களும் உணவருந்திச் சுகம் அடைவார்கள்?

'தங்கள் புருஷர்களுக்கு நிலைமையைச் சரிபண்ணிக் கொள்ளச் சாமர்த்தியம் போதாதே' என்பதை அவர்கள் அப்போதப்போது நடந்து வருபவைகளிலிருந்து அறிந்துகொண் டிருக்கிறார்க ளல்லவா? 'கோயிலில் பள்ளர்களை விட்டதற்கு, குளத்தைக் கண்டவர்கள் உபயோகிப்பதற்கு, இவைகளுக் கெல்லாம் அவர்களால் என்ன செய்ய முடிந்தது? இப்போது மட்டும் இந்த வேலை நிறுத்தத்தைத் தடுக்க அவர்கள் என்ன செய்யப் போகிறார்கள்?' என்று அந்த ஸ்திரீகள் மனம் ஏங்கிக் கிடந்தார்கள். அவர்கள் கவலைப்பட்டதற்கு ஏற்றபடியே, செய்யும் வகை தெரியாது நிலைமையை மோசமாகும்படி விட்டுக் கொண்டு வந்தார்கள் அவர்களுடைய புருஷர்கள்.

இவ்வளவு தீராத சங்கடங்களும் தீர்ந்து, ஏதோ பழைய படி காரியம் நடக்கக்கூடுமென்று வந்துவிட்டது. இப்போது அவர்கள் திருப்திக்குக் கேட்க வேண்டுமா? எல்லோரும் ஒருங்கே உற்சாகமற்று இருந்ததனால் இவ்வளவு நாளும் ஒருவரோடு ஒருவர் பேசும் சுவாரசியமும் குறைந்து போயிருந்தது. இப்போது எல்லாம் சரியாகிவிட்ட தெம்பிலும் சந்தோஷத்திலும் ஒருவரை ஒருவர் குளக்கரையில் பார்த்த போது அவர்கள் பேச்சு பழைய தோரணையில் கிளம்பிற்று என்றால் அதில் அதிசயம் என்ன?

''ஊரிலே நம்மவர்களும் குடியானவர்களும் சேர்ந்து, பெரிய கூட்டம் கூடி நாராயணனுக்கும தர்மராஜுவுக்கும் மாலை போட்டு எல்லாம் செஞ்சாளே; அது பேப்பரிலேன்னா வந்திருக்காம்'' என்றாள் ஒருத்தி. தன் ஊர், பிரசித்தமாகிக் கொண்டு போகிறது என்கிற பெருமை அவளுக்கு.

''வரத்தான் வேண்டும். நாராயணனைக் கோவிலிலே வச்சுக் கும்பிட்டாலும் தகும். அவன் தெய்வத்தைத் தவிர வேறே இல்லை'' என்றாள் இன்னொருத்தி. எல்லோரும் ஒரே மனசாக அவனை வாழ்த்தினார்கள். இதில் அவர்களுக்குள் அபிப்பிராய பேதமே இருக்கவில்லை.

"ஆமாம், நாணம்மாள் என்னவோ பெருமை பீத்திண்டாளே, பிள்ளே போலீசு அதிகாரத்தைப் பத்தி. காது வரைக்கும் வாய் கிழிஞ்சுதே. அவனுலே என்ன பண்ண முடிஞ்சுது? அவனேக் கண்டாலே சண்டை இன்னும் ஜாஸ்தியாச்சு: இப்போ நாராயணன் செஞ்சதைப் பாரு. நல்ல வார்த்தைக்கு மசியற மாதிரி அதிகாரத்துக்கு நடக்காதூன்னு வெட்ட வெளிச்சமாச்சு" என்ருள் ஒருத்தி.

"என்ன இருந்தாலும் நாராயணனுட்டமா வருமா? அவன் ஜனங்களுக்காக உழைக்கிருன். படிப்பை விட்டுட்டு ஜெயிலுக்கு வேறே போயிருக்கான். அவன்கிட்ட ஜனங்களுக்கு இருக்கிற மதிப்பு வேறேதான். படிப்புக்குப் படிப்பு, விஷயத்துக்கு விஷயம் எல்லாம் தெரிஞ்சிருக்கு அவனுக்கு. சின்ன வயசிலிருந்தே ஆளு, படை எல்லாரோடேயும் அவன் பழகற விதமே வேறேயாகத்தான் இருக்கு. அவனேத் தூஷிக்கறவா வேணுத் தெரியாமே சொன்னு" என்ருள் ஒருத்தி.

"என்னவோ ஜாதி வித்தியாசம் பார்க்காமே இருக்கானேன்னு யாரானும் சொல்லியிருப்பா. அதைத் தவிர அவனே யாருதான் கொண்டாடல்லே? எனக்கு எப்பவும் அவன் ரொம்பச் சமத்து என்கிறதுதான்" என்ருள் இன்னொருத்தி.

"தூஷணேயை அவன் மட்டோடு நிறுத்திக்கொண்டோமா? மகாலக்ஷ்மியையும்னு கன்னு பின்னுன்னு சொல்லியாச்சு. எந்த மூஞ்சியை வச்சுண்டு இப்போ அந்தப் பெண்ணேப் பார்க்கிறது?" என்ருள் எதிர் வீட்டு லக்ஷ்மி. அவளுக்கு மகாலக்ஷ்மியைத் தூற்றினது என்றுமே பொறுக்காத விஷயம்.

"அந்தப் பெண்ணே யாரு என்ன சொன்னு? ஒருத்தரும் பெரிசா ஒண்ணும் சொல்லிப்பிடல்லே" என்ருள் ஒருத்தி தைரியமாக.

"எல்லாம் நாணம்மாள் காரியந்தான். அவள்தான் ஏதேதோ சொன்னுள். ஆனுல் அதெல்லாம் நமக்குள்ளே பேசிண்டதுதானே? அவ காதுவரைக்கும் எங்கே போச்சு?" என்ருள், நாணம்மாள் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக்காரி. அவளுக்குக் குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு என்றது.

"நமக்குள்ளேயே எப்படி இருக்கும்? எல்லாம் கால் முளேச்சுச் சுப்புவரைக்கும் போயி, அவள் மகாலக்ஷ்மியை ஆத்துக்கு அழைக்காமே விலக்கிக் காண்பிக்கிற வரைக்கும் போகலேயா?" என்ருள் லக்ஷ்மி.

"சுப்புகிட்டக் கலகம் பண்ணிப் பெரிசாக்கினதும் நாணம்மாள்தான். அவள் சொன்னதை இங்கே யாரு நம்பினு? என்னவோ இவளுக்கு அந்தப் பெண்ணைக் கண்டால் ஆகலைன்னு தான் நினைச்சோம்" என்றுள் பக்கத்து வீட்டுக்காரி. தான் நம்பாமல் நல்லவளாக இருந்ததாக அவள் காண்பித்துக் கொண்டாள்.

"எதுவோ, இப்போ நம்மையெல்லாம் விட்டுவிட்டு நாணம்மாள் நல்லவளாகப் போயிட்டா. நாராயணனையும் மகாலக்ஷ்மியையும் ஏன், அந்த ராஜுவைக்கூடன்னு வீட்டிலே அழைச்சு விருந்து பண்ணி இருக்கா" என்றுள் எதிர்வீட்டு லக்ஷ்மி.

"அவன் இப்போ பிராம்மணனுப் போயிட்டானு? அவாத்துக்காரருங்கூட இருந்து சாப்பிட்டாரா?" என்றெல்லாம் கேள்விகள் கிளம்பின.

"ஏகாதசீன்னு அவர் சாப்பிடவில்லையாம். ஆத்துலே சங்கரன் வந்திருக்கிறன். ஷட்டகனுச்சு; சேர்ந்து சாப்பிட்டிருக்கான். ஏதோ சமயம்போல் நாணம்மாளுக்குக் காக்கா பிடிக்கத் தெரியறது. அவதான் தூஷிச்சா; இப்போ அவதான் நல்லவளாப் போயிட்டா, அவ அதிருஷ்டம்" என்றுள் ஒருத்தி பொருமையோடு.

"சில பேருக்கு அப்படி. அந்தப் பிராமணன் கோபாலையர் இல்லையா, தனி அதிருஷ்டத்தோடே! ஊரே திண்டாடறப்போ, அவர் விசாரமத்துப் பேசாமே இருந்தார். எல்லோருக்கும் மனஸ்தாபம் தாங்கல்லே. ஏதாவது சரி பண்ணிண்டாலும் அவரை விட்டூட்டுத்தான் பண்ணிக்கணும், அவர் திண்டாடணும்னு கறுவிண்டிருந்தா. இப்போ அவர் மாப்பிள்ளை செஞ்ச உபகாரம் அவருக்குக் சொந்தமாயிடுத்து. அவர் காலடியிலே ஸ்தோத்திரம் பண்ணிண்டு நிக்கறு" என்றுள் லக்ஷ்மி. துளியும் அருகதையின்றி எல்லாச் சௌகரியங்களையும் அடைவதாகக் கோபாலையரைப்பற்றி அவளுக்கு இருக்கும் எண்ணம் இன்று புதிதாக வந்ததல்லவே!

'அவர் தாய் தந்தையர்களுக்கு ஒரே மகனுகப் பிறந்து, அழகு மிகுந்த காமாக்ஷியை மனைவியாக அடைந்து, முத்து முத்தாகக் குழந்தைகளைப் பெற்று, தங்கம் தங்கமாக மாப்பிள்ளைகளை அடைந்து, சொந்தப் பிரயத்தனம் சிறிதுமின்றி எல்லாம் நேர்மையாக நடப்பதற்கு ஜன்மாந்தரத்தில் ஏதாவது விசேஷ

பூஜை செய்திருந்தாலொழிய அவர் இப்போது செய்தது ஒன்று மில்லை' என்று அவள் என்றே தீர்த்துவிட்டிருந்தாள்.

நாமும் அந்தக் குழந்தைகளை நம் வீடுகளுக்கு அழைத்து ஏதாவது கொண்டாடிச் செய்யவேண்டுமென்று எல்லோரும் ஒரு மனசாக நினைத்துத் தீர்மானம் செய்துகொண்டார்கள். அவர்கள் அடைந்த நன்மை சாமான்யமா? அதற்கான நன்றி உணர்ச்சி அவர்களுக்கு மேலிட்டிராதா?

அவர்கள் பேசிக்கொண்டதுபோல் நாணம்மாள் இப்போது நாராயணனையும் மகாலக்ஷ்மியையும் கொண்டாடத் தொடங்கி யிருந்தாள். அவள் கணவரிடத்தில்தான் குடியானவர்களுக்கு அதிகத் துவேஷம். அதனால் எல்லோரையும்விடச் சிரமம் நீங்கினதற்குச் சந்தோஷப்பட வேண்டியவள் அவள்தான். 'இதுமாதிரி இளைஞர்கள் கிடைப்பார்களா?' என்று நாராயணனோடு தர்மராஜுவையும் சேர்த்துப் புகழ்ந்தாள். அம்மாஞ்சியின் உபகார சிந்தைக்கும், தர்மாம்பாளின் நல்ல குணத்துக்கும் ஏற்ற பிள்ளையும் நாட்டுப்பெண்ணும் என்று அவர்களையும் தோத்திரம் செய்தாள்.

சுப்புவுக்கு, நாணம்மாள் சொல்வதையும் செய்வதையும், கேட்கவும் பார்க்கவும் வியப்பும் கோபமும் தாங்காது ஏற்பட்டன. தன்னிடம் மகாலக்ஷ்மியைப் பற்றி வலுவிலே தப்பாக வந்து பேசிவிட்டு, இப்போது இவ்வளவு பூஷணையாகப் பேசுகிறளே. தனக்குக் கோபம் வரும்படி எல்லாம் செய்தாளே. 'ஐயேடி! இவள் வார்த்தையைப் பெரிசாக எடுத்துக்கொண் டோமே. என்ன தெரியாத்தனம்!' என்று தோன்றிற்று. 'நம்ம குழந்தையைத்தான் என்றாலும் இவள் புகழ்கிற புகழ்ச்சி காதாலே கேட்கப் பிடிக்கவில்லையே! இவள் என்ன தனியா ஸ்தோத்திரம் பண்றது?' என்று ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. தன்னை ஏதோ சரியாக நடந்துகொள்ளாதவளாகச் செய்து விட்டாளே என்று வருத்தம் வேறு வந்தது.

''அத்தை, நான் இங்கே வந்து உங்களையெல்லாம் பார்த்து எவ்வளவு நாளாச்சு'' என்று மகாலக்ஷ்மி வந்தபோது சொன்னது, அவளுக்கு ஈட்டி எடுத்துக் குத்துவதுபோல் இருந்தது. மகாலக்ஷ்மி அவளிடம் கோபம்கொண்டு பேசாதிருந் திருந்தாலும் சுப்புவுக்கு அவ்வளவு தோன்றியிராது. அப்படி யின்றி அவள் சாதாரணமாகப் பேசினது மனத்தை வாட்டியது.

''என்னவோ, எல்லாம் கால வித்தியாசம். நீங்கள் எல்லாரும் நன்னு இருக்கணுங்கற ஆசைதான் எனக்கு. அது தான் இப்படி ஆச்சு'' என்று மன்னிப்புக் கேட்கிற மாதிரி பேசினுள் சுப்பு.

''அது போகட்டும், அத்தை. ஏதோ நீ தப்பா நெனச்சுட்டே. நான் சொன்னுலும் உனக்கு நம்பிக்கை வரல்லே. பிறத்தியார் சொல்றது பெரிசாகத் தோணிப்போச்சு. அப்போது மனசுக்கு வருத்தமாக இருந்தது; அவ்வளவுதான்'' என்ருள் மகாலக்ஷ்மி.

''இப்பத்தான் தெரியறது, உன்னைப் பார்க்காமே எத்தனை கஷ்டமா இருந்துதுன்னு? எப்படியோ பொறுத்துண்டு இருந்திருக்கிறேன்'' என்று சொல்லி மகாலக்ஷ்மியை அணைத்துக் கொண்டு அழுதாள் சுப்பு. வெகு நாளாகப் பாராதிருந்த வருத்தம் அவளையும் மீறிப் பொத்துக்கொண்டு வெளிவந்தது.

''அத்தை, அழாதா. நீ அழறதைப் பார்க்கக் கஷ்டமாயிருக்கு'' என்ருள் மகாலக்ஷ்மி. குழந்தை, தானே நெருப்பில் சுட்டுக்கொண்டுவிட்டது என்பதற்காக, அது வலி பொறுக்காமல் துடிக்கும்போது அதனிடம் அநுதாபம் ஏற்படாமம் இருக்குமா? அதுபோல், ''தானே செஞ்சதுக்குத் துக்கம் என்ன?'' என்று கிருஷ்ணன் சொன்னுலும் அவள் வருத்தத்துக்கு அவன் கண்களிலும் நீர் துளிக்கத்தான் துளித்தது.

''பாவம், தெரியாத்தனம்! பாதியும் அசட்டுத்தனம்'' என்று அவன் தானே சொல்லிக்கொண்டான்.

கோபாலையர்கூடப் பெண்ணைப் பாராமலே இருந்ததற்குக் கொஞ்சம் மனம் தளர்ந்துபோனுர். கண் கலங்க, ''வா அம்மா'' என்று அன்பாக வரவேற்ருர். சுபாவமாக எத்தனை நாள் பார்க்காதிருந்திருந்தாலும் அவருக்கு ஒன்றும் உணர்ச்சி மேலிட்டிராது. ஆனுல் மகாலக்ஷ்மியை அவர்கள் வேண்டுமென்று விலக்கியன்ருே பாராமல் இருந்திருக்கிருர்கள்? அந்த வருத்தந்தான் அவர் மனத்தையும் சிறிது கலக்கி இருக்க வேண்டும்.

சுப்பு, பாலுவைக் கூப்பிட்டு, ''மகாலக்ஷ்மி வந்திருக்கா பாருடா. எத்தனை நாளாச்சு!'' என்ருள்.

''இப்பத்தான் கொஞ்ச நாளைக்கு முந்தி பார்த்தேன், அத்தை. அக்கா சாரதாவோடு நானும் போயிருந்தேன்''

என்ருன் பாலு. அத்தையிடம் இனி அதை மறைக்க வேண்டிய அவசியம் இல்லை என்கிற தைரியத்தில் அதை வெளியிட்டான்.

சுப்பு நினைத்திருந்த அளவுக்கு அவர்கள் யாரும் இப்போது கொஞ்ச நாளாக மகாலக்ஷ்மியைப் பாராமல் இருக்கவில்லை. சாரதா குழந்தையுடன் புக்ககம் போகும்போது அம்மாஞ்சி அகத்தில் இரண்டொரு நாள் இருந்துவிட்டே சென்ருள். தனக்கு அருமையாகப் பிறந்திருக்கும் மகனைத் தங்கைக்குக் காண்பிக்காமல் இருக்க அவளுக்கு மனம் வருமா? அவளோடு, பாலுவும் சென்றிருந்தான். அவன் சாரதாவுக்குத் துணையென்னும் பாவனையில் திருநெல்வேலி சென்றுவந்தான். போகும்போதும் வரும்போதும் அம்மாஞ்சி அகத்தில் தங்கி விட்டுத்தான் வந்தான். அத்தையிடம் சொன்னுல் கோபிப்பாளே என்று அவர்கள் யாரும் இதுபற்றி இதுவரையில் பிரஸ்தாபிக்கவே இல்லை. பாலுவுக்கு அப்படி இருப்பது எவ்வளவோ கடினமாகத்தான் இருந்தது. அம்மாஞ்சி அகத்தில் சுப்புவைப் பற்றி அவர்கள் பேசின பேச்சையெல்லாம் சொல்ல அவனுக்கு நாக்குத் துடிக்காதா? கஷ்டப்பட்டுத்தான் அடக்கிக்கொண்டிருந்தான்.

மீனுவும் சாத்தூரிலிருந்து மதுரைக்கு இரண்டொரு நடை சென்று தங்கையைப் பார்த்துவிட்டுத்தான் வந்திருந்தாள். அவள் கணவனுடன் வாய் திறக்காது மேற்கொண்ட சத்தியாக்கிரகம் நன்கு வேலை செய்தது. தான் ஏதோ சொன்னதன் விளைவாக மகாலக்ஷ்மியை வெகுதூரத்துக்கு விலக்கி வைத்துவிட்டார்கள், சுப்பு முதலானவர்கள் என்பதை உணர்ந்த சங்கரன் கொஞ்சம் மனம் இரங்கினுன். அப்படி என்னதான் கேவலம் என்று சொல்லும்படியான நடவடிக்கையை மகாலக்ஷ்மியிடம் அவன் கண்டுபிடித்துவிட்டான்? அதற்கு அவன் மனச்சாட்சி அவனைக் குறை கூறிற்று. எல்லாமாகச் சேரவே, அவன் மனைவியை மதுரை போய்வரும்படி அநுமதி கொடுத்து, தன் முந்திய நடத்தைக்கு மாற்றுச் செய்து சமாதானம் தேடிக்கொண்டான். அதனுல் அவளும் மகாலக்ஷ்மியைப் போய்ப் பார்த்து எவ்வளவோ பேசி ஒருவருக்கு ஒருவர் மனவருத்தத்தைத் தீர்த்துக்கொள்ள முடிந்தது. "சுப்புவுக்கும் கோபாலனுக்கும் என்ன வந்திருக்கு?" என்று அம்மாஞ்சி, தர்மாம்பாள், இவர்கள் அந்தச் சமயங்களில் கேட்டார்கள். "அப்பா என்னத்தைக் கவனிக்கரு? எல்லாம் அத்தை ஏதோ நினைப்பில்

செய்கிறது'' என்று ஒருவார்த்தையில் சொல்லி, விளக்கிக் கொண்டிராமல் தப்பினுள் மீனு.

சுப்புவுக்கு அவ்விதம் அவர்கள் போய் வந்துகொண் டிருந்ததை இப்போது கேட்டபோது கோபமே வரவில்லை; சமாதானமாக இருந்தது என்றுகூடச் சொல்லலாம். தான் நினைத்த அளவுக்கு மகாலக்ஷ்மி தங்கள் யாரையும் பாராமல் கஷ்டப்படவில்லை அல்லவா? அது அவளுக்கு ஒருவாறு ஆறுதல் அளித்தது. 'மகாலக்ஷ்மி திரும்ப ஊருக்குப் போகும்போது தானும் கூடவே சென்று அம்மாஞ்சியையும் அம்மாஞ்சி மன்னியையும் நேரில் கண்டு பேசிச் சமாதானம் செய்துகொண்டு விடுகிறது. கோபாலன் செய்யவேணும் என்று எதற்காகக் காத்திருப்பது?' என்று தானே தீர்மானித்த பிறகு அவளுக்குப் பின்னும் கொஞ்சம் நிம்மதி ஏற்பட்டது.

பிறகு மகாலக்ஷ்மிக்கும் அன்பாக எல்லாம் பார்த்துப் பார்த்துச் செய்தாள். அவர்கள் அகத்தில் தங்கி இருந்த நாட்களில் அவர்களுக்கு ஒரே விருந்தும் உபசாரமுமாகத் தான் இருந்தன. தர்மராஜுவையும் அதில் சேர்த்துக் கொள்ளச் சுப்புவுக்கு இப்போது யாதொரு தடையும் இருப்பதாகத் தெரியவில்லை.

ஊரே அவர்கள் மூவரையும் கொண்டாடுவதில் முனைந்திருந்தது என்றால் அப்புறம் என்ன? மகாலக்ஷ்மியைப்போல் படாடோபமின்றித் தூய கதராடை அணியவும், தங்கத்தினால் கைகள் நிறைய வளையல்களும் கழுத்து நிறைய மணிகளும் அணியாமல் பொறுக்கினாற்போல் இரண்டொரு அணிகலன்கள் பூணவும் அவளைப் பார்த்து அவ்வூர்ச் சிறு பெண்களுக்குப் பெரிதும் ஆசை ஏற்பட்டது. பெண்களுக்குச் சுபாவமான நகைப் பைத்தியமே அவளைப் பார்த்துக் குறைந்து போயிற்றென்றால் மற்றவைகளைப்பற்றிச் சொல்லுவானேன்? அவள் பேசுவது, நடப்பது எல்லாமே அவர்களுக்கு உயர்வாகத் தோன்றத் தொடங்கின.

வானத்தில் மழை மேகங்கள் விலகி வெண்மதி பின்னும் தெளிந்த சோபையுடன் விளங்குவதுபோல், மகாலக்ஷ்மியும் தன்னைப்பற்றின பழிச்சொல் நீங்கிப் பின்னும் உயர்வாகச் சோபித்தாள். ராகுவினால் பீடிக்கப்பட்ட சந்திரன் ஜனங்கள் கவனத்தை அதிகம் கவருகிறான். அவன் பீடை நீங்கி விசேஷப் பொலிவுடன் விளங்குவதும் அவர்கள் கவனத்துக்கு வரத்

தவறுவதில்லை. அவ்விதமே ஜனங்களின் அபவாதமாகிற பீடை நீங்கி மகாலக்ஷ்மி அதிக உயர்வு பெற்றாள். அவள் பிறந்ததிலிருந்தே சந்திரனுக்கும் அவளுக்கும் ஏதோ ஒற்றுமை காண்கிறதல்லவா?

சாயங்காலங்களில் அவள் நாராயணனுடன் உலாவச் செல்வது முன்போலப் பேச்சுக்கு இடமாகவில்லை; எல்லாத் தம்பதிகளும் முக்கியமாகச் செய்ய வேண்டியதாகக்கூடத் தோன்றலாயிற்று. அதுவே புதிய தம்பதிகளிடையே அன்பு வளரக் காரணமாகும் என்றும் நினைத்தார்கள். அவர்கள் பூவும் மணமும்போல், இசையும் கீதமும் போல், சொல்லும் பொருளும்போல், ஒருவருக்கு ஒருவரே பிறப்பிக்கப்பட்டவர்கள்போல், எல்லா வகையிலும் பொருந்தி இருந்தது அவ்வூராரை அவ்விதம் நினைக்கச் செய்தது.

சில சாயங்காலங்களில் தானப்பாளையத்து ஈசுவரனைத் தரிசித்துப் பிரார்த்தனை செய்து வர அவர்கள் செல்வதுண்டு. தன்னைப்பற்றி எழுந்த அபவாதத்தை மறந்து இந்தமட்டும் பிறந்தகத்து மனிதர்கள் தன்னை ஏற்றுக்கொண்டது, ஏதோ அந்தக் கடவுளின் செயல் என்று எண்ணி மகாலக்ஷ்மி அவரை வழிபட்டாள். நாராயணனுக்கு அது அவள் அநுபவித்த சிரமத்தின் அளவைக் காண்பிப்பதாக இருந்தது.

''மகாலக்ஷ்மி, எதுவும் நம்மை அதிகம் பாதிக்கும்படி விடக் கூடாது. கஷ்டமென்று தனியே ஒன்றும் இல்லை. எல்லாம் மனத்தின் பிரமந்தான்'' என்றான். அவன் அவ்வளவு தூரம் பொருட்படுத்தி வருந்தியிருக்கக் கூடாதென்று எடுத்துக் காண்பித்தான். எவ்வளவோ சிரமங்கள் அவர்கள் மேற்கொண்டுள்ள தொண்டில் நேரக்கூடும்; ஒவ்வொன்றுக்கும் அவள் மாதிரி மனம் தளர்வதென்றால் சாத்தியமா? அதை நினைத்தே எச்சரிக்கையாக அவன் பேசினான்.

''இந்த ஈசுவரனையே எடுத்துக்கொள். நமக்குத் தெரிந்த பிறகு இவருக்கு எவ்வளவு மாறுதல்கள் வந்து போய்விட்டன? யாருமே கோயில் பக்கம் வராத நாளும் இருந்தது. பள்ளர்களை உள்ளே விட்டு இவர் தரிசனத்துக்காக அடிதடி நடந்த நாளும் இருந்தது. மறுபடியும் பழைய மோனநிலை இவருக்குக் கிட்டியிருக்கிறது. இவ்வளவிலும் இவர் ஏதாவது வித்தியாசமாக நமக்குக் காட்சி அளிக்கிறாரா? கல்லைக் கடவுளாக வழிபடுவதன்

தத்துவம் இதுதான் போலும்'' என்றான் நாராயணன்; ஏதோ பேருண்மை ஒன்றைக் கண்டுபிடித்தவன்போல்.

''கடவுளின் தன்மையை நாம் அடைந்துவிட முடியுமா? ஏதோ சகித்துப் போகிறோமே, அதுதான்'' என்று அவள் சொல்லி மௌனமாக அந்தக் கடவுளை வணங்கினாள். அந்தச் சொல்லில் இருந்த உண்மையை உணர்ந்து, இதுமாதிரி விவேகியான மனைவியைத் தனக்கு அளித்த அந்தப் பெருமானை நன்றிமேலிட வணங்கினான் நாராயணன். அவர்கள் திரும்பக் கைகோத்துக்கொண்டு வெளிவந்தபோது, 'நம்மைப்போல் அன்னியோன்னியமாக இருக்கும் இந்த இளந் தம்பதிகள் யார்?' என்று கேட்பவைபோல் ஆணும் பெண்ணுமாக அந்தக் கோபுரத்தில் குடியிருந்த இரண்டு புறாக்கள் அவர்களைக் கீழ்நோக்கிப் பார்த்து நெருங்கி உட்கார்ந்து தங்களுக்குள் சல்லாபம் செய்துகொண்டன.

## 41
## சுபம்

அம்மாஞ்சி, தர்மாம்பாள் இவர்களைப்பற்றியும், கதையை முடிக்குமுன் ஒரு வார்த்தை சொல்ல வேண்டாமா? தர்மாம்பாள் நினைத்தது ஒரு விஷயத்தில் தவறிப் போய்விட்டது. அவள் ஞானத்தின் மாமியாருடைய உடம்பைப்பற்றிப் பாதியும் பாசாங்கென்றே வைத்திருந்தாள். அவ்விதம் அன்று என்பதை நிரூபித்துக்கொண்டு அந்த அம்மாள் இறந்தே போனபிறகு, தர்மாம்பாள் இன்னும் அதைப் பாசாங்கென்று சொல்லிக்கொண்டிருக்க முடியுமா? ''ஐயோ பாவம்! இருந்தால் எவ்வளவோ அநுபவிக்கலாமே. கொடுத்துவைக்காமல் போய்விட்டாளே!'' என்று தர்மாம்பாள் அவளுக்காக வருந்தினாள். அப்படி அவள் துக்கித்தாலும் சம்பந்தியம்மாள் போனதில் சில சௌகரியங்கள் ஏற்படத்தான் செய்தன. ஞானம் இப்போதெல்லாம் இவர்கள் வீட்டுக்கு வேணுமென்கிறபோது வந்து போக முடிந்தது. அதற்குத் தடையாக யாரும் இருக்கவில்லை.

அவள் மாமியார் படுக்கையாக இருந்தாள். அவளுக்குச் சுசுரூஷை செய்ய அவள் பக்கத்தில் இருக்கவேண்டியிருந்தது. மேலும் மாமியார் ஸ்தானத்தில் இருப்பவர்களுக்குத்தான், நாட்டுப்பெண்ணைப் பிறந்தகம் அனுப்புவதில் தங்கள் அதிகாரத்தைச் செலுத்த ஏதோ ஆசை தோன்றுமேயல்லாது,

மற்றவர்களுக்கு அதில் உற்சாகம் இருப்பதில்லை. ஆகையால் ஞானத்தின் கணவனே, மாமனாரோ இது விஷயத்தில் சிறிதும் தலையிடவில்லை. அதன் விளைவாகத் தர்மாம்பாள் மனம் திருப்தி அடையும் அளவுக்கு ஞானம் வந்துபோகச் சுதந்தரம் கிடைத்து விட்டது. அப்படி அவள் வராவிட்டாலும், பிறருடைய கட்டுப் பாடு காரணம் என்பது இல்லாமல் போயிற்று. அதனால் தர்மாம்பாளுக்கு வருத்தம் தோன்றவில்லை.

மாப்பிள்ளை வக்கீல் பரீக்ஷை கொடுத்து வக்கீல் தொழில் நடத்தும் பெருமையும் சேர்ந்து தர்மாம்பாளை முழுச்சந்தோஷம் அடையச் செய்தது. இப்போது மகாலக்ஷ்மியிடம் அவளுக்குக் கண்டபடி தவறு தோன்றுமா? சுப்பு, கோபாலையர் இவர்களைக் கூட, அவர்கள் நடந்துகொண்டதை மறந்து முன்போல் ஏற்று நடத்தத் தொடங்கினாள். அம்மாஞ்சி முன்னதாகவே வேலையை விட்டு 'ரிடையர்' ஆன வருத்தங்கூட அவளுக்குத் தோன்ற வில்லை.

ஆமாம், அம்மாஞ்சி வேலையை விட்டு நீங்கிக்கொண்டு விட்டார். அவருக்குக் கிடைக்க வேண்டிய ஜில்லா சூபரென்ட் வேலையை அவருக்குக் கீழ் வேலை பார்ப்பவனுக்குக் கொடுத்த பிறகு அவர் ரோஷமின்றி வேலை பார்ப்பாரா? நாராயணன் தேசீய மார்க்கத்தில் கிளம்பினதற்காக, சர்க்கார் அவரை அவ்விதம் தாழ்மைப்படுத்தி நடத்தினார்கள். அவரும் சர்க்காரில் அடிமை வேலை பார்த்தது போதும் என்று விலகிக் கொண்டு, நாராயணனுடைய கிராமத்தொண்டுக்கு உதவி செய்யத் தொடங்கினார். அநுபவம் நிறைந்த போலீஸ் உத்தியோகஸ்தரான அவர் ஈடுபட்ட பிறகு காரியம் நடக்கக் கேட்க வேண்டுமா?

எல்லாம் வெகு செம்மையாக நடக்கத் தொடங்கின. கோபாலனிடத்திலும் சுப்புவினிடத்திலும் அவர் தொடர்ந்து எதற்கு மனஸ்தாபத்தை வளர்த்துக்கொண் டிருக்கப்போகிறார்? அவர்களுக்குத் தெரிந்த லக்ஷணம் அவ்வளவுதான் என்பது அவருக்குத் தெரியாதா? மகாலக்ஷ்மியைச் சுப்பு அவதூறு சொல்லி நடத்தினது தெரிந்தபோதுதான் அவருக்குச் சிறிது கோபம் வந்தது. அதற்குத்தான் அவள் அவ்வளவு கஷ்டப்பட் டிருக்கிறாள் என்பது தெரிந்தபோது அவளிடத்தில் பெரிதும் அநுதாபம் கொண்டார். குடும்பத்துப் பெரியவர்கள் தாறு மாறாக நடந்து குழந்தைகளின் கஷ்டங்களுக்குப் பொறுப்பாளி

யாவதை நினைத்தபோது அளவுக்கு மீறி ஆத்திரம் அடைந்தார். அந்தப் பெரியவர்களை என்னதான் செய்யக்கூடாது என்று அவருக்குக் கோபம் பொங்கிற்று.

ஆனால் யாரை அவர்கள் துன்புறுத்தினார்களோ அவளே அதை மறந்து அவர்களிடம் அன்பாகப் பழகும்போது அவர் மட்டும் எப்படி வித்தியாசமாக இருப்பது? ஆகையால் அவர் கோபமும் சமாதானமாகி எல்லோரும் சந்தோஷமாக இருந்தார்கள்.

யுத்தம் முடிந்து, நாடு சுதந்தரம் பெற்ற பிறகு, நாராயணன் தர்மராஜு இவர்களின் சேவைக்கு என்ன பிரதி பலன் கிடைத்தது? ஏதாவது தேசீய அரசாங்கத்தில் பெரும் பதவிகள் வகித்தார்களா என்றால் கட்டாயம் வகித்திருப்பார்கள்.

கால சக்கரம் சுழன்றுகொண்டே இருக்கிறது. அதோடு மனித வாழ்க்கையிலும் சம்பவங்கள் நடந்துகொண்டே இருக்கின்றன. ஆனால் நாம் ஓரிடத்தில் நின்றுகொள்ள வேண்டும். கூடவே செல்வதென்றால் அதற்கு முடிவு ஏது?

தர்மராஜு மணந்துகொண்டு சந்தோஷமாக வாழ்க்கை நடத்தினாரா என்றால் நடத்தி இருப்பான். அவனைப்பற்றியும் நாம் இவ்வளவோடு நிறுத்திக்கொள்ள வேண்டியதுதான்.

முற்றும்